# தமிழன்பன்



## படைப்பும் பார்வையும்

ஞானி

# தமிழன்பன்
# படைப்பும் பார்வையும்


**ஞானி**

*(கி. பழனிச்சாமி – கோவை)*



**மணிவாசகர் பதிப்பகம்**
31, சிங்கர் தெரு, பாரிமுனை,
சென்னை-600108.

முதல் பதிப்பு : நவம்பர், 2005
திருவள்ளுவர் ஆண்டு : 2036
உரிமை : ஆசிரியர்க்கு

**விலை : ரூ. 125.00**

மணிவாசகர் வெளியீட்டு எண் : 1219



**நினைவில் வாழும்**
**நிறுவனர்**
**ச. மெய்யப்பனார்**

டாக்டர் ச. மெய்யப்பன், அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் முன்னாள் தமிழ்ப் பேராசிரியர்.

பல்கலைக்கழகங்கள் பலவற்றில் இவர் அறக்கட்டளைகள் நிறுவியுள்ளார்.

**'வள்ளுவம்'** இதழின் நிறுவன ஆசிரியர்.

குன்றக்குடி அடிகளார் **'தமிழவேள்'** என்றும், தருமபுரம் ஆதீனத் தலைவர் **'செந்தமிழ்க் காவலர்'** என்றும் விருதுகள் வழங்கிச் சிறப்பித்துள்ளனர்.

**'பதிப்புச்செம்மல்'** என அறிஞர்கள் இவரைப் பாராட்டுவர்.

**கிடைக்குமிடம் :**
**மணிவாசகர் நூலகம்**

12-B, மேல சன்னதி, சிதம்பரம்- 608001. ✆:230069
31, சிங்கர் தெரு, பாரிமுனை, சென்னை-600108. ✆:25361039
6, சிவஞானம் தெரு, தி. நகர், சென்னை-600017. ✆:24357832
110, வடக்கு ஆவணி மூல வீதி, மதுரை-625001. ✆:2622853
15, ராஜ வீதி, கோயமுத்தூர்-641001. ✆:2397155
28, நந்தி கோயில் தெரு, திருச்சி-620002. ✆:2706450

அச்சிட்டோர் : மணிவாசகர் ஆப்செட் பிரிண்டர்ஸ், சென்னை - 600 021
தொலைபேசி : 25954528

# ஒரு ஞானியின் பார்வையில் கவிஞன் இரு பெரும் ஆற்றல்களின் சந்திப்பு

ச.மெ. மீனாட்சி சோமசுந்தரம்

இன்றைய தமிழ்க்கவிதை பாரதியின் வீச்சில் தொடங்கிப் பாவேந்தரின் பாதையில் பயணம் செய்து புதுக்கவிதையில் காலூன்றி நிற்கிறது.

இந்த இருபெரும் கவிதை ஆற்றலாளர்களின் தாக்கமும் ஊக்கமும் பெற்று சமகாலத்திலும், பிற்காலத்திலும் பல அருமையான கவிஞர்கள் தமிழுக்கு வளம் தந்தனர். நாமக்கல் கவிஞர், கவிமணி, ச.து.சு. யோகியார், தமிழ் ஒளி, கம்பதாசன், கண்ணதாசன் என அடுத்த தலைமுறை தன் பயணத்தைத் தொடர்ந்தது.

மணிக்கொடியில் பாரதி வழியில் தொடங்கிய புதுக்கவிதை கு.ப.ரா., பிச்சமூர்த்தி, புதுமைப்பித்தனின் பரிசோதனைகளை ஏற்று வளர்ந்தது. எழுத்து, இலக்கிய வட்டம், கசடதபற, நடை – இவற்றைத் தொடர்ந்து வானம்பாடி எனச் சிற்றிதழ்களின் உற்ற துணையோடு புதுக்கவிதை தடம் பதித்தது.

புதிய தலைமுறையின் கவிஞர்களாக அப்துல் ரகுமான், நா. காமராசன், சிற்பி, மு. மேத்தா, மீரா என முத்திரைப்

படைப்பாளிகள் கவனம் பெற்ற அதே காலக்கட்டத்தில் தம் செழுமையான கவிதைகளால் கவிதை இலக்கியத்துக்கு வளம் சேர்த்து, தொடர்ந்து எழுதி வரும் நண்பர் கவிஞர் தமிழன்பன்.

புதுக்கவிதை மரபின் தாழ்களைத் திறந்து கொண்டு தனக்கே உரிய சாயல்களை இனம் காட்டத் தொடங்கியபோது இரண்டு தடங்கள் உருவாயின. பழைய தமிழின் கவிதை மரபுகள் ஏதும் அறியாமலே புதுக்கவிதைக்கு வந்தவர்கள் ஒரு சாரார். மரபை முழுதுணர்ந்து, அதன் மெய்யான தொடர்ச்சியாய் மாற்றங்களைத் தம்முள் ஏற்றுக்கொண்டு புதுக்கவிதைக்கு வந்தவர்கள் இன்னொரு சாரார். இவர்களில் மரபின் வலிமையை உணர்ந்து கொண்டு கவிதையில் புதிய பரிசோதனைகளைத் தொடர்ந்த ஒரு பரம்பரை வானம்பாடிகளுடையது. இயல்பாகவே இந்த இயக்கத்தை நோக்கி ஆர்வத்துடன் அடியெடுத்து வைத்துத் தம் சாதனைகளைத் தந்தவர் கவிஞர் தமிழன்பன்.

புதுக்கவிதைக்கு வருவதற்கு முன்னதாகவே பாரதிதாசன் பரம்பரைக் கவிஞர் என அறியப்பட்டிருந்தவர் இவர். செழுமையான சொல்வளமும் அருமையான கற்பனைகளும் இவரின் தனிச்சிறப்பான கவிதைக் கூறுகள். பிறமொழிக் கவிதைகள் பற்றிய ஞானமும் இவருக்கு உண்டு.

சமூக அரசியல் கண்ணோட்டங்களிலும் தனக்கெனத் தனிப் பார்வையை உருவாக்கிக் கொண்டிருக்கும் கவிஞர் இவர். பெரிதும் திராவிட இயக்கச் சார்பு இவருக்கு உண்டென்றாலும், மார்க்சிய அறிவியலோடும் நெருக்கத்தை வளர்த்துக் கொண்டவர் இக்கவிஞர். தொடக்கத்தில் மரபிலும் பின்னர் புதுக்கவிதையிலும் தன் பதிவுகளைச் சிறப்பாகச் செய்து வரும் தமிழன்பன் தமிழின் நவீன கவிதைக் குரல்களில் மிகுந்த கவனிப்புக்கு உரியவர் என்பதில் ஐயமில்லை.

தமிழ் இலக்கியத்தின் மிகப்பெரிய பலவீனங்களில் ஒன்று – இக்காலப் படைப்பாளிகளைக் குறித்துப் போதிய திறனாய்வுகள்

இல்லாமை ஆகும். அங்கொன்றும் இங்கொன்றுமாய்ச் சில முயற்சிகள் அரைகுறையாகச் செய்யப்பட்டுள்ளன. அண்மைக் காலத்தில் கவிஞர் மீராவைக் குறித்த அப்துல் காதரின் ஆய்வும், கவிஞர் சிற்பியைக் குறித்த சி.ஆர். ரவீந்திரன், ஞானி முதலியவர்களின் ஆய்வுகளும் தான் கவிதையைப் பொறுத்து வெளிவந்த திறனாய்வு. ந. பிச்சமூர்த்தி பற்றிய சுந்தர ராமசாமியின் நூல் சென்ற தலைமுறைச் சாதனையாளர் பற்றிச் சிறப்பாகவே பேசியது. எனவே கவிஞர் தமிழன்பனின் கவிதைகள் பற்றிய இவ்வாய்வு நூல் பலவகைகளிலும் குறிப்பிட்டுச் சொல்லத்தக்கது.

இன்றைய தமிழ்த் திறனாய்வு உலகில் ஞானி ஒரு தனிச்சிகரமாக விளங்குகின்றார். தமிழியம் சார்ந்த அவர் சிந்தனைகள் பேராற்றல் மிக்கவை. அண்மையில் அமெரிக்க நாட்டு **'விளக்கு'** விருது பெற்றிருக்கின்றார். கருத்து வேறுபாடுகள் கொண்டவர்கள் கூட இவர் தம் திறமை குறித்து மாறுபாடு கொண்டிருக்க முடியாது. தமிழர் தம் **பண்பாட்டு நெருக்கடிகள்** குறித்தும், நவீனத்துவத் தாக்கங்கள் குறித்தும் ஓயாது குரல் கொடுத்து வருபவர் ஞானி. சமூக, பொருளியல், அரசியல் ஆய்வுகளை முன்னெடுத்துச் செல்வதில் பெரும்பங்கு இவருக்கு உண்டு.

தமிழன்பன் அவர்களின் கவிதைகள் குறித்துச் சிந்தனையாளர் ஞானி எழுதியுள்ளார் என்பதே இந்த நூலின் தனிச்சிறப்பு. கவிஞரின் படைப்பையும் பார்வையையும் குறித்துத் தம் நோக்கில் பல கோணங்களில் ஆராய்ந்திருக்கிறார் ஞானி. ஒரு கவிஞரை ஆராய்கிறபோது கவித்துவத்தின் மூலம் நோக்கி விரிந்தும் ஆழ்ந்தும் செல்ல வாய்ப்பிருக்கின்றது என்று ஞானி குறிப்பிட்டிருப்பது சிந்தனைக்குரிய ஒரு செய்தியாகும்.

முதலில், தான் இந்த ஆய்வை மேற்கொண்டதற்கான காரணங்களை முன்வைக்கின்றார். அடுத்துப் புதுக்கவிதையில்

அரசியல் பற்றி விவாதிக்கின்றார். கவிஞர் தமிழன்பனின் கவிமூலங்களை நோக்கிப் பின்னர் தம் பார்வையை விரிவாக்குகின்றார்.

ஒவ்வொரு நூலாக எடுத்துக்கொண்டு, அதன் தகுதியையும் தரத்தையும் துலாக்கோலாய் நின்று மதிப்பீடு செய்கின்றார். சில வேளைகளில் தனிக் கவிதைகள் குறித்தும் ஆய்வு நிகழ்த்துகின்றார். தமிழன்பனின் முழுமையான சாதனைகளைத் துல்லியமாக எடுத்துக்காட்டுகின்றார். இந்த நூல் இவ்வகையில் ஒரு வழிகாட்டி நூலாக அமைகிறது.

நம் காலத்தின் சிறந்த கவிஞர் ஒருவரைக் குறித்துச் சிறந்த ஒரு சிந்தனையாளரின் கருத்துக்களைத் தமிழ்ச் சுவைஞர் களுக்குத் தரக்கூடிய ஒரு வாய்ப்பு மணிவாசகர் பதிப்பகத்துக்கு வாய்த்திருப்பதில் மகிழ்ச்சி அடைகிறேன். இந்த அரிய நூலை வெளியிடும் வாய்ப்பைத் தந்த கவிஞருக்கும், ஞானி அவர்களுக்கும் என் அன்பையும் நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஒரு லட்சிய மனிதனைக் காண்பதற்கான கவிப்பயணம் கவிஞர் தமிழன்பனுடையது. அந்த லட்சிய மனிதனை உருவாக்கவல்ல சக்தியைப் பற்றிய தெளிவு ஞானியினுடையது. இந்த இரண்டு பேராற்றல்களின் சந்திப்பு இந்நூல். இந்தச் சந்திப்புக்குரிய களத்தையே நாங்கள் அமைத்துத் தந்திருக்கிறோம்.

# உள்ளுறை

1

# தமிழன்பன் கவிதைகளை ஏன் நான் ஆராய வேண்டும்?

கவிஞர் தமிழன்பன் கவிதைகள் குறித்து நான் ஏன் எழுத வேண்டும் என்ற கேள்விக்கு, எனக்கு நானே தெளிவுபடுத்திக் கொள்ளும் முறையில் இந்த முன்னுரையை எழுதுகிறேன்.

கவிஞர் சிற்பி அவர்களின் மணிவிழா சமயத்தில், அவரது படைப்பிலக்கியம் குறித்த இரண்டாவது தொகுப்புக்கு நண்பர் ஞானசேகரன் அவர்கள் கட்டுரை கேட்டபொழுது, முதலில் எனக்குத் தயக்கமாகத்தான் இருந்தது. சிற்பியின் கவிதைகள் குறித்து விரிவாக - ஆழமாக நான் எழுதுவதற்கு, என்ன இருக்கிறது என்பதுதான் என் தயக்கத்துக்குக் காரணம். எனினும் நான் ஒப்புக்கொண்டேன். அவரது எட்டுத் தொகுதிகளையும் நாடாவில் பதிவு செய்துகொண்டு, மூன்று அல்லது நான்கு முறைக்குமேல் திரும்பத் திரும்பக் கேட்டேன். முன்பு நான் கவனிக்காத கவிதைகள், எனக்குள் வியப்புணர்வைத் தோற்றுவித்தன. ஆகவே எழுதத்தான் வேண்டும் என எனக்குள் நான் உறுதிப்படுத்திக் கொண்டேன்.

கட்டுரையின் இரண்டு பகுதிகளை எழுதி முடித்த பொழுதுதான் தெரிந்தது, புரிந்தது சிற்பியின் கவிதைக்குள் இன்னும் ஆழமாகக் கவித்துவத்தின் மூலம் தேடி, அவரது கவிதைகளை விமர்சனம் செய்துகொண்டே செல்ல முடியும் என்பது. இந்தப் பயணத்தின்போது சிற்பியின் கவித்துவத்தைத் தேடும்பொழுதே, எனக்குள் செயல்படும் கவித்துவத்தின் மூலம் நோக்கியும் நான் பயணம் செய்வதாக உணர்ந்தபோது, எனக்குள் பெரும் பரவச உணர்வு ஏற்பட்டது.

அப்பொழுதே முடிவு செய்துகொண்டேன், தமிழில் இன்னும் சில கவிஞர்கள் பற்றியாவது நான் ஆய்வு செய்ய வேண்டும்

என்று. கவித்துவத்தின் மூலம் என்பது மெய்யியல் நோக்கில் விரிந்தும், ஆழ்ந்தும் செல்வதற்கான பயணம். அன்றியும் வரலாற்றுக்குள் நம்மை நாமே தேடித் திரட்டிக் கொள்வதற்கான முயற்சியும் ஆகும். அதாவது, குறிப்பிட்ட ஒரு கவிஞரின் கவிதைகள் குறித்து ஆய்வு செய்யும்போது, அவரைக் கடந்தும் கவித்துவத்திற்குள் நாம் பயணம் செய்கிறோம். குறிப்பிட்ட வரலாற்றுச் சூழலைக் கடந்தும், என்றோ தொடங்கிய வரலாற்று நீரோட்டத்திற்குள் நாம் பயணம் செய்கிறோம்; வரலாற்று நீரோட்டத்தில் நாம் குளித்து எழுகிறோம்; புத்துயிர்ப்புப் பெறுகிறோம்; முன்பு கண்டறியாத காட்சிகள் நமக்குள் விரிகின்றன; நமக்குள் சமத்துவ உணர்வு பொங்கி எழுகிறது. அனைத்து உயிர்களோடும் நாம் உறவு கொள்கிறோம். இயற்கை நமக்குள் வசப்பட்டு விடுகிறது. காலங்களைக் கடந்ததுபோல ஒரு பேருணர்வைப் பெறுகிறோம். நமக்குள் தீர்க்கதரிசிகளைச் சந்திக்கிறோம். இந்த உணர்வின் வழியே நம்மைச் சூழ்ந்துள்ள, நமக்குப் புறத்திலும் அகத்திலும் நுழைந்து செயல்படுகிற பல்வேறு சக்திகள் குறித்தும் தெளிவான பார்வையைப் பெறுகிறோம். ஆதிக்கங்களுக்கு வசப்படும்பொழுது நாம் குறுகி அழுகிறோம். நமக்குள் ஆழத்திலிருக்கிற சமத்துவ உணர்வில் நாம் விரிவடைகிறபொழுது, ஆதிக்கங்களைத் தகர்க்க முனைகிறோம். அதற்கான சக்தி நமக்குள் திரள்கிறது.

இவ்வாறு கவிதை பற்றிய ஆய்வு, நம்மை மெய்யியல், வரலாறு, சமூகம் என்ற பல தளங்களுக்குள் கொண்டு செல்கிறது. கவிதை பற்றிய சில தீர்க்கமான புரிதல்களை நாம் பெறுகிறோம். கவிதை வழியே - கவித்துவத்தின் வழியே - மனிதனைப் பற்றி - மனிதனைப் படைக்கிற சக்திகள் பற்றி - மனிதனின் படைப்புத் திறன் பற்றி - மனிதன் எப்பொழுதும் அவனது படைப்புத் திறன் மூலம் கலைஞனாகத்தான் இருக்கிறான் என்பது பற்றி - இறுதியில் நம்மைப் பற்றி - நம்மை நாமே திரட்டிக்கொள்ளுவது பற்றிப் படிக்கிறோம்; ஆய்கிறோம்.

சிற்பியின் கவிதைகள் குறித்துக் கட்டுரைகள் எழுதி முடித்த பிறகு, தமிழன்பன் கவிதைகள் குறித்த ஆய்வில் ஈடுபடுவது பொருந்தும் என்று எண்ணினேன். சுமார் இருபத்தைந்து ஆண்டுகளுக்கு மேலாகத் தமிழன்பனை எனக்குத் தெரியும். அவரோடு எந்த ஒரு சமயத்திலும் எனக்குள் முரண்பாடு எழுந்ததில்லை. அவர் திராவிட முன்னேற்றக் கழகம் சார்ந்தவர் என்று சில நண்பர்கள் அவரைக் குறித்துக் குறைவாகச் சொன்ன பொழுதெல்லாம், அவரிடம் ஓயாமல் செயல்படுகின்ற சமத்துவ உணர்வு பற்றி நான் நினைத்துக்கொண்டேன். திராவிட இயக்கத்திற்குள் ஆழமாக ஊடுருவுகிற பேருணர்வுகளுள் மிக முக்கியமானது சமத்துவ, சமதர்ம உணர்வு. அரசியல் தேவை கருதிச் சிலர் இந்த உணர்விற்குள் ஆழமாகவும் உறுதியாகவும் செல்லவில்லை. சிலர் சாதி என்றும் மதம் என்றும் பார்ப்பனீயம் என்றும் பேசுவதில் தம் ஆர்வத்தை, கவனத்தைத் தீவிரப்படுத்திக் கொண்ட நிலையில், சமதர்ம உணர்விலிருந்து குறைந்து போயினர். இப்பொழுது நாம் பாரதிதாசனை நினைத்துக்கொள்ள வேண்டும். பாரதிதாசனும் சாதி என்றும், மதம் என்றும், பார்ப்பனீயம் என்றும் எப்பொழுதும் தீவிரமாக எழுதினார்; பேசினார். ஆனால் சமதர்ம உணர்வு அவரிடம் ஒருபோதும் குறைந்ததில்லை. எந்த ஒரு மார்க்சியனைக் காட்டிலும் சமதர்ம உணர்வின்மீது பாரதிதாசன் கொண்ட நேசம் ஆழமானது; மற்றும் உறுதியானது. தமிழன்பனிடத்திலும் சமதர்ம உணர்வு என்றும் குறைவில்லாமலிருந்தது. முதலாளியத்தோடும் ஆட்சி அதிகாரத்தோடும் சமரசம் செய்து கொள்வதாகிய அரசியல் உணர்வில், தமிழன்பன் என்றும் முனைப்புக் கொண்டதாகத் தெரியவில்லை.

தமிழன்பன் கவிதைகள் அவரது கற்பனைத் திறனில் பொங்கி வழிபவை. நிறையப் படிம வார்ப்புகள் கொண்டவை. படிமத்திற்குள் படிமம் எனச் சிக்கலானவை. ஒரு முறைக்கு இரு முறை அல்லது மூன்று முறை படிக்க வேண்டும். கால இடைவெளி விட்டுப் படித்தாலொழிய, அவரின் பல கவிதைகளுக்குள்ளும் நாம் நுழைந்து செல்ல முடியாது.

தமிழன்பன் கவிதைகள்வழிப் பொங்கி வழியும் கற்பனை வளம், ஒரு வகையில் தமிழ்க் கவிதைக்குள் நூற்றாண்டுகளாகத் தொடர்கிற கற்பனை வளத்தின் தொடர்ச்சி என்றும் புரிந்து கொள்கிறேன்; சங்க இலக்கியத்தில் அந்த அளவு கற்பனை வளம் இல்லை; சிலம்பில் கொஞ்சம் தலைகாட்டுகிறது; சிந்தாமணி ஆசிரியர் தம் கற்பனை வளத்தில் நீராடுபவர்; கம்பரிடத்தில் இன்னும் கூடுதல். ஒட்டக்கூத்தர், ஜெயங்கொண்டார் என்று எடுத்துக்கொண்டால் சகிக்க முடியாத அளவுக்குக் கூடுதலாகிறது. பிரபந்தங்களுக்குள் கற்பனை வளம் கொடி கட்டிப் பறக்கிறது. கற்பனை வளம் கூடுதலாகும்போதெல்லாம், வாழ்வின் அடிப்படையிலிருந்து நாம் விலகித்தான் செல்கிறோம் என்பது என் கருத்து. மனிதனுக்குள் கற்பனை என்னும் உணர்வுத் திறனைத் தூண்டி விடுவோமானால், அது எல்லையற்றுப் பரந்து போகும் என்பது நமக்குத் தெரியும். எதார்த்தத்தின் வீச்சுகளை விரிவு செய்வதாகிய கற்பனை வளத்தை நாம் போற்றுகிறோம். எதார்த்தத்தை விட்டு விலகிச் செல்லும் கற்பனை வளத்தை நம்மால் போற்ற முடியவில்லை.

தமிழன்பன் எந்த ஊற்றிலிருந்து இந்தக் கற்பனைத் திறனைப் பெற்றார் என்பதும், தமிழ் இலக்கியத்தினுள்ளும் மதர்த்துக் கொழுத்துப் பிறக்கிற கற்பனைத் திறனை அவர் எவ்வாறு வரித்துக்கொண்டார் என்பதும் எனக்குள் கேள்வியாகவே இருக்கின்றன. ஆனால், அதே சமயம் எனக்குள் வியந்தும் இருக்கிறேன். அவரது கற்பனை வர்ணனைகளில் அடுக்குகள் பலவாக இருக்கின்றன. கருத்துகள் தேடும் அவசரத்தில் அவரது விரிவான கற்பனை வளம் பலருக்கு இடைஞ்சலாகத்தான் தோன்றும். தமிழன்பன் கவிதைகள் வழியே தமக்குள்ளும் கற்பனைத் திறனை வளர்த்துக்கொள்ள விரும்புகிறவர்களுக்கு, அவருடைய கவிதைகள் அமுதசுரபியாகலாம். ஆனால் பல்லாண்டுகள் வழியே அவரது கவிதைக்குள் பயணம் செய்து, இப்பொழுது பார்க்கிறபொழுது அவரது கற்பனை வளம்

எனக்கு இடைஞ்சலாக இல்லை. ஆனால் இன்னொரு வியப்பு என்னவென்றால், கற்பனை வளத்தில் ஆழமாக ஊறியவர்களும், அப்புறம் வெயிலில் நின்று தமது உடல் ஈரத்தைத் தணித்துக் கொள்வதில் இன்பம் காண்பதுபோல, அவரது கற்பனை வளம் நிறைந்த கவிதைகளுக்குள்ளும், அங்கங்கே எளிய நடையில், அழகிய நடையில் அவர் நம்மோடு உரையாடுகிறார். இந்த உரையாடலிலும் அவரது கவித்துவம் பளிச்சிடுகிறது.

வானம்பாடிகளின் கவிதை இயக்கம் 1970களில் தொடங்கிச் செயல்பட்டபோது, தமிழன்பன் இயல்பாக இந்த இயக்கத்தில் கலந்து கொண்டார். கவிதை இதழ் கொண்டு வருவதில் அவருக்குப் பங்கில்லை எனினும், வானம்பாடிகளின் தனித்தன்மை என்று இனம் காணத்தக்க கவிதைகளை எழுதினார். வானம்பாடி இயக்கம் அவரது வீச்சுக்கு ஒரு தூண்டுதலாக இருந்திருக்கக் கூடுமேயொழிய, வானம்பாடி இயக்கம் அவரது கவிதை இயக்கத்திற்குக் காரணம் என்று கூற முடியாது.

வானம்பாடி இயக்கம் தோன்றுவதற்கு முன்பே, அவர் நாடறிந்த கவிஞராகத் திகழ்ந்தார். பாரதிதாசன் பரம்பரை என இனம் கண்டு சொல்லத்தக்கக் கவிஞர்களுள் ஒருவராய் அவர் இருந்தார். பாரதியை முதல்வராகவும், அடுத்து வந்த பாரதிதாசனை இலக்காகவும் கொண்டிருந்த தமிழியக்கத்தின் பகுதி என்று தமிழன்பனையும், இன்னும் சிலரையும் குறிப்பிட இயலும். இவர்களில் நா. காமராசன், அப்துல் ரகுமான், சிற்பி முதலியவர்கள் குறிப்பிடத்தக்கவர்கள். தமிழில் செல்லப்பா, க. நா. சுப்பிரமணியம் ஆகியோர் வழியே செயல்பட்ட புதுக்கவிதை இயக்கம், தமிழியத்திலிருந்து விலகி நின்றதாக நாம் கூற முடியும். தமிழியத்தின் அரசியல் சார்பும், தமிழ் மற்றும் தமிழ்ப் பண்பாட்டின் மேன்மை, மீண்டும் தமிழராட்சி காணுதல் ஆகிய போக்குகளிலிருந்தும் புதுக் கவிதை இயக்கம் விலகி நின்றது. தமிழை நவீனப்படுத்துவது என்ற முறையில் மேற்கத்திய இலக்கியம், திறனாய்வு ஆகியவற்றின் கூறுகளைத்

தமிழுக்குள் கொண்டு வருவது என்ற முறையில் செல்லப்பா முதலியவர்கள் முனைந்து நின்றார்கள். புதிய சிந்தனை வீச்சுக்கு யாப்பு முறைக் கவிதை தடை என்று கண்டார்கள். பழந்தமிழின் பெருமை பேசுதல் முதலிய போக்குகள் தமிழின் வளர்ச்சிக்கு உதவியாக இருக்க முடியாது என்று கண்டார்கள். தமிழைப் புதுமைப்படுத்த வேண்டும் என்பது இவர்களது நோக்கம். மார்க்சியத்தையும் பகுத்தறிவையும் இவர்கள் மறுதலித்தார்கள். தமிழ்ப் புலவர்களுக்கும், தமிழ் இயக்கத்தவர்களுக்கும் இவர்கள் சவாலாக நின்றார்கள்.

இந்தச் சூழலில்தான் நா. காமராசன், தமிழன்பன் முதலியவர்கள் தமிழ்க் கவிதையைப் புதுமைப்படுத்தும் முறையில், மரபுத் தமிழ்ப் புலவர்களிடமிருந்து வேறுபட்ட முறையில் கவிதை எழுதினார்கள். இவர்களுக்குள், முற்போக்கு இயக்கத்தின் பாதிப்புகள் இருந்தன. தமிழின் வளர்ச்சியோடுதான் தமிழ் மக்களின் வாழ்வு வளர முடியும் என்று இவர்கள் நம்பி எழுதினார்கள். 1967-68களில் தமிழகத்தில் ஆட்சி மாற்றம் ஏற்பட்டது. ஆயினும் தமிழ்ச் சமூகத்தின் சிக்கல்கள் தீர்வதாகத் தெரியவில்லை. இந்நிலையில்தான் மார்க்சிய இயக்கத் தாக்கத்தோடு, வானம்பாடி இயக்கம் தொடங்கியது. திராவிட அரசியலையும், மார்க்சிய இயக்க உணர்வையும் உள்வாங்கிக் கொண்டவராகத் தமிழன்பன் இருந்த காரணத்தினால் வானம்பாடி இயக்கத்திற்குள் வருவது, அவரைப் பொருத்தவரை இயல்பாக இருந்தது. தமிழன்பனோடு எங்களுக்கு அறிமுகம் மட்டுமல்லாமல், உள்ளார்ந்த நெருக்கமும் இப்படித்தான் ஏற்பட்டது என்று நினைக்கிறேன். வானம்பாடி இயக்கம் பிளவுண்ட பிறகு, எங்களோடு அவரது உறவு அறுபடாது தொடரவும் செய்தது.

வானம்பாடி இயக்கத்தினுள் மார்க்சிய இயக்கத்தின் தாக்கம் இருந்தது பற்றிக் குறிப்பிட்டேன். அறுபதுகளின் (1960) இறுதியில் தோன்றிய நக்சல்பாரி இயக்கம், தமிழகத்திலும் பெரும் பாதிப்பை ஏற்படுத்தியது. நக்சல்பாரி இயக்கத்தின் வீச்சு

தமிழகச் சூழலில் முதலில் வெளிப்பட்டது கோவை நகரில்தான். தொழிலாளர் இயக்கமும் மார்க்சியம் சார்ந்த கட்சிகளும் கோவை நகரில் சில ஆண்டுகளாகவே தீவிரமாகச் செயல்பட்டன என்ற பின்னணியில்தான் நக்சல்பாரி இயக்கத்தின் வீச்சு இங்கு வெளிப்பட்டது என்று காண முடியும். வானம்பாடிக் கவிஞர்களுக்கும் இந்தத் தாக்கம் இருந்தது. நக்சல்பாரி இயக்கத்தின் ஒரு பகுதியாகத்தான் மாவோவை இங்கு ஏற்றுக்கொண்டோம். மார்க்சியத்தின் வளத்தை மாவோவுக்குள்தான் நாம் பார்க்கிறோம்.

தமிழன்பன் கவிதைக்குள் மாவோ வரவேற்கப் பட்டிருக்கிறார். மாவோ இறந்த சமயத்தில் அவர் எழுதிய கவிதை, அவரது வரவேற்பை வெளிப்படுத்துகிறது. சில கவிதைகளில் மார்க்சைப் போற்றுகிறார். அற்புதமான வரிகளில் மார்க்சின் மேன்மையைச் சொல்கிறார். ஏங்கல்சையும் சிறப்பாகச் சுட்டிச் சொல்கிறார். ஸ்டாலினைத் தன் கவிதைகளில் அவர் சுட்டிக் காட்டவில்லை. குருசேவினைப் பற்றிய குறிப்பும் அவரது கவிதையில் இல்லை. இதன் காரணமாக ஓர் உண்மையை நாம் புரிந்து கொள்கிறோம். மார்க்சியத்தின் வளம் அவருக்குள் தங்கியிருக்கிறது. திரிபு வாதத்தைத் தமக்குள் இனங்கண்டு ஒதுக்கியிருக்கிறார். இன்றுவரை தமிழன்பன் தன் சிந்தனையிலும், கவிதையாக்கத்திலும் இதனையும் ஒரு காரணமாக நாம் சொல்ல முடியும்.

தமிழன்பன் கவிதைகளை நான் ஏன் ஆய்வுக்கு எடுத்துக் கொண்டேன் என்பதன் தொடர்பாகத்தான், அவரது மார்க்சியத் தொடர்பை இங்குக் குறிப்பிடுகிறேன். இந்த வகையிலும் தமிழன்பன் எனக்கு மிக நெருக்கமாக இருக்கிறார். இதன் காரணமாக அவரது கவிதைகள் எனக்குப் பிடிக்கின்றன என்பதைத்தான் இங்குப் பதிவு செய்ய விரும்புகிறேன். இந்தியச் சூழலில் திருத்தல்வாதிகளோடு அவர் இல்லை. அவர் கவிதைகளில் வெளிப்படும் புரட்சி உணர்வு அவரைச் சரியான மார்க்சியத்தின் சார்பில்தான் நிறுத்துகிறது. இன்றைய சூழலில்

இவரது கவிதைக்கான முக்கியத்துவம் என்று இதைக் குறிப்பிட இயலும். வெறும் அரசியல் சார்பில் நின்று இதைச் சொல்லவில்லை. மக்கள் திரளின் வளமான ஆக்கக் கூறுகளை வளர்த்தெடுப்பதற்கான பார்வையை இன்று கொண்டிருப்பது, மாவோவை உள்வாங்கிக் கொண்ட மார்க்சியம்தான் என்ற முறையிலும் நான் இதைக் கூறுகிறேன்.

புதுக் கவிதை என்ற போக்கு, தமிழுக்குள் வந்தபோது யாப்பு முறையை மறுத்ததோடு, படிமம் என்ற வடிவத்தை புதுக் கவிதைக்குரிய தனித்துவமான வடிவம் என்று அறிமுகப் படுத்தினார்கள். வானம்பாடிக் கவிஞர்களும் படிமத்தைப் பயில்வது என்ற முறையில் படிமங்களை அடுக்கிக் கவிதை செய்தார்கள். தமிழ் மரபுக் கவிதையில் உவமை மற்றும் உருவகங்கள் அணிகளாகப் போற்றப்பட்டன. கவிதைக்கு இவை அழகு சேர்ப்பவை என்ற முறையில் பாரதிதாசனும் அவரது பரம்பரையினரும் புதிய உவமைகளை ஒவ்வொரு செய்யுளிலும் பலபடியாக அமைத்ததன் மூலம் கவிதையை அழகுபடுத்தினர். கவிதையின் புற வடிவம்தான் உவமை மற்றும் உருவகம். புற வடிவம் என்ற முறையில் இவை உடலை அழகுபடுத்தும் அணிகலன்கள் மட்டுமே. கவிதையின் அக வடிவத்தில் இவற்றைச் சேர்க்க முடியாது என்ற கருத்தைத் தமிழ் இலக்கணக்காரர்களில் ஒருவராகிய பேராசிரியர் முன்பே குறிப்பிட்டிருந்தபோதிலும், இந்த உண்மை தமிழ்க் கவிதையில் அழுத்தம் பெறவில்லை. புதுக் கவிதைக்காரர்கள் இந்த உண்மையைப் புதியதாக எடுத்துரைத்தனர். உவமை உருவகங்களுக்கு மாறாகப் படிம முறையைப் புகுத்தினர்.

உண்மையில் உவமை உருவகங்களும்கூடப் படிம வகைகளில்தான் சேருகின்றன. படிமம் பற்றி நிறைய விவாதங்கள் நடைபெற்றன. படிமத்தின் பொதுத் தன்மைகளை விளக்கித் தனித்தன்மை என ஒன்றைக் குறிப்பிட முடியும். ஒன்றின் வழியாக இன்னொன்றை அல்லது பலவற்றைச் சுட்டுவது - உணர்த்துவது படிமம். குறியீடு என்பது

படிமங்களில் ஓர் உயர் வகை. சங்க இலக்கியத்தில் உள்ளுறை என்று குறிக்கப்பட்டது, படிமம் என்ற கருத்திற்கும் பொருந்தி வரும். புதுக் கவிதைக்காரர்கள் சங்கப் பாடல்களைப் போற்றுவதற்கு, அவற்றில் யாப்பின் செறிவு இல்லை என்பதோடு உள்ளுறையைப் பயன்படுத்தினர் என்பதும் காரணம் ஆகும்.

படிமம் என்ற முறையைப் புதிதாகக் கண்டுபிடித்ததோடு, படிமங்களை அடுக்குவதற்காகவே புதுக் கவிதைக்காரர்கள் மட்டுமன்றி, வானம்பாடிக் கவிஞர்களும் கவிதை செய்தார்கள். புதியதாகக் கையில் கிடைத்த விளையாட்டுப் பொருளைக் குழந்தைகள் அதிகம் பயன்படுத்துவதுபோல இவர்கள், ஒரு பொருள்மேல் பல படிமங்களை அடுக்கினார்கள். படிமங்களே கவிதையாயிற்று. தமிழ்க் கவிதையில் உவமைகள் உருவகங்களைப் பலபடியாக அடுக்குவதில் பயிற்சி பெற்ற தமிழியக்கம் சார்ந்த புதுக் கவிஞர்கள், படிமங்களை அடுக்கி அடுக்கி அழகு பார்த்தனர். இதில் நேர்ந்த அவலம் இங்குக் குறிப்பிடத்தக்கது. ஏழைகள் உறங்கும் புழுதித் தரையை, மலர்மஞ்சம் என்று படிமம் செய்தார்கள். நா. காமராசன், தமிழ்நாடன் போன்ற கவிஞர்கள் கவிதைகளில், இத்தகைய போக்கைக் கூடுதலாகக் காண முடியும். கற்பனை வளமிக்க தமிழன்பன், படிமங்களை அடுக்குவதில் முன் நின்றார் என்று சொல்ல முடியும். ஒரு கவிதைக்குள்ளேயே ஐம்பது அறுபது எனப் படிமங்களை இவர் தொடுத்திருக்கிறார். இப்படிப் படிமங்களையே கவிதையாகக் கண்டதில் சலிப்பு ஏற்பட்டதற்குப் பிறகுதான், படிமங்கள் இல்லாமலும் கவிதை இயங்க முடியும் என்று தெளிவு ஏற்படலாயிற்று. கலாப்பிரியா ஒரு கவிதையில் "என்றைக்கு நான் உவமை, உருவகம், படிமம் இல்லாமல் கவிதை செய்வேன்?" என்று தன் ஏக்கத்தை வெளிப்படுத்தினார்.

புதுக் கவிதை எழுதிய அனைவருடைய கவிதைகளுள்ளும் அங்கங்கே படிமம் இல்லாத வரிகளும் கவிதையின் பகுதியாய்ச் சிறக்கின்றன. தமிழன்பனும் படிம முறையிலிருந்து விலகித்

தற்பொழுது கவிதை இயற்றுகிறார். கவிதை என்பது அடர்த்தியான, செறிவான இறுக்கமான சொற்கள் - தொடர்கள் - படிமங்கள் வழியேதான் இயங்க வேண்டும் என்ற கட்டாயமில்லை. செறிவு, அடர்த்தி என்ற போக்கிலிருந்து எளிமையாகவும் அழகிய முறையில் கவிதை செய்ய முடியும். தாகூர், பாரதி ஆகியவர்கள் இப்படி எளிய முறையிலும் கவிதை சொல்வதைத் தம் கவிதை அனுபவத்தில் ஒரு கட்டத்தில் - பிற்காலத்தில் கண்டறிந்தனர். அடர்த்தியாக இயங்குவதைப் போலவே, எளிமையாக இயங்குவதன் மூலமும் கவிதை அழகு பெறும். சுந்தர ராமசாமி இதற்கு ஒரு சான்று. தமிழன்பனும் இப்படி எளிய முறையில் கவிதை செய்யக் கற்றிருக்கிறார். அண்மைக் காலத்துக் கவிதைகள் இதற்குச் சான்றுகள்.

உவமை, உருவகங்கள், படிமங்கள் ஆகியவற்றின் மூலம் கவிதை இயங்குகிறதா என்று, இங்குக் கேள்வியை எழுப்பிக் கொள்ளலாம். கவிதை இவைகளின் வழியே செயல்படுகிறது என்பது உண்மை என்றாலும், இவற்றுக்குள் தங்குவது அல்லது மாட்டிக் கொள்வது கவிதை அல்ல. அப்படியானால் கவிதை என்றால் என்ன? என்ற ஆய்வுக்கு மீண்டும் வந்து சேருகிறோம். கவிதை பற்றிய ஆய்வை முதன்மைப் படுத்துபவர்கள், புதுக் கவிதைக்காரர்கள் என்பதில் ஐயமில்லை. அவர்கள் மூலமாகச் சில விளக்கங்கள், வரையறைகள் கிடைத்தன. சில குறிப்பிட்ட சந்தர்ப்பங்களின் தேவைகளுக்கு அந்த வரையறைகள் ஒத்திருந்தன. ஆனால், மேலும் மேலும் அனுபவங்கள் சேரும்போது, அவை போதுமான முறையில் இல்லை என்பதும் புலப்பட்டது. திரும்பத் திரும்ப இந்தக் கேள்விக்கே வந்து சேருகிறோம்.

2

# அரசியல் - புதுக்கவிதைக்கு அயலானதா?

தமிழன்பன் தம் கவிதைகளில் மிக விரிவாக நமது நாட்டின் அரசியல், பொருளியல் பற்றிய விமர்சனங்களை ஆழமாக - அழுத்தமாக வைக்கிறார். அதனால் கவிதைகள் நீண்டு செல்கின்றன. நமது கல்விச் சீரழிவுகள் பற்றியும் விரிவான விமர்சனங்கள் அவர் கவிதையில் உள்ளன. அவரது கவியரங்கக் கவிதைகள் வழக்கம் போலவே நீளமானவை. பாரதியார், பாரதிதாசன், பெரியார் இவர்களைப் பற்றியும், அறிவியலின் தேவை பற்றியும் கவியரங்கங்களில் இவர் பாடியிருக்கிறார். இவை தவிர இவரது கதைக் கவிதைகள் குறிப்பிடத்தக்கவை.

தமிழ்ச் சூழலில் புதுக் கவிதையாளர்கள் எப்போதும் எழுப்புகிற கேள்விகள் சில நம்மை எதிர்ப்படுகின்றன. கருத்துக்கள், நீதிகள் சொல்வது கவிதையின் வேலை இல்லை. கவிதைகள் நீளமாக இருக்க முடியாது. ஒரு பொருளை மடித்து மடித்து அன்றியும் அழகுபடுத்துவதாகவும் கவிதை இருக்க முடியாது. தமிழன்பனின் வேறுவிதக் கவிதைகள் பற்றிக் குறிப்பிடுவதற்கு முன்னர், இந்தக் கேள்விகளுக்கு நாம் பதில் சொல்வது தேவை. புதுக் கவிதைக்காரர்களுக்குத் தமிழகத்தின் அரசியல் போக்குகளில் ஈடுபாடு இல்லை என்பதையும் நாம் நினைவு கூரலாம்.

தமிழ் இலக்கியம், தொடக்கக் காலம் முதலே சமூகநீதிக் கருத்துக்களை விரிவாகக் கொண்டிருக்கின்றன. சங்க இலக்கிய அகக் கவிதைகளிலும் இயற்கைக் காட்சிகள் வழியேயும், கவிஞர்கள் மன்னனுக்கு நீதியைச் சுட்டிக் காட்டுகின்றனர். சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய காப்பியங்களும் நீதியின் தேவையை ஒட்டி எழுந்தவை. நம் காலத்தில் அநீதிகளே ஆட்சி

செலுத்துகின்றன. திராவிட இயக்கமும் சரி, மார்க்சிய இயக்கமும் சரி, சமூகத்தை மாற்றி அமைக்க வேண்டும் என்ற அடிப்படையான அறவுணர்வோடு செயல்படுகின்றன. இந்த இயக்கங்களிலுள்ளும் அநீதிகள் நுழைந்து விடுகின்றன. இந்தப் போக்கையும் கவிஞர்கள் சுட்டிக்காட்டுவது தேவையாக இருக்கிறது. திருக்குறளில் அறவுணர்வு மேலோங்கியிருப்பதால், அது இலக்கியம் என்று சொல்ல முடியாது. இலக்கியம் பற்றி ஒரு முக்கியமான அடிப்படையை இங்குச் சுட்டிக் காட்டுவது தேவையாக இருக்கிறது. அறவுணர்வு இன்றி, சமூக வாழ்க்கையோ, தனி மனித வாழ்க்கையோ இருக்க முடியாது. அறம் எது என்ற கேள்வி அவ்வப்போது எழக்கூடும். ஒரு சமயம் அறம் எனத் தோன்றுவது இன்னொரு சமயம் அறமற்றது எனத் தோன்றவும் கூடும். ஒரு வகையில் இதுவும் ஓர் அகச் சிக்கல்தான். இதன் காரணமாக அறம் என்பதே இல்லை என மறுத்துவிட முடியாது. அறத்தைக் கடைப்பிடிக்க முடியாத சமூக நிலவரங்கள், மனித வாழ்க்கையில் அவலத்தைத் தோற்றுவிக்கின்றன. இதன் காரணமாக மனிதன் தன் ஆளுமையில் சிதைவடைகிறான். இப்பொழுது தன்னைத்தானே தேடி, தன் அடையாளம் தேடி, தன் வேர்களைத் தேடி, தன்னைத் திரட்டிக்கொள்ள வேண்டியவனாகிறான். இந்த உண்மை தனி மனித வாழ்க்கைக்கு மட்டுமல்லாது, சமூக வாழ்க்கைக்கும் முற்றிலும் பொருந்துவதாகிறது.

வரலாற்றில் ஏற்றத் தாழ்விற்கும் சமூக முரண்பாடுகளுக்கும் இடமுண்டு, தேவையுண்டு என நாம் ஒப்புக்கொள்கிறோம். ஏற்றத் தாழ்வுகள் மனித வாழ்விற்குள் அவலத்தை ஏற்படுத்துகின்றன. வாழ்வின் அர்த்தங்களை அழிக்கின்றன. ஏற்றத் தாழ்வுக்கெதிராகப் போராடுவதன் மூலம் வாழ்வுக்கான அர்த்தங்களைப் பெறுகிறோம். இந்தப் போராட்டங்கள் மனித வாழ்வுக்கு அழகையும் மேன்மையையும் சேர்க்கின்றன. மனித வாழ்வு ஆரோக்கியமானதாக இருக்க வேண்டும். சுற்றுச் சூழல் பற்றி அதிகம் இன்று பேசுகின்றோம். சுற்றுச் சூழல்போலச் சமூக வாழ்க்கையும் தூய்மையாகத்தான் இருக்க வேண்டும்.

ஏற்றத்தாழ்வு இல்லாத சமூகம்தான் தூய்மையானது; அழகானது; ஆரோக்கியமானது. அடிக்கடி மனித மனங்களில் அறவுணர்வுகள் மறைந்து விடுகின்றன; அவர்களுக்குள் அறவுணர்வைத் தூண்ட வேண்டும்; ஏற்றத் தாழ்வை அடியோடு மாற்ற வேண்டும் என்பதுதான் அடிப்படையான அறவுணர்வு.

இலக்கியம், தன் தொடக்கக் காலம் முதல் சிதைந்து கொண்டிருக்கின்ற அறவுணர்வை, மனிதனுக்குள் மீட்டுத் தர வேண்டும் என்ற நோக்கில் உறுதியாக இருக்கின்றது. தமிழ்க் கவிஞர்கள் மட்டுமல்லாமல், எந்த மொழிக் கவிஞர்களாக இருப்பினும் இந்தக் கடமையிலிருந்து விலகியிருக்க முடியாது. கவிதை மதத்தின் பகுதியாக, மந்திரங்களின் பகுதியாக இருந்த காலம் முதலே இதைத்தான் செய்து வருகிறது.

புதுக் கவிதை என்பது அரசியல் முதலியவற்றை விலக்கிக் கவிதையாக மட்டுமே விளங்க வேண்டும் என்று கூறுவாரும் உண்டு... அவர்களுக்கு அரசியல் உணர்வு இல்லை என்று நாம் ஒரு குற்றமாக இங்கு முன் வைக்கவில்லை. எனினும், ஆழ்ந்து பார்த்தால் புதுக் கவிதைகளுக்குள்ளும் அறவுணர்வு அழுத்தத் துடன்தான் செயல்படுகிறது. மலர் அழகாக இருக்க வேண்டும் என்றால், மண் தூய்மையாக இருக்க வேண்டும். இயற்கையை நுகர்வதற்குக்கூட ஒரு நல்ல நிலை வேண்டும். மாலைக் கதிரவன் பற்பல வண்ணங்களில் தோன்றுவதற்குக் காரணம், வானத்தில் பதிகிற தூசுகள் என்று இவர்கள் சொல்லக்கூடும். உண்மைதான். அந்த மாசுகளும் அழகாக இருந்தால்தான் வானத்தின் அழகை இரசிக்க முடியும். கந்தகத் துகள்களும் வேறு பல நச்சுத் துகள்களும் காற்று மண்டலத்தை நாசப்படுத்திக் கொண்டிருக்கிற சூழலை யாரும் ஏற்றுக்கொள்ள முடியாது. அழகியலின் ஆழமான அடிப்படைகளிலிருந்து அறவுணர்வைப் பிரித்துப் பார்க்க முடியாது. அறவுணர்வு கவிதைகளில் அழுத்தம் பெறத் தேவையில்லை என்று யாரேனும் கூறுவார் என்றால், அவரின் சமூகவுணர்வைச் சந்தேகிக்க நமக்கு உரிமையுண்டு. ஆனால் அதே சமயம், கவிதை கவிதையாகத்தான் இருக்க வேண்டும் என்பதை நாம் ஏற்கிறோம்.

மனிதனின் அடிப்படைகளில் ஒன்று அழகியல் உணர்வு. அழகியல் உணர்விலிருந்து மனித இருப்பைப் பிரித்துப் பார்க்க முடியாது. மனிதனின் முதல் தேவை பொருளியல்தான் என்று நாம் இங்கு முரணவில்லை. மனிதனுக்கு இந்த உலகமே தேவை; நிலம் தேவை; நீர் தேவை; வானம் தேவை; சூரியனும் சந்திரனும் தேவை; உணவும் இருப்பிடமும் தேவை; கல்வி தேவை; கலையுணர்வு தேவை; தன்னைத்தானே படைத்துக்கொள்கிற வாய்ப்புகள் தேவை; இதற்கான சுதந்திரம் தேவை; தனக்கான உலகத்தைப் படைத்துக் கொள்கிற உரிமை தேவை; விடுதலை தேவை.

இந்தப் பட்டியலிலிருந்து எதையுமே குறைத்துக் கொள்ள முடியாது. முதலில் சிலவற்றை வழங்கிய பிறகு, பிற தேவைகளைக் கவனிக்கலாம் என எவரேனும் சொல்லுவார் என்றால், அவர்கள் மோசமான அரசியல்வாதிகள்; முதலாளிய சக்திகள். எல்லா மனிதருக்குமான வாழ்வுக்கு உரியது இந்த உலகம் என்பதை மறுத்துவிட்டு, இந்த உலகம் தமக்குத்தான் உரியது என்று அபகரித்துக் கொண்டவர்கள் இவர்கள். நம் தலைவிதியை இவர்கள் தீர்மானிக்க, நாம் அனுமதிக்க முடியாது. இதில் சமரசத்திற்கு இடமில்லை. எப்பொழுதுமே கவிஞர்கள், வாழ்வின் அடிப்படையையே புரட்டிப் பார்க்கிறவர்கள். இந்த ஞானம்தான் கவிஞனைப் படைத்திருக்கிறது. தமிழ்க் கவிதையில் இந்த ஞானம் வற்றாத நீரோட்டமாய் ஓடுகிறது. தமிழையும் கவிதையையும் அறவுணர்வையும் பிரித்துப் பார்ப்பதற்கில்லை. புதுக் கவிதைக்காரர்கள் புதுமை கண்டறியும் போக்கில் தமிழ் இலக்கிய வரலாற்றையும், தமிழ் இயக்க உணர்வையும் ஒதுக்கி விடுவதில் நமக்கு உடன்பாடில்லை. இந்தக் கவிஞர்கள் மத்திய தர வர்க்கத்தினர்; அரசுப் பணியாளர்கள்; நகரவாசிகள்; நவீன அறிவு நமக்குத்தான் உண்டு என நம்புகிறவர்கள்; தமிழ்ச் சமூகத்தின் சுரண்டல் வாய்ப்பையும் பெற்றவர்கள்; இவர்களின் கல்வியும் வாழ்க்கை வசதிகளும் இப்படிப் பெற்றவைதான். சமூகத்தின் அடிப்படை மாற்றம் தம்மைப் பாதிக்கும் என இவர்கள் அஞ்சுகிறவர்கள். இவர்களின் அச்சத்திற்கு ஆதாரமில்லை. ஊர் தூய்மையாக இருந்தால்தான், நமக்கு

நோய்கள் வாரா என்ற உண்மைகூட இவர்களுக்குப் புரியவில்லை என்பது நமக்கு வேடிக்கையாக இருக்கிறது. இப்படி ஊரும் உலகமும் கெட்டு இவர்கள் எந்த அழகியலை, கவிதையை தமக்குள் உற்பத்தி செய்துகொள்ள முடியும்? இவர்கள் தம் வேர்களைக் கண்டறியாதவர்கள்; சமூக மேல் தளத்தில் மிதப்பவர்கள்; அறிவு என்பது வரலாற்று நெறியில் - சமூகச் சார்பில்தான் உற்பத்தியாகின்றன என்பதைப் புரிந்து கொள்ளாமல், தமக்கு வசப்பட்ட அறிவுக்குத் தாமே சொந்தக்காரர்கள் என்று கருதிக்கொள்ளும் மூடர்கள் இவர்கள். தன்முனைப்பு இவர்களின் கண்களை மறைக்கிறது. இவர்களுக்கு வரலாற்றின் ஆழம் தெரியாது. மெய்யியல் தெரியாது. மறைமுகமாக மதச்சடங்குகளைப் பற்றிக்கொள்ளும் பேதைகள் இவர்கள். கவிதை என்றால் என்ன என்ற கேள்வியை நம் காலத்தில் கூர்மையாக எழுப்பியதன் மூலம், கவிதையின் வேர்களை மட்டுமல்லாமல், வாழ்வின் வேர்களையும் நாம் தேடிக் கண்டறிவதற்கு நம்மைத் தூண்டினார்கள் என்ற அளவில், நாம் இவர்களுக்கு நன்றி சொல்லலாம்.

# 3

## *கவியரங்கக் கவிதைகள் பற்றி...*

தமிழன்பனின் கவியரங்கக் கவிதைகள் பற்றி இங்குச் சுருக்கமாகக் குறிப்பிட வேண்டும். கொடுக்கப்பட்ட பொருளை உணர்ச்சிகரமாக, அவையோரைக் கவர்ந்து இழுக்கும் முறையில், தேவையான அணி நயத்துடன் மேடைத் தோரணையோடு கவிதை சொல்ல வேண்டும். மேடைத் தோரணை **(Rhetoric)** என்பது ஓர் அணி வகை. இதில் மிகை உணர்ச்சி தூக்கலாக அமையும். கருத்துக்களின் அணிவகுப்பு இதில் தொடர வேண்டும். அவையோரை உளப்படுத்திக் கொண்டு, அரசையோ, சமூக நிலவரங்களையோ உணர்ச்சிகரமாக விமர்சித்து இயங்குவது இக் கவிதைக் கலை.

கவிதை அல்லது இலக்கியம் என்பது எந்தக் காலத்திலும் வாசிப்பவர்களை நோக்கியும், வாசிப்பவர்களை உளப்படுத்திக் கொண்டும்தான் இயற்றப்படுகிறது என்பது ஒரு பொது உண்மை. மேடை முன்னிலையில் கவிதை சொல்லப்பட்ட போதிலும், அதை எழுதும்போது கவிஞர் தனித்திருந்துதான் எழுதுகிறார். அப்போதும் பார்வையாளர்களைத் தன் மனத்தில் இருத்திக்கொண்டுதான் எழுதுகிறார். முற்காலத்தில் கவிதை அல்லது இலக்கியம் எழுதியவர்களும், ஏதோ ஒரு வகையில் வாசகர்களை உளப்படுத்திக்கொண்டுதான் எழுதியிருக்க முடியும். இவ்வாறு வெளிப்படையாகவும் மறைவாகவும் வாசகர்களை முன்னிறுத்தாமல் இலக்கியம் எழுதப்படுவதில்லை. இந்த வகையில் கவிஞர்களுக்கும், வாசகர்களுக்கும் இடையில் நடைபெறும் உரையாடலின் ஒரு வகை எனக் கவிதையைக் கொள்வது பொருந்தும். அதாவது, கவிஞன் தனக்குள் வந்துவிட்ட தானேயாகிய வாசகனோடுதான் உரையாடுகிறான். திருவாசகம் முதலிய நூல்களில், கவிஞர் தன்னோடு தானே பேசிக்கொள்வதை நினைவு கொள்ளலாம். சங்கக் கவிஞர்கள், தம் உணர்வுகளையும், தாம் சொல்ல வந்த கருத்துக்களையும் கூற்றுமுறையில், படர்க்கை முறையில் கவிதை அமைத்த போதிலும், அங்கும் கவிஞன் தன்னோடு உரையாடுவதைப் புரிந்து கொள்ள முடியும். குறிப்பிட்ட ஓர் அனுபவத்தின்போது முன்னர் தனக்குத் தோன்றாத ஒரு காட்சி அல்லது புதிய உணர்வு என்பதைத்தான் கவிஞன் தன் கவிதையில் பதிந்து வைக்க விரும்புகிறான். கவியரங்கக் கவிதை எழுதும்போது குறிப்பிட்ட பொருள் பற்றித் தனக்குள் எழும் புதிய காட்சிகளை, உணர்வுடன் உவமைகள், அணிகள் முதலியவற்றைச் சேர்த்துக் கவிஞன் சொல்ல முற்படுகிறான். நீண்டது, பலவகை அடுக்குகளைக் கொண்டது எனினும், இவற்றின் வழியே புதுக்காட்சியைக் கவியரங்கக் கவிதையிலும் கவிஞன் வெளிப்படுத்துகிறான்.

ஒரு வகையில் அவன் தனக்குள் இருந்தே படைத்துக் கொள்கிற புதிய காட்சி மற்றும் புதிய உண்மையாக இது அமைய முடியும். புதிய காட்சி அல்லது புதிய உண்மை கண்ட

உணர்ச்சிப் பெருக்கோடு, இங்குக் கவிஞன் கவிதை சொல்கிறான். தனக்குள் இருந்து தன்னைப் புதியதாகவும் எழுப்பிக் கொள்கிறான்.

தமிழன்பனின் கவியரங்கக் கவிதைகளில் இந்தப் புதிய காட்சிக் கவிதைகள் அடுக்கடுக்காகத் தொடர்கின்றன. இவற்றின் அழகிலிருந்து நாம் தப்ப முடியாது. உதாரணமாக, இருபதுகளில் எது கவிதை என்ற கேள்வி எழுந்தபொழுது, பாரதி தோன்றினான் என்கிறார் தமிழன்பன். சரஸ்வதி பூஜை பற்றி ஒரு கவிதையில் தாமரையிலிருந்து எழுந்த கலைமகள், வீணையை வைத்துவிட்டு ஆயுதமெடுத்தாள் என்று கூறுகிறார். இப்படியே இவரது கவியரங்கக் கவிதைகள் எங்கும் புதிய காட்சிகள் பொலிகின்றன.

அடுக்கிச் சொல்வதைக் கவிதையின் ஒரு குணம் என்பதை நாம் மறுப்பதற்கில்லை. புதுக்கவிஞர்கள் கவிதையிலும் இப்படி அடுக்கிச் சொல்வது இருக்கத்தான் செய்கிறது. கலித் தொகையில் இவ்வாறு தாழிசைகள் ஒரு பொருள்மேல் அடுக்கி வருகின்றன. தேவாரம் முதலிய பக்தி இலக்கியங்களில் ஒவ்வொரு பதிகத்திலும் பத்துப் பாடல்கள் தொடருகின்றன. திருக்குறளிலும் ஓர் அதிகாரத்தினுள்ளேயே ஒரு கருத்தை வலியுறுத்துவதற்காக, உடன்பாட்டு முறையிலும் எதிர்மறை முறையிலும் குறள்கள் தொடர்கின்றன. மேடைத் தோரணையில் இப்படி அடுக்கிச் சொல்வதைத் தடுக்க இயலாது. இது உரையாடலில் ஒரு குணம். கவிதைக்கும் இது குணமாகியிருக்கிறது. இந்தக் குணத்தைப் பொறுத்தவரையிலும் அளவோடு இருப்பதுதான் நல்லது என்று தோன்றுகிறது.

தமிழன்பன் கவியரங்கக் கவிதைகளில், இப்படிப் படிமங்களும் அடுக்குகளும் யாருக்கேனும் சலிப்பைத் தந்தால், நாம் அவரை அவரது இலக்கிய இரசனையைக் குறை சொல்ல முடியாது. ஆனால், இங்கு நமக்கோர் எச்சரிக்கை தேவை. இப்படி வாசகர்களை, இலக்கிய இரசிகர்களை அழகு வரிசை கருதி, இரசனை மயக்கத்தில் ஆழ்த்துவதன் மூலம் மக்களின் இரசனைத் திறத்தை நாம் மழுங்கடிக்கிறோம். இம்முறையில் கவியரங்குகள்கூட, பட்டி மண்டபங்களைப்போல மக்களை மலினப்படுத்துகின்றன. தமிழ் மக்களை இப்படி மலினப் படுத்திய வரலாறு மிக நீண்டது.

# 4

# கவி மூலமும் தமிழன்பனும்

கவிதை எங்கிருந்து உற்பத்தியாகிறது என்ற கேள்விக்குத் திட்டவட்டமான விடை தருவது சாத்தியமில்லை என்றாலும், இங்குச் சிலவற்றைச் சொல்லலாம். இளமைக் காலத்தில் எப்படியோ எல்லோருக்கும் இன்பமாகத்தான் வாழ்க்கை கழிந்திருக்கிறது. கூடியவரை இயற்கைக்கு அப்போது நெருக்கமாக இருந்தோம். காலைக் கதிரவனும் மாலை நிலவும் நமக்குள் மலர்ச்சியை நிரப்பின. ஆற்றோடும் குளத்தோடும் பயிர் பச்சையோடும், உயிர் வகைகளோடும் உறவாடினோம். தாயோடு நம் உறவு தழைத்திருந்தது. தம்பி தங்கைகளோடு நண்பர்களோடு நம்மைப் பகிர்ந்து கொண்டோம். புதியதாய் இந்த உலகத்தை ஒவ்வொரு நாளும் கண்டு மகிழ்ந்து வரவேற்றோம். எவ்வளவோ கற்றுக் கொண்டோம். கோயில்களும் திருவிழாக்களும் நமக்குள் புகுந்து நம்மை விரிவாக்கின. நீரோடும் நிலத்தோடும் வானத்தோடும் நாம் நெருங்கியிருந்தோம். நமக்குள் மனம் என்பது மெல்ல மெல்ல உருவாகித் தனக்குள் உலகத்தைப் பொதிந்துகொண்டது.

வளர்ந்து பெரியவர் ஆகிறோம். வாழ்வில் சிக்கல்களை எதிர்ப்படுகிறோம். ஏற்றத் தாழ்வுகள் நம்மைப் பாதிக்கின்றன. உறவில் நெருக்கடிகள் வந்து சேருகின்றன. இயற்கையிலிருந்து விலகி வருகிறோம். எதிர்காலம் கேள்விக்குரியதாக இருக்கின்றது. கோடை வெப்பம் நம்மை வாட்டுகிறது. இப்பொழுது நம் இளமைக் காலத்தை, அற்புதமான உணர்வுகளை, இப்பொழுது இல்லாத ஏரி, குளங்களை நாம் நினைத்துக்கொள்கிறோம். அந்தப் பழைய காலத்திற்குள் பயணம் செய்கிறோம். அங்கேயே தங்கிவிட விரும்புகிறோம். சிக்கலற்ற அந்த உலகம் நமக்கு வேண்டுமென விழைகிறோம். இயற்கை இன்பங்கள் இப்பொழுதும் குறைந்து விடவில்லை.

இயற்கையைத் தேடிச் செல்கிறோம். இயற்கை நமக்குள் தாயாய் இருந்து நம்மைத் தழுவிக்கொள்கிறது; நமக்குள் ஓடைகள் சலசலக்கின்றன; வானம் நமக்குள் நெருக்கமாய் வருகின்றது; புறம் நமக்குச் சிக்கலாகின்றது; எனினும், அகத்தினுள் இயற்கையோடு, இளமைக்காலத்து உறவுகளோடு நாம் ஒன்றியிருக்கிறோம். இங்குப் பொங்குகிறது நமக்குள் கவிதை ஊற்று. எந்தக் கவிஞனுக்குள்தான் இந்த ஊற்றுப் பொங்கவில்லை? எந்த மனிதனுக்குள்தான் இந்த ஊற்று இல்லை? சிலருக்கு இந்த ஊற்றில் குளித்து எழ வாய்ப்பு உளது. அடிக்கடி குளித்து எழுகிறார்கள். அவர்கள் கவிஞர்கள் ஆகிறார்கள்.

இயற்கையோடு - இயற்கைக்குள் நாம் ஒன்றி விடுகிறோம். இயற்கையும், மலர்களும், செடி கொடிகளும், பறவைகளும் நமக்குள் தங்கிவிட்டன. காற்றும் நீரும் நமக்குள் வந்து கலந்து விட்டன. வானமும் வண்ணங்களும் நமக்குள் வந்து நம்மை உருவாக்கியிருக்கின்றன. மற்றும் பயிர் பச்சைகளும் நமக்குள் இதமாய் இணைந்திருக்கின்றன. இவை நம் மனத்தின் அடித்தளமாய், ஆதாரமாய், நம் மனத்தின் இயக்கமாய் மாறி இருக்கின்றன. இவற்றின் வடிவத்தில், இயக்கத்தில் நாம் இருக்கிறோம். இவற்றிலிருந்து நாம் என்றும் பிரிவதில்லை. இத்தகைய உறவுதான் நம் இளமையில் நண்பர்களோடும், உயிர்களோடும் கொண்டிருந்தோம். இவைதாம் நம் ஆளுமையின் அடித்தளங்கள். இந்த அடித்தளம்தான் தாயின் மடி அல்லது கருப்பை. யாரிடம் இந்தத் தாய் மடி கனத்திருக்கிறதோ, செறிந்திருக்கிறதோ அவர்களுக்குக் கவிதையின்றி வாழ்வில்லை. கவிதை எழுதுகிறவர்கள் இந்தத் தாயின் கருப்பைக்குள் மீண்டும் நுழைகிறார்கள். இங்கு வேற்றுமை இல்லை; ஏற்றத்தாழ்வு இல்லை; எங்கும் அமைதி. எங்கும் மௌனம். இங்குத்தான், கவிதையூற்று மல்லாந்து கிடக்கிறது.

இவ்வாறு கவிதை ஊற்றைத் தேடிச் செல்லும்போது, இளமைக் காலத்தினுள்ளும், தாயின் கருப்பைக்குள்ளும் நாம் இணைகிறோம் என்பது ஒரு விளக்கம். இன்னும் நாம் விரிந்து செல்ல வேண்டும். செல்வதற்கு இடமிருக்கிறது.

ஃபிராய்டின் மாணவர்களில் ஒருவர் சி. ஜே. யுங். உளவியல் ஆய்வில் ஃபிராய்டைக் காட்டிலும் ஆழமாகச் சென்றவர். இவர் நமக்கு நெருக்கமானவர். மனத்திற்குள் நுழைந்து செல்லும்போது ஃபிராய்டு கண்ட காம உணர்வையும் கடந்து செல்கிறோம். ஃபிராய்டு குறிப்பிட்ட இன்பக் கோட்பாடு-மரணக் கோட்பாடு என்ற முரண் இயக்கத்தின் வழியே கடந்து செல்கிறோம். இந்த இடத்தில் யுங் குறிப்பிட்ட சமூகத்தின் கூட்டு நனவிலி உணர்வை நெருங்குகிறோம். இங்குத்தான் நமக்குள் தெய்வங்களும் பிசாசுகளும் உற்பத்தியாகின்றன; புராணங்கள் நமக்குள் இருந்து எழுகின்றன; படிமங்கள் இங்கிருந்துதான் உற்பத்தியாகின்றன; இங்கு நமக்குத் திசைகள் விரிவடைகின்றன; நமக்குள் கால வேறுபாடு அழிந்து காலமற்ற அகண்டத்தை எதிர்ப்படுகிறோம். ஒருவகையில் நாம் இங்கு ஆதி மனிதர் ஆகிறோம். சமூகமயமாகிறோம். இங்கு ஏற்றத் தாழ்வு இல்லை. எல்லோரும் ஓர் இனம். காற்றோடும், மண்ணோடும், மலைகளோடும், கடலோடும் நாம் இணைந்திருக்கிறோம். பொருளுக்கோ, அதிகாரத்திற்கோ இங்கு இடமில்லை; தேவையும் இல்லை. நாம் என்ற உணர்வு நமக்குள் இயங்குகிறது. இங்கு நாம் பொருளுக்கும் அதிகாரத்திற்கும் இடம் தராத சித்தர்களைச் சந்திக்கிறோம்; சித்தர்களாகிறோம்.

யுங் கூறியபடி, நமக்குள் இப்படி ஓர் அற்புதமான மனநிலை, வரலாற்றில் நெடுங்காலம் கழிந்த பின்னாலும் எப்படித் தங்கியிருக்கிறது என்று நமக்கு நாமே கேட்டுக்கொள்கிறோம். சமூகத்தில் நெருக்கடிகள், ஏற்றத் தாழ்வுகள் பெருகி நம்மைச் சிதைக்கும்போதெல்லாம் நமக்குள் ஏற்படும் ஏக்கம் எதைச் சுட்டுகிறது? போர் எதற்கு? பகைமை எதற்கு? எல்லோரும் ஒரு தாய் மக்களாய்க் கூடியிருந்தால், எவ்வளவு இன்பமாயிருக்கும் என நினைக்கிறோம்; தவிக்கிறோம். நண்பர்களோடும், உறவினர்களோடும், முன் பழகி அறியாத அந்நியர்களோடும், சில சந்தர்ப்பங்களிலேனும் நம் வசதிகளைப் பங்கிடும்போது நமக்கு ஏற்படும் பேரின்ப ஊற்று எங்கிருந்து பொங்குகிறது? சமூக நலன் கருதி உழைக்கிறபொழுது, நமக்கு ஏற்படும் இழப்புகளைக்கூட இன்பம் என்றே நாம் கருதுகிறபோது, பொது நலத்திற்காக நாம் இழக்கிறபோது ஏற்படும் பரவசம்

எங்கிருந்து கிளம்புகிறது? பிறர் செய்யும் தீமைகளைச் சகித்துக் கொண்டு பொறுமையோடு புன்னகை பூக்கிறபோது, நமக்குள் சுரக்கும் ஊற்றுக்கு என்ன பெயர்? மக்கள் செய்யும் துயரங்களை மகிழ்ச்சியோடு ஏற்றுக்கொள்ளும் தாயின் மனநிலையை எப்படிப் புரிந்துகொள்வது? வாழ்வுக்கு ஆதாரம் இந்த மனநிலை. வாழ்வின் நெருக்கடிதான் இத்தகைய மனநிலையை நமக்குள் ஓர் எதிர்வினையாய்த் தோற்று வித்திருக்கிறது. இளமைக் காலம் என்றும், தாயின் கருப்பை என்றும் நாம் சுட்டியவற்றோடு இந்த மனநிலை இணைகிறது.

இவ்வளவுதானா என்ற கேள்வியோடு நாம் மேற்செல்வோம். வரலாற்றுக் காலம் முழுவதும் மனிதர்கள் எதிர்ப்புகளை, தடைகளைத் தகர்த்துக்கொண்டு முன் சென்றார்கள். ஆதி மனிதனின் மனநிலை ஒரு குளம் என்றால், இயற்கையோடும் சமூகத்தோடும் தன்னோடும் போராடித் தடைகளைத் தகர்த்து, தனக்கான உலகத்தை, வாழ்வை விரித்துக்கொண்ட மனிதனின் மனம் என்பது ஒரு பேராறு அல்லது கடல் என்று சொல்ல முடியும். எதிர்ப்புகள் இல்லாமல், தடைகள் இல்லாமல் இவற்றைத் தகர்க்க முனையாமல் வாழ்வின் விரிவும், ஆழமும், உன்னதங்களும் மனிதனுக்குச் சாத்தியமில்லை. ஆதி மனிதனுக்கு வானமும் நட்சத்திரங்களும் தொலைவில்தான் இருந்திருக்கும். ஆனால் வரலாற்றின் வழியே இவற்றோடு உறவு கொண்ட மனிதனுக்குள், அவை இணைந்துவிட்டன. கோடிக்கணக்கான உயிர் வகைகள், தாவரங்கள் இவற்றோடு இன்று நெருக்கமாக உள்ளான். வண்ணத்தின் பல நூறு வகைகளையோ, வானத்தில் நொடிதோறும் நிகழும் வண்ணக் கோலங்களையோ ஆதி மனிதன் அறிந்திருக்க மாட்டான். இன்று மனிதனுக்குள் திசைகள் வசப்பட்டிருக்கின்றன. மலைகளும் கடல்களும் மனிதனுக்கு நெருக்கமாக மாறியுள்ளன. இத்தகைய சூழல் மனிதனுக்குள் நோற்றல்களையும் பேருணர்வுகளையும் தூண்டுகின்றன. இவனது பார்வை இன்று பல மடங்கு விசாலப்பட்டிருக்கிறது. எத்தனையோ கோணங்கள் இவனுக்கு வசப்பட்டிருக்கின்றன. இன்னும் இவன் நெடுந்தொலைவு சென்றாக வேண்டும். கோணங்கள் எட்டு என்று இல்லை; பதினாறு, முப்பத்து

இரண்டு என்று தொகுத்து அடுக்க இயலாது. இப்படி இவனது அகவுலகமும் புறவுலகமும் விரிகின்றன. மனிதன் இன்று பெற்றுள்ளது, விசுவரூபம். உலகத்தை முழு அளவில் மாற்ற வேண்டிய மாபெரும் கடமை, இவனுக்கு வந்து சேர்ந்துள்ளது. திரும்பத் திரும்பத் தனக்குள் முக்குளித்தாலொழிய, தனக்குள் ஆழ்ந்து சென்று கவிதை ஊற்றைக் கண்டாலொழிய, இவனால் புதிய உலகைப் படைக்கும் ஆற்றல் பெற முடியாது. வரலாற்றின் வழியே தடைகளைக் கடந்து தன்னைத் தானே கண்டு கொண்ட பிராமித்தியசாக இவன் இருக்கிறான். இன்னும் இவன் இதயத்தைக் கழுகுகள் கொத்தி இரத்தம் உறிஞ்சுகின்றன. மலைகளோடு இவன் கட்டப்பட்டுத்தான் இருக்கிறான். எனினும் இவன் சோர்ந்து விடவில்லை. எப்பொழுதுமே இவன் தனக்குள் ஒரு கவிஞன். இவனுக்கு அழிவில்லை.

சுருக்கமாகச் சொன்னால், வாழ்வில் இயல்பான நீரூற்று அந்தக் கவிதை ஊற்று. இளமைக்கால உணர்வுகள் யாரிடம் எல்லாம் தங்கியிருக்கின்றனவோ, அவர்கள் ஏதும் எழுதவில்லை என்றாலும் அவர்கள் தம் உள்ளத்தில் கவிஞர்கள். தனக்குள் ஆழ்ந்து சென்று யாரெல்லாம் தாய்மைக் குணத்தைத் தமக்குள் பார்த்துக் கொண்டிருக்கிறார்களோ, அவர்கள் எல்லாம் கவிஞர்கள். வரலாற்று இயக்கத்தைப் புரிந்துகொண்டு எல்லோருக்குமான சமத்துவ வாழ்வைத் தம் கனவில் நிறுத்தி யாரெல்லாம் அந்த மேன்மையான வாழ்வுக்காகப் போராடுகிறார்களோ; அவர்கள் எல்லாம் கவிஞர்கள். சமூக வாழ்வியல் அனுபவத்தின் எல்லைகளை விரிப்பதற்காக அறிவியல் மற்றும் ஆன்மிகத் துறைகளில் யாரெல்லாம் இயக்கம் கொள்கிறார்களோ, அவர்கள் எல்லோரும் கவிஞர்கள். கனவுகளில், பேருணர்வுகளில் தம்மை இழந்தவர்கள் அந்தக் கவிஞர்கள். ஐன்ஸ்டின் என்றும் பிளாட்டோ என்றும் விவேகானந்தர் என்றும் மார்க்ஸ் என்றும் எத்தனையோ பேர்கள். இவர்களில் சிலர் கவிதை என்று, இன்று நாம் குறிப்பிடும் வடிவங்களில் தம்மை வெளிப்படுத்தாதிருக்கக்கூடும். ஆனால், இவர்களுக்குள் பொங்கியது கவிதையூற்று. இதற்குப் பெயர் கவித்துவம் அல்லது கவிதை வீறு என்று சொல்லலாம். தமிழன்பன் கவிதைகள் குறித்து ஆழச் சிந்திக்கும்பொழுது,

தமிழன்பனுக்குள் மட்டுமல்லாது, பொதுவாகவே கவிஞர்களுக்குள் பொங்கும் கவிதை மூலம் எது என்று சிந்திக்க வேண்டியிருக்கிறது. தமிழன்பனுக்குள் இயற்கை இணைந்திருக்கிறது; தாய்மை தழைத்திருக்கிறது; ஏற்றத் தாழ்வான உலகைப் புரட்டிப் போட்டு, மீண்டும் சமதர்மத்தைச் சாதிக்கும் பேருணர்வு உள்ளது; திரும்பவும் சொல்லலாம் - இயற்கைக்குள் இருப்பது, தாய்மைக்குள் தழைத்திருப்பது, வரலாற்றுக்கு வெளிச்சம், வளம் தருவது இந்தச் சமத்துவ உணர்வுதான்.

5

# தமிழன்பனின் வாழ்க்கைப் பின்னணி

சமூக வாழ்வின் அடிப்படைகளைப் புரட்டிப் பார்க்கும் பார்வை, கவிஞர்களுக்கு இயல்பாக வாய்த்திருக்கிறது. கிராமச் சூழலில், இயற்கைக்கு மத்தியில் உழவர்கள், கைவினைஞர்கள் முதலியவர்கள் மத்தியில் வாழ்வில் உயிர்ப்புக் கொண்ட கவிஞன், இன்றைய நகரச் சூழலில், உலகச் சூழலில் வாழ்வின் அடிப்படைகளைப் புரட்டிப் பார்க்காமல் இருக்க முடியாது. இருபது நூற்றாண்டுகளுக்கு முன்னர் எப்படி இருந்த பொழுதிலும், இந்தியாவில் இருபதாம் நூற்றாண்டுக்குள் நாம் வந்து சேர்கிறபொழுது குறிப்பாக, 'மார்க்சியம்' என்ற பார்வை சமூக ஆய்வுக்குள் வந்த நிலையில், அடிப்படைகளைப் புரட்டிப் பார்க்கும் பார்வை இல்லாமல் நமக்கு முடியாது.

இயற்கையோடு இணைந்துதான் உழவர்கள் நமக்குத் தேவையான உணவை உற்பத்தி செய்து தருகிறார்கள். இயற்கை பிரம்மாண்டமானது. ஆறுகள் என்றும், மலைகள் என்றும், காடுகள் என்றும், ஏரி குளங்கள் என்றும் இயற்கையின் விரிவு அகண்டமானது. காற்று என்றும், கடல் என்றும், வானம் என்றும், கதிரவன் என்றும், பருவங்கள் என்றும் இயற்கையின் விரிவை

நம் வாழ்வு அனுபவங்களுக்கு ஒத்த முறையில் மேலும் விரித்துப் பார்க்கலாம். இந்த இயற்கையின் ஒத்திசைவில்தான் உழவர்களின் உற்பத்தி நடைபெறுகிறது. அதாவது, பிரம்மாண்டமான இயற்கையின் ஒத்திசைவு இல்லாமல் நமக்கு அருந்த நீர் கிடைக்காது; உண்ண உணவு கிடைக்காது; பார்த்து மகிழ மலர்களும் இருக்க முடியாது. உழவர்களின் வாழ்க்கை மட்டுமல்லாமல் எத்தனையோ கைவினைஞர்களின் உழைப்பு இல்லாமல் நமக்கு நாடு இல்லை; நகரங்கள் இல்லை; வாழ்க்கை வசதிக்கான சாதனங்கள் இல்லை; இவர்களால்தான் நமக்கு உலகம் கிடைத்திருக்கிறது; வரலாறு வாய்த்திருக்கிறது. அரசுகளும் ஆதிக்கச் சக்திகளும் நிலை பெறுவது இவர்களைக் கொண்டுதான். யார் நமக்காக வாழ்வையும், வரலாற்றையும், வசதிகளையும், அழகுகளையும் படைத்துத் தருகிறார்களோ, அவர்களை அழிக்கும் நோக்கத்தில், அரசுகளும் ஆதிக்கங்களும் செயல்படுவதை யார் ஏற்க முடியும்? இப்பொழுதுதான் ஆதிக்கங்களைப் புரட்டிப் போடுகிற பார்வை நமக்கு வந்து சேருகிறது. இயற்கையும், மனித உழைப்பும், உறவுகள் தரும் உற்சாகமும் கவிஞனுக்குள் இருந்து அவனைக் குடைகின்றன. வானம் அவனுக்குள் சுருங்கி இருக்க முடியாது; கதிரவன் தன் ஒளியைக் குறைத்துக்கொள்ள முடியாது; ஆறுகள் அவனுக்குள் வற்றிவிட முடியாது; குழந்தைகள் அவனுக்குள் சாக முடியாது; உலகம் அவனுக்குள் தன் அழகை இழக்க முடியாது; அவனுக்குள் தாய்மை அழிய முடியாது; அவன் கேள்வி எழுப்புகிறான்; வாழ்க்கையைப் புரட்டிப் போடு என்கிறான். அசுரர்கள் அழியட்டும் என்றும், வாழ்வில் அமரத்துவம் தோன்றட்டும் என்றும் கூறுகிறான்.

இப்படிப் பார்க்கும்பொழுது கவிஞன் என்பவன்தான், இயல்பிலேயே சமதர்மவாதியாக இருக்கிறான். முன்னைய நூற்றாண்டுகளில் இவ்வளவு பெரிய பார்வை அவனுக்குள் இல்லை என்று சொல்வதற்கில்லை. வள்ளுவர்க்குள்ளும், இளங்கோவிற்குள்ளும், கம்பருக்குள்ளும் இருந்த பார்வை, இப்படி உலகைப் புரட்டிப் பார்க்கிற பார்வைதான் என்பதில் ஐயமில்லை. எனினும், அரசியல் மற்றும் பொருளியல் சக்திகள் பற்றிய இன்றைய பார்வை அவர்களுக்கு வாய்த்திருக்க

முடியாது. ஆதிப் பொதுச் சமூகத்திலிருந்து அவர்கள் விலகிவிட்டவர்கள் என்றபோதிலும், அவர்களின் கனவுகளில் கற்பனைகளில் அந்த ஆதிப் பொதுமைச் சமூகம் இயங்கிக் கொண்டுதான் இருந்தது. இன்றும் நாம் விரும்பிக் கற்கிற கனவுகளை அவர்கள் கொண்டிருந்தார்கள். அவர்களிடம் தங்கியிருந்த கனவுகள், நமக்குள் இன்னும் ஆழ்ந்த அர்த்தங்களைப் பெறுகின்றன. அவர்களைக் காட்டிலும் வரலாறு மற்றும் பொருளியல் பற்றிய ஆழ்ந்த பார்வையைப் பெறுகிற சந்தர்ப்பம் இன்று நமக்குக் கூடியிருக்கிறது. ஆகவே நமக்குள் சமதர்மம் என்ற பார்வை ஆற்றல் மிக்கதாக இருக்கின்றது. வள்ளுவர் முதலானவர்களுக்குத் தேவைப்பட்ட அரசன், இன்று நமக்குத் தேவையில்லை. அவர்கள் நம்பியிருந்த கடவுளர்கள், இன்றைய வரலாற்றுப் பார்வையில், நமக்குள் புதிய வெளிச்சம் தருகிறார்கள். அவர்களின் கற்பனைகள், கதைகள் இன்று நமக்குள் புதிய அர்த்தங்களில் புலப்படுகின்றன. வாழ்க்கையைப் புரட்டிப் பார்க்கிற பார்வை இன்று எளிதாக இருக்கிறது.

இன்றைய வரலாற்றுச் சூழலில் ஒரு கவிஞன் சமதர்மவாதியாக இருப்பது இயல்பு என்பது மட்டுமல்ல, அவசியமும்கூட. சமதர்மவாதியாக இருக்கும் கவிஞனுக்குத்தான் வாழ்வின் பேருணர்வுகள், அற்புதக் காட்சிகள் சாத்தியம். முதலாளியத்திற்கும், வணிக சக்திகளுக்கும், அரசியல் அதிகார சக்திகளுக்கும் தனக்குள் இடம் கொடுக்கிற கவிஞன் சிறுத்துப் போய்விடுகிறான். அவனுக்குள் கவிதையும் சிறுத்துப் போய் விடுகிறது. பேரியக்கங்களின் இயக்கமோ அர்த்தமோ அவனுக்குத் தெரியாது. இலக்கியத்தின் வரலாறுகூட அவனுக்குத் தெரியாது. மேலும் ஒன்றைச் சொல்லலாம். தன்னைப் பற்றிய சரியான பார்வைகூட அவனுக்குச் சாத்தியமில்லை. இது பற்றி நாம் நிறையச் சொல்ல வேண்டும். அதற்கு முன்னர் தமிழன்பனின் குறிப்பிட்ட ஒரு கவிதைப் போக்கு பற்றி இங்குச் சுருக்கமாகப் பார்த்துக் கொள்ளலாம்.

தமிழன்பன் சிற்றூரில் தோன்றியவர்; உழவர்களுக்கும் நெசவாளர்களுக்கும் மத்தியில் வாழ்ந்தவர்; சென்னிமலையின் இயற்கை அழகில் சிலிர்த்துக்கொண்டவர்; நெசவாளர்களின்

கைவண்ணங்களைத் தெரிந்துகொண்டவர்; வானவில்லின் ஏழு நிறங்களைக் காட்டிலும், எண்ணற்ற நிறங்களில் நெசவாளர்கள் தறிப் படைப்புகளைச் செய்ததை அறிந்தவர்; இந்த வண்ணங்கள் அவருக்குள்ளும் நிறைந்தன. சென்னிமலை முருகன் இவருக்குள் உணர்வலைகள் எதனையும் எழுப்பவில்லை என்பதும் வியப்புதான். இளமையிலேயே ஈரோட்டுப் பள்ளியின் பாதிப்பு இவருக்குள் வந்த சேர்ந்திருக்க வேண்டும். சிவனும் பார்வதியும், திருமாலும் இலக்குமியும், முருகனும் வள்ளியும் இவரை மயக்கவில்லை. தமிழ் இலக்கியக் கல்வியில், இவர் தன்னுள்ளம் தோய்ந்திருக்கிறார். திராவிட இயக்கத்தின் பார்வை வழியே, தமிழ் இலக்கியம் இவருக்குள் அர்த்தப்பட்டிருக்கிறது. தமது கால சமூக வாழ்வை, இவர் ஆழமாகக் கற்றிருக்கிறார்.

சிற்றூர் வாழ்க்கையும், உழவர்கள் முதலியவர்களோடு கொண்ட உறவும், இவருக்குள் சமதர்ம உணர்வை ஆழமாக ஊன்றியிருக்கின்றன. திராவிட இயக்கங்களின் வழியேயும் இவருக்குள் ஆழமாக வேர்விட்டிருப்பதும் சமதர்மப் பார்வைதான். வரலாற்றில் எவ்வளவோ நிகழ்ந்திருக்கின்றன. இந்திய தேசம் என்ன ஆயிற்று என்பதை இவர் அறிந்திருக்கிறார். ஜனநாயகம் இங்கே எவ்வாறு படுகொலை செய்யப்பட்டிருக்கிறது என்பதையும் அறிந்திருக்கிறார். கல்வித்துறையின் சீரழிவைப் பற்றிய ஆழ்ந்த அறிவை இவர் நேரில் பெற்றவர். வல்லரசுகளின் ஆதிக்கத்தை இவர் அறிந்திருக்கிறார். இந்தியாவின் பொருளாதாரம் யார் கையில் அகப்பட்டு அழிந்து போயிருக்கிறது என்பதை இவர் அறிந்திருக்கிறார். அணு குண்டுகளும் ஏவுகணைகளும் உலகத்தை அச்சுறுத்திக் கொண்டிருப்பதை, இவர் அறிகிறார். தேசத் தலைவர்களின் சதிச் செயல்களைக் கண்டு இவர் சீற்றம் கொள்கிறார். இந்தச் சூழலில்தான் உழவர்கள் மற்றும் கோடிக்கணக்கான மக்களின் வாழ்வு ஆற்றலும் அழகும் அழிந்து போவதைப் பற்றிக் கவலை கொள்கிறார். இந்த உணர்வுதான் தமிழன்பனின் பெரும்பாலான கவிதைகளில் எரிமலையாய்க் கொந்தளிக்கிறது. இவரது உணர்வுகள் அலையலையாய் அணை உடைத்து வரும் வெள்ளமெனக்

கவிதைகளில் ஓடுகின்றன. நெஞ்சின் உணர்வலைகள் அவ்வளவு சீக்கிரம் வடிந்துவிட முடியாது. கொந்தளித்துக் குமுறி வெடித்துத்தான், தன் கனல் தணிய வேண்டும். இப்படித்தான் இவரது அரசியல் கவிதைகள் இயங்குகின்றன.

இந்தியத் தேசியம் என்பதை இவர் இயல்பாகவே வெறுக்கவில்லை. ஆனால் தமிழன் என்பதற்குத் தடை போட்டால் இந்தியா தனக்குத் தேவையில்லை என்கிறார். இந்தியின் வருகையை இவரால் இம்மியும் ஏற்க முடியாது. மூவேந்தர் முதலிய பழம் பெருமை இவரை மயக்கவில்லை. கல் தோன்றி முன் தோன்றாக் கதைகள் இவருக்கு உடன்பாடில்லை. அகநானூறும் புறநானூறும் இன்றைய வாழ்வுக்குள்ளும் சிறக்க வேண்டும் என்கிறார். புராணக் கதைகளுக்கு இன்றைய நோக்கில் புதுப் பொருள் சொல்கிறார்.

தமிழுணர்வு என்பது இவரிடத்தில் அறவுணர்வாய், இலக்கிய உணர்வாய்த் தங்கியிருக்கிறது. ஆற்றல் மிக்கவை இவரது அரசியல் கவிதைகள் என்பதில் ஐயமில்லை. 1947ஆம் ஆண்டிற்குப் பிற்பட்ட இந்திய அரசியலை இவர் என்னமாய்ச் சாடுகிறார்? தமிழக அரசியலையும் இவர் விட்டு வைக்கவில்லை. பெரியாரின் சீடர்களைப் பெரியாரியத்தைக் கைவிட்டதாகச் சாடுகிறார்.

கவிஞன், இன்றைய வரலாற்றுச் சூழலில் அரசியல்வாதியாவதில் குற்றம் காண்பதற்கில்லை. கட்சி அரசியலுக்குள், அதிகார அரசியலுக்குள் மாட்டிக்கொண்ட கவிஞன் சிறுத்துத்தான் போகிறான். இன்று அரசியலைத் தொடாமல் எதையும் பேசுவதற்கில்லை. அரசு, தன் அதிகாரப் பிடிகளை எவ்விடத்தும் நீக்கமற விரித்திருக்கிறது. ஆகவே அரசியலிலிருந்து விலகி ஒருவன் கவிதை செய்ய முடியாது. தமிழன்பன், கட்சி அரசியல் எதற்குள்ளும் மாட்டிக்கொள்ளாது களத்தில் நின்று வீறுடன் கவிதை செய்கிறார்.

# 6

## எந்தச் சூழலில் தமிழன்பனை வைத்துப் பார்ப்பது?

எந்த ஒரு மனிதனுக்கும் மெய்யியல் பார்வை தேவை. மெய்யியல் பார்வை இல்லாமல் மனிதனுக்கு வாழ்வில்லை. கவிஞனுக்கு மெய்யியல் பார்வை, ஆழமாக இருக்க வேண்டியதன் தேவையை நாம் விரித்துச் சொல்ல வேண்டியதில்லை. உண்மையில், கவிஞனுக்குள் ஒரு மெய்யியலாளன் இருக்கிறான். இந்த மெய்யியலாளனைக் கவிஞன் கண்டறிய வேண்டும்; வளர்த்துக்கொள்ள வேண்டும்; கவிஞன், மெய்யியலாளனாக வளர்ச்சி பெறுவதில் கவிதை செத்துவிடாது. கவிதையியலையும், மெய்யியலையும் பிரித்துப் பேச இயலாது. மெய்யியல் என்பது மதத்தினுள்ளும், மதத்திற்கு வெளியே மதச் சார்பின்றியும் இயங்க முடியும். கவிஞன் மதவாதியாக இருந்திருக்கிறான் என்பது வரலாறு. அந்த மதவாதிக்குள்ளும் கவிஞன் இருந்தான் என்று கண்டறிவது இலக்கிய வரலாறு. மதம் என்பதேகூட ஒருவகையில் கவிதைதான் என்பதற்கும் இடம் இருக்கிறது. தாகூர் தமது சமயத்தைக் கவிஞனின் சமயம் என்று குறிப்பிட்டிருக்கிறார். பாரதியின் கவிதையிலிருந்து அவரது சமயப் பார்வையைப் பிரித்துச் சொல்வது கடினம்.

கவிதை, வாழ்வின் அர்த்தங்களை, அழகுகளை, ஆற்றல்களை வெளிப்படுத்துகிறது என்றால், கவிஞன் தனக்குள்ளும் பயணம் செய்வது இன்றியமையாதது. தான் யார் என்பதை, தான் எப்படித் தோன்றினான் என்பதை, தன் வேர்கள் எங்கிருந்து தொடங்குகின்றன என்பதை ஒரு கவிஞன் தெரிந்து கொள்ள வேண்டும். சமூகச் சூழலில், வரலாற்றுச் சூழலில்தான் தனக்கான வாழ்வு கிட்டியது என்றால், தன்னை அறிந்து கொள்வதற்குச் சமூகச் சூழலில் மட்டுமல்லாமல், வரலாற்றுச்

சூழலுக்குள்ளும் சென்று தன்னைக் காண வேண்டும். நான் யார்? என்ற கேள்வியைச் சமயவாதி கேட்கிறான். தான் உருவாக்கிய சமூகச் சூழல், வரலாற்றுச் சூழல் முதலியவற்றை மறுத்துக் கொண்டே சென்று, இறுதியில் தன்னைப் பிரம்மம் என்கிறான் அல்லது சூனியம் என்கிறான். இவனுக்குள் வரலாற்றுச் சூழல் தன் அர்த்தத்தை இழக்கிறது.

எந்த ஒரு சமயவாதியும் உணவும் உடையுமின்றி வாழ முடியாது; காற்றும் நீரும் இன்றி வாழ முடியாது; வானமும் பூமியுமில்லாமல் வாழ முடியாது; பெற்றோர் இல்லாமல் இவனுக்கு உயிர் வாழ்க்கை இல்லை; மனித உணர்வுகள் இல்லாமல் இவனுக்குள் இயக்கம் இல்லை; உடம்போடுதான் இவன் வாழ முடியும். இவன் சிந்திக்க வேண்டும் என்றால், சமூக மனிதர்களின் ஆயிரக்கணக்கான அனுபவங்கள் இவனுக்கு நிழலாகவேனும் படிந்திருக்க வேண்டும். வாழ்வின் உறவுச் சிக்கல்கள், துயரங்கள் இல்லாமல் இவனுக்குள் எந்தத் தேட்டமும் ஏற்பட முடியாது. பொருளும், அதிகாரமும், காமமும், பசியும் இவனுக்குள் இவனைக் கூறு போடத் தொடங்கும்போதுதான், இவன் தன்னை யார் என்று அறியத் தேடுகிறான். துயரங்கள் இவனைத் துரத்தும்போதுதான் அங்கங்கே ஓடியலைந்து தன்னை மறைத்துக்கொள்ள இடமில்லாமல், பின்பு துயரங்களின் நேர்முகத்தில் நின்று "இவை எங்கிருந்து வருகின்றன?'' "ஏன் தன்னைத் துரத்துகின்றன?'' என்று சிந்திக்கிறான். இப்படி ஒரு நெருக்கடி இல்லாமல் இவனுக்குள் சிந்தனையில் நான் யார் என்ற தேட்டம் இல்லை.

இப்படித் தேடும்பொழுது தனக்குள் எவ்வளவோ சோகங்களை, வருத்தங்களை, கொடூரங்களை, நன்மைகளை, தீமைகளை, ஆதிக்கத்தை, அடிமைத்தனத்தை, அழகை, அழகற்றவைகளைக் காணுகிறான். இவற்றிலிருந்து விலகி நிற்க இவன் என்னதான் முயன்றாலும், தனக்குள்ளிருந்து இவற்றை வெளியேற்றிக்கொள்ள இயலவில்லை. தியானத்திலிருக்கும் போது இவை ஒதுங்கி இருக்கின்றன; தியானத்திலிருந்து எழுந்தபோது இவை, இவனுக்குள் வந்து சேருகின்றன; கடவுள் சந்நிதியில் இருக்கும்போது துயரங்கள் ஒதுங்கி நிற்கின்றன

கோயிலை விட்டு வெளியே வந்தால் துயரங்கள் இவனைப் பற்றிக் கொள்கின்றன. இப்பொழுதுதான் கவலைப்படுகிறான். தொடர்ந்து சிந்திக்கிறான். சமூகச் சூழலில், வரலாற்றுச் சூழலில் இருக்கும் மட்டும் இவன் இந்தத் துயரங்களிலிருந்து வெளியேற முடியாது. சமூக, வரலாற்றுச் சூழலில் இவனுக்குள் வந்தவை துயரங்கள் மட்டுமே. இவனுக்குள் பொங்கும் விசை எங்கிருந்து வந்தது? இவனுக்குள் கலை நுட்பங்கள் எங்கிருந்து கிடைத்தன? இவனது சிந்தனை எங்கிருந்து வந்தன? இவனுக்குள் நடைபெறுகிற போராட்டம், இவன் பிறந்த பிறகா தோன்றியது? இவனுக்குள் வானம் வந்திருக்கிறது. பேரழகுகள் வசப்பட்டிருக்கின்றன. இவற்றையெல்லாம் இவன் எப்படிப் புரிந்துகொள்கிறான்? வரலாற்றிலிருந்து இவனால் தப்ப முடியுமா?

இத்தகைய ஒரு பயணத்தின்போதுதான், இவன் எல்லாவற்றிலிருந்தும் தன்னை விலக்கி, தன்னைப் பிரம்மம் என்றோ, சூனியம் என்றோ காண்பது எவ்வளவு பெரிய மாயை என்பது தெரிகிறது. தன் இருப்பை இவன் எவ்வாறு மறுக்க முடியும்? காற்றும், நீரும், உயிர் வகைகளின் உறவுகளும் தன்னை ஆக்கியிருப்பதை, தனக்குள் தங்கியிருப்பதை இவன் எவ்வாறு மறுக்க முடியும்? பிரபஞ்சமே இவனுக்குள் இயங்குகிறது. பிரபஞ்சத்தின் ஒரு கூறாக, துளியாக இவன் இருக்கிறான். இவன் தன்னைத் தானே படைத்துக் கொள்ளவில்லை. பிரபஞ்ச இயக்கந்தான் இவனைப் படைத்திருக்கிறது. இயற்கையின் ஒரு கூறு இவன்; வரலாறு இவனைப் படைத்திருக்கிறது. இந்தியாவில் இவன் வாழ்கிறான் என்றால், இவன் ஆக்கத்தில் இந்தியாவின் பங்கு இருக்கிறது. தமிழ்ச் சூழலில் இவன் இருக்கிறான் என்றால், தமிழ்ச் சூழல் இவனுக்குள் சென்றிருக்கிறது. அண்டமே இவனுக்குள் இயங்குகிறது. சமூகம், வரலாற்று முரண்கள், சிக்கல்கள் எல்லாமே இவனுக்குள் இயக்கம் கொள்கின்றன. இவனுக்குள் ஆதி மனிதனும் இருக்கிறான். இன்றைய மனிதனும் இருக்கிறான். தன்னைத் தோண்டிப் பார்த்தால், இவன் வரலாற்றின் எத்தனையோ கூறுகளை, மனிதர்களை இவன் தனக்குள் சந்திக்க முடியும். எல்லையற்ற இவற்றின் இயக்கத்தின் வழியேதான், இவன்

மனிதன் ஆனான்; கலைஞன் ஆனான்; மெய்யியலாளன் ஆனான். ஆதிக்கவாதிகள் சமூக வாழ்வை வசப்படுத்திக் கொண்டதன் வாயிலாகவே இவன் துரத்தப்பட்டான்.

ஆதிக்கவாதிகள் இவனை வசப்படுத்துவதற்காக இவனுக்குள்ளும் எத்தனையோ வடிவங்களில் தம்மை நிறுவிக் கொண்டார்கள். ஆதிக்கத்திற்கு எதிரான போராட்டங்களும் வரலாற்றில் தொடருகின்றன. இவனுக்குள்ளும் ஆண்டானும் இருக்கிறான்; இவனை எதிர்த்து அடிமையும் போராடுகிறான். இவன் ஒரு சமயம் ஆதிக்கவாதியின் சார்பில் நிறுத்திக் காண்பான். இன்னொரு சமயம் அடிமையின் சார்பில் நிறுத்திக் காண்பான். எல்லாமும் நாம்தான் என்பான். நான் ஏதுமற்றவன் என்றும் சொல்வான். கடவுள்களையும், பிசாசுகளையும் இவன் தோற்றுவித்தான். இவன் ஒத்துழைப்பு இல்லாமல் ஆதிக்கவாதி தன்னை நிலைநிறுத்திக் கொள்ள முடியாது. இவனது இசைவு இல்லாமல், இவன் அடிமையாய் இருந்திருக்க முடியாது. இவனுக்குள் அறவுணர்வு அழிந்துவிடாது. துன்பங்களும் இன்பங்களும் இவனுக்குள் மாறி மாறி வரத்தான் செய்யும். இவனுக்குள் நாயன்மார்களும், ஆழ்வார்களும், சித்தர்களும் இருக்கத்தான் செய்வார்கள். இவன் இப்படித்தான் தன்னைத் தனக்குள் தேட வேண்டும். "மெய்யியல் ஆய்வு" என்பதை இப்படித்தான் செய்ய முடியும். இவனுக்கு வரலாறு தழுவிய மாபெரும் பார்வை தேவை. இதுதான் விசுவரூப தரிசனம். இலக்கியவாதிக்கும் இந்தத் தரிசனங்கள் உரியவை. புராணக் கதைகளைப் பொய்யென்று தள்ளமாட்டான். மதவாதிகளைக் கற்பனை என்று உதறமாட்டான். எல்லாவற்றினுள்ளும் வரலாற்றை இவன் காண்பான். ஆதிக்கமும் அடிமைத்தனமும் எதிர் நின்று போராடுவதை, மனிதன் தன்னைத் தானே மீட்டுக் கொள்ளப் போராடுவதை இவன் காண்பான்.

நான் யார் என்ற தேட்டம் இவ்வாறு அடிமுதல் முடிவரை, முன்னும் பின்னுமாக, குறுக்கும் நெடுக்குமாக நிகழ வேண்டும். எனக்குள் எதுவும் இல்லை என்று சொல்பவன் வரலாற்றுச் சிக்கலிலிருந்து விலகி, தன்னை எங்காவது ஒதுக்கிக் கொள்ள விரும்புகிறான். தமிழ்ச் சூழலில் இப்படிக் கவிதைக்குள் மட்டும்

அல்லது இலக்கியத்திற்குள் மட்டும் சிலர் ஒதுங்குகிறார்கள். ஒதுங்கிய இடத்தினுள்ளும், இவர்கள் கண்டும் காணாததுமாய் இருக்கிறார்கள். இவர்கள்தான் அரசியல் வேண்டாம் என்பார்கள். இவர்களில் பலர் புதுக் கவிதைக்காரரர்கள். இவர்களில் ஒருசிலர் கலாச்சாரம் என்று உரத்துப் பேசி வரலாற்றை மறுக்கிறார்கள். தனக்குள் தரிசனம் என்று சொல்லி, வரலாற்றிலிருந்து விலகி ஜெ. கிருஷ்ணமூர்த்தியோடும், ரஜனீசோடும் தம்மைச் சமப்படுத்திக் கொள்கிறார்கள். இவர்களைப் போலவே வரலாற்றுச் சூழலில் பொருளுக்கு மட்டுமே முதன்மை தந்து பொருள்முதல் வாதம் பேசுகிறார்கள். இத்தகைய தமிழ்ச் சூழலில் வைத்துத்தான், தமிழன்பன் கவிதைகளை நாம் காண வேண்டும்.

## 7

## *வரலாற்றிலிருந்தும் ...*
## *தத்துவத்திலிருந்தும்...*

வானம் அழகியது; காற்றும், நீரும், மலரும், செடியும் அழகியவை; கதிரவனும் நிலவும் அழகாகக் காட்சி தருகின்றன; இப்படி ஆயிரக்கணக்கில் அழகிய காட்சிகள் நம்மைக் குளிர்விக்கின்றன; இன்பம் தருகின்றன; இவற்றால்தான் நம் வாழ்க்கை வளம் பெறுகின்றது. இனிய அனுபவங்களாக, இவை இளமை முதலே நமக்குள் இணைந்துவிட்டன. இந்த அழகிய காட்சிகளை, வண்ணங்களைக் கவிதைகள் தமக்குள் எடுத்துக் கொள்கின்றன. ஆகவே, இந்தக் கவிதைகளும் நமக்கு இனியவை. கதிரவனையும், நிலவையும், மலரையும், செடி கொடிகளையும் கவிதைகள் வழியே நாம் மீண்டும் காண்கிறோம். நமக்குள் இன்ப உணர்வுகள் எழுகின்றன. இதன் காரணமாகவும் நமக்குக் கவிதைகள் தேவை.

மலைகளும், கடல்களும், வானவெளியும், வயல்வெளிகளும் நமக்குள் இணைந்திருக்கின்றன. கடல்களுக்கும், மலைகளுக்கும்

மத்தியில் நாம் வாழவில்லை என்றாலும், கடல்களையும், மலைகளையும் பார்க்க வாய்ப்புக் கிடைத்தபொழுது, இந்தக் காட்சிகள் நமக்குள் என்றும் நீங்காது பதிந்துவிட்டன. ஆறுகளிலும், குளங்களிலும் நாம் நீராடினோம். நெடுந் தொலைவு நடந்து வந்தோம். மரங்களில் ஏறி மகிழ்ந்தோம். இவையெல்லாம் நமக்கு அனுபவங்கள். உலகத்தை நாம் இப்படித்தான் கற்றுக்கொண்டோம். மலையின் தோற்றம் முதலிய பெருங் காட்சிகள் நமக்குள் வியப்புணர்வாய், பெருமித உணர்வாய்த் தங்கிவிட்டன. கடற்கரையில் சேகரித்த பாசிகளும், மணிகளும்கூட நமக்குள் தங்கியிருக்கின்றன. அடிக்கடி இந்தக் காட்சிகள் தாமாகவும் நமக்குள் எழுகின்றன. சில கணங்கள் மயங்கி நிற்கிறோம். மயங்கிய இந்தக் கணங்கள் நமக்குள் அற்புதமானவை. மயங்கிய இந்தக் கணங்களின்போது நாம் இல்லை. நாம் மலைகளானோம்; மரங்களானோம்; இந்த அழகிய காட்சிகளையும், எல்லோருக்கும் பொதுவான அனுபவங்களையும் நாம் கவிதையில் சேகரித்துள்ளோம். கவிதை வழியே, இவற்றோடு நாம் மீண்டும் மீண்டும் உறவு கொள்கிறோம்; நம்மைப் புதுப்பித்துக்கொள்கிறோம்.

இல்வாழ்க்கைக்குள் வருகிறோம். நிலத்தோடும், நீரோடும், நண்பர்களோடும், உறவினர்களோடும், காட்டிலும், வெளியிலும் நமக்கு எத்தனை வகை அனுபவங்கள்! பள்ளியில், தெருக்களில் எத்தனை உறவுகள்! எத்தனை மோதல்கள்! எத்தனைப் பிரிவுகள்! விளையாட்டுகள், வேதனைக்குப் பல்வகை அனுபவங்கள். பல வகைக் காலங்களில் பயணம் போனோம்; கண்காட்சிகள் பார்த்தோம்; உயிர்களோடு உறவு கொண்டோம். இவ்வாறெல்லாம் உலகத்தை நமக்குள் கொண்டு வந்தோம். உலகத்தை நமக்குள் தெளிக்கவும், பெற்றோர்களும், ஆசிரியர்களும், உறவினர்களும், மற்றவர்களும் எத்தனையோ முயற்சிகள் செய்தார்கள். இப்பொழுதுதான் வாழ்க்கை நிம்மதி எனத் தெரிய வருகிறது. வாழ்வின் பரப்பு நமக்குள் விரிகிறது. புதியவை கற்கும்போது துன்பம்; எனினும் கற்றுக்கொண்ட பிறகு அவை நமக்குத் திறன்களாகின்றன; அனுபவங்களாகின்றன. துன்பங்களைக்கூட நாம் நேசிக்கத் தொடங்குகிறோம். உலகில் நெடும் பயணம், பலதிசைப் பயணம்

செல்வதன் மூலம் வாழ்க்கை நமக்கு வசப்படும் என்று அறிகிறோம். ஒவ்வொன்றாகக் காட்சிகள் நமக்குள் சேர்ந்து, இறுதியில் ஒரு பெருங்காட்சி நமக்குள் தங்குகிறது. இன்பம், துன்பம், கோபம், வீரம், காதல், பெருமிதம், அமைதி என எத்தனையோ உணர்வுகள் நமக்கு உரியனவாகின்றன. இப்பொழுது நாம் கவனமாக இருந்து வாழ்வில் நடை பயில வேண்டும். அடுத்தவர்க்குத் துன்பம் தரக் கூடாது. உழைப்பது இன்பம்; பகிர்வது பேரின்பம்; இப்படி வாழ்க்கை நமக்குள் ஏற்ற இறக்கங்களோடும், சிக்கல்களோடும், மோதல்களோடும், முரண்பாடுகளோடும் வந்து சேருகிறது. நாம் தடுமாறுகிறோம்; திகைக்கிறோம்; இழக்கிறோம்; தெளிவு பெறுகிறோம்; ஏமாற்றங்களை ஏற்றுக்கொள்கிறோம். கவிதையில் இவை சேகரமாகியுள்ளன. இந்த வகைக் கவிதைகளைக் கற்கும்போது, நம் அனுபவங்களோடு ஒப்பிட்டுப் பார்க்கிறோம்; கற்றுக் கொள்கிறோம்; முரண்பட்டபோது சிந்திக்கிறோம்; வாழ்க்கையை மேலும் மேலும் புரிந்துகொள்ள முயற்சி செய்கிறோம்; புதிய அனுபவங்களைப் பெறுகிறோம்; கவிஞர்களோடு பழகத் தொடங்குகிறோம்; நமக்குள் கவிதைகள் உள்ளன; கற்றுக்கொள்கிறோம்.

இவ்வகை அனுபவங்கள் மரங்களுக்கு உண்டா? தாவரங்களுக்கு உண்டா? பறவைகளுக்கும், மற்ற உயிரினங் களுக்கும் உண்டா? நமக்குத் திட்டவட்டமாகத் தெரியவில்லை; நமக்கு வாய்த்திருக்கிற அனுபவங்களில், சில துளிகள் பறவைகளுக்கும், விலங்குகளுக்கும் கிடைக்கக்கூடும். அவைகளுக்கு நரம்பு மண்டலங்கள் இருக்கின்றன. நினைவுத் திறம் இருக்கிறது. ஆகவே அவற்றுக்கும் சில அனுபவங்கள் இருப்பதை நாம் மறுப்பதற்கில்லை. ஆதி மனிதன் மலர்களை நேசித்தானா? கதிரவனையும் நிலவையும் இரசித்திருப்பானா? பறவைகள் அவனுக்குள் பாடியிருக்க முடியுமா? இப்படியெல்லாம் நாம் உறுதியாகச் சொல்ல முடியாது. அன்றைய வாழ்வில் விபத்துகள் அதிகம்; அச்சமும் அதிகம்; தற்காப்புக்கும் உணவுக்கும் அவன் அலைந்தாக வேண்டும். ஆயிரக்கணக்கான ஆண்டுகள் ஓடிவிடுகின்றன. ஆற்றைக் கடக்கவும், கடல்களில் கலம் செலுத்தவும், நிலத்தில் பயிரிடவும்

மனிதன் கற்றுக் கொண்டான். பருவங்களை அறிந்து கொண்டான். உயிர் வகைகளின் இலக்கணங்களைப் புரிந்து கொண்டான். இப்பொழுதுதான் மெல்ல மெல்ல வாழ்வின் சில தடங்கள் அவனுக்குள் வந்து சேருகின்றன. இன்னும் பல்லாயிரம் வருடங்கள் ஓடிவிடுகின்றன. உயிர்கள் எங்கிருந்து வந்தன? எங்கே செல்கின்றன? பருவங்கள் எப்படி மாறி மாறி வருகின்றன? இறப்புக்குப் பின் மனிதன் எங்கே செல்கின்றான்? கனவு என்றால் என்ன? இப்படி ஆயிரத்தெட்டுக் கேள்விகள்! கடவுள் நம்பிக்கை, சடங்கு, குடும்பம், திருமணம், போர், தலைவன், அரசு, மொழி, நாடு என்று எவ்வளவோ இவனுக்குள் வந்து சேருகின்றன. வாழ்க்கையின் பிறப்பு விரிவு பெறுகின்றது. முரண்களும் அதிகரிக்கின்றன. துன்பங்களைப்போல இன்பங்களும், தோல்விகளைப்போலவே வெற்றிகளும் அதிகரிக்கின்றன. இவனுக்குள் தத்துவம் அரும்புகின்றது. வாழ்வின் சிக்கல்களுக்கு விடை தெரிய வேண்டும். கிடைத்த விடை தவறிவிடுகிறது. மீண்டும் தேட வேண்டும். காடுகளில் அலைய வேண்டும். போதி மரத்தடியில் அமர்ந்து சிந்திக்க வேண்டும். தியானம் செய்ய வேண்டும். எத்தனையோ கொடுமைகள், கோரங்கள். இவையெல்லாம் ஏன் என்று சிந்திக்க வேண்டும்?

மேலும் ஆயிரம் ஆண்டுகள் ஓடி விடுகின்றன. உலகம் உருண்டை. சூரியனைத்தான் பூமி சுற்றுகிறது என்று தெரிகிறது. பரிணாமத்தின் வழியே உயிர் வகைகள் மேம்பட்டன என்பது தெரிகிறது. மனிதன் வரலாற்றுக்குள் வந்துவிட்டான். கலைகளும் இலக்கியங்களும் தோன்றிவிட்டன. இவன் எல்லாவற்றோடும் உறவு கொண்டிருக்கிறான். எல்லாம் ஒன்று என்று கனவு காண்கிறான்; வேறுவேறு என்றும் சிந்திக்கிறான்; ஒன்றோடு இன்னொன்று, ஒன்றுக்குள் இன்னொன்று; அது இல்லாமல் இது இல்லை. இப்படியெல்லாம் அவனுக்குள் சிந்தனை எழுகின்றன. தர்க்கமும் நியாயமும் தெரிகின்றன. அறம் என்றும், பாவ-புண்ணியம் என்றும், மேலுலகம் கீழுலகம் என்றும், உயிர் என்றும், விடுதலை என்றும் பேசத் தொடங்குகிறான்.

இன்னும் பல நூறு ஆண்டுகள் ஓடிவிடுகின்றன. இப்பொழுது திரும்பிப் பார்த்துச் சிந்திக்கிறோம். வரலாற்றின் வழியேதான்

நாம் உருவானோம். அனுபவங்கள் நமக்கு வரலாற்றின் வழியேதான் சாத்தியமாயின. வரலாற்றில் எத்தனையோ பார்வைகள், தத்துவங்கள், தர்க்கங்கள் இவற்றின் வழியேதான் வந்து சேர்ந்திருக்கிறோம். இப்பொழுது ஆதிக்கம் என்றால் என்ன? அடிமைத்தனம் என்றால் என்ன என்பது நமக்குத் தெரிகிறது. அரசியலும், பொருளியலும், இலக்கியமும், பண்பாடும் நமக்குத் தெரிகின்றன. இப்பொழுது வாழ்க்கை பெரிது. வரலாற்றோடு நமக்கு உறவு விரிவானது.

வரலாற்றின்வழியே நாம் மனிதரானோம்; இலக்கியம் கற்றோம்; இலக்கியம் படைக்கிற கதைகள் சொல்கிறோம். கற்பனை இல்லாமல் நாம் வாழ முடியாது. அனுபவங்களை எத்தனையோ வடிவங்களில் தொகுத்து வைக்கிறோம். இந்த வடிவங்களில் அனுபவங்கள் அல்லனவும் சேகரமாவதில்லை. புதிய வடிவங்கள் நமக்குத் தேவை. வாழ்க்கை பற்றிய புதிய பார்வைகள் நமக்குத் தேவை. இப்படியெல்லாம் வாழ்வியலின் புதிய அனுபவங்களுக்கு, பார்வைகளுக்கு இடம் கொடுத்தால்தான் நமது வாழ்க்கை விரிவுபடும்; மேம்படும். அடிமைத்தனத்தில் நாம் ஆழ்ந்திருக்க முடியாது. போராட்டங்கள் நமக்குள் எத்தனையோ புதிய அழகுகளை, திறன்களைத் தோற்றுவித்தன. இப்படித்தான் வரலாற்றை மீண்டும் மீண்டும் கற்றுக்கொள்கிறோம். நாம் யார் என்பதைக் கூட ஓயாமல் தோண்டித் துருவி ஆராய்கிறோம். இப்படித்தான் வாழ்க்கையைக் கற்கிறோம்; அர்த்தப்படுத்துகிறோம்.

இவற்றையெல்லாம்தான் கவிதையென, இலக்கியமெனக் கற்கிறோம். கவிதை கற்கும்போது இவற்றோடெல்லாம்தான் கற்கிறோம். ஒன்றோடொன்று, ஒன்றினிலொன்று எல்லாம் அடுக்காகி, ஒன்றாகி நமக்குள் வந்து சேருகின்றன. இப்படிக் கற்கத் தொடங்கினால் கோவலனும், கண்ணகியும், மாதவியும் நமக்குள் வந்து செல்கிறார்கள். இப்படியே இராமன், இராவணன், சீதை என இவர்களை நமக்குள் கொண்டு வந்து, இவர்களை நமக்குள்ளும் கண்டு, போராடி நாம் எல்லாவற்றையும் நமக்குள் இணைத்துக்கொள்கிறோம். ஒரு சிறிய மலர்கூட, நமக்குப் பேருண்மைகளைக் கற்றுத் தரும். மலரைப் போலவே இலைகளும் இனியவை; வேரும் மண்ணும்

இனியவை. இந்தச் செடியை வாழ்விக்க நீரும், காற்றும், கதிரவனும் இணைந்து செயல்படுகின்றன. இவற்றில் கோளாறு நேர்ந்தால் நம் வாழ்வும் சேர்ந்து அழிகிறது. இயற்கையை வாழ்விப்போம்; நாமும் வாழ்வோம். வாழ்க்கையை, இப்படிப் பல்வேறு அம்சங்களில் இணைத்துப் பார்க்கிறவனுக்குத்தான் பேருணர்வுகள் சாத்தியம். தமிழன்பன் கவிதைகளில் சத்தும் சாறுமாக இப்பேருண்மைகள் படிந்திருப்பதைக் காண முடியும். தமிழன்பன் கவிதைகளைக் கற்பதற்கும்கூட, உரிய பார்வையை, நமக்குள் இருக்கும் வரலாற்றிலிருந்தும், தத்துவத்திலிருந்தும் திரட்டிக்கொள்வது தேவையாகிறது.

இனி வரும் கட்டுரைகளில், தமிழன்பன் கவிதைத் தொகுப்புகளின் மூலம் இந்தப் பின்னணியின் சாரம் படிந்திருப்பதைக் காண முற்படுவோம்.

8.

## *தீவுகள் கரையேறுகின்றன*

### தீவுகள் கரையேறுகின்றன - (அ)

தமிழன்பனின் முக்கியமான கவிதைத் தொகுப்புகளில் ஒன்றாக இதனைக் குறிப்பிடலாம்.

1978இல் இந்தத் தொகுப்பு வெளிவந்திருக்கிறது என்பதே இதன் முக்கியத்துவத்திற்கும் காரணமாகிறது. நாட்டில் நெருக்கடி நிலை பிரகடனமாகி, அதன் முடிவு நிலையில் இந்நூல் வெளிவந்திருக்கிறது. கவிதைகளில் பல, நெருக்கடி காலத்தில் எழுதப்பட்டவை. இந்தக் காலத்தின் உக்கிரமான அனுபவங்கள் இந்தக் கவிதைகளில் இடம் பெறுகின்றன. மாவோவின் மறைவு குறித்து, இதில் ஒரு கவிதை உள்ளது. நளாயினி பற்றிய ஒரு கவிதை யாரைக் குறிக்கிறது என்பதை வாசகர்கள் எளிதில் புரிந்துகொள்ளலாம். நெருக்கடி நிலை காலத்தில் புரட்சிகரமானது என்று சொல்லப்படும், பாட்டாளி

வர்க்கக் கட்சிகளின் செல்பாடுகள் குறித்து நாம் பெருமையோடு பேச முடிவதில்லை. கவிஞருக்குள் இது குறித்துக் கவலை ஆழமாகப் பதிந்திருப்பதைப் பல கவிதைகள் வெளிப் படுத்துகின்றன. அரசுப் பணிகளில் உள்ளவர்களில் சிலருக்கேனும் கட்டாய ஓய்வு தரப்பட்ட காலம் அது. 1967-68 கால அளவு "வசந்தத்தின் இடி முழக்கம்'' என்று வர்ணிக்கப்பட்ட நக்சல்பாரி இயக்கம், இந்தியா முழுவதும் அதிர்வலைகள் எழுப்பியது. இந்த அதிர்வுகள் தமிழ்க் கவிஞர்களுக்குள் கனலை எழுப்பின. இத்தகைய கவிஞர்களுக்குள் ஒருவர் தமிழன்பன். இந்த உணர்வு ஓட்டம் இத்தொகுப்புக் கவிதைகளில் அழுத்தமாகப் பதிந்திருப்பதை நாம் காண முடியும். நம்பிக்கை இவரிடம் குறைந்துவிடவில்லை. உயிரிரக்கம் இல்லாமல் ஓர் இயக்கமாகத் திரள முடியுமானால், கரையேறிவிட முடியும் என்ற முறையில் மனவுறுதியைக் கவிஞர் வெளிப்படுத்துகிறார். பாட்டாளி வர்க்க உணர்வுகளோடு, தன்னை முழுமையாகக் கவிஞர் இணைத்துக் கொள்கிறார். தனித்தனிக் கவிதைகளாக இத் தொகுப்பு காணப்பட்ட போதிலும், அநேகமாக எல்லாக் கவிதைகளும் இந்தப் பாட்டாளி வர்க்க உணர்வையே பேசுகின்றன. இம்முறையில் தனித்தனிக் கவிதைகள் அனைத்தையும் "பாட்டர்ளி வர்க்க உணர்வு'' என்ற ஒரு மையத்தில் நாம் குவித்துக் காண முடியும்.

"தீவுகள் கரையேறுகின்றன'' என்பது இந்தத் தொகுப்பின் முதல் கவிதை. முதலாளிய சமூகம், மக்கள் மத்தியில் தன்னலங்களைத் தூண்டிவிட்டதன் விளைவாக, மக்கள் தனித் தனித் தீவுகளாகி விட்டனர். தீவுகளைச் சுற்றியிருக்கும் கடல் இப்போது ஆர்ப்பாட்டம் செய்கிறது. "நாங்கள் தீவுகள் ஆகி விட்டதால் நீங்கள் கடலாகிவிட்டீர்கள்'' என்று பாட்டாளி வர்க்கம் முதலாளி வர்க்கத்தை நோக்கி முழங்குகிறது. இனியும் நாங்கள் தீவுகளாய் இருக்கப் போவதில்லை; எங்களுக்குள் இணைகிறோம்; இனிக் கரையேறப் போகிறோம் என்ற பாட்டாளி வர்க்கத்தின் பேர்க்குரலை, இந்தக் கவிதை வெளிப் படுத்துகிறது.

“நாங்கள் இன்று சின்ன நொடிகள்; நாளை நாங்களே யுகங்கள்'' என்று முழங்குகின்றது இந்தப் பாட்டாளி வர்க்கம். நாங்கள் கரையேறப் போகிறோம். கடல் மீறப் போகிறோம் என்ற முழக்கம் கவிதையில் திரும்பத் திரும்ப எழுகிறது. முதலாளிய அதிகார வர்க்கத்தால் சின்னா பின்னமாகப் பாட்டாளி வர்க்கம் சிதறி இருக்கிறது என்பதையும், அதன் காரணமாகவே முதலாளிய வர்க்கம் பாறைபோல, கடல்போல அதிகாரத் தோரணையோடு ஆர்ப்பரிக்கிறது என்பதையும், இந்த உணர்வு தோன்றியவுடனே பாட்டாளி வர்க்கம் தனக்குள் இயைந்து கிளர்ந்தெழ வேண்டும் என்பதையும் கவிஞர் சரியாகவே உணர்த்துகிறார். ‘தீவுகளா கரையேறப் போகின்றன!' என்ற வியப்புணர்வையும் கவிஞர் நமக்குள் ஏற்படுத்துகிறார்.

“பூபாளம்'' என்ற தலைப்பில் அடுத்த கவிதை. இதுவரை இருந்த கல்லிருள் பாறைகள் எல்லாம் பொடியப் போகின்றன; ஒளியின் பிரதேசத்தில் முதலாளித்துவம் செய்த ஆரவாரங்கள் முடிவுக்கு வரப்போகின்றன; புதிய சூரியன் உதயமாகப் போகின்றான் என்பதை இந்தக் கவிதை கொண்டிருக்கிறது. நெருக்கடி நிலையை அடுத்துப் பாட்டாளிகள் திரண்டு கிளர்ந்தெழுவதன் மூலம் புதிய விடியலைக் கொண்டு வரவேண்டும் என்ற உணர்வை, இந்தக் கவிதையிலும் வெளியிடுகிறார்.

கல்வித் திட்டத்தில் ஒரு பெரிய மாறுதலை, இனி வரும் புரட்சி கொண்டு வரும் என்ற நம்பிக்கையை அடுத்த கவிதையில் கவிஞர் சொல்கிறார். கலைமகள் இதுவரை தாம் கையில் வைத்திருந்த வீணையை விற்றுவிட்டு, வாள் வாங்குகிறாள். உழைக்கும் மக்களிடத்தில் இந்த வாளைத் தருகிறாள். கிழக்கைப் பிளந்துகொண்டு ஒளி நோக்கி அவர்கள் பயணம் புறப்படுகிறார்கள்.

“பிச்சை புகினும் கற்கை நன்றே'' என்ற பழைய வாசகம் இவர்களுக்கு உடன்பாடில்லை. “பிச்சை புகாத வாழ்வை கற்கை நன்றே'' என்று இவர்கள் புறப்படுகிறார்கள். கபாலக் கல்லறையில் மூளையைப் புதைக்கும் பழைய கல்விக்கு

எதிராய்ப் புறப்படுகிறார்கள். புதிய ஞான ஒளியோடு இவர்கள் புறப்படுகிறார்கள். இனி, கலைமகள் விழா என்பதற்கு ஆயுத பூஜைதான் அர்த்தம் என்று போராட்டத்தை அர்த்தப்படுத்தி, இந்தக் கவிதையை முடிக்கிறார். சமூக இயக்கம்தான், இந்தப் புதிய கல்வியை நம் இளைஞர்களுக்குக் கற்றுத் தரும் என்பது நம் கவிஞரின் கருத்து.

“சமதர்மப் பாதை'' என்பது அடுத்த கவிதை. “இது பொதுவழியல்ல'' என்ற பலகையை எடுத்தெறிந்துவிட்டு, “இது தனி வழியல்ல'' என்ற பலகையை மாட்டி, இந்தப் புதிய சமதர்மப் பாதையில் மணித்தேர் புறப்படுகிறது என்கிறார் கவிஞர். நதிகள் கலந்த சமுத்திரம் இனி மீண்டும் நதிகளாகப் பிரியாது என்கிறார். சமதர்மப் பாதையில் விளக்குக் கம்பங்கள் இல்லை. காரணம், பயணம் செய்யும் பாதசாரிகளே விளக்குகளாகி விடுகின்றனர்; பாரதத் தாய் இனிப் பாடுபடுவோர்க்கே பால் சுரப்பாள் என்றும், இப்படி ஒரு புதிய சமதர்ம இந்தியாவைத் தனக்குள் தரிசனம் செய்கிறார். எல்லாமே வசந்த இடி முழக்கத்தின் தொடர்ச்சிகள். நெருக்கடி நிலைக்கு எதிர் வினைகள்.

“மன்னித்து விடுங்கள் வார்த்தைகளே'' என்பது இன்னொரு கவிதை. இங்கு வார்த்தைகள் என்பது, புரட்சி உணர்வை இழந்துவிட்ட பாட்டாளி வர்க்கத்தைக் குறிக்கிறது. பாட்டாளி வர்க்கத்திடம் நம்பிக்கை வைக்க வேண்டும் என்பது இலட்சியம். இத்தகைய நம்பிக்கைக்குரியதாகப் பாட்டாளி வர்க்கம் இல்லை என்பது யதார்த்தம். மார்க்சின், லெனினின் உதடுகளில் மலர்ந்த மகரந்தங்களே, யுகச் சிவப்புக்கு இரத்ததானம் செய்த அந்த நாள்கள் எங்கே என்று கேட்டுவிட்டு, இரத்தச் சோகை படிந்த இந்த நாள்கள் எங்கே எனத் தொடங்குகிறார். கவிதைப் பூங்காக்களாக, வசன வயல்களாக நீங்கள் இருந்தீர்கள். உங்கள் யௌவன யாழில் புதிய பண்கள் எழுந்தன. தென்றலை நீங்கள் சீறும் புயலாக மாற்றினீர்கள். பொதுவுடைமை என்றும், கம்பீர வர்க்கத்தின் தோரணமாய்த் தொகுக்கப்பட வேண்டியவர்கள் நீங்கள். இன்று நெருஞ்சி முள்களாய் நிலைமாறிப் போனீர்கள் என்கிறார். போலித் தேசியப் புரட்டர்களின் விரலோரம் காந்திப்

பெருமான் உடைத்த வேர்க்கடலைத் தோடுகளாய் நீங்கள் உதிருகின்றீர்கள். குபேரக் குமரிகளின் கூந்தல்களைக் கோதிவிட எப்போது போனீர்கள்? இந்திர பூமியின் தந்திர விளக்குகள் மேல் மோதி விழும் விட்டில்கள் ஆனீர்கள். மௌனக் கல்லறைக்குள் மரணித்துப் போனீர்கள் என்பதோடு, இந்தக் கவிதை முடிவடைகிறது. இந்தக் கவிதையிலிருந்து தெளிவாகவே அறிந்து சொல்கிறோம். நெருக்கடி நிலைக் காலத்தில் இந்திராவுக்குச் சேவகம் செய்த பொதுவுடைமைக் கட்சியினர், கவிஞரின் கோபத்துக்கு ஆளாகி இருக்கின்றனர். நியாயம்தானே? எதிரிகளிடம் இப்படியா மார்க்சியம் மண்டியிட்டுவிட வேண்டும்?

"பசுமைப் புரட்சி'' என்பது ஒரு நல்ல கவிதை. செடியின் உச்சியில் தாஜ்மகாலாய்ச் செழித்து நிற்கிற பூ - இலைகளையும், கிளைகளையும் எள்ளி நகையாடுகிறது. "ஒழிந்து போங்கள்'' என்று உரக்கக் கத்துகிறது. கடைசியாய் இலைகளின் ஐக்கியத்தில், கிளைகளின் ஆர்ப்பரிப்பில் தலைகுப்புற விழுகிறது, "உச்சியில் இருந்த பூ என்கிறது'' இந்தக் கவிதை. கவிதைக்குள் இடம்பெற்ற தளமாற்றம் கவிதையின் செழிப்புக்கு ஆதாரம். இந்தக் கவிதையையும் வார்த்திருப்பது கவிஞனுக்குள் திரண்டுள்ள வர்க்க உணர்வு. மலர் யார் என்பதும், இலைகளும் கிளைகளும் யார் என்பதும் நமக்குத் தெளிவாய்த் தெரிகின்றன. ஆதிக்கத்திற்கு எதிராய் வர்க்கப் போர் தேவை என்பது கவிஞரின் ஆசை. மலர் வீழ்ந்தது என்பது கவிஞரின் கனவு; கவிதைக்கான நீதி. இந்தக் கவிதைக்குள்ளும் - நெருக்கடி நிலையின் பிரதிபலிப்பான அம்சத்தை இதன் அடித்தளத்தில் காண முடியும்.

"சிறப்பின் சிகரமே'' என்று தொடங்குகிறது அடுத்த கவிதை. வாழ்க்கையை மலர வைக்க வந்தவனே! சூரியனுக்கும் ஒளி கொடுப்பவனே! என்றெல்லாம் கவிஞர் விளிப்பது, இந்தப் பாட்டாளி வர்க்கத்தைத்தான். நீ ஒருநாள் கானலை நீரென்று மயங்கினாய். மறுநாள் நீரையே கானல் என்று தயங்கினாய். சிறகால் பறவை, தன்னைச் சிறை செய்து கொண்டதைப்போல வசீகரமான வாழ்க்கையால் நீ உன்னைச் சிறைப்படுத்திக் கொண்டாய் என்று கவிஞர் சொல்கிறார். கலைகள், காவியங்கள்

அனைத்தும் உன் கட்டளைக்காகத்தான் காத்திருக்கின்றன. சந்தனம் தன் மணத்தைச் சந்தைகளில் தேடுவதில்லை. உன் வாழ்வை, உன்னைத் தவிர வேறு எங்கோ தேடுகிறாய்! விழிகளை நீ உறக்கத்திற்கு விற்றாய்! வைகறையில் நீ பிச்சைப் பாத்திரத்தோடு நின்றாய். உன் கிழக்கில்கூட அஸ்தமனம்தான். விஃதக்க மறந்தவனே! உனக்கு ஏன் அறுவடை ஞாபகம்? உன்னுள் கடல்; கடலுள் நீ! எழுந்து நில். இமயம் உன் உச்சி காண ஏணி கேட்டு நாணிக் குனியும். மனிதாபிமானம் வளர்வதற்கு முன்பு, உன்னில் வளர்ந்திருக்கிற தன்னல முட்களைக் கிள்ளி எறிவாய். இப்படிக் கவிதை • வளர்ந்து முடிகிறது.

இங்கும் என்ன பார்க்கிறோம்? உடைமை வர்க்கத்தின் ஆசைக் கனவுகளுக்குப் பலியாகித் தன்னை இழந்துவிட்ட பாட்டாளி வர்க்கத்தை நோக்கித்தானே கவிஞர் பேசுகிறார். நுகர்வியம் பாட்டாளி வர்க்கத்தின் புரட்சி உணர்வுகளை அழித்துவிட்டது. முதலாளித்துவத்திற்கு அருகாக அமர்ந்து கொள்ளும் ஆசையில், தன்னைத் தானே கேவலப்படுத்திக் கொண்டது. குருசேத்திர யுத்தத்திற்கு இந்த வர்க்கம் தயாராக இல்லை. இப்படியெல்லாம் உண்மை கண்டு சொல்கிறார். மீண்டும் இந்த வர்க்கத்தைக் கொண்டுதான் உலகத்தை மாற்றியாக வேண்டும் என்ற எண்ணத்திலிருந்தும் கவிஞர் குறையவில்லை.

இப்படியே தொடரும் அரசியல் கவிதைகளுக்கு இடையில், ஓர் ஆன்மீகக் கவிதை புனர்நிர்மாணம். “நான்” என்ற ஆணவ உணர்வு அழுத்தம் பெற்றிருக்கும் ஒருவனுக்குள் என்ன இருக்கும்? அவனுக்குள் மரபின் வேர்கள் இருக்க முடியாது. அவனுக்கு வேர்கள் வெளியில்தான் இருக்க முடியும். மேற்கிலிருந்து, வேறு எங்கெங்கோ இருந்து வேர்கள் அவனுக்குள் நீண்டுள்ளன. வெளிச்சம் உள்ளே புகமுடியாத பொழுது, கிளைகளில் படர்ந்திருப்பவை நோய்க் கிருமிகள். உள்ளே தொங்கிக் கொண்டிருப்பவை நானின் பிணங்கள். உள்ளே நம்பிக்கை விரல்கள் இருக்க முடியுமா? இருக்க முடியாது. உள்ளே இருட்டின் விதைகள். எல்லாமே வாமனங்கள். உள்ளே துருப்பிடித்த சூரியன். எனக்குள்,

என்னின் மிச்சங்கள் ஏதாவது இருக்கின்றனவா என்று நான் தேடிச் சேகரித்துக்கொள்கின்றேன். இடிபாடுகளிலிருந்து என்னை நான் மீட்டுக்கொள்வேன். வெளியிலிருக்கும் வேர்களைப் பிய்த்து எறிவேன். ஒளியில் பற்றிய துரு உதிரும். என்னைப் புனர் நிர்மாணம் செய்துகொள்வேன். எனக்குள் சூரியன் மோதி ஒளி பெருகும். புதிய மலர்கள் பூக்கும். இப்படி ஓர் அற்புதக் கவிதை, இங்கே நமக்குக் கிடைக்கிறது.

முதலாளியம்தான் நம்மை இப்படிச் சுருக்கி வைத்ததோடு தன்னலத்தை நமக்குள்ளே திணித்து, நமக்குள்ளிருக்கும் சூரியனை வெளியேற்றிச் சுருக்கி வைக்கிறது. இடிபாடுகளுக்குள் இனியும் புதைய முடியாது என்று, தன்னுணர்வு பெற்ற நான் விழித்துக் கொள்ளுகிறது. முதலில் நான், என்னை நானே விடுவித்துக்கொள்ள வேண்டும். அப்புறம்தான் விடியல் எனக்குள்ளேகும் என்று இப்படி இந்தக் கவிதையை அர்த்தப்படுத்திக் கொள்ள முடியும்.

இப்படியே தொடரும் அரசியல் உணர்வு மேலோங்கிய கவிதைகள், இந்தத் தொகுப்பில் நிறைய உள்ளன. அரசியல் உணர்வு வெளித் தெரியாத கவிதைகளைக்கூட இந்த அரசியல் உணர்வின் மையத்தில், நம்மால் இணைத்துக் காண முடியும். 67-68இல் நாம் எதிர்பார்த்த புரட்சி இங்கு நடைபெறவில்லை. அதற்கு மாறாக, 1975இல் நெருக்கடி நிலைதான் வந்தது. "வசந்தத்தின் இடி முழக்கம் நம்மை நோக்கி வருகிறது'' என்று நாம் கூறியபோது, ஆதிக்க சக்திகள் விழித்துக் கொண்டன. வரப்போகிற புரட்சியை ஒடுக்குவதற்குத் தம்மைப் பெரிய அளவில் தயாரித்துக்கொண்டன. நிலச் சீர்திருத்தம், மன்னர் மானிய ஒழிப்பு என்று கூறினார்கள். வங்கிகள் தேசியவுடைமை என்றனர். "வறுமையே வெளியேறு'' என்று முழங்கினர். தேசிய முதலாளிகளின் தலைமையில் புரட்சி வருகிறது என்று பாட்டாளி வர்க்கத்தின் ஒரு பகுதியினர் நம்பினார்கள். அதற்குச் சோவியத் யூனியன் ஒத்துழைக்கிறது என்றார்கள். ஜனநாயகத்தை முடக்கினார்கள். ஜெயப்பிரகாசர் பேசிய முழுப் புரட்சியை, ஏகாதிபத்தியச் சதி என்றார்கள். இப்படியெல்லாம் நடைபெற்றதால்தான், புரட்சி ஒடுங்கியது என்பது உண்மைதானா? மார்க்சியம் இங்குத் தோற்றுப் போனதா?

அல்லது ஓய்ந்துவிட்டதா? என்று நாம் இன்று சிந்திக்க முடியும்.

பாட்டாளி வர்க்கத்தை முன்னிறுத்தித்தான் புரட்சி பற்றி மார்க்சியர் அன்றும் இன்றும் பேசுகின்றனர். இந்தியாவில் உள்ள பாட்டாளி வர்க்க எண்ணிக்கை எந்த அளவு உள்ளது என்று நாம் சிந்திக்கவில்லை. உபரி மதிப்பு என்று பேசினோம். முதலாளிகள்தான் கொள்ளையிடுகிறார்கள் என்று சொன்னோம். உபரி மதிப்பு முழுவதும் பாட்டாளி வர்க்கத்தினருக்குச் சொந்தம் என்று கட்சிக்காரர்கள் பேசினார்கள். மார்க்சியம் இப்படிச் சுருக்கித்தான் பொருள் கொள்ளப்பட்டது. முதலாளிகளோடு சேர்ந்து பாட்டாளி வர்க்கமும், இங்குள்ள கோடிக்கணக்கான உழவர்களைச் சுரண்டுகிறது. கைவினைஞர்களை, பெண்களை, மலைவாழ் மக்களை, தலித் மக்களைச் சுரண்டுகிறது. பாட்டாளி வர்க்கத்திற்குச் சேர வேண்டியது என்று சொல்லப்படும் உபரி மதிப்பில் இவர்களுக்குச் சேர வேண்டியது பெரும்பகுதி. புரட்சிகரக் கட்சிக்காரர்கள் இவர்கள் அனைவரையும் உள்ளிழுத்துக் கொள்ளவில்லை. பாட்டாளி வர்க்கம் புரட்சி என்று பேசியபொழுது, இவர்கள் எதிர்த் திசையைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

இதுமட்டுமில்லை; முதலாளிகள் எல்லாவற்றையும் நுகர்கிறார்கள். உபரி மதிப்பு முழுவதும் தங்களுக்குச் சேருமானால் முதலாளியின் நலன்களைப் பாட்டாளி வர்க்கமும் நுகர முடியும். நுகர்வு வெறி பாட்டாளி வர்க்கத்தை உள்ளிழுத்துக்கொண்டது. தொழிற்சங்கங்கள் புரட்சி உணர்வை இழந்தன. முதலாளியோடு சேர்ந்துகொண்ட பாட்டாளி வர்க்கம், புரட்சியாளர்களிடமிருந்து ஒதுங்கிக் கொண்டது. அன்றியும் முதலாளித்துவத்தோடு ஒத்துழைத்தது. இவ்வளவுதானா நுகர்வு வெறி என்பதைப் புரட்சியாளர்கள் கணக்கில் கொள்ளவில்லை. மக்களோடு ஐக்கியப்படுதல் என்று கூடுதலாகப் பேசினார்கள். ஆனால் மக்களிடம் இவர்கள் வேர் பிடிக்கவில்லை. பசுமைப்புரட்சியின் பாதகங்கள் இவர்களுக்குத் தெரியவில்லை. நவீன நாகரிகம் பற்றி இவர்களுக்கு விமர்சனம் இல்லை. மேற்கத்திய உலகம் முதலாளிகளை மட்டுமல்லாமல் படிப்பாளிகளையும், பாமர மக்களையும் எவ்வாறெல்லாம்

தனக்குள் உள்வாங்கிக் கொண்டிருக்கிறது என்பதை இவர்கள் அறியவில்லை. மேற்கத்திய நாகரிகம் என்பது பற்றி இவர்களுக்குப் புரிதல் இல்லை. மேற்கை நமக்குள்ளிருந்து வெளியேற்றினால் ஒழிய, கிழக்கு நமக்குள் திறவாது என்று இவர்கள் அறியவில்லை. மாவோவைப் போற்றினார்கள். ஆனால் மாவோவின் நெறியில் மார்க்சியம் தன்னை மறு உருவாக்கம் செய்துகொள்ள வேண்டும் என்பது இவர்களுக்குத் தெரியாது.

இப்படி வசந்தத்தின் இடி முழக்கம் ஏன்? இன்று இந்தியாவை மாற்றவில்லை என்று சிந்திக்க முடியும். தமிழன்பனும் பாட்டாளி வர்க்கத்தை மையப்படுத்தித்தான், மார்க்சிய உணர்வோடு பேசுகிறார். நீதான் சூரியனுக்கு ஒளி கொடுத்தவன் என்று சொல்லிவிட்டு, அடுத்த கணமே எப்படி உனக்குள் சிதறிப் போனாய்? என்று கேட்கிறார். புரட்சி உணர்வு என்பதை, வெறும் உணர்வு மட்டத்திலேயே உற்பத்தி செய்து கொள்ளவும் முடியாது; தங்க வைக்கவும் முடியாது. இன்னும் ஆழமாகத் தோண்ட வேண்டும்; புனர் நிர்மாணம் என்ற கவிதையில் வருவதுபோல, ஒரு படிப்பாளி தனக்குள் தோண்டினால் போதாது; பாட்டாளி வர்க்கமும் தனக்குள் தோண்ட வேண்டும். நுகர்வு வெறிக்கு நான் பலியானேன் என்பது என் தோல்விக்கு ஒரு காரணம். இன்னும் எத்தனையோ காரணங்கள். மார்க்சியத்தினுள்ளும் பதுங்கியிருக்கிற முதலாளியத்தை வெளியேற்றியாக வேண்டும். இங்குத்தான் "அந்நியமாதல்" பற்றிக் கூடுதலாகப் பேச வேண்டியுள்ளது. இயற்கை, சமூகத்திலிருந்து நாம் அந்நியப்பட்ட வரலாறு, ஓராயிரம் ஆண்டில் அடங்குவதில்லை. ஆதிப் பொதுமைச் சமூகத்தை இழந்த காலத்திலேயே நம்மை நாம் இழந்த வரலாறு தொடங்குகிறது. ஆதிக்கச் சக்திகள் நம்மைப் பயன்படுத்தி, நம்மை விதைத்து, நம்மைக் குருடர்களாக்கி, நம்மை அழகிழக்கச் செய்து, நம்மைக் கொண்டே தம் ஆதிக்கத்தைத் திரட்டிக் கொண்டன; அடிமைப்படுத்திக்கொண்டன; அவர்கள் நமக்குள் தங்கிவிட்டார்கள். நம் அறிவை, பார்வையை, கலாச்சாரத்தை, அழகுணர்வை அவர்கள் நிர்ணயிக்கிறார்கள். அவர்கள் விதித்த பாதையே சரி என்று நாம் பயணம் செய்கிறோம். இப்படித்தான்

நம்மை நாமே இழந்தோம். முழு அளவில் அந்நியமாதலை நமக்குள் இருந்து அகற்றும்போதுதான், இயற்கையோடும், சமூகத்தோடும் இறுதியில் தன்னோடும் உள்ள உறவு நெருங்கும்; வளரும்.

இப்படி இயற்கையையும், சமூகத்தையும், வரலாற்றையும் உள்வாங்கிக் கொண்ட நிலையில்தான், நமக்குள் இருக்கும் இருள் நீங்கிச் சூரியனாய்க் கண் விழிப்போம். மார்ச்சியம் இத்தகைய பார்வையை நமக்குள் விரிக்கிறது.

முதலாளிகளும் அந்நியமானவர்கள்தான். முதலாளிகளும் காயம்பட்டவர்கள்; சிறைப்பட்டவர்கள்; ஆதிக்கம் எவனுக்கும் நிம்மதி தருவதில்லை; ஆரோக்கியம் தருவதில்லை; அவனும் மனநோயாளிதான்; அவனும் நமது கருணைக்குரியவன்; அவன்; தனக்குள் தன்னைத் தவிர வேறு யாருக்கும் இடம் தருவதில்லை. அவன் தனக்குள் முடம்பட்ட்வன். அவனுக்குள் இசை, பிரபஞ்சம், இயற்கை, விடுதலை இல்லை.

சுதந்திரம் பிரிவுபடாதது என்று மார்க்ஸ் கூறியது, இங்கு நினைத்துக்கொள்ள வேண்டும். முதலாளியை விடுவிப்பதற்கும் பாட்டாளி வர்க்கம் புரட்சி செய்ய வேண்டும் என்றார் மார்க்ஸ். இந்த உண்மை அரசியல்வாதிக்கும் கட்சிக்காரனுக்கும் தெரியாது. ஒரு கலைஞனுக்கு, மெய்யியலாளனுக்கு இந்த உண்மை புரியும். அழகுணர்வை அவர்கள் நிர்ணயிக்கிறார்கள். அவர்கள் விதித்த பாதையே சரி என்று நாம் பயணம் செய்கிறோம். இப்படித்தான் நம்மை நாமே இழந்தோம். முழு அளவில் அந்நியமாதலை நம்முள்ளிருந்து அகற்றும் பொழுதுதான் இயற்கையோடும், சமூகத்தோடும், இறுதியில் தன்னோடும் உறவு நெருங்கும்; வளரும்.

இப்படி இயற்கையையும், சமூகத்தையும், வரலாற்றையும் உள்வாங்கிக்கொண்ட நிலையில்தான், நமக்குள் இருக்கும் இருள் நீங்கிச் சூரியனாய்க் கண் விழிப்போம். மார்க்சியம் இத்தகைய பார்வையை நமக்குள் விரிக்கிறது.

இப்பொழுது சொல்லலாம். முதலாளிகளைத் தமிழன்பன் சாடுகிறார். முதலாளிக்குள் நுழைந்து, அவனைப் புரட்டிப் போட்டு இவர் பார்க்கவில்லை. தொழிலாளியைப் போற்றுகிறார். அப்புறம் சாடுகிறார். வரலாற்றில் என்ன நேர்ந்தது என்பதைத் தமிழன்பன் பார்க்கவில்லை. எனினும், தமிழன்பனுக்குள் ஒரு கவிஞன் துடிப்பதை - அந்தக் கவிஞனுக்குள் உண்மையின் வெளிச்சம் ஊடுருவிச் செல்வதை நாம் பார்க்கிறோம். இந்த வெளிச்சம் சூரியனாய் வெடிக்க வேண்டும். அப்புறம் எண்திசைகளிலும் பெருக்கெடுக்கும். கவிதைக்குப் பிரபஞ்சப் பார்வை கிட்டும்.

## *தீவுகள் கரையேறுகின்றன*

### பாப்லோ நெரூடா - (ஆ)

"தீவுகள் கரையேறுகின்றன" தொகுப்பில் இறுதியாக உள்ள இரு கவிதைகள் பற்றி, இங்குச் சிலவற்றைச் சொல்ல வேண்டும். ஒரு கவிதை, பாட்டாளிக் கவிஞன் பாப்லோ நெரூடா பற்றி; இன்னொரு கவிதை மாவோ பற்றி. நெரூடா கொல்லப்பட்டார். மாவோ முதிர்ந்த வயதில் இறந்தார். இவர்களைப் பற்றியவை இந்தக் கவிதைகள்.

பூமிக்குக் கீழ் செம்பும், பூமிக்குமேல் உன் கவிதைகளுமே சிலியின் செல்வங்கள் என்று கவிதை தொடங்கும்போதே பொருத்தமாகக் குறிப்பிடுகிறார் கவிஞர். செம்பு எடுக்கும் சுரங்கத் தொழிலாளர்கள் நெரூடா கவிதைகளைப் படித்து மகிழ்ந்தனர். பல்லாங்குழிக்குக் காய்கள் தயாரிக்கும் கவிஞர்களுக்கிடையில் தளவாடங்களைத் தயாரித்தவன் நீ, என்கிறார் கவிஞர். மக்களிடமிருந்து மலர்ந்து வந்தது உன் கவிதை, என்கிறார். பூமியின் மேடுபள்ளங்களைச் சரி செய்ய நீ கவிதைகள் அனுப்பினாய் என்கிறார். லம்பார்டி மரங்கள் தம்

இலைகளை உதிர்த்துவிட்டு, உன் கவிதைகளைச் சூடிக் கொண்டன என்கிறார். ஏப்ரல், மே மாதங்களில் நடைபெறும் திராட்சைத் திருவிழாக்களில், உன் பாடல்களாலேயே கோப்பைகள் நிரம்பின. நாளையை அறுவடை செய்யப் பாட்டாளி மக்கள் பட்டறைகளில் ஆயுதங்களைத் தேடாமல், உன் பாட்டறைகளிலிருந்து ஆயுதம் எடுத்தனர் என்கிறார். சூனியக்காரிகள் மாய வலைகள் பின்னிய இந்நாட்டில், உன் சூரியக் கதிர்கள் பட்ட பிறகே எதார்த்தம் சிலிர்த்து எழுந்தது என்கிறார். சிலியின் சோடியம்-நைட்ரேட் ஏகாதிபத்தியத்திற்கு எருவாகப் பயன்பட்டதை நெரூடா எடுத்துக் காட்டியதற்குப் பிறகுதான், நூறு நூறு இடிகள் மக்களிடமிருந்து ஏகாதிபத்தியத்தை நோக்கி இறங்கின என்கிறார். மறைந்து போன மச்சு பிச்சு நகரத்திற்குள் புகுந்து, அதன் அக்கினி முரசை நெரூடா எடுத்து முழக்கி, ஆரவாரித்தார் என்கிறார். அல்லண்டேயின் அரசு நெரூடாவின் கவிதைகளாய் நிமிர்ந்து எழுந்தது. திரிபுவாதிகள், தம் ஆதிக்கங்களை இனியும் இழக்க முடியாது என்ற முறையில் எதிர்த்துக் கிளம்பினர். சமதர்மம் பேசி, சதுரங்கம் ஆடும் நாடுகள் சிலியின் உதவிக்கு வரவில்லை. சிலியின் பீச் பிளம் பழங்களில்கூடச் சிவப்பு இரத்தம் வடிந்தது. நெரூடாவின் மரணமும் நிச்சயமானது. நெரூடாவின் அந்திம ஊர்வலத்தில் இன்னொரு பசிபிக் கடலென மக்கள் கிளர்ந்து எழுந்தனர். இடி, மழை உச்சரித்த வாய்கள், தற்காலிகமாக ஓய்ந்தன என்றபோதிலும், நிரந்தரமாக உச்சரிக்குமா என்று கேட்கிறார் கவிஞர். ஏகாதிபத்தியத்தின் புன்னகை நிரந்தரமானது அல்ல. நெரூடாவின் பாடல்கள் மீண்டும் மீண்டும் மக்களைக் கிளர்ந்து எழச்செய்யும். ‘உனக்கு மரணம் இல்லை’ என்று கவிஞர் கவிதையை முடிக்கிறார்.

உண்மைதான். திரிபுவாதி பினாட்ஷோ, அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் உதவியால் வெற்றி பெற்றான். நெரூடாவும், அல்லண்டேயும் கொல்லப்பட்டனர். பினாட்ஷோவின் சர்வாதிகாரம் நெடுங்காலம் நிலைக்கவில்லை. மீண்டும் ஒரு மக்களாட்சி, ஏகாதிபத்தியத்தின் அனுசரணையோடு இன்று நடைபெறுகிறது. அல்லண்டேயின் மக்களாட்சி நிலைக்காது என்று அன்றே மார்க்சியர் உண்மை கூறினர். மக்களை

ஆயுதபாணியாக்காமல் எந்தப் புரட்சியும் வெற்றி பெற முடியாது. கவிதைகள் மக்களைக் கிளர்ந்தெழச் செய்யும் என்பது உண்மைதான். ஆயுதங்கள் இல்லாத மக்கள் எவ்வளவு காலம் எதிரியைத் தடுக்க முடியும்? மக்களாட்சியின் மூலம் புரட்சியைக் கொண்டு வர முடியாது. ஏகாதிபத்தியம் எங்கும் நுழைந்து தன் ஆதிக்கத்தை நிறுவிக்கொள்ளவே முனையும். நூற்றுக்கணக்கில் இந்த உண்மைக்கு வரலாறு சான்றுகள் தந்திருக்கின்றன. நெரூடா மக்களோடு ஐக்கியப்பட்டிருந்தார். நெரூடா கவிதைகளை, மக்கள் தெருக்களில் பாடினர்; தம் இதயங்களில் சேகரித்துக்கொண்டனர். இவையெல்லாம் உண்மைதான்.

ஆயுதங்கள், நிரந்தரமாகத் தீர்வைத் தீர்மானிக்க முடியாது. ஆனால், ஆயுதங்கள் ஏந்தாமல் மக்கள் தமக்கென வரலாற்றைத் தோற்றுவித்துக் கொள்ளவும் முடியாது. அன்றியும் மக்கள், தங்களை ஆயுதபாணிகளாக்கிக் கொள்வது என்றால் அதற்கு என்ன பொருள்? நாட்டின் பொருளியலையும், அறிவியலையும், கலாச்சாரத்தையும் தன்வயப்படுத்திக் கொள்வதன் மூலமே மக்கள் நிமிர்ந்து நிற்க முடியும். அரசியல் அரங்கில் நடைபெறும் பேராட்டம், வரலாற்றை இறுதியாகத் தீர்மானிக்க முடியாது. மார்க்சியர் கட்சிகளை நம்பினர். அதிகாரத்தைக் கைப்பற்றிக் கொள்வதை இறுதி லட்சியம் என்று தவிர்த்தனர். அதிகாரத்தை மக்களிடம் கொண்டு சேர்ப்பது பற்றிக் கட்சிகள் சிந்திப்பது இல்லை. ஒரு தேசத்தின் மறுமலர்ச்சி, மக்கள் மூலமாகத்தான் தொடங்கவும் வேண்டும்; நிலைபெறவும் வேண்டும்.

நெரூடா கொல்லப்பட்டார். அல்லண்டேயின் ஆட்சியும் முடிவு பெற்றது. மீண்டும் ஒரு சர்வாதிகாரம் தலை எடுத்தது. நெரூடாவுக்குப் புலப்படாமல், அவருக்குள் மறைந்திருந்த மறுபக்கம் என்ன சொல்கிறது? தமிழன்பன் உணர்ச்சிகரமாக எழுதுகிறார். மார்க்சியத்தை மகிமைப்படுத்துகிறார். மக்களிடமிருந்து நெரூடா கற்றுக்கொண்டார் என்கிறார். அரசியல் வடிவில் அரைகுறையாக விடுதலை பெற்ற எல்லா நாடுகளையும் ஏகாதிபத்தியம் மீண்டும் தனது வாய்க்குள் போட்டுக்கொள்கிற வரலாற்றை எங்கிருந்து தொடங்குவது? தமிழன்பனோடு சேர்ந்து நாமும் சிந்திக்கத்தான் வேண்டும்.

"மாவோ, இது உன் மறைவுக்கு எழுதப்படும் இரங்கற்பா இல்லை" என்று தொடங்குகிறார் கவிஞர். நீ எப்படி மரணிக்க முடியும்? என்று கேட்கிறார். எந்தக் கரத்தாலும் கிரகணிக்க முடியாத நெருப்புக் கோளம் என்கிறார். மார்க்சுக்கும் லெனினுக்கும் பிறகு பேதை நாடுகளுக்கெல்லாம் புரட்சிப் போதையை ஊட்டியவன் நீதான் என்கிறார். ஒரு விடியலில் மண்ணுக்கும் விண்ணுக்குமாய் விசுவரூபம் காட்டினாய் என்கிறார். உன் ஈர விழிகளில், எரிமலைகள் எப்போதும் உறங்கவில்லை என்கிறார். அஸ்தமன மேற்கையும் கீறி, சூரியனையும் பெற்றெடுக்கும் ஆற்றல் பெற்றவன் நீ என்கிறார். உன் நீண்ட பயணம் நின்றுவிடவில்லை. வானப்பரப்பில் எந்தக் கிரகத்திலேனும் முதலாளியம் இருக்கும் வரையும், உன் பயணம் தொடரும்; அதற்குப் பின்னரும் உடைமை பெரிதென, தனி மனித வழிபாடு தொடரும் காலம் வரை உன் பயணம் நிற்காது என்கிறார். பூமியின்மேல் நீ வரைந்து வைத்த சத்தியசாசனம், நித்தியசாசனம், குருசேத்திரத்தில் பரந்தாமனும் நீயே, பார்த்திபனும் நீயே என்கிறார். உன் நெஞ்சில் பளிச்சிட்ட ஜீவகாருணியமே உன் கையில் துப்பாக்கியாக வெளிப்பட்டது. கோடானு கோடி மக்களை ஆதிக்க முதலைகளிடமிருந்து விடுவித்தாய் என்கிறார். எலும்புருவாகி வாழ்விழந்த மக்களுக்கு உயிரை, வாழ்வைத் தந்தவன் நீ, என்கிறார். அக்கிரமங்களுக்கு எதிராக ஆயுதம் ஏந்துவது அறத்தால் நிச்சயப்படும் என்கிறார். திருமண வீட்டில் புன்னகைப் பரிமாற்றம் தேவைதான்; உறுதிப் படுத்தப்பட்ட எதிரிகளோடு எதற்குச் சமரசம்? மலர்களோடும், கனிகளோடும் அகிம்சை பேசலாம். கழுகுகளோடும், ஓநாய்களோடும் உரையாடலுக்கு ஏது இடம்? வர்க்கச் சமரசம் அர்த்தமற்றது; சலுகைகள், வாக்குறுதிகள் இவையெல்லாம் புரட்சித் தவத்தைக் கலைக்க, ஆதிக்கபுரியிலிருந்து அனுப்பப் படும் மேனகைகள், ரம்பைகள். நிலவும், விளக்குகளும் இருட்டின் தயவுக்குள்ளிருந்து வாழ்ந்துவிடலாம். சூரியனுக்கு இது ஒத்து வராது என்கிறார்.

முழுப் புரட்சிக் குறையாத எதுவும் மாவோவின் கொள்கை. வானம், கடல் தமக்கு மறு பெயர் வேண்டும் எனக் கேட்டால் அவற்றுக்கு மாவோவின் பெயர் சூட்டலாம் என்று கவிதையை முடிக்கிறார்.

மாவோவின்மீது பேரன்பும் பெரு நம்பிக்கையும் கொண்டு தமிழன்பன் எழுதுகிறார். மார்க்சுக்கும் லெனினுக்கும் பிறகு மாவோ என்று சரியாகவே சொல்லுகிறார். மாவோவின் பாதை இனி உலக வரலாற்றிலிருந்து மறையாது என்பதும் சரிதான். புரட்சி நடைபெற்று முதலாளியம் முற்றாக ஒழிக்கப்பட்ட பிறகும், மாவோவுக்குத் தேவை உண்டு என்று சரியாகவே குறிப்பிடுகிறார். ஆம்; உடைமை உணர்வும், தனிமனித வழிபாடும் முதலாளியம் நமக்குள் மறைத்து வைத்திருக்கிற வெடிகுண்டுகள். வரலாற்றிலிருந்து இவற்றையும் களைந்து எறிவதன் மூலம்தான் முழுப் புரட்சி சாத்தியம் என்பதும் உண்மைதான்.

ஆனால், எதிரிக்கும் நமக்கும் இடையில் உள்ள பகை முரண்பாட்டிற்கு மட்டுமா மாவோ அர்த்தம் தந்தார்? மக்கள் மத்தியில் உள்ள நட்பு முரண்பாட்டிற்குத் தந்த அழுத்தம் எவ்வளவு முக்கியமானது? நட்பு முரண்பாட்டைச் சரிவரக் கையாளவில்லை என்றால், பகை முரண்பாட்டை நம்மால் எப்படித் தீர்க்க முடியும்? அன்றியும், பகைவன் என்று நாம் கருதும் ஆதிக்க வர்க்கம் பற்றிய உண்மை என்ன? வரலாற்றில் தொடர்ந்து வரும் சமூகப் பொருளியல் கட்டமைப்பின் ஒரு பகுதியாகத்தானே ஆதிக்கவர்க்கமும் அமைகிறது. அதனால் உருவாகும் அந்நியமாதலுக்கு அவனும்தானே வசப்பட்டுள்ளான். அவனுக்கும் சேர்த்தே பாட்டாளி வர்க்கம் பாடுபட வேண்டும் என்ற உண்மை மாவோவுக்குத் தெரியும். போர்க்களத்தில் மட்டுமே பகைவனை ஒழித்துவிட முடியாது. நமக்குள்ளும் வந்து தங்கியிருக்கிற பகைவனை ஒழிக்க வழி என்ன? எதிரியிடமும் மாவோ கொண்டிருந்தது கருணையன்றி வேறென்ன? வர்க்க சமரசத்தை நாம் மதிக்கவில்லை. ஆனால், வர்க்கப் போராட்டத்தை எந்தெந்தத் தளங்களில் எப்படி எப்படி நடத்த வேண்டும் என்ற அறிவில்லாமல் வர்க்கப் போராட்டத்தை நடத்த முடியாது. காந்தியை வெறுப்போடு நாம் புறக்கணிக்கிறோம். இந்த வெறுப்பு நமக்குள் முனைப்புப் பெறும்போது, மாவோவையும் நம்மால் புரிந்து கொள்ள முடியாது. மாவோவுக்குப் பின் என்னாயிற்று என்று நாம் சேர்த்துச் சிந்திக்கும்போதுதான் மாவோவையும் நாம் புரிந்து கொள்ள முடியும்.

எடுப்பான ஒரு பக்கத்தை மட்டும் கவிஞர்கள் எடுத்துக் கொள்கிறார்கள். ஆனால், இறங்கு முகத்தைக் கவிஞர்கள் பார்ப்பதில்லை. இப்படிக் கூறுவது சரிதானா? இரண்டு பக்கங்களையும் இணைத்துக் காண்பதுதான் சரியான பார்வை என்று யாரும் ஒப்புக்கொள்ள முடியும். ஒற்றை முகத்தையே பாடி வந்த கவிஞனுக்கு இப்படி, இரு பக்கத்தையும் காண்பது சற்றுக் கடினமாகத்தான் இருக்கும். மாவோ நமக்குள் மறைய மாட்டார். ஆனால், மாவோவை நமக்குள் ஆழமாக வைத்துக் கற்க வேண்டும். எப்படிக் கற்பது? கவிதை இன்னும் ஆழப்பட வேண்டுமானால், நாம் கற்கத்தான் வேண்டும்.

# 9

## ஊமை வெயில்

### வளரும் பாரதம் - (அ)

பாரத தேவி என் முன் தோன்றினாள். தயங்கித் தயங்கி, "நான் வரலாமா?" என்று கேட்டாள். "இது உன் வீடு; தயக்கமேன் தாயே" என்றேன். "என் வீடா? எனக்கே அது மறந்து போச்சே" என்றாள். "தாயே! நலமா?" என்று கேட்டேன். "நான் நலம்; நான் பெற்ற காயங்கள் நலம், நான் வடிக்கும் கண்ணீர் நலம்; தோட்டா வெடிபட்ட என் தோட்டத்துப் பூக்களெல்லாம் நலம்" என்றாள். "எனக்கென்று கொடி உண்டு; உங்களுக்குக் காற்று வீசுவதற்குத்தான் இந்தக் கொடி. எனக்கென்று பாடல் உண்டு. அதை இறுதியில் பாடுவதன் அர்த்தம் என்ன? எனக்கென்று பறவை உண்டு. அது ஆடி ஆடி, காசுகளைக் கொட்டுவது எங்கென்று எனக்குத் தெரியும்? எனக்கென்று மக்கள்தான் இல்லை" என்றாள். "எவர் இந்தியாவில் உள்ளனரோ, அவரெல்லாம் இந்தியர் அல்லர்; எவருள்ளே இந்தியா இருக்கிறதோ அவரே இந்தியர்! உன்மீது பக்தி இல்லை என்று எங்கள்மீது மாசு கற்பிக்கலாமா? என்றேன்.

“தேசம் வாழ்க” என்று சொல்கிறவர்கள் எல்லாம் தேசபக்தர்கள் ஆகமாட்டார்கள். வங்கிகளை, ஆலைகளைத் தேசியமயமாக்கி என்ன பயன்? இங்குள்ள மக்களை - தலைவர்களைத் தேசியமயமாக்க வேண்டும் என்றாள். அருகருகே மாநிலங்கள், இரண்டிலும் உள்ள இந்தியனுக்கிடையில் எவ்வளவு இடைவெளி? அலை ஒவ்வொன்றிலும் சமுத்திரம் வாழ்கிறது. தனியாக சமுத்திரம் எங்குள்ளது? மாநிலங்கள்தான் தேசம்; நான் அங்குத்தான் வாழ்கிறேன். மாநிலங்கள் என் சாளரங்கள்; ஒளிக்கும் காற்றுக்கும் அவையே உத்தரவாதங்கள்; மானுடம் ஓரினம் என்று பிரபஞ்சம் ஓர் அறிக்கை பிரசுரிக்கிறது, நீங்களோ என் உள்ளங்கையிலும் பாத்தி கொத்துகிறீர்கள். பேதங்களே உங்களுக்கு வேதங்கள். உறவு என்ற சொல்லை உச்சரிக்கும்போதுகூட உங்கள் உதடுகள் ஒட்டுவதில்லை. பிணத்தின் கண் திறந்திருந்தால் என்ன? மூடியிருந்தால் என்ன? பாரத தேவியின் சோகம் தீர, நான் “வாழ்க” என்றேன். இந்த வாழ்க, ஒழிக எல்லாவற்றையும் நிறுத்து என்றாள். “இன்று முதல் உழைப்பவனை இந்தியன் என்று சொல்; உறிஞ்சுபவனை அந்நியன் என்று சொல். வைகறைக்கு வாரிசுகள் சிலர் மட்டுமே என்னும் பொய்மையைக் கிழித்தெறி. இமயம் முதல் குமரி வரை நாடு ஒன்றுதான்; ஏற்றத் தாழ்வை ஒழித்துவிட்டால் இனமும் ஒன்றுதான். “மணி என்ன?” என்றாள் மாதா. “என் கடிகாரத்தில் முட்கள் வேலை நிறுத்தம் செய்திருந்தன. சரக்கென்று புறப்பட்டவள் அலறிய வார்த்தை - “உடைத்தெறி!”

தமிழன்பன், இந்தியாவை, இந்திய தேசியத்தை எதிர்க்கவில்லை. மாநிலங்களுக்கிடையில் மோதலை அவர் ஏற்கவில்லை. இந்தியா ஒரு தேசம் என்ற முறையில் மாநிலங்கள் தம் வசதிகளைப் பகிர்ந்து கொள்வதை அவர் விரும்புகிறார். “கங்கையும் காவிரியும் பிணங்கிக் கொள்ள வேண்டியதில்லை. இமயமும் குமரியும் எதிர் நிற்க வேண்டியதில்லை. இந்தியா சமதர்மப் பூமியாகத் தழைக்கும் என்றால், சுரண்டல் காரர்களுக்கு அல்லாமல் மக்களுக்கு இந்தியா சொந்தம்” என்கிறார். இந்தியத் தேசியம் நமக்கு எதிரானது அன்று என்பது

அவர் கருத்து. இன்னொரு கவிதையில் "நான் உலகன்; இந்தியன்; தமிழன்; தமிழனாக இருக்கத் தடை விதிக்கப்படும் என்றால், நான் இந்தியனாக இருப்பதைப் பற்றி யோசிப்பேன்" என்கிறார். மக்களையும், தலைவர்களையும் தேசியமயமாக்குவது எப்படி என்கிறார். இந்தியாவை நேசிக்காதவன் அந்நியன் என்கிறார். கவிஞன் பொது நலத்தில் விளைபவன். பேதங்கள் அவனுக்கு உடன்பாடில்லை. உலகனாக இருக்கும் தமிழன்பனுக்கு, இந்தியனாக இருப்பதில் எதிர்ப்பில்லை. இந்தியனாக இருக்க வாய்ப்புண்டா? என்ற கேள்வி இங்கு எழத்தான் செய்கிறது. தமிழனுக்குத் தடை ஏற்படுத்தப்படுகிறது. தமிழன்பனின் உணர்வின் அடித்தளம் மதிக்கத்தக்கது.

## *ஊமை வெயில்*

### ஒரு பிறந்த நாள் அறிக்கை - (ஆ)

பாரத நாட்டுக்கும், பைந்தமிழ் மொழிக்கும் சேவை செய்யப் பிறந்தவன் நான். எனது நாட்டு மக்களின் நலிவுகளைக் கண்டு வரவே நான் கார்களில் போய் வருவேன். பாரத நாட்டுத் தமிழ்ப் புத்திரர்களின் சோகம் காணவே தொகுதி வாரியாகச் சுற்றி வருகிறேன். என் பிறந்த நாள் விழாவுக்கு வசூல் இரண்டரை லட்சம்தானா? நாலரைக் கோடித் தமிழ் மக்களுக்குச் சேவை செய்தவன். ஒவ்வொரு தமிழனும் ஒரு ரூபாய் கொடுக்கக் கூடாதா? இந்தத் தமிழனுக்குச் செய்த சேவையில் என்ன குறை வைத்தேன்? அனைவருக்கும் சேவை செய்வதற்காகவே என் ஆயுள் வளரப் பிரார்த்திக்கிறேன். ஆளும் கட்சி எதுவானாலும் நான் ஆதரவளிப்பேன். மக்கள் நலமே பெரிது என்பது என் லட்சியம். தலைமைப் பதவியில் அமரும்போது, நானா அமருகிறேன்? அவர்களின் பசிக்காக, நான் சாப்பிடுகிறேன். அவர்களுக்கு வேர்த்தால் என் வீட்டில் விசிறிகள் சுழலும். நான் சாகிறேன் என்பதற்கு முன்னர் அவர்கள் புதைக்கப்படுகிறார்கள். என் தொண்டர்கள், என் பிள்ளைகள். என் பிள்ளைகளின்

திருமணத்தை ஆடம்பரமாகவே நடத்துகிறேன். ஆயிரமாயிரம் தொண்டர்கள் அந்த மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொண்டாடி மகிழ்வதற்காகவே நான் நூற்றைம்பது ஆண்டுகள் வாழ்வேன். என் தொண்டன் தரும் ஒவ்வொரு ரூபாயிலும் என் தமிழன்னையைத் தரிசிக்கிறேன். இப்படி நீண்டு செல்கிறது தமிழன்பனின் அந்தக் கவிதை. இந்தக் கவிதையில் வரும் தலைவர் தமிழகத்தின் எந்தக் கட்சியின் தலைவராகவும் இருக்கக்கூடும். தமிழன்பனுக்குக் கட்சி சார்பு இல்லை என்பது இதன் பொருள் இல்லை. கட்சிக்குள் தலைவரை, தலைமைப் பண்பைச் சரியாகவே கண்டிருக்கிறார். இந்தக் கட்சிதான் அதிகாரத்திலும் இருக்கிறது; எதிர்க் கட்சியாகவும் இருக்கிறது. இன்னொரு கவிதையில் இவர் குறிப்பிட்டதுபோல, இங்கு எதிர்க்கட்சிகள் இல்லை; எல்லாமே ஆளும் கட்சியின் பகுதிகள் தாம்.

## *ஊமை வெயில்*

### மாலை மரியாதை - (இ)

தலைவருக்குப் பிறந்த நாள் விழா. தலைவருக்கு மாலை போட, தலைக்கு ஒற்றை ரூபாய் கேட்கப்பட்டது. தரும லிங்கத்தின் கையில் ஐந்து ரூபாய். “மகனுக்கு மருந்து வாங்க வேண்டும்” என்கிறார். “புள்ள போனால் பெத்துக்கலாம், தலைவர் போனால் கிடைப்பாரா?” என்று தொண்டர்கள் கேட்க, “மன்னிச்சிடுப்பா” என்கிறார் தருமலிங்கம். அவர் “மன்னிக்கப்பட்டார்.” தலைவர், தருமலிங்கத்தின் உடலுக்கு மாலை போட்டார். தொண்டர்கள் பட்டை அடித்துவிட்டுப் பாடை முன் ஆடினார்கள். இப்படிச் சொல்கிறார், ஒரு சிறிய கதைக் கவிதையில். இந்தக் கவிதையில் வரும் தலைவர், தமிழகத்தின் எந்தக் கட்சியிலும் இருக்கலாம். தொண்டர்கள் இப்படித்தான்; தலைவர்கள் குணமும் இப்படித்தான்.

## *ஊமை வெயில்*

**ஒரு நட்சத்திரம்**
**விழ விரும்பியபோது... - (ஈ)**

மானுட வேர்வை படாத அந்த வானத்தின் வெறுமையில் இருந்து விடுபட விரும்பியது ஒரு நட்சத்திரம். இப்படி ஒரு கற்பனைக் காட்சியை நமக்குள் எழுப்புகிறார் கவிஞர். அந்த நட்சத்திரத்தை வரவேற்கப் பல தயாரிப்புகள் நடைபெறத் தொடங்குவதை அடுக்கடுக்காகச் சொல்கிறார். அழகுக்காக வகுப்பறை திறக்கும் ரோஜாக்கள், தம் வாசலில் ரங்கோலி வரைந்து இங்கே வா என அழைத்தனவாம். நாட்டியத் தோரணங்களை விரித்ததாய் மயில் காத்திருக்கிறது. கடற் சிப்பிகள் தன் கருவறையைத் திறந்து காத்திருந்தனவாம். கவிதைகள் மோதிரம் அணிந்த தம் கைகளில் சந்தனக் கிண்ணங்களோடு காத்திருந்தனவாம். ஆனால் அந்த நட்சத்திரம் இங்கெல்லாம் விழவில்லை. பின் எங்கே விழுந்தது? வடபழனி கோயில் வாசலில். தன் வரங்களை எல்லாம் பக்தர்களுக்குக் கொட்டிவிட்டு, காலியான பாத்திரமாகக் கடவுள் எறிந்த, எங்கோ சாறு பிழிந்துவிட்டு அவன் வீசிய சக்கையாய்க் கிடந்த சிறுவனின் கையில் அந்த நட்சத்திரம் வந்து விழுந்தது.

கவிஞரின் கற்பனை வளம், இந்தக் கவிதையில் உச்சம் பெறுகிறது. வானத்தில் மனித வேர்வை இல்லை. (எப்படி இருக்க முடியும்?) நட்சத்திரத்திற்கு அந்த வெறுமை வெறுக்கிறதாம். (வெறுமை என்று கவிஞர் எதைச் சொல்கிறார்) எவ்வளவு பெரியதொரு நட்சத்திரம், தகரக் குவளையில் விழும் அளவுக்கு ஒரு நட்சத்திரம் தன்னை ஒரு வைரக் கல்லாக அல்லது ஒரு சிறிய பூங்கொத்தாக மாற்றிக் கொள்ளவா முடியும்? மயில்களும், மலர்களும், முத்துச் சிப்பிகளும் அற்புதமான அழகுடையவை. அழகுக்கு அழகு சேர்க்க அல்லது தமக்குப் பரிசு பெற இவை விரும்பத்தான் செய்யும். செல்வம் உடையவர்களுக்குத்தான் மேலும் செல்வம் சேர்கிறது. தேவதைகளும் இவர்களைத்தான் தேடிச் செல்கின்றனர். மனித

நேயம் மிக்கது கவிஞரின் கற்பனை நட்சத்திரம். கவிஞரின் நகரத்தில் புகழ்பெற்றது வடபழனி கோயில். இறைவன் எல்லோருக்கும் வரங்கள் தருகிறான். அவனிடம் உள்ள வரங்களும் தீர்ந்துவிட்டனவாம். இறைவனுக்கு இவ்வளவுதான் சக்தியா? அல்லது மனமா? ஏழைச் சிறுவனுக்கு ஏதும் இவன் தரமாட்டானா? நட்சத்திரத்திற்கு இதுவும் தெரிந்திருக்கிறது. அந்த ஏழைச் சிறுவனின் தகரக் குவளைக்கு வந்து சேருகிறது நட்சத்திரம். ஏழைச் சிறுவனை மகிமைப்படுத்துகிறதா அந்த நட்சத்திரம்? அல்லது அவன் அந்த நட்சத்திரத்தை விற்றுக் காசு பண்ணவா முடியும்? அது அவனுக்குப் பரிசுப் பொருளா? அவனது பசியைப் போக்கத் தன்னால் முடியுமோ, முடியாதோ? - ஒரு சோற்றுப் பருக்கையாக, அந்தத் தகரக் குவளைக்குள் வந்து விழுந்தது. அவனுக்குத் தன்னை அர்ப்பணித்துக் கொள்கிறது.

அற்புதமான இந்தக் கவிதையில் மனித நேயத்தைக் கவிஞர் பிரசாரம் செய்கிறார். மற்றபடி கவிதை வெறும் ரொமாண்டிக் சரக்கு என்று சிலர் சொல்லக்கூடும். ஜோடனைகள் கவிதையாக முடியாது என்கிறார் ஒரு பெரியவர். இங்கே கடவுளைக் கவிஞர் வம்புக்கு இழுக்கிறார் என்று இன்னொரு பக்தர் சொல்லக்கூடும். ஆனால் கவிதையின் வழியே, கவிஞரின் அறவுணர்வைக் காண்கிறோம். மனித நேயம் என்று இதைச் சுருக்கிச் சொல்லக்கூட நமக்கு உடன்பாடில்லை. அறவுணர்வும் அழகியலும் இங்கு இணைகின்றன. வறுமையைக் கடவுள் தீர்க்கவில்லை. மனிதம்தான் தீர்க்க வேண்டும். நாம் கூட அந்த நட்சத்திரத்தின் விழுகைக்காக ஒருவேளை காத்திருக்க நினைத்திருப்போம். அந்த நட்சத்திரம் நம் கைக்கு வந்து சேர்ந்திருக்காது. அது விழுந்த இடத்தைக் கொண்டாடுவதற்கும், நமக்கு நல்ல மனம் வேண்டும். அந்த ஏழைச் சிறுவனின் முகத்தில் எவ்வளவு ஒளி நிறைந்திருக்கும் என்பதை நாம் இப்பொழுது நினைத்துப் பார்க்கலாம். அந்த ஒளி, மண்ணை மலர வைக்கும் ஒளி.

த.the.

## *ஊமை வெயில்*

**தாய் - (உ)**

நியாயமும் நேர்மையும் தன்னை ஆராதனை செய்தபோது, இந்தத் தாய் மார்க்சையும் லெனினையும் பெற்றெடுத்தாள் என்று வரலாறு தொடங்குகின்றார் கவிஞர். சூரிய முலைகளில் இந்தத் தாய், இவர்களுக்குப் பால் கொடுத்தாள். நிலா மலர்ந்த இரவுகளில், தன் மடியில் கிடத்தி, தேயும் மானிடத்திற்குத் தீர்வுகள் சொன்னாள். ஓநாய்களின் வாய்களில் இவள் உதயங்கள் அகப்பட்டபோது, பசிக்கு இரையான தன் மக்களுக்குப் பாடிய தாலாட்டுகளால், தன் உதடுகளை வேக வைத்துக் கொண்டாள் இந்தத் தாய். குடல் புண்களால் இவள் அவதிப்பட்டபோது சீசரையும், ஜாரையும், செங்கிஸ்கானையும் இவள் பெற்றெடுத்தாள். பாசிச விரல்களால் இவளது கருவறைகள் காயப்பட்டபொழுது, ஹிட்லரும் முசோலினியும் புறப்பட்டு வந்தனர். காயம்பட்ட இரவுப் பொழுதுகளில் இவள் வாழ்ந்தபொழுது, கல்வாரிகளிலும் கர்பலாக்களிலும் மரணங்களிலிருந்து உலகம் வாழ்க்கையைச் சுவாசித்தது. போதியின் தாதுகளை இவள் புசித்திருந்ததால், புத்தரும் பெரியாரும் புறப்பட்டு வந்தனர் என்கிறார். நெருப்புக் கனிகளை இவள் உண்டதன் விளைவாகப் பிறந்தவர்களே மாவோவும், கோசிமினும், காஸ்ட்ரோவும் என்கிறார். இவர்கள் கிழக்கைக் கீறி வைகறைகளை எடுத்தனர். லெபனான், ஈழம், பாலஸ்தீனம் ஆகியவற்றில் இரத்தம் கொப்பளித்தபோது, தன் குழந்தைகளுக்கு இவள் இரத்தம் புகட்டினாள். இந்த அனுபவங்களின் விளைவாக இனி எந்தத் தலைவனையும் கருவுறுவதற்கு இவள் விரும்பவில்லை. இவள் இனி, தாய்மைக்குச் சற்று ஓய்வு கொடுத்துவிட்டு, பேய்மையுற்று பீடைகள் யாவற்றையும் தொலைப்பாள் என்று முடிக்கிறார் கவிஞர்.

இவ்வாறு, கவிஞர் வரலாற்றை ஒரு பருந்துப் பார்வையால் அர்த்தப்படுத்துகிறார். வரலாறு இந்தக் கவிதையில் ஒரு தாய். இந்தத் தாய்க்குப் பிறந்தவர்களில் சிலர் நல்லவர்கள்; சிலர் கொடியவர்கள். இந்தக் கொடியவர்களே, தாயைக்

காயப்படுத்தினர். நல்லவர்கள் தாயின் புண்களுக்கு மருந்திட்டனர். இவள் கசந்து போனாள். இப்பொழுது தாய்மையே வேண்டாம் என்கிறாள். பேயாய்ப் பிறப்பெடுக்க விரும்புகிறாள். ஆமாம், காளியாய்ப் பிறப்பெடுத்து இந்தக் கசடர்களை அழிக்கத் துணிகிறாள் இந்தத் தாய். கவிதை சற்று நம்மைக் குழப்புகிறது என்பது உண்மைதான். வரலாற்றைச் சுருக்கிச் சொல்வதால் வந்த விளைவு. எனினும், வரலாறு நமக்குத் தாய் என்பதில் ஐயமில்லை.

## *ஊமை வெயில்*

### அலையோடு அலையாக - (ஊ)

**தமிழன்பனின் கவிதைகளில் ஆன்மிகக் கவிதை என்று இனம் காண்பதற்கு அதிகமில்லை என்பது உண்மைதான். ஆன்மிகம் என்பது மதம் என்று தமிழகச் சூழலில் அர்த்தப் படுத்தப்பட்டதன் விளைவாக, இங்கு எவ்வளவோ கோளாறுகள் ஏற்பட்டிருக்கின்றன. தமிழன்பன் சமதர்மம் என்ற உணர்வை முழு அளவில் பெற்றிருக்கிறார். இந்த உணர்வு இவருக்குள்** அரசியல் உணர்வை, பொருளியல் உணர்வை விரிவுபடுத்தி இருக்கிறது. கவிதைக்குள்ளும் கிளை விரித்திருக்கிறது. ஆனால் ஆன்மிகம் என்ற முறையில் அது அர்த்தம் கொள்ளவில்லை. சடங்குகள், புரோகிதர்கள் என்பவற்றைக் கடந்து கடவுளர்களுக்கு அர்த்தம் சொல்லும் முறையில் இது ஆன்மிக உணர்வாய் மலர்ச்சி பெற்றிருக்க முடியும். இந்த அளவில் தமிழன்பன் தனக்குள் இறுகியிருக்கிறார் என்றுதான் சொல்ல முடியும்.

ஆனால், இங்கு ஒரு வித்தியாசமான கவிதையைக் காண்கிறோம். அதன் தலைப்பு அலையோடு அலையாய். இயற்கைக் காட்சிகளோடு மனத்தை இழந்துவிடுகிறார் கவிஞர். "அலையோடு அலையாய்" தன்னைக் காண்கிறார். கிடைக்கும் ஒரு விநாடிப் பொழுதை வாழ்க்கையில் வைத்து வளர்ப்பதை விட, யுகங்களின் தொகுப்பில் அதை வாழவிடவே விரும்புகிறேன் என்று தொடங்குகிறார். நிலாவில் இடம்பிடிக்க

நான் விரும்பவில்லை. "கோடி நட்சத்திரக் கூட்டத்தில் நான் காணாமல் போய்விடுவதையே விரும்புகிறேன்" என்கிறார். ரோஜாவின் ஒற்றைப் பூவோடு நான் உரையாட விரும்பவில்லை என்கிறார். இலைகளின் அடுத்த பரிமாணத்திற்கான கூட்டுத் தியானத்தில் கரைந்து போகவே நான் விரும்புகிறேன் என்கிறார். என் படகுக்குத் துடுப்புத் தேட வாழ்க்கை போயிருக்கிறது. அது வருவதற்கு முன்னால், இந்தக் கடலில் அலையோடு அலையாகக் கரைந்து போய்விடவே விரும்புகிறேன் என்கிறார். இனி என்னோடு போர் தொடுக்க, இனி என் வாழ்க்கைக்கு எந்த முகாந்திரமும் இல்லை என்று சொல்லிவிட்டு, ஏன் என்று நாம் கேட்பதற்கு முன் பதில் தருகிறார். காரணம், வாழ்க்கையின் முன்னர் நிற்பது நான் அல்ல என்கிறார். இனி வாழ்க்கை என்னோடு சமாதானம் செய்துகொள்ள விரும்பி, என் ஜன்னலோரம் நிற்பதில் பயனில்லை. காரணம், என் ஜன்னலில் அகண்டம் ஜனித்துள்ளது என்று முடிக்கிறார். கவிதைக்குள் மெய்யியல் பார்வை என்று இதை நாம் மகிழ்ச்சியோடு சுட்ட முடியும். வாழ்க்கையின்மீது எனக்கு எந்தப் புகாரும் இல்லை. வாழ்க்கையோடு நான் இதுவரை சமரசம் செய்து வந்தது போதும். வாழ்க்கையிலிருந்து இனி எனக்கு எந்த வசதியும் தேவையில்லை. வாழ்க்கையோடு எனக்கு எந்த வெறுப்பும் இல்லை. எனக்குக் கிடைக்காத வாழ்க்கையைத் தொடர்ந்து பற்றிக் கொள்ள எந்த முனைப்பும் எனக்கு இனி இல்லை. வாழ்க்கை, அதன்பாட்டில் என்னென்னவோ செய்யட்டும்; அதன் ஆட்சிக்கு என்னை விட்டுக் கொடுக்கிறேன்; எனக்குள் எந்தக் கனத்தையும் சேர்த்துக் கொள்ளவில்லை; நான் பஞ்சாகி விட்டேன்; மலராகிவிட்டேன்; நான் இப்பொழுது அகண்டன்; காலமற்றவன்; நான் வெட்டவெளி; நான் என்னைத் திறந்து போட்டிருக்கிறேன்; எனக்குள் வானம் சுதந்திரமாய் வந்து போகட்டும்.

இப்படிப் பொருள்படுத்த இடம் தருகிறது இந்தக் கவிதை. இந்தக் கவிதையைத் தமிழன்பன் எங்கிருந்து பெற்றார்? அலைகளில் தோய்ந்து அலையாகி விடுகிற மனநிலையிலிருந்து தான் இந்தக் கவிதையை இவர் பெற்றிருக்க முடியும். கவிதையின் வழியே இயற்கையோடு மேலும் நெருங்கி

இணைந்த நிலையில், தன்னை இழந்திருக்கிறார், தமிழன்பன். இது ஒரு வகையில் ஆன்மிக அனுபவம். சமயம், இந்த அனுபவத்தை வாழ்க்கையிலிருந்து கண்டெடுத்துத் தனக்குள் பத்திரப்படுத்தி வைத்திருக்கிறது. சமயத்திற்குள்ளும் கள்ளர்கள் புகுந்து அந்த அனுபவத்தைத் தங்களுக்கே உரியது என அகப்படுத்தியிருக்கிறார்கள். கவிதை என்னும் திறவுகோலைக் கொண்டு, இந்தப் பூட்டை நாம் இப்போது திறந்து, இது எல்லோர்க்கும் உரியது எனப் பொதுவாக்கிட முடியும்.

## *ஊமை வெயில்*

### இதுவும் அதுபோல்
### ஒரு மழை நாள் இரவு - (எ)

இந்தத் தலைப்பில் ஒரு கதை சொல்கிறார் கவிஞர். ஒரு மழை நாள் இரவில், தான் ஆசையோடு வளர்த்த மகள் தன் காதலனோடு வீட்டைவிட்டு வெளியேறிவிட்டாள். தாய் தவிக்கிறாள். எல்லாவற்றையும் எண்ணிப் பார்க்கிறாள். அவளுக்கு நினைவு வருகிறது. தானும் இப்படித்தான் ஒரு மழை நாள் இரவில், தான் காதலனோடு வீட்டைவிட்டு வெளியேறினாளாம். ‘‘இதுபோல் அதுவும் ஒரு மழை நாள் இரவு’’ என்று திரும்பத் திரும்பத் தனக்குள் பல்லவியாய்ச் சொல்லிக் கொள்கிறாள். கதை கவிதையாய், சங்கீதமாய் நமக்குள் இறங்குகிறது. அடுக்கடுக்காய்த் தொடரும் இந்தப் பல்லவியின் மூலம் இந்த யுக்தியைக் கவிஞர், இன்னும் சில கவிதைகளில் கையாளுகிறார். மகள் மழை நாள் இரவில் வெளியேறியது கண்டு புலம்புகிற இந்தத் தாய், சங்கக் கவிதையில் வரும் செவிலித் தாயை நம் நினைவுக்குக் கொண்டு வருகிறாள். இந்த உத்திகூடச் சங்க காலம் முதற்கொண்டு நமக்குள் தாழிசையாய்த் தொடரும் உத்திதான். விருத்தங்களாய் விளைந்த தமிழிசை, தன்னிலிருந்து ஒரு திலக வரியைப் பிரித்தெடுத்து, பல்லவியாக்கிக்கொண்ட திறனை என்னவென்று வியப்பது? கவிதை, மேலும் அழகைக் கூட்டிக் கொள்வதற்கு

இந்த உத்தி அற்புதமாய்ப் பயன்பட்டிருக்கிறது. கலித்தொகை தமிழிசையை நமக்குக் கற்றுக் கொடுக்கிறது. கர்நாடக இசைக்கு நாம் இந்த உத்தியைக் கடன் கொடுத்திருக்கிறோம். வட்டி வாங்காமல் விட்டு வைப்பதால், அசலை விட்டுக் கொடுத்தவன் கதையாகிவிட்டது நம் நிலை.

## 10

## ஊர் சுற்றி வந்த ஓசை

### ஒளி விழா - (அ)

தமிழன்பனின் வித்தியாசமான கவிதைகளில் ஒன்று ஒளி விழா. அமெரிக்க நண்பர்கள் தீபாவளி கொண்டாடும் தருணத்தில், இவரிடம் கேட்டுப் பெற்ற கவிதை இது. பகுத்தறிவாளன் என்று அறியப்படுகிற ஒரு கவிஞர், தீபாவளிக்குக் கவிதை எழுதுவதை நாம் எதிர்பார்ப்பதற்கில்லை. ஆனால், தீபாவளி நமக்குள் ஏற்படுத்தியிருக்கிற மனப்பதிவைப் புரட்டிப் போடுகிற வழியில், இந்தக் கவிதையைச் சிறப்பாக எழுதியிருக்கிறார்.

இதுவரை, "அரக்கர்கள் கொண்டாடிய தீபாவளியை இனி அமரர்கள் கொண்டாடுவோம்" என்கிறார். கவிதைக்குள் பலமுறை ஒலிக்கிறது ஒரு புதிய பார்வை. அரக்கரும் நாமே; அமரரும் நாமே என்பது இந்தப் புதிய குரல். அசுரர் வெற்றியால் நியாயம் திலகம் இழக்கும்; போதிகளின் கிளைகள் முறியும்; சிலுவைகளில் இரத்தம் சிந்தும்; குருசேத்திரத்தில் கீதைகள் கிழிபடும். இவ்வாறு, அரக்கர் வெற்றியின் அழிவுகளைச் சொல்பவர், இனி அமரர் வெற்றி பற்றியும் சொல்கிறார். அமரர் வெற்றியால் சாக்ரடீஸ் கோப்பைகளில் அமுதம் ததும்பும். கருப்புக் கவிஞன் பெஞ்சமின் மிலாய்ஸ் கழுத்தை இறுக்கிய கயிறு, நாளை சுதந்திரத் தேருக்கு மணி வடம் ஆகும் என்று தொடர்கிறார். குட்டிமணியும் ஜகனும் பெற்ற வெற்றியைச் சொல்கிறார். திரும்பத் திரும்ப அரக்கர் யார், அமரர் யார் என்ற

கேள்வியோடு, அரக்கரும் நாமே, அமரரும் நாமே என்கிறார். இதுவரை அரக்கர் கொண்டாடிய ஒளி விழாவை, இனி அமரர் கொண்டாடுவோம் என முடிக்கிறார்.

உண்மைதான். ஆதிக்கவாதியின் வெற்றி உண்மையில் வெற்றியில்லை. அடிமைப்பட்டவனின் தோல்வி உண்மையில் தோல்வி இல்லை. அடிமைப்பட்டவனின் ஆன்ம வெற்றிதான் உண்மையான வெற்றி. இவன்தான் வரலாற்றை முன்னெடுத்துச் செல்பவன். இப்படி இலங்குகிறது கவிதையினுடைய உள்முகப் பார்வை. இதன் வழியே கவிதை வெற்றி பெறுகிறது.

## *ஊர் சுற்றி வந்த ஓசை*

## இருபத்தோராம் நூற்றாண்டுத் தமிழனுக்கு ஒரு சொல் - (ஆ)

“இருபத்து ஒன்றாம் நூற்றாண்டுத் தமிழா, எங்கள் வாரிசாக நீ வர வேண்டாம். ஒரு புதிய தலைமுறையின் மூல விதையாக நீ முளைத்தெழுவாய்” என்று கவிஞர் தொடங்குகிறார். எங்கள் சுவடுகளில் உன் நடைக்கு அர்த்தத்தைத் தேடாதே. சுய நடை உன் கால்களின் கௌரவம் என்று தொடர்கிறார்.

‘‘இருபதாம் நூற்றாண்டு சட்டியைச் சுரண்டிக் கொண்டிருக்காதே, எங்களுக்கே அதிலிருந்து ஏதும் கிடைக்கவில்லை” என்கிறார். ‘‘இன்றுகளிலிருந்து நாளைகளைச் செதுக்கி எடு; சட்டம் ஒழுங்கையெல்லாம் சரிவரக் காப்பாற்றினோம். மக்களைத்தான் நாங்கள் காப்பாற்ற முடியவில்லை” என்று நம் ஜனநாயகத்தின் இலட்சணம் குறித்துச் சொல்கிறார். ‘‘நீ ஜனங்களைக் காப்பாற்று; இந்த ஜனநாயகத்திடமிருந்தும் நீ மக்களைக் காப்பாற்று” என்று தெளிவுபடுத்துகிறார். ‘‘தலைவருக்காகத் தீக்குளித்தோம்; தனி நபர்களுக்காகச் செத்தோம்; தத்துவத்துக்காகச் சாகவில்லை. வாழத்தான் எங்களுக்குத் தெரியவில்லை என்று நினைக்க வேண்டாம்; எங்களுக்குச் சாகவும்தான் தெரியவில்லை” என்று

வெப்பமாய்க் கருத்துகளை வைக்கிறார். “மரணத்தையும் ஓர் இலட்சியத்தால் நீ அலங்கரிக்க வேண்டும்” என்கிறார். “விஷயம் இருந்ததால் நாங்கள் பேசவில்லை. பேசுவதே எங்களுக்கு விஷயமாக இருந்தது. சத்தங்களிலிருந்து மின்சாரம் தயாரிக்க முடியும் என்றால், இங்கே ஒவ்வொரு மனிதனும் ஒரு கல்பாக்கம்தான். கதாகாலட்சேபங்களில், பட்டிமண்டபங்களில், கட்சிக் கூட்டங்களில் வார்த்தைகள் வெடித்துச் சிதறின. அவற்றின் கூரிய சில்லுகள் குத்தித் தமிழ்த்தாயே நடக்க முடியாமல் விழுந்தாள். இனி வரும் காலங்களில் இவற்றை யெல்லாம் கூட்டிவிட்டு நட” என்கிறார். “மரணத்தைப் பற்றி நினைக்காதே; அது தானாகவே வரும்; வாழ்க்கையைப் பற்றி நினை; அது நீ வாழ்ந்தால்தான் உண்டு” என்கிறார். “எங்கள் வாழ்க்கையிலிருந்து, நீ விதிகளை வகுத்துக் கொள்ளாதே. வருங்காலத்தில் வாழப் போகிற தமிழனே! உண்மையை மதிப்பதில் உனக்கு இலாபமில்லாமல் போகலாம்; ஆனால், பொய்யின் வெற்றி இந்தப் பூமிக்கு நல்லதில்லை. நீதிபதியின் கையிலுள்ள பேனாவைப் பிடுங்கி எறிந்துவிட்டு, சத்தியத்தின் கையில் ஒரு சம்மட்டியைக் கொடு; எல்லார்க்கும் எல்லாம் என்பதல்ல, உழைப்பவனுக்கே எல்லாம் என்பதுதான் பொதுவுடைமை.” - இவ்வளவையும் கூறிவிட்டு, “முடிவாக ஒரு சொல்” என்கிறார். “ஈழத் தமிழச்சியை மணந்துகொள்; உனக்கேனும் புலி பாக்கியம் வாய்க்கட்டும்.”

“தமிழனைப் பொறுத்தவரை எதுவும் நடந்துவிடவில்லை. ஜனநாயகத்தைச் சீர்குலைக்கும் தலைவர்களுக்குத் துதிபாடினோம். காலம் நம்மை மதிக்கவில்லை. நம்மிடமிருந்து கற்றுக்கொள்ள 21ஆம் நூற்றாண்டுத் தமிழனுக்கு எதுவும் இல்லை. உண்மையை நாம் கற்பழித்தோம். இங்குச் செயல்படுவன நீதிமன்றங்கள் அல்ல; தீர்ப்பு மன்றங்களே! கற்பழித்தவன் கண்ணை மூடிக் கொண்டிருக்கும் நீதிதேவதையின் தராசுத் தட்டில் காசு போட்டுவிட்டுத் தப்பித்துக் கொள்ளலாம்!'' இவ்வாறெல்லாம் 20ஆம் நூற்றாண்டுத் தமிழனைக் கடுமையாக விமர்சனம் செய்கிறார். ஈழத் தமிழர்களிடமிருந்து விடுதலையை எதிர்பார்க்கிறார். கவிஞனின் பார்வையில் கடுமை தொனிக்கத்தான் செய்யும். உண்மைகளை நாம் ஒப்புக்கொள்வோம். கவிஞர் கருத்துகளை

விமர்சனம் செய்வதாகச் சொல்லி, அவர் கடுமையை நாம் குறைத்துவிட வேண்டாம். நேர்மையான நீதிபதியின் இடத்தில் நின்று கவிஞர் பேசுகிறார். இழந்த காலம் நம்மை விட்டுத் தொலையட்டும்; எதிர்காலத்திலாவது உண்மை பிழைக்கட்டும்.

## *ஊர் சுற்றி வந்த ஓசை*

## வாலிபம் வழக்குப் போடுகிறது - (இ)

வழக்குப் போட வரும் வாலிபர்களைக் கவிஞர் இந்தக் கவிதையில் வரவேற்கிறார். நம் அரசியல் சமூகத் தளங்களில் உள்ள குற்றம் குறைகளைப் பற்றி நிறையச் சொல்கிறார். கல்விச் சிக்கல்கள் குறித்தும், கலைகள் பற்றியும் பேசுகிறார். கம்பனே இங்கு வந்தாலும் இசையமைப்பாளருக்கு வேட்டி துவைத்துப் போட்டு, பாட்டெழுத வாய்ப்புக் கேட்பான். சேக்கிழாரும் திருத்தக்கதேவரும் பாட்டு எலும்புகள் படபடவென்று நொறுங்க, சுதிப்பெட்டிக்குள் திணிப்பார்கள். "தோன்றிற் புகழொடு தோன்றுக" என்ற வள்ளுவர் நடிகராய்த் தோன்றுவார். வள்ளுவ ரசிகர் மன்றங்கள் சோடாப்புட்டிகள் உடைக்கும். அதன்பின் வள்ளுவர் நாட்டின் அமைச்சராவார். கேள்விப்பட்டு இளங்கோவடிகள் தம் துறவு பற்றி மறுபரிசீலனை செய்வார்.

கம்பரையும், இளங்கோவையும், வள்ளுவரையும், சேக்கிழாரையும் நாம் மதிக்கிறோம். இன்னும்கூடத் தமிழின் ஆற்றலை அவர்களிடமிருந்து நாம் கற்றுக்கொள்ள முடியும்! காசுக்கு விலை போவதாகவோ கூலிக்கு மாரடித்ததாகவோ நாம் அவர்களைக் குற்றம் சொல்லவும் முடியாது. பெருமிதம் மிக்கவர்கள் அவர்கள். இன்றைய சூழலில் தமது பெருமிதம் இழந்து கோடம்பாக்கத்தில் அவர்கள் கூலிக்கு மாரடிக்க வேண்டியிருக்கும் என்பதைக் கற்பனை செய்வதுகூட நமக்குத் துயரம் தருகிறது. உண்மைதான். எல்லோருடைய பெருமிதங்களும் இன்று தளர்ந்துவிட்டன; அழிந்துவிட்டன. இன்றைய சூழல் இப்படிக் கடுமையாக, குரூரமாக இருக்கிறது. ஆனாலும் நம் தேவைக்காக இப்படித் தமிழ்ச் சான்றோர்களைக் கீழிறக்க வேண்டாம்.

## *ஊர் சுற்றி வந்த ஓசை*

### வாழிய பாரத மணித்திருநாடு - (ஈ)

"சத்தியமாய் அடித்துச் சொல்கிறோம்" என்று தொடங்கி, கவிஞர் ஓர் உண்மை சொல்கிறார். "நாற்பத்தேழுக்குப் பின்னர் நாடு முன்னேறியிருக்கிறதா?" எந்த நாடு என்று கேட்டால் "டாட்டா பிர்லாக்களின் நாடு" என்கிறார். இங்கே தொழில்கள் வளர்ந்தன, தொழிலாளர்களின் ஈரலை மென்று - என்கிறார்; "வேளாண்மை வளர்ந்தது, உழவனின் இரத்தப் பாசனத்தில்" என்கிறார். அரக்கப் பற்களால் பாரததேவியின் முலைக் காம்புகளைக் கடித்துக் குதறத் துடிக்கிறார்கள் அயல்நாட்டு - உள்நாட்டு முதலாளிகள். ஏகாதிபத்தியத்திற்கு எதிராகக் குரல்கொடுத்த நரம்பு மண்டலங்கள் முடங்கிவிட்டன. இலட்சிய வெறிகளின் கழுத்தைச் சந்தர்ப்பவாதங்கள் முறித்துவிட்டன. "இனித் திரும்பத் திரும்ப அழுது, ஆகஸ்டு 15ஐத் திருநாளாக்க வேண்டாம்" என்கிறார். புதியதொரு தேதிக்குச் சுதந்திர நாள் பெயர் சூட்டுவோம் என்று முடிக்கிறார். கவிஞர் சரியாகத்தான் சொல்கிறார். பாரத தேவிக்குச் சுதந்திரம் இல்லை. சுதந்திர நாள் இல்லை. இனி ஒரு சுதந்திரம் எப்போது வரும்? எந்தத் தேதிக்குச் சுதந்திரத் திருநாள் என்று பெயர் சூட்டப் போகிறோம்? இப்படிக் கவிஞர் நமக்குள் ஏக்கத்தை ஏற்படுத்துகிறார். பொன்விழாவுக்கும் கவிஞரின் கருத்து பொருந்தத்தான் செய்கிறது.

## *ஊர் சுற்றி வந்த ஓசை*

### ஊர் சுற்றி வந்த ஓசை - (உ)

ஓசைகளின் ஊர்வலத்தைத் தொடர்ந்து வருணிக்கும் கவிஞர், இப்பொழுது பட்டிமன்றங்கள் பற்றிப் பேசுகிறார். ஆண்டவன் செயல்களில் அதிகமானவை பாவங்களா? புண்ணியங்களா? -என்று பட்டி மண்டபம் நடக்கிறதாம். ஓசை காதை மூடிக்கொண்டு உட்கார்ந்து கேட்டதாம். நடுவர் தீர்ப்பின்போது கோயில் சிலைகள் திருட்டுப் போயிருந்தனவாம். காவல் நாய்கள்

கோயிலுக்குள்; தத்துவவாதிகள் இருளோடு இடையறாது விவாதம் நடத்துகிறார்களாம். "என்ன செய்கிறீர்கள் சாமி?" என்று பாமரன் ஒருவன் விளக்கோடு நின்றிருந்தானாம். தாழ்வாரத்தில் வெளிச்சம் பரவியது. தத்துவத்தின் முகம் இருண்டு போனது. பேசத் தெரியாத அந்தப் பாமரனின் பாதம் தொட்டு ஓசை போதம் பெற்றது" என்கிறார்.

இப்படி ஓசையின் ஊர்வலம் கல்விக்கூடங்களின் உள்ளும், நீதிமன்றத் தாழ்வாரத்திலும் நடந்தது. அப்புறம் பொதுக் கூட்டம் ஒன்றிற்கு ஓசை போய் வந்தது என்று கவிஞர் கதை சொல்கிறார்.

பொதுக் கூட்டத்திற்குப் போய் வந்த ஓசை உளறியது. உதட்டில் சாராய நெடி. கைகளில் சைக்கிள் சங்கிலி. பறவையின் சிறகுகளில், கடல் அலைகளின் இன்பத்தைச் சேகரித்திருந்த ஓசையின் போக்கே இப்பொழுது மாறிவிட்டதாம். ஊளை, குரைப்பு, கனைப்பு இப்படி ஓசையின் அருவறுப்பைச் சொல்கிறார். இனி அந்த ஓசை சட்ட சபைக்குள்ளும் செல்கிறது.

ஓசைக்கு உயிரில்லை; உடம்பில்லை; கவிஞர், இங்கு அதற்கு உடலும் உயிரும் தந்து ஊர்வலம் போக விடுகிறார். அதன் அனுபவத்தை நம் அனுபவம் ஆக்கி விடுகிறார்.

## *ஊர் சுற்றி வந்த ஓசை*

**யார் குற்றம்? - (ஊ)**

"கருப்பண்ணனின் கடைசி மூச்சைத் தாங்கி வரும் கவிதை இது" என்று தொடங்குகிறார் கவிஞர். சுதந்திர நாட்டில் நாம் துயரங்களைச் சொல்கிறோம். சுண்ணாம்பால் கண் எரிகிறது என்கிறோம். இது அரசியலா? என்று கேட்கிறார் கவிஞர். ஆசிரியர்களின் போராட்டத்தை அரசியல் என்று குறை சொல்கிறவர்களைப் பார்த்து, கவிஞர் பலமுறை கேட்கிறார் "இது அரசியலா என்று?"

சூரியனின் கிரணங்களைப் பத்திரம் செய்து கொடு என்றா கேட்டோம்? மிரட்டும் இருட்டுக்குப் பதில் என்ன என்று

கேட்கிறோம். இது அரசியலா? பசிக்கிறது என்கிறோம்; இது அரசியலா? போராட வைத்தீர்கள் - போராடுகிறோம். யார் மீது குற்றம்? இப்படிக் கேட்பதா அரசியல்? பனித்துளிகளைப் பலாத்காரப்படுத்தி, பிரளயங்களை நீங்கள்தான் உருவாக்கு கிறீர்கள். வாழ்க்கையின் காயங்களுக்கு மருந்து கேட்கிறோம். சூட்டுக்கோல் நீட்டுகிறீர்கள். போதியின் கிளைகளை எரித்துவிட்டு, எந்தக் குட்டிச் சுவரின்கீழ் உட்காரப் போகிறீர்கள்? அரசைக் கவிழ்க்க வேண்டும் என்பது அல்ல, எங்கள் நோக்கம். அதனால்தானே கோரிக்கைகளை முன் வைக்கிறோம். இது நியாயத்திற்கு நேத்திரம் திறந்த நேரம்; அறத்திற்கு ஆத்திரம் பிறந்த நேரம் என்று கவிஞர் முடிக்கிறார்.

கல்லூரி ஆசிரியர்களின் போராட்டத்தை அரசியல் என்றும், அரசைக் கவிழ்க்கும் ஆசிரியர் சதி என்றும், அமைச்சர்கள் பேசுவது அன்றும் இன்றும் வாடிக்கை ஆகிவிட்டது. கவிஞர் சொல்கிறபடி கோரிக்கைகள் வைப்பது, போராட்டம் நடத்துவது, சிறைக்குச் செல்வது என்பனவெல்லாம் ஆட்சியைக் கவிழ்த்துவிட முடியாது. தெரிந்துதான் கவிஞர் பேசுகிறார். ஆசிரியருக்கு அரசியல் பேச உரிமை உண்டு என்பதில் நமக்கென்ன ஐயம்? அரசு அனுமதிக்கவில்லை என்பது உண்மைதான். ஆனால், ஒரு குடிமகன் என்ற முறையில் அரசியலைத் தன் கையில் எடுத்துக்கொள்வதில் என்ன தவறு? கவிஞருக்கும் இந்த உரிமை உண்டு.

## *ஊர் சுற்றி வந்த ஓசை*

## இருளிலிருந்து ஒளியைத் தேடி - (எ)

கற்பனை வளம் மிகுந்த இந்தக் கவிதையிலிருந்து சில பல வரிகளைக் கீழே தருகிறோம். நம்மிடமிருந்து வைகறைகளைத் திருடிக் கொண்டவர்கள், நம்மை அந்தியின் வாயில் திணித்தனர். நமது வாழ்க்கையைவிடச் சாவு பத்து வயது மூத்தது. பிறந்ததும் நாம் விழுந்தது அதன் மடியில். காற்றுக்கூட நாம் சுவாசித்துக்

கறுத்துப் போனது. காலம் ஒரு கவிதையைத் தேடி நம் வாசலுக்கு வந்தது. நாமோ காயம்பட்ட வார்த்தைகளை ஒரு பொட்டலம் கட்டி, அதன் கையில் போட்டோம். வெற்றிக்கும் தோல்விக்கும் வேறுபாடு தெரியாத நாம், காயம்பட்ட நம் போராட்டங்களை வரலாற்றின் கைகளில் கொடுத்தோம். நம்மைத் தேடி சாக்ரடீஸ்கள் வந்தனர். விஷக் கோப்பைகளோடு வரவேற்றோம். போதி மரத்திலேயே புத்தர்களைத் தூக்கில் போட்டோம். நமது வாதங்கள் வாகை சூடிய போதெல்லாம், உண்மையைப் பலி கொடுத்து வெற்றி விழாக் கொண்டாடினோம். தத்துவத்தின் தாழ்வாரத்தில் பாவ புண்ணியங்களை மதங்கள் விளக்கியபோது, கடவுள் வழி தெரியாது தடுமாறி வீழ்ந்தார். கை கொடுத்துக் கடவுளைக் காப்பாற்ற ஆளில்லை. கர்ப்பூரத் தீபங்களால் கடவுள் தேகம் இருண்டது. இருளே நமது உள்ளத்தில் ஒளியானது.

மனிதர்களோடு வாழ்வதைவிட விலங்குகளோடு வாழ்வதே மேல். ஒளி காட்டுக்குப் போய்விட்டது. குகைகளுக்குப் புறப்பட்டுப் போனது. இனி செடி கொடிகளில் பூக்களுக்குப் பதிலாகப் பொய்கள் பூக்கும்; சிறகுகளை விற்றுவிட்டு, பறவைகள் கூண்டுகள் வாங்கும்; கிளி வாயில் உபரி நாக்குகள் முளைக்கும்; கலங்கரை விளக்குகளை மோதிச் சாய்த்துவிட்டுக் கப்பல்கள் தண்ணீரில் தடங்களை மாற்றி வைக்கும்; சட்டம், தன் சட்டைப் பையில் தங்க பிஸ்கட்டுகளைத் திணித்துக் கொள்ளும்; ஐந்து நட்சத்திர விடுதிகளில் அயல் நாட்டுத் தூதுவர்களை நகரம் வரவேற்கும்; காந்தியப் பிரியாணி பரிமாறும்; ஒப்பந்தங்களில் பாரத மாதா கற்பைத் தொட்டுக் கையெழுத்துப் போடப்படும்.

இப்படி இந்தக் கவிதையில் படிமங்கள் நூற்றுக்கணக்கில் பவனி வருகின்றன. எல்லாமே முரண்பட்டு, அவற்றில் எதிர் மறைகளாகி விடுகின்றன. நம் காலத்தின் கொடுமையை, நம் தேசத்தில் நடைபெறும் குரூரங்களை, இப்படி முரண்களை உள்வாங்கிக் கொண்ட படிமங்களின் பவனியில் தமிழன்பன் சித்தரிக்கிறார்.

ஒரு கவிதையில் இப்படி நூற்றுக்கும் மேற்பட்ட படிமங்கள். தமிழன்பனின் ஆவேசம் இப்படிப் படிமங்களில் அடுக்கடுக்காக இயங்குகிறது. இது தமிழன்பனுக்குத்தான் சாத்தியம். இப்படி நேர்ந்துவிட்ட கொடுமையிலிருந்து, குரூரங்களிலிருந்து நம் தேசம் எவ்வாறு விடுபடும் என்பதை இக் கவிதையின் இறுதியில் சொல்கிறார்:

''இருளும் இந்த அவலமும் நிரந்தரமல்ல. ஒளி சோம்பலை உதறிவிட்டு எழுந்தால் ஒழிய இந்த இரத்த வாந்தி ஓயாது. சின்ன மின்மினிகளைத் தூதனுப்பி இருளிடம் என்ன இன்னும் பேச்சு வார்த்தை? இருட்டு கெஞ்சினால் நீங்காது; வேண்டுகோள் விட்டால் போகாது; ஒளி, ஒரு ஞானியின் மொழியில் உரையாடிப் பயனில்லை; பேச வேண்டும் ஒரு சிறுத்தையின் மொழியில்; அறிக்கை கொடுக்க வேண்டும் ஈட்டியின் எழுத்துகளில். இப்படி முடிக்கிறார் கவிஞர்.

இருள் ஒளியை வெற்றி கொண்டுவிட்டது. இருளுக்குள் இருந்து விவாதம் செய்து, சமரசம் பேசி ஒளியை விடுவிக்க முடியாது. தத்துவங்களை மதங்கள் தமக்குள் ஒளித்துக் கொண்டன. கடவுள்களும் தடுமாறுகின்றனர். கர்ப்பூரத் தீபத்தில் கடவுள் மறைந்துவிட்டார். சட்டங்கள் நியாயங்களைச் சிறைப்பிடித்து விட்டன. படிப்பறைக்குள் கல்வி சிறைப்பிடிக்கப் பட்டது. ஒளியை விடுவிக்க, இனி ஆயுதங்கள் ஏந்த வேண்டும். இப்படிச் செல்கிறது கவிஞரின் தீவிரமான பார்வை. கவிதைக்கு எப்பொழுதும் தீவிரம்தான் வலிமை தருகிறது. முரண்களில் கவிதை திளைக்கிறது. தனக்குள் ஆவேசம் உள்ளவனுக்குத்தான் இந்தத் தேசத்தில் நடைபெறும் கொடுமைகள் தெரியும். கற்பனைக் குமுறல்கள் இல்லாமல் இந்தத் தேசத்தின் குமுறல்களைச் சித்தரிக்க முடியாது. அடிப்படைகளைப் புரட்டிப் பார்க்கும் சமதர்மவாதிக்குத்தான் இந்தப் பார்வையும் இந்தக் கவிதையும் சொந்தம். இது ''ரொமாண்டிக்'' (Romantic) பார்வை என்று சிலர் சொல்லக்கூடும். இதற்கு இன்னொரு பெயர் புரட்சிப் பார்வை. கொடுமைகளை ஒழிக்க முடியாது என்று சொல்பவர், இது ரொமாண்டிக் பார்வை என்று தடம் புரட்டுவர். ''இது பொறுப்பதில்லை தம்பி, எரிதழல் கொண்டு வா'' என்பது புரட்சிப் பார்வை.

## ஊர் சுற்றி வந்த ஓசை

### புத்தாண்டு வாழ்த்து - (ஏ)

தமிழ்ப் புத்தாண்டு ஒவ்வொன்றும் பிறக்கும்பொழுது, என்னென்னவோ மனநிலைகளில் நாம் இருப்போம். தமிழன்பன் கவிதைகளில் புத்தாண்டு வாழ்த்துகள் வரத்தான் செய்கின்றன. மனக் கசப்போடு வாழ்த்துவதற்கு எதுவும் இல்லை. வார்த்தைகள் தீர்ந்துவிட்டன என்றுகூட ஒருமுறை எழுதுகிறார். ஆனால் இப்பொழுது நாம் பார்க்கும் கவிதையில் மகிழ்ச்சியான மனநிலையோடு புத்தாண்டை வரவேற்கிறோம். புத்தாண்டு எவ்வாறு கவிதையாகிறது? இறந்த காலத்து எதுகை-மோனைகள் எல்லாமே ஒரு புள்ளியில் குவிந்து, நமக்குள் புரளும்போது - நம்மைப் புரட்டும்போது, நம்முள்ளிருந்து எழுந்து வரும் ஆசைகள், ஆர்வங்கள் கவிதைகளாகின்றன. இந்தக் கவிதையில் என்ன சொல்கிறார்? கவனிக்கலாம்.

கழிந்து போன நூறு துன்ப நினைவுகளுக்கு மத்தியில், வந்து போன பத்து இன்பங்களை நாம் மறந்துவிடுகிறோம். இன்ப நினைவுகளைத் தவற விடக்கூடாது என்று இந்தக் கவிதைக்கு ஒரு முன்னுரை தருகிறார் தமிழன்பன். புத்தாண்டை வரவேற்கக் கவிஞர் தயாராக இருக்கிறார் என்பது தெரிகிறது. பிறவாத ஆண்டின் கைகள், இன்று பிறந்துள்ள நாளின்மேல் பன்னீர் தெளிக்கட்டும் என்று பரவசப்படுகிறார். "இந்தப் புத்தாண்டுத் தேரை எல்லோரும் சேர்ந்து இழுப்போம்; வாருங்கள்" என்றழைக்கிறார்.

இறந்த ஆண்டின் கசப்பான அனுபவங்களை எவ்வாறு நாம் எதிர்கொள்ளலாம் என்பது பற்றிக் கொஞ்சம் கூறுகிறார். நமது புன்னகை காணாமல் போயிருந்தால், தேட வேண்டாம்; யார் முகத்துக்கேனும் அது இன்பமூட்டப் போயிருக்கலாம். நம்முடைய கனாக்கள் காணாமல் போயிருந்தால் தேட வேண்டாம்; யாருடைய தூக்கத்தையோ அலங்கரிக்கப் போயிருக்கலாம். ஆனால் நம் நெஞ்சம் காணாமல் போயிருந்தால் தேடுவோம். ஏன் எனில், அது தன் சொந்தக் கவலையால் மற்றவரையும் கவலைக்குள்ளாக்கிவிடும் என்கிறார்.

கவிஞருக்குத்தான் எவ்வளவு நல்ல மனம்... இந்த நல்ல மனத்தில்தான் கவலைகள் பூக்கும்.

வாழ்க்கை நம்மைச் சந்தித்ததில் மகிழ்ச்சி கொள்ளட்டும். வரலாறு நம் வாசலுக்கு வரும்போது கருவத்தோடு நம் காலத்தை அதன் கையில் நாம் தருவோம் என்கின்றார். அரும்புகளின் கையில் வெளிச்சத்தை ஒப்படைக்கும் சூரியன், இருளிடமா நம்மை ஒப்படைப்பான் என்று இயற்கையின் ஆற்றில் குளித்து வந்து கவிஞர் பேசுகிறார். இயற்கையில் மனம் தோயும்போது துன்பங்கள் நமக்குள் எப்படித் தொடர முடியும் என்பதையா இப்படிச் சொல்கிறார்? அல்லது இயற்கை என்ன தீபமா?

மண்ணின் வற்புறுத்தல் இல்லாது பசும்புல் வளருகிறதே அதுபோல், நம் மனத்தில் அன்பு மலரட்டும். பிரச்சாரம் செய்யாமல், சுவரொட்டி போடாமல், ஒலிபெருக்கி இல்லாமல் நிலா இருளை வெற்றி பெறுவதைப்போல, நியாயங்கள் வெற்றி பெறட்டும்.

மேலும், இது வெற்றித் தேர் வருகின்ற நேரம். இனி வசந்த மேகங்கள் சிகரங்களை உதறிவிட்டுச் சின்னஞ்சிறு குடிசைகளில் கூடுகட்டும். இறுகிவிட்ட வாழ்க்கைப் பாறை இளகி, இனிச் சுளைச்சுளையாய் இனிக்கும். அர்த்தம் இழந்த பாடல்களை, இனிச் சரி செய்து வைப்போம் என்று நம்பிக்கைக் குரலை வரிகளெங்கும் நடவு செய்து வைத்திருக்கின்றார்.

கவிதை முழுவதும் கவிஞரின் நல்லெண்ணங்களைக் கேட்கிறோம். காலம் மாறி வருகிறது என்று காலத்தைக் கணிக்கிறார் கவிஞர். இயற்கையின் உள்ளிருந்தும் நம்பிக்கையைக் கண்டெடுக்கிறார். புத்தாண்டின்போது இப்படி நம்பிக்கைகளையும், நல்லெண்ணங்களையும் நாம் சேகரிக்கத்தான் செய்கிறோம். இயற்கை எப்படியோ நம்மை மீண்டும் மீண்டும் உயிர்ப்பித்துக் கொண்டுதானிருக்கிறது. கவிஞர்கள் இல்லாவிட்டால், நமக்கு வாழ்க்கை கசந்துவிடும். நமக்குள்ளிருந்தும்தான் கவிதைகளைக் கண்டெடுத்துத் தாலாட்டி, பூச்சூட்டி மதிக்கிறோம். நம் உள்ளத்திற்குள் இப்படிக் கவிதை எப்பொழுது குடி புகுந்தது? நாம் வியப்படைகிறோம்!

11

# காலத்திற்கு ஒரு நாள் முந்தி

## பாதையல்ல; பாதங்கள்! - (அ)

தமிழன்பனின் வித்தியாசமான கவிதைகளில் இதுவும் ஒன்று. இசை எல்லோருக்கும் பிடிக்கிறது; தமிழன்பனுக்கும் பிடிக்கிறது. ஆனால், இசைக்கு இவர் தரும் அர்த்தம் ஆழமானது. இசை நமக்குள் எங்கோ இருக்கும் ஆன்மிகத்தனத்தைத் தொட்டு விடுகிறது. அங்கு எல்லாமே கரைந்து நான், நீ என்ற வேறுபாடும் கூட அற்றுவிடுகிறது. இந்தக் கவிதையில், தமிழன்பன் இசையை எப்படிக் காண்கிறார்?

''சின்ன நட்சத்திரங்கள் பேரண்ட வெளியில் இடையறாது பாடுகின்றன'' என்கிறார். இரவுகள், அந்தப் பாடலைச் சேகரித்து வைகறையில் கவிதைகளாய்த் தருகிறது. பூமியின் அச்சு ஒரு நாதசுரமாய் இசைப்பதால் அல்லவா, பூமி மயங்கி மயங்கித் தன்னைத் தானே சுற்றுகிறது என்று கேட்கிறார். சின்னப் புல் நுனியில் பனி மெல்லத் தன் வாயைத் திறக்கும்போது, பேராழியின் இசை தன் உள்ளத்தின் உள் சுவர்களுக்குள் மோதுகிறது என்கிறார். கிளைகளில் சின்னத் தளிர்கள் வெளிவரும் ஓசை, தன் சாளரத் திரைகளை அசைக்கிறது என்கிறார்.

நம்பத்தான் முடிகிறதா? கவிஞனுக்கு மட்டும் கேட்கிற இசைதானா இது? பூமி சுழல்கிறது ஒழுங்காய். பிரம்மாண்டமாய் விண்ணில் நட்சத்திரங்கள் சுதி மாறாது சுழலுகின்றன; சுற்றுகின்றன. இந்த ஒழுங்கின் அற்புதம் நமக்குள் இசையாய்ப் பொங்குகிறது. இப்படி அர்த்தப்படுத்தலாமா? பிரபஞ்ச இயக்கத்தினுள்ளும் மலர்களின் மலர்ச்சியினுள்ளும் தன்னைக் கரைத்துக்கொள்வது, ஒருவகையில் தன்னுருக்கம். இப்பொழுது புரிகிறது. தன்னுருக்கமே இசையின் தாரக மந்திரம் அல்லவா என்று வியக்கிறார்.

கவிஞர் சொல்கிறார், நான் பொத்தல்களாகப் போவதனால் கூட ஒரு புல்லாங்குழலிடமே என்னை ஒப்படைப்பேன் என்கிறார். துப்பாக்கித் தோட்டாக்களால் துளைக்கப்பட்ட மாவீரர்களின் உடல்களிலிருந்து சுதந்திர கீதங்கள் எழுவது இதனால்தான் என்கிறார். ஒரு புன்னகையின் பரிமாணத்தை உள்ளமே நிச்சயிக்கிறது. இசை எனக்குள் ஆலாபனை செய்யும் போது, அதன் இலக்கணங்களை ஆராய மாட்டேன் என்கிறார். பூங்காவின் அனுபவத்தை அதைப்பற்றிய புள்ளி விவரங்களைத் திரட்டுவதால் பெற முடியாது என்கிறார். உண்மைதான். இசையில் கரையும்பொழுது நாம் இலக்கணம் பார்த்துக் கொண்டிருப்பதில்லை. நம் விடுதலைக்காகச் செத்தவர்கள், நமக்குள் காவியமாய், இசையாய்த் தங்கியிருக்கின்றார்கள். இசைக்கு வடிவம் சொல்லப் போனால் சங்கீதம்கூட அல்ல; சந்தைக் கடைகளிலிருந்தும்கூட இசையை நாம் சேகரிக்க முடியும் என்று சரியாகவே சொல்கிறார். இசை தன் பரிமாணங்களை இப்படி நமக்கு விரிக்கிறது. ‘‘லால்குடி’’யின் இசையை ஒரு கிராமத்துப் பெண்ணிடமும் கேட்க முடிகிறது. கவிஞர் சொல்வதும் உண்மைதான். உலகியல் என்னை உடைத்து நொறுக்கும்போது, சிதறிச் சிதறி விழுந்து விடுகிறேன் என்கிறார். என்னை மீண்டும் ஒன்று திரட்டி எனக்குத் தருவது இசை என்கிறார்.

இப்படி, இசை என்ற அனுபவத்தின் உண்மையைக் கீழ்க் கண்டவாறு முடிக்கிறார்: ‘‘நாக்கின் ஆடம்பரமல்ல இசை; இதயத்தின் தியானம். ஓசைகளிலிருந்து செதுக்கப்படுவதல்ல இசை; வாழ்க்கை கலையோடு கொண்ட தாம்பத்திய உறவின் அடையாளம் இசை; உயிரின் யாத்திரைக்கு இசை பாதையல்ல; பாதங்கள்!

கவிஞரிடத்தில் கவிதை எப்படி இருக்கிறது? நாம் கேட்கத் தொடங்கினோம். இப்பொழுது அவர் இசை பற்றிப் பேசுகிறார். இசை பற்றிப் பேசும்போதே பிரபஞ்ச இயக்கத்தை, பரிணாம கதியை, வைகறையை நமக்குள் கொண்டு வருகிறார். மனிதர் களின் சுதந்திரம் பற்றிச் சொல்கிறார். சந்தைக் கடைக்குள்ளும் நம்மை அழைத்துச் செல்கிறார். நம்மை ஒன்று திரட்டுவது இசை என்று தத்துவம் சொல்கிறார். இசை நமக்குப் பாதையல்ல;

பாதங்கள் என்கிறார். இசை நமக்குள் ஓர் உறுப்பு; இயக்கத்திற்கான உறுப்பு; உண்மைதான். இசையும் கவிதையும் இங்கு இணைந்துவிடுகின்றன. இசையை எங்கெல்லாம் கவிஞர் காண்கிறாரோ அங்கெல்லாம் இசையாக இருப்பது கவிதையும் தான். ஆகவே, சொற்களில், யுக்திகளில் கவிதையைத் தேடுபவன், வாழ்வின் ஓரத்தில் நெளிந்துகொண்டிருப்பவன்; வாழ்வின் மையத்திற்குள் ஊடுருவிச் செல்பவனுக்குள் பொலிவது, இசை; கவிதை!

## *காலத்திற்கு ஒரு நாள் முந்தி*

### ஒரு நெருப்புக் குச்சியின் ஜீவக் கழிவில் - (ஆ)

தாழ்த்தப்பட்ட மக்களை முன்னிலைப்படுத்தி, இந்தக் கவிதையைச் சொல்கிறார் தமிழன்பன். இதில் சமபந்தி உணவின் மூலம் சமத்துவத்தைச் சாதிக்க முனையும் கயவர்களைக் காய்கிறார் கவிஞர்.

நிரந்தர இருட்டிற்குள் ஒரு நெருப்புக் குச்சியைக் கிழித்து விட்டு, இவர்கள் மேற்கைக் கிழக்கு என்று சாதிக்கிறார்கள். உங்களிடமுள்ள ஓட்டுகளைப் பறிக்க, இவர்கள் உடுக்கை அடிக்கிறார்கள். உங்கள் குருதியிலிருந்து கொப்பளிக்கும் புரட்சி உணர்வை மங்க வைக்க, இவர்கள் சலங்கை ஒலிக்கிறார்கள் என்று கூறுகிறார் கவிஞர். "நீங்கள் உருட்டும் சோற்றுக் கவளம்; உங்கள் விடுதலை உணர்வுகளுக்குப் போடப்படும் பிண்டச் சோறு; உங்கள் மனித உணர்வை மங்கடிப்பது இவர்கள் நோக்கம்; சூரியச் சுனையில்தான் உங்களுக்குப் பகல்கள் பூக்கும்" என்று கவிதையை முடிக்கிறார்.

தமிழன்பனின் பாரத தரிசனத்தில், மேலும் ஒரு காட்சி என்று இந்தக் கவிதையைச் சொல்லலாம். சமபந்தி உணவு என்பதெல்லாம் பிண்டச் சோறு; ஏமாந்துவிட வேண்டாம் என்று எச்சரிக்கிறார். நமக்குச் சூரியன் தேவை; சூரியக் குளியல் தேவை என்கிறார். தமிழன்பனின் இந்தக் கவிதையை, நாம் இன்றைய சூழலில் கொண்டாட முடியும். அந்த அளவிற்கு இந்தக்

கவிதையில் உணர்வு ஒளி இருக்கிறது. தாழ்த்தப்பட்டவர்களை நோக்கியது இந்தக் கவிதை என்றாலும், கோடிக்கணக்கான ஏழை இந்தியர்களுக்கும் இந்தக் கவிதை பொருந்தும்.

12

## *விடியல் விழுதுகள்*

**தூண்டில்**

தமிழன்பன் கதைக் கவிதைகளைத் தேர்ந்தெடுத்து, சிறப்பாகச் செய்தில் வல்லவர். பழங்கதைகளிலிருந்து இங்கு ஒரு கதையைத் தேர்ந்தெடுக்கிறார். தவயோகி இராமானந்தர், தன் சீடன் கபீருக்கு ஒரு கட்டளை இடுகிறார். மறுநாள் காலை இராமானந்தர் தன் குருநாதருக்கு (விடியல் விழுதுகள்) திதி செய்ய வேண்டும். அதற்குப் பசு மாட்டின் பால் கொண்டு வர வேண்டும் என்கிறார். குருநாதரின் கட்டளையைக் கபீர் மீற முடியாமல் மறுநாள் காலை, உயிர் துறந்து கிடந்த பசு மாட்டிடம் பால் பெறுவதற்காகக் கபீர் ஒரு பாத்திரத்துடன் நின்றிருந்தார். நேரம் கழிந்து கொண்டிருக்கவே, இராமானந்தர் சில சீடர்களுடன் கபீரைப் பார்த்துவரப் புறப்பட்டார். இராமானந்தர் கபீரைக் கேட்கிறார். “பட்ட மரத்தில் பழம் பறிக்க நினைக்கின்றாயே! செத்த பசு மாட்டிடம் பச்சைப் புல்லைக் கையில் வைத்துக் கொண்டு பாலுக்குக் காத்திருக்கும் நீ, பகுத்தறிவை இழந்தாயோ” என்று கேட்கிறார். இப்படிக் கேட்ட இராமானந்தரை வணங்கி, கபீர் சொல்கிறார் – “ஞானக் குளத்தில் கேள்வித் தூண்டிலைப் போட எனக்குக் கற்றுக் கொடுத்தவரே நீர்தான். உங்களைப் பார்த்துக் கேட்கிறேன், “பட்ட மரத்தில் கனிகள் உற்பத்தி ஆகமாட்டா என்பது உண்மைதான்; அப்படியானால், எப்பொழுதோ மாண்டவர்கள் இப்பொழுது திதி என்ற பெயரில் நாம் தரும் பாலை உண்ணுவார்களா? மாண்டவர்கள் மீண்டு வந்து நாம் தரும் பாலை உண்ணுவார்கள் என்றால், ஏன் செத்துப் போன இந்தப்

பசு உயிரோடு மீண்டு வந்து, இந்தப் பச்சைப் புல்லை உண்டு பால் தராது?" என்கிறார் கபீர். தடுக்கிவிட்டது வைரக்கல் என்றாலும், பட்ட காயத்திற்கு வருத்தம் இல்லாமலிருக்குமா? எனினும் குருநாதர் தன் சீடரை அழைத்துக்கொண்டு தன் ஆசிரமத்திற்குச் சென்றார்.

இப்படிக் கபீரைப் பற்றி ஒரு பகுத்தறிவுக் கவிதையை எடுத்துக் கொண்டு கவிதை புனைகிறார் - தமிழன்பன். இவரது பகுத்தறிவுப் பாதைக்கு ஒத்த கதை என்பதில் ஐயமில்லை. வழக்கம்போலக் கபீர் நடந்து வரும் காலை நேரத்துக் காட்சி வரை, அற்புதமாகச் சித்தரிக்கிறார் கவிஞர்.

# 13

# *நிலா வரும் நேரம்*

## நீகூடத் தேவையில்லை - (அ)

காதலைப் பற்றிக் கவிஞர்கள், தங்குதடை இல்லாமல் நிறையவே எழுதியிருக்கிறார்கள். காதலுக்குள் எத்தனையோ தன்னுணர்வுகளைக் கொட்டுகிறார்கள். தமிழன்பனும் காதல் கவிதைகளை எழுதியிருக்கிறார். இவரது முதல் தொகுதியில் காதல் கவிதைகள் பல உள்ளன. அடுத்து வரும் தொகுதிகளில் அதிகம் இல்லை. முதல் தொகுதியிலும் இடம் பெற்றிருக்கிற காதல் கவிதைகள் சற்று வித்தியாசமானவை.

காதலியை நோக்கிக் கவிஞர் இப்படி எழுதுகிறார்: "நீ எழுதிக் கிழித்துக் கிணற்றுக்குள் விட்டெறிந்த காகிதத் துண்டுகள் அல்லிப் பூக்கள் ஆகவில்லையா?" என்று கேட்கிறார். "சாளரத்தின் வழியே விட்டெறிந்த காகிதத் துண்டுகள் பட்டாம் பூச்சிகளாகவில்லையா?" என்று வியப்படைகிறார். "உனது கடிதங்களைத் தாங்கி வரும் தபால்காரனின் பைதான் என் சுவாசப் பை" என்கிறார். தினம் உன்னிடமிருந்து ஒரு கடிதம் வந்தால் அது போதும், நீகூடத் தேவையில்லை என்று முடிக்கிறார்.

வழக்கமான கற்பனைகளோடு எழுதப்பட்ட இந்தக் கவிதை, உன் கடிதங்கள் வந்தால் போதும், நீகூடத் தேவையில்லை என்று ஓர் அதிர்ச்சியை முடிவில் நிறுத்துகிறது. இதேபோல் இந்தத் தொகுப்பில் இன்னும் சற்று வித்தியாசமான இன்னொரு கவிதையையும் காண்கிறோம்.

## *நிலா வரும் நேரம்*

### காலம் இசைக்கும் இராகம் - (ஆ)

எழுபதுகளில் வானம்பாடிகள் புதுக் கவிதையை ஏற்றுக் கொண்டனர். "மரபுத் தளைகளிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டது, புதுக் கவிதை" என்று செல்லப்பா முதலியவர்கள் இலக்கணம் வரைந்தார்கள். வானம்பாடிகளைப் பொருத்த வரையில், புதுக் கவிதை என்பதைப் புதுப் பார்வையோடு கண்டார்கள். அறுபதுகளின் இறுதியில் உலகம் மாபெரும் புரட்சிக்குத் தன்னைத் தயார் செய்துகொண்டிருந்தது. பிரான்சில் தொடங்கிய மாணவர் எழுச்சி, உலகத்தையே உலுக்கியது. இந்தியாவின் வடகோடியில் எழுந்த வசந்தத்தின் இடி முழக்கம், இந்தியா முழுவதும் அதிர்வு அலைகளைத் தோற்றுவித்தது. புதியதோர் உலகம், புதியதொரு வாழ்க்கை நம் கண்களுக்குத் தெரிந்தது. நம் உணர்வுகளில் கனல் ஏறியது. நமக்குள் ஆயிரம் அலகுகள் விரிந்தன. நாம் புதியவரானோம். நம் கவிதைகளும் புதுக் கவிதைகளாயின. தமிழன்பனின் இந்தத் கவிதை அன்றைய வரலாற்றுச் சூழலில் புதுக் கவிதை என்பதற்கான புதிய அர்த்தத்தை நமக்குத் தருகிறது. "காலம் இசைக்கும் இராகம் நாம்; பூமி புனைந்து கொண்ட புதுக் கவிதை நாம்" என்று தொடங்குகின்றது இந்தக் கவிதை. இயற்கை, தன்னை மாற்றி மாற்றிப் புனைந்துகொள்கிறது. காலமும் இப்படிப் புதுப்பித்துக் கொள்கிறது என்கிறார். கழிக்குக் கதவண்டை என்ன முழக்கம்? நாளைகளின் அவசரம் என்று இவரே கேள்வி கேட்டுப் பதில் சொல்கிறார். கிழக்கு என்பது உதயத்தை மட்டுமல்லாது, எதிர்காலத்தையும்

குறிக்கிறது. எதிர்காலம் அவசரத்தோடு வருகிறது என்பது கவிஞர் கருத்து. ஆண்டுகளை அள்ளிச் சுமந்துகொண்டு யுகங்கள் அவசரமாய் வருவதையும் சுட்டுகிறார்.

சில சந்தர்ப்பங்களில், ஒரு பத்து ஆண்டுகள் மட்டுமல்ல; நூறு ஆண்டுகளின் வரலாறும், சில நாட்களில் நடந்து முடிந்துவிடும் என்ற புரட்சியின் கால அளவைக் குறித்த, கார்ல் மார்க்சின் கருத்தை, இங்கு நினைவு கொள்ளலாம். சொர்க்கம், தன் கருப்பொருளைத் திரட்ட நம் கண்ணோரம் நமக்குள் காத்திருக்கிறது என்கிறார். ஆம்; சொர்க்கம் நமக்குள் இருந்துதான், தன் கருப்பொருளைத் திரட்டிக்கொள்ள வேண்டும். சொர்க்கம் வெளியில் இல்லை. நமக்குள்ளிருந்து நாமே திரட்டிக்கொள்வதுதான் சொர்க்கம். நாமே, நம்மைப் பிளந்து நமக்குள்ளிருந்து சொர்க்கத்தை எடுத்துக்கொள்ள வேண்டும். நிலாகூட அழகு பெறுவது நம் புன்னகையால்தான் என்கிறார். காலம் நம்மை அளாவி நமக்கான இசைக்கோலம் தயாரிக்கிறது என்கிறார். இந்த இசைக் கோலத் தயாரிப்புக்கான இராகத்தை எங்கிருந்து பெற்றது என்கிறார். சிம்மாசனங்களில் இருந்தோ தீபாராதனை மண்டபங்களிலிருந்தோ தனது இராகத்தைக் காலம் தயாரிக்கவில்லை. கிராமத்தின் தெம்மாங்கி லிருந்துதான் இந்த இராகத்தை தயாரிக்கிறது என்கிறார். எதையும் இசைப்பதைவிட நாமே இசையாவோம் என்கிறார். மீண்டும் இப்படி முடிக்கிறார்,

**"காலம் இசைக்கும் இராகம் நாம்**
**பூமி புனைந்து விட்ட புதுக்கவிதை நாம்!"**

## *நிலா வரும் நேரம்*

### வருவதும் வராததும் - (இ)

தமிழன்பனின் காதல் - கவிதைகளில் இதுவும் ஒன்று. சற்று வித்தியாசமானது. "வருவதும் வராததும் உன் விருப்பம்" என்ற வரி, இந்தக் கவிதையில் திரும்பத் திரும்ப வருகிறது. "உன்

கூந்தல் இன்னும் கறுப்பதற்காக இரவுகளைப் பிழிந்து வைத்துக் காத்திருப்பேன்; வருவதும் வராததும் உன் விருப்பம். உன் வருகைக்காகக் காத்திருப்பதே என் தவம்" என்று தொடங்குகிறார். "உன் உதடுகளின் புன்னகையின் வெளிச்சம் மலர்களில் கொட்டிக் கொண்டிருக்கும்; வருவதும் வராததும் உன் விருப்பம். காத்திருப்பதே என் தவம்" என்கிறார் திரும்பவும். "நாள்கள் கல்லறைக்கான செங்கற்களை என் வீட்டின் முன் அடுக்குகின்றன; வருவதும் வராததும் உன் விருப்பம். காத்திருப்பதே என் தவம்" என்றும் கவிதையை முடிக்கிறார்.

காதல் உணர்வோடு காத்திருப்பது எனக்குப் போதும். அது நான் செய்யும் தவம். காத்திருக்கும்போதே என் நாட்கள் கழிகின்றன. உள் உயிர் உருகுகின்றது. என் கல்லறையை நானே கட்டிக் கொள்கிறேன். இப்படி உனக்காக என்னை வளர்த்துக் கொள்வதில் என் தவம் எனக்கு வலிக்கிறது. இப்படிக் காத்திருப்பதிலும் சுகம் உண்டு என்று சொல்லுகிறார். இது யதார்த்தம்தானா என்பதைக் காட்டிலும், தமிழன்பனின் கற்பனையில் இதுவும் ஒரு வீச்சு என்பதைப் புரிந்து கொள்ளலாம். நிறைவேறும் காதலைவிட நிறைவேறாக் காதலின் இன்பம் அதிகம் என்று சொல்லுகிறார்கள். "நீ வர வேண்டாம்; நான் காத்திருக்கிறேன்." இந்தச் சுகத்தைக்கூட மறுத்து விடாதே என்பதுகூட இந்தக் காதலின் உணர்வாக இருக்கக்கூடும்.

## *நிலா வரும் நேரம்*

### தாகமே சுகம்... தண்ணீர் எதற்கு? - (ஈ)

இந்தத் தொகுப்பில் காதல் கவிதைகள் தொடருகின்றன. எனது தனிமையை நான் மட்டுமே சுமக்க முடியாது. எவரெஸ்டின் கனத்தைப் பத்தாக அடுக்கினால், அது என் தனிமையின் கனம். இந்தக் கனத்தை என்னோடு தோள் மாற்றிச்

சுமக்க, என் மரணமும் தயாராக இருக்கிறது என்கிறார் ஒரு கவிதையில். இப்படித் தொடரும் கவிதைகளில் மேலும் ஒன்று.

"தாகமே சுகம்... தண்ணீர் எதற்கு? மோகமே சுகம்... முத்தம் எதற்கு?" என்று தொடங்குகிறார். "கரையைத் தொடவேண்டாம் இந்தப் படகு. முற்றுப்புள்ளிகளைச் சுமந்து கொண்டு நீ ஏன் என் எதிரில் வரவேண்டும்? கவிதையாய்த் தொடரும் இந்த வாக்கியம் முற்றுப் பெறவே வேண்டாம். தவத்தைக் கனிவித்து என் மூச்சு சுடர்ந்து கொண்டிருக்கிறது. உன் வரங்களின் வெளிச்சத்தால் அது ஒருவேளை கறுத்துவிடலாம் என்கிறார். எதையும் தொட்டு விடுவதல்ல, விரிந்து கொண்டிருப்பதே பிரபஞ்சத்தின் நோக்கம் என்கிறார். நம் காதல் நாளும் வளர வாழ்த்துவோம் வா, விலகி நின்று" என்று முடிக்கிறார். இவர் கருத்துப்படி தாகமே சுகம், தண்ணீர் எதற்கு?

கற்பனைக்குள் ஆழ்ந்து ஆழ்ந்து செல்கிறார் கவிஞர். கற்பனைக்குள் தீ மூட்டி வெந்து சாம்பலாகிறார். சாம்பலிலிருந்து மீண்டு தன்னை உயிர்ப்பித்துக் கொள்கிறார். கற்பனைச் சுகத்தை வேறு எப்படித்தான் பெறுவது? தன்னை எரித்துக் கொள்வதில் மெழுகுவர்த்திக்கு இன்பம்தான் ஏற்படும். கவிஞருக்கும் இப்படி.

## *நிலா வரும் நேரம்*

### கிழக்குக் கிளையில் - (உ)

தொடர்ந்து, கற்பனைப் போதை ஏறிய கவிதைகளைக் கொட்டி வரும் தமிழன்பன் கவிதைக்குள் தெவிட்டித்தான் போகிறோம். காதல் இந்தக் கவிஞனுக்குள் கடல் அலைகளையும் சூரியனின் கதிர்களையும் புரட்டித்தான் போடுகிறது. இப்படி இந்தக் காதல் உணர்வு எங்கிருந்து பீறிட்டு அடிக்கிறது? எதன் தேவையிலிருந்து இந்தக் காதல் கொப்பளிக்கிறது? இந்தக் கவிஞனுக்குள் சமூகம்

என்னவாயிற்று? எதார்த்தம் என்னவாயிற்று என்ற கேள்விகள் நம்மைத் துளைத்துக் கொண்டிருக்கும்போதே, தன் காதல் போதைக்கு முற்றுப் புள்ளி இடுவதுபோல ஓர் அருமையான கவிதை.

"கிழக்குக் கிளையில் இளம் கிளியே, பாடுவோம், வா" என்று அழைத்துச் சொல்கிறார். "சிறு உழக்கல்ல உலகம் என்கிறார். சமஉரிமைச் சமவெளியில் சந்திப்போம் வா" என்கிறார். நாம் எழுதும் வாழ்க்கைக் காவியத்தில், மானுட வளர்ச்சிகள் மகுடம் புனையட்டும் என்கிறார். நம் இல்லற வெளிச்சத்தின் இதயச் சிதறல் சமூக இருட்டைத் தகர்க்கட்டும் என்கிறார். மானுட மலர்கள் தூவி பொதுவுடைமைப் பொன் கனாவை வரவேற்போம் என்கிறார். வாழ்க்கை, பிருந்தாவனம் மட்டுமல்ல; பிரச்சனையும்தான் என்கிறார். "கற்பனையோடு மட்டுமில்லை, ஆயுதங்களோடும் புறப்படுவோம், வெற்றி கொள்வோம், வா" என்று முடிக்கிறார்.

## *நிலா வரும் நேரம்*

**நமக்கு நிம்மதியாக இருக்கிறது - (ஊ)**

காதலுக்குள் மூழ்கிய நிலையில் கவிஞர், மானுடத்தை மறக்கவில்லை; சமத்துவத்தை, பொதுவுடைமையை மறக்கவில்லை; ஆயுதங்களையும் மறக்கவில்லை; கவிஞன் தன் காதல் உணர்வெழுச்சியின்போது, தனக்குள்ளிருந்து ஒரு புதிய உலகை எழுப்பிக்கொள்கிறான். இந்தப் புதிய உலகம்தான் காதல் புயலைக் கிளப்புகிறது. இவனது புதிய உலக உணர்வுகள்தான், இவனுக்குள் மலர்களையும், மாலை நேரத்துச் சூரியனையும் அழகு படுத்துகின்றன. இப்படியும் சிந்திப்பதற்குத் தமிழன்பன் கவிதைகள் சில தடங்களைத் திறந்துவிடுகின்றன. தமிழ்க் கவிதைக்குள்ளிருந்து காதலை வெளியேற்ற முடியாதுதான்.

14

## தோணி வருகிறது

### நயனதாரா - (அ)

"தோணி வருகிறது" என்ற தொகுப்பிலுள்ள ஓர் அருமையான கதைக் கவிதை நயனதாரா. "அக்கினி வீணைகளே" என்று இன்னொரு கவிதையின் தொடக்கத்திலேயே வங்க தேசத்தின் தந்தையாகிய முஜிபுர் ரகுமானின் போர் முழக்கத்தைத் தமிழன்பன் கவிதையாக்கியிருக்கிறார். மேற்குப் பாகிஸ்தான் அதிபராகிய யாஹியாகானின் படைகளை எதிர்த்து, முஜிபுர் ரகுமானின் தலைமையில் கிழக்கு வங்காளம் விடுதலைப் பிரகடனம் வெளியிட்டது. புதிய வங்கதேசம் உருவாயிற்று. அந்தப் போரின் ஒரு கட்டத்தில், யாஹியாகானின் படை வீரர்கள் நயனதாரா என்ற கன்னிப் பெண்ணைக் கற்பழித்துக் கொன்றனர். இந்தக் கொடுமையைக் கவிஞர், இந்தக் கவிதையில் பாடுகிறார். கவிஞரின் ஆவேசம் தன் உச்சத்தை இங்கே தொடுகிறது. அலை அலையாய் வார்த்தைகள் படையெடுக்கின்றன. "நயனதாரா சோனார் பங்களாவின் தாஜ்மகால்" என்று கவிதையை முடிக்கிறார். இந்தக் கவிதை குறித்து அன்றையச் சூழலில் பெரும் விவாதங்கள் நிகழ்ந்தன. இன்றளவும் நயனதாரா விடுதலையின் சின்னமாய், காலங் காலமாய் ஆண்களால் கிழிபடும் பறவைகளின் சின்னமாய், இராணுவ வெறியர்களால் கிழிபடும் மக்களின் சின்னமாய் அனைவராலும் போற்றப்படுகிறாள். தமிழன்பனின் கவித்துவம் இந்தக் கவிதையில் கொடிகட்டிப் பறக்கிறது எனலாம்.

## தோணி வருகிறது

### சிவப்பு முக்கோணம் - (ஆ)

கதைக் கவிதைகள் புனைவதில் தமிழன்பன் புதிய தடம் போட்டவர் என்று சொல்ல வேண்டும். உண்மை நிகழ்ச்சியின் அடிப்படையில் அவர் கதைக் கவிதைகள் புனைந்தார். கதை

சொல்வது அவர் நோக்கமல்ல. வாழ்க்கையைச் சொல்கிறார். எந்தக் கதையைச் சொல்ல முனைகிறாரோ, அப்படி முனைப்புக் கொள்ளும்பொழுதே அந்தக் கதைக் கரு, அவர் நெஞ்சைப் பிழிகிறது. தம் சோகத்தைக் கொட்டுகிறார் கவிஞர். கதையை இடையிடையே நிறுத்திவிட்டு, இப்படிக் கொடுமை செய்த வெறியர்களை ஆவேசமாகச் சாடுகிறார். இப்படிக் கவிதையை ஒரு கொத்தாக, அடுக்கடுக்காகப் புனைந்தவர் தமிழன்பன்.

இந்தக் கவிதையில் என்ன கதை சொல்கிறார் தமிழன்பன்? கண்ணம்மா குடிசையில் வாழ்பவள். அவள் கணவன் மறியலில் சிறைப்பட்டான். சிறையில் இருக்கும்போது, குழந்தைக்குக் காய்ச்சல் கண்டது. மருத்துவம் செய்யக் கண்ணம்மாவிடம் காசு இல்லை. சிறையிலிருந்து வெளி வந்த கணவன் பொன்னப்பன் ஓடோடிச் சென்று, தனக்குக் கருத்தடை செய்து கொண்டு, மகனுக்கு மருத்துவம் செய்ய, முப்பது ரூபாய் வாங்கிக் கொண்டு வந்தான். காய்ச்சல் கண்ட மகன் இறந்துவிட்டான். இனி என்ன செய்வான் பொன்னப்பன்? என்ன செய்வாள் கண்ணம்மா? சிவப்பு முக்கோணம் இவர்களின் எதிர்காலத்தைச் சூறையாடி விட்டது. இந்திய அரசியலில் இது துடைக்க முடியாத களங்கம். இந்த ஆத்திரத்தைத்தான் கொட்டுகிறார் கவிஞர்.

## *தோணி வருகிறது*

### வெள்ளிக்கிழமை - (இ)

இந்திய விடுதலையின் 25ஆம் வெள்ளி விழாக் கொண்டாட்டம் பற்றித் தமிழன்பன் எழுதிய வித்தியாசமான கவிதை இது. இந்தக் கவிதையின் நாயகன் ஓர் இளைஞன். கிராமத்து இளைஞன். வறுமையின் சொந்தக்காரன். இளைஞன் என்ற சொல்கூட இவனுக்குப் பொருத்தமில்லாது பெருமை சேர்க்கும் சொல். இவனுக்கு நினைவில் இருப்பது ஒரே ஒரு வெள்ளிக்கிழமைதான். வாரத்தின் ஏழு நாள் வரிசை இவனுக்கு அவசியமில்லை.

அந்த ஒரே ஒரு வெள்ளிக்கிழமையைத்தான் இவன் தேடுகிறான். சந்தைக் கடையில் தொலைந்த ஐந்து பைசா நாணயத்தை அடுத்த நாள் வந்து தேடுவதுபோல, அவன் அந்த ஒரு வெள்ளிக்கிழமையைத் தன் நினைவுக்குள் தேடுகிறான். அதிசயமான இட்டளியும் தோசையும் அவனுக்கு அளித்து மறைந்த அந்தத் தீபாவளி வெள்ளியைத்தான், அவன் தனக்குள் இன்னும் தேடுகிறான்; அவனுக்கு இட்டளி தோசையை அறிமுகம் ஆக்கிய அந்த வெள்ளிக்கிழமைதான் அவனுக்கு மகாமகம். அதுதான் அவனுக்குக் குறிஞ்சிப்பூ, வால் நட்சத்திரம், அரசு விடும் விடுதலை நாள்; வெள்ளிவிழாப் பாடகளில் என்னென்னவோ காட்சிகள், ஒப்பனைகள், விந்தைகள், கடைத் தெருவில் வரிசை வரிசையாய்ச் சென்றன. ஆனால் அவனோ இவற்றுக்கிடையே தனது வெள்ளிக்கிழமையைத் தேடுகிறானாம். யுகாந்திர இருட்டில் அவனுடைய கோகினூர் கிழமையை அவன் காண முடியவில்லை. எவரெவர்க்கோ, என்னென்னவோ வழங்கிய பாரதத் தாய், இவனுக்கு மட்டும் மலடாகிப் போனாளாம். இருமலும் இளைப்பும் கொண்ட தன் அன்புத் தாய், பாசத்தோடு பலகாரங்கள் வழங்கிய அந்த வைகறைப் பொழுதுகள் இவனுக்கு இல்லை இவன் சோதரன், ஓவியம் வரைய பென்சில் திருடி அகப்பட்டவன். இவன் சோதரி, எழுத ஒரு பேனா திருடி தண்டிக்கப்பட்டவள். விடுதலை வெள்ளிவிழா அணி வகுப்பில் அணி வகுத்துப் பிணமாய்ப் பலர் விரைத்து நிற்கும் நேரத்தில், இவன் தான் இழந்து போன தனது வெள்ளிக்கிழமைக்காகத் தலை குனிந்து தனது மௌன அஞ்சலியைச் செலுத்துகிறானாம். இப்படி வித்தியாசமாய்ச் செல்கிறது இந்தக் கவிதை.

## *தோணி வருகிறது*

**இளகல் நெடில் - (ஈ)**

படிமங்களை அடுக்கிச் சொல்வதில் ஆர்வத்தோடு முயற்சி செய்த, அந்தத் தொடக்கக் காலக் கவிதைகளில் ஒன்று இது. படிமம் ஒவ்வொன்றும் ஓர் அற்புதக் காட்சியாய் நம் நினைவுக்கு

வந்து பின்னால் நகருகிறது. ஆறு பற்றிய வருணனைக் கவிதை இது. ஆறு அழகானது என்பதில் ஐயமில்லை. நிலத்திற்கும் நமக்கும் உயிரை வழங்குவது இந்த ஆறு. இதுதான் இளகல் நெடில். ஆறுபற்றி வரும் படிமங்களை இங்கே தொகுத்துப் பார்க்கலாம்.

"அலை இலைகளுக்கிடையில் நுரைப்பூப் பூக்கும் விதையில்லாத் தாவரம்; குஞ்சு பொறிக்காத குமிழி முட்டைகள் இட்டு நடக்கும் இறகில்லாப் பறவை; நிலத்தில் நெளியும் திரவ மின்னல்; தறியில் நெய்யாத தண்ணீர்ப் புடைவை; மலையின் நாக்கு, சோலை மாளிகையின் மலர்கள் என்னும் சுடர் விளக்குகளுக்கு மின்சாரம் கொடுக்கும் தங்கக்கம்பி; மீட்டுவோர் இன்றிப் பாடும் வீணை; குன்றின் செய்தியைக் கடலுக்குக் கொடுக்கும் கம்பியில்லாத் தந்தி; கட்டுடல் பூமியின் இரத்தக் குழாய்; குறிஞ்சிக் குமரி எழுதும் நீண்ட வாக்கியம்; கொடியிடை குலுங்க நடக்கும் ஓவியம்; ஊற்றின் நெஞ்சில் உற்பத்தியான கனவுப் பவனி; புழுதி எழும்பாப் புதுமலர் வீதி; மீன்கள் திரியும் மேய்ச்சல் காடு. தரைக் கீறல் மறைக்கும் தண்ணீர்த் தாவணி; நாட்டு வளத்தை நமக்கு அறிவிக்கும் ஈர ரேகை - இந்த இளகல் நெடில்" எனக் கவிதையை முடிக்கிறார்.

படிமங்களோடு, அந்தந்தப் படிமங்கள் வெளிப்படுத்தும் அழகிய காட்சிகளோடு, அந்தக் காட்சிகள் நமக்குள் எழுப்பும் இனிய உணர்வோடு, இவற்றின் வழியே எவற்றை இவர் நமக்கு உணர்த்துகின்றார் எனப் புதிய உணர்வோடு, நாம் நமக்குள் வேகமாகத்தான் நடையிடுகிறோம்.

இறுதியில், ஆற்றைத்தான் இவர் இப்படி வருணிக்கிறார் என்று மீண்டும் ஒருமுறை, இருமுறை இக் கவிதைக்குள் பயணம் செய்கிறோம். காலம் காலமாய்க் கவிதை இப்படித்தான் எத்தனையோ அலகுகளை இணைத்துக்கொண்டு நமக்குள் பதிந்திருக்கிறது. இதைத்தான் தமிழ்க் கவிதையின் வளம் என்று நாம் குறிப்பிடுகின்றோம்.

## தோணி வருகிறது

### உதட்டைக் கிழித்த புன்னகை - (உ)

தமிழில் ஆராய்ச்சிகள் பல நடைபெறுகின்றன. இந்த ஆராய்ச்சியின் இலட்சணங்கள் பற்றித் தமிழன்பன் இந்தக் கவிதையில் சொல்கின்றார். ஆராய்ச்சி பற்றித் திறனாய்வுக் கட்டுரை எழுதலாம். கவிதை எழுதினால், அது கவிதையாகி விடுமா? என்று நமக்குள் கேட்டுக் கொள்கிறோம். தமிழில் ஆராய்ச்சி என்பது தரத்தோடு நடைபெறவில்லை என்பது உண்மைதான். இந்தப் போக்கைப் பதிவு செய்வதுகூடத் தேவைதான் என்பதை நாம் மறுப்பதற்கில்லை. அதே சமயம் தமிழுக்குள்ளிருந்து இன்னும் நாம் எடுக்க வேண்டிய அழகுகளையும், ஆற்றல்களையும் நாம் இழந்துவிடக் கூடாது. கவிதையின் எதிர்மறைத் தன்மை இப்படி நம்மைக் கொஞ்சம் கலக்குகிறது. அறிவை அடித்தளமாகப் புதைத்து உப்பி விறைத்த மண்டபத்தில் ஆராய்ச்சி நடக்கிறது என்று தொடங்குகின்றார். கவிஞரின் கருத்து இந்த முதல் வரியிலேயே தெளிவாகிவிடுகிறது. கல்லறைக் கருத்துகள் கட்டுரையாளன் நாக்கில் புதுப் பிறவி எடுத்து, உதட்டைப் புண்ணாக்கிக் கொள்கின்றன என்கிறார். பத்தினித்தனம் கொண்ட பழங்கால ஓலைப் பெண்ணை, பலர் மத்தியில் இந்த ஆராய்ச்சியாளர்கள் பலாத்காரம் செய்கிறார்களாம். இப்படிப் பலாத்காரம் செய்து, அணு யுக எண்ணங்களை அந்தப் பழங்கால ஓலைச்சுவடிகளில் இருந்து பிரசவப்படுத்துகின்றார்களாம். இது அணு யுகம். பழங்கால ஓலைச்சுவடிகளில் நம் காலத்திற்குரிய எண்ணங்கள் இருக்க முடியாது; எனினும் ஆய்வாளர்கள் பிரசவப் படுத்துகின்றனர். தொல்காப்பியர், நச்சர், பவணந்தி முனிவர் ஆகியவர்களின் சவக்குழிகளுக்கு இவர்கள் ஆராதனை செய்கின்றார்களாம். தாய் வயிற்றுக்குள் மீண்டும் புக முடியாத இந்தப் பேர்வழிகள், பழங்கால வயிற்றுக்குள் கால் வைத்துச் சென்று பச்சைக் கனவுகள் பறிக்கின்றார்களாம். கல்லறை எலும்புகளைக் கொண்டு வந்து, ஒரு கட்டிடம் கட்டி,

அதற்குள்ளிருந்து சந்திர மண்டலப் பயணத்திற்கு வழிகாட்டுகிறார்களாம். இதுதான் ஆராய்ச்சி என்று கவிதை விமர்சனம் செய்கின்றது.

தொல்காப்பியரிலிருந்தும், நச்சினார்க்கினியரிடமிருந்தும், பவணந்தி முனிவரிடமிருந்தும் இன்னும் நாம் எடுத்துக் கொள்ள வேண்டிய - புதுப்பித்துக் கொள்ள வேண்டிய கருத்துகள் இருக்கத்தான் செய்கின்றன. மரபின் தடங்கள் வலுவானவை; தவிர இன்னும் நமக்குத் தேவையானவை. பழஞ்சுவடிகளில் அணு யுகத்திற்கான, சந்திர மண்டலப் பயணத்திற்கான கருத்துகள் இருக்க முடியாது என்பதும் உண்மைதான். எல்லாமே இதன்பாலுள என்று துப்பாக்கிகளையும், தோட்டாக்களையும்கூடப் பழங் கவிதைக்குள் கண்டெடுக்கிற பத்தாம்பசலிகளும் இருக்கத்தான் செய்கின்றனர். இவர்கள் செய்வதே ஆராய்ச்சி என நாம் நம்ப வேண்டியதுமில்லை. பழம் பெருமை பேசுவதற்கான ஆராய்ச்சிகளில் ஈடுபடுவது அர்த்தமில்லைதான். அறிவியல் மற்றும் தொழில்நுட்பக் கருத்துகள் தேடுவதற்காக நாம் பழந்தமிழ்மீது பார்வை செலுத்துகிறோம். இப்படித் தேடினாலும் நமக்குக் கிடைக்கிறது என்பதும் உண்மைதான். ஆனால், இதையும் மீறி ஆய்வு செய்ய வேண்டும். வாழ்வின் அடிப்படை மதிப்பீடுகள் தமிழ் இலக்கியத்தில் வளமாகவும் வலுவாகவும் பதிந்துள்ளன.

தமிழ்த் தேசியம் என்ற அரசியல் முன்னுக்கு வந்துள்ள இன்றையச் சூழலில், தமிழ் உணர்வையும் தமிழின் ஆற்றலையும் நமக்குள் செரித்துக்கொள்வதற்கு ஆராய்ச்சிகள் அவசியம்தான். ஆனால், பெரியாரின் பகுத்தறிவுப் பார்வையின் அழுத்தம் காரணமாகத் தமிழன்பன் பழங்கவிதைக்குள் அணு யுகத்தைத் தேடி, இல்லை என்கிறார். அணு யுகம் அல்லது சந்திரப் பயணம் இன்று நமக்கு என்ன செய்திருக்கிறது என்பதையும் நாம் நினைவுகொள்ள வேண்டும். முதலாளியப் பார்வை நம்மை முடக்கிவிடக் கூடாது. சமதர்மப் பாதை தமிழ் இலக்கியத்தின் உள்ளிருந்து தனக்கான வளங்களை மீட்டுக்கொள்ள முடியும்.

## *தோணி வருகிறது*

### திராவகத் தெளிப்பு - (ஊ)

"தோணி வருகிறது" - தமிழன்பன் தன் தீவிர முகம் காட்டிய முதல் புதுக் கவிதைத் தொகுப்பு. தோணி என்பது ஓர் உருவகம்; படிமம். ஏழை மக்களின் எதிர்காலக் கனவுகளைத் தாங்கி வருகிறது இந்தத் தோணி. 1972இல் வெளிவந்த இந்தத் தொகுப்பு, இந்தியாவில் கிளர்ந்தெழுந்த வசந்தத்தின் இடி முழக்கத்தை வாரி எடுத்துக்கொண்டு வந்தது என்று சொல்வது பொருந்தும். தமிழன்பனின் கவிதைகளில் அன்று முதல் இன்று வரை வெளிப்படையாய்த் தெரிய வந்திருக்கிற புரட்சி உணர்வின் முதல் போர்ப் பிரகடனம் இந்தத் தொகுப்பு. "திராவகத் தெளிப்பு" என்பது இந்தத் தொகுப்பில் உள்ள அற்புதமான கவிதை. வானம்பாடிகள் தமக்குரிய முத்திரைக் கவிதையாய் இந்தக் கவிதையைத் தன் முகத்தில் பொறித்துக் கொண்டனர். அணை உடைத்த வெள்ளமெனப் பெருகி வருகிறது இந்தக் கவிதை. புதுக் கவிதை என்பது புது யுகத்தின் கவிதை. முனகலில் வெளிப்படுவது பழைய யுகம்தான். புதிய யுகம் தன்னை வெளிப்படுத்திக்கொள்வது புரட்சி உணர்வில்தான். கோடி மனிதர்களின் கூட்டுணர்வாய்ப் பொங்குவது புதுக் கவிதை; இந்த உணர்வில் குளித்தெழுகிறான் - புதுக் கவிஞன்.

"ஆதிக்க வெள்ளத்தின் அடியில் கிடந்தாலும் பாதிக்கப் படாதவனே, பாஸ்பரசே, கண்விழிப்பாய்" என்று தொடங்குகிறார் கவிஞர். "மத்தாப்பு மனிதர்களின் மத்தியிலே நாமெல்லாம் சத்தியப் பூங்கனிகள்; சாகாத நித்தியங்கள்" என்கிறார். "ஊழிப் பெருந்தீயை உற்பத்தி செய்வதற்கு சண்ட மாருதத்தை ஏற்க மனம் துடிக்கும் மலை மூங்கில்கள் நாம். மோக முதிர்ச்சியுற்ற கந்தகத் தீவுகள் நாம்!"

"வானத்தைக் கீறியே வைகறைகள் பிரித்தெடுப்போம். சூரியனைக் கண்களால் சுட்டுப் பொசுக்குவதும், ஆர்க்கும் கடல் அலையை அடக்குவதும் நமக்கு இயலும். நமது சிறகசைப்பில் ஞால நரம்பதிரும். இமயப் பறவைகள் நாம்; எரிமலையின் உள்

மனம் நாம்; அக்கினிக் காற்றில் இதழ் விரிக்கும் அரும்புகள் நாம்; திக்குகளின் புதல்வர்கள்; தேச வரம்பற்றவர்கள் நாம்; சரித்திரப் புரட்சி சமையலைச் செய்பவர் நாம்; வைகறையே இருள் அறுக்கும் வாள் என்றால் நடுப்பகல் நாம்; நாமெல்லாம் பாய்ந்து செல்லும் அஞ்சாத அமில நதியின் அலைகள். சீறுகின்ற திராவகமே, எடுத்துக்கொள்; தெளித்துக்கொள்; ஆதிக்க வெள்ளத்தின் அடியில் கிடந்தாலும் பாதிக்கப்படாத பாஸ்பரசே; கண் விழிப்பாய்!"

இந்தக் கவிதையில் இந்திய எல்லைக்குள் இருக்கும் நமது உள்ளங்களின் வெடிப்பை மட்டுமா கவிஞர் வெளியிடுகிறார்? வியத்நாமின் புரட்சிப் போரைக் குறிப்பிடுகிறார்; நீக்ரோ மக்களின் நெஞ்சக் கொதிப்பை வெளியிடுகிறார்; கவிஞரின் போர்ப் பிரகடனம் உலக அளவில் கொந்தளிக்கும் மானுடத்தின் போர்க் குரல். இப்படி ஒரு கவிதையை, தமிழ்க் கவிதை இதுவரை தனக்குள்ளிருந்து தோற்றுவித்துக் கொள்ளவில்லை. அந்த அளவுக்கு எரிமலையாய் வெடித்திருக்கிறது இந்தக் கவிதை.

# 15

# *அந்த நந்தனை எரிச்ச நெருப்பின் மிச்சம்*

## அந்த நந்தனை எரிச்ச நெருப்பின் மிச்சம் - (அ)

இது ஒரு கதைக் கவிதை. "அந்த நந்தனை எரிச்ச நெருப்பின் மிச்சம்" என்ற இந்தத் தொடர், இந்த நீண்ட கவிதையில் இரு முறை வருகிறது. முதல் முறை மாறனைப் பார்த்து ஐயர் இதைச் சொல்கிறார். "மாறா! நீ அடிமைப்பட்டவன். துள்ளாதே! கேள்வி கேட்காதே!" என்ற முறையில் ஐயர் இதைச் சொல்கிறார். கவிதையின் இறுதியில் இதே தொடரை மாறன் சொல்கிறான். சேரியைத் தீ வைத்துக் கொளுத்தினார் ஐயர். மாறன் வஞ்சினம் செய்கிறான்: "என் கையில் இப்போது இருக்கிறது அந்த நந்தனை எரிச்ச நெருப்பின் மிச்சம்" என்கிறான். இந்த உத்தி இந்தக் கவிதை மூலம் நமக்குள் உணர்வேற்றுகிறது. நந்தனை

எரித்தது பழங்கதை, புராணக் கதை. இனி நந்தனை எரிக்க முடியாது. தன்னை எரித்த தீயிலிருந்து நந்தன் இன்று தன்னை உயிர்ப்பித்துக் கொண்டான். தன் எதிரிகளையும் தீயிட்டுக் கொளுத்த அவனால் முடியும். நந்தன் அவனைப் பார்த்து எச்சரிக்கை செய்கிறான்.

தமிழன்பனின் நந்தன், நம் காலத்து நந்தன். பாரதி கவிதை படித்தவன். பெரிய பண்ணையாரிடம் "எல்லோரும் ஓர் குலம்" என்கிறான். பண்ணையார் ஒப்புக் கொள்வாரா? "சாதி ஒழியாது" என்கிறார். வினோபாவே பயணம் வந்தபோது, இந்தப் பண்ணையார் தானம் கொடுத்தாராம். வினோபாவே சென்ற பிறகு "பறையனுக்கு என்ன பட்டா?" என்று நிலத்தைப் பறித்துக் கொண்டவர் இந்தப் பண்ணையார். "அரிசனம் என்பது அரசியல் வழக்கம்; பறையன் என்பதே பண்ணையார் வழக்கு" என்று இந்தப் பண்ணையார் கூறுகிறார். மக்களாட்சியின் மகத்துவம் நம்பி மாறன் ஒரு நாள் ஊர்வலம் போனான். "கூலி உயர்வு தேவை" என்று இவன் முழக்கம் செய்தான். "நில்லடா" என்றார் பண்ணையார். "ஜனநாயகச் சுடர் முன் அனைவரும் சமம்" என்றான். "எங்கள் நந்தனை அந்தச் சிவனே ஏற்றுக் கொள்ளவில்லையா?" என்றான். பண்ணையார் பதில் சொன்னார், "அக்கினிக் குண்டத்தில் அவனை எரித்த சாதியடா நான். எந்தச் சிவன் அவனை எரியாமல் காத்தான்?" என்கிறார் பண்ணையார். சேரி எரிந்ததும் இரண்டாவது நந்தன் எழுந்தான் என்கிறார் கவிஞர்.

*அந்த நந்தனை எரிச்ச ...*

**திசைகளில் கோளாறு -**
**தேசப் படங்களைத் திருத்தி என்ன பயன்? - (ஆ)**

கல்யாணச் சந்தையில் விலை போகக் காத்திருக்கும் ஒரு பெண்ணை நோக்கிக் கவிதை சொல்கிறார் தமிழன்பன். திருமணம்தான் ஒரு பெண்ணுக்குக் கதி என்றும், பெண்ணாகப் பிறப்பதே ஒரு பாக்கியம் என்றும் நம்மவர் நம்புகின்றனர்.

பெண்ணின் அழகுகளை முற்போக்குக் கவிஞர்கள்கூட வருணிக்கின்றனர். வரதட்சணைக் கொடுமை என்று இவர்கள் குற்றம் சாட்டுகின்றனர். இவர்களின் போலிப் புலம்பல்களையும் பொய்மையையும் கவிஞர் பாடுகிறார். “திசைகளில் கோளாறு, தேசப் படங்களைத் திருத்தி என்ன பயன்?” என்று கேட்டுக் கவிதையை முடிக்கிறார். பிரச்சனையின் மையம் எங்கே இருக்கிறது என்பதைச் சரியாகக் கணித்துச் சொல்கிறார். போலி சமதர்மம், வரதட்சணையைக் கொடுமை என்று சாடுவதோடு நிறுத்திக்கொள்ளும் உண்மையான சமதர்மப் பார்வை, வரதட்சணையை வைத்துப் பார்க்கும் தளம் என்னவென்று தெரிந்து சொல்லும். “பெண்ணே! என்று முன்னிலைப்படுத்திக் கவிஞர் பேசுகிறார். உன் மணப் பந்தல் கனவுகளுக்குப் பாராட்டுப் பத்திரம் தருவதற்கு நான் விரும்பவில்லை. படுக்கையறைக் கனவுகளுக்குள் உன்னைப் புதைக்க நான் விரும்பவில்லை” என்று கவிஞர் பேசுகிறார். “உன் சகோதரியின் திருமணம் அவளுக்குச் சிறையானது, உனக்குத் தெரியவில்லையா?” என்கிறார். வாழ்க்கைப் பொற்றாமரைக் குளத்தில் அவள் முத்துகளையா எடுத்தாள்? தன் பிணைத்தையல்லவா எடுத்தாள்” என்று அதிர்ச்சி தருகிறார் கவிஞர். “உனக்குத் திருமணம் ஆகவில்லை என்று தேம்பும் முற்போக்குக் கவிஞர்கள்கூட, உன் அழகை இரசித்தல்லவா இப்படி இயங்குகிறார்கள்” என்கிறார். “பலரின் மழை நாள் கனவுகள் திருமணப் பந்தலிலேயே சிதைந்து போகவில்லையா?” என்கிறார் “உன் புன்னகையைப் பறிமுதல் செய்தது வரதட்சணையல்ல, இங்கு வாழும் சுரண்டல் அமைப்புகள்” என்று சுட்டுகிறார் கவிஞர். பொருள் உற்பத்தி உறவில், நுகர்வில், சமூக மன்றத்தில் சமபங்கு இழந்ததனால்தான் சமையல் அறையில் இந்தச் சாசனத்திற்கு அலைகிறாய். தாரம் - தாய என்ற மரியாதைகளை உனக்கு வழங்குவதாகச் சொல்லும் இந்தச் சுரண்டல் சமூகம், உன் உரிமையையல்லவா பறித்துக் கொள்கிறது என்று சொல்லுகிறார். சொத்துரிமை என்ற காட்டேரி உன் கதவோரத்தில் நிற்கிறது. சன்னலில் உள்ள கொக்கியை நீக்கி விடு என்கிறாய் நீ! காட்டேரியிடமிருந்து உன்னால் எப்படித் தப்ப முடியும், என்கிறார். மணமேடையில் காத்திருக்கும் அந்த ஆளை மட்டும் நொந்து என்ன பயன்?

நரமாமிசம் தின்னும் இந்தச் சமூகம் அவன்மீதும் தன் அடையாளத்தைப் பதித்திருக்கிறது என்கிறார் கவிஞர். அப்படியானால் வரதட்சணையை ஒழிக்க வேண்டாமா என்று யாரேனும் முணுமுணுத்தால் கவிஞர் சொல்கிறார், "பெண்ணே! உன்னைப் பிணித்த சங்கிலிகளில் ஒன்றிரண்டை இது நீக்கலாம்; ஆனால், உனக்கு இது விடுதலை அல்ல" என்று சொல்லும் கவிஞர், "திசையில் கோளாறு - தேசப் படத்தினைத் திருத்தி என்ன பயன்?" என்று கூறிக் கவிதையை முடிக்கிறார்.

## *அந்த நந்தனை எரிச்ச...*

### உதயமாகும் புதிய மரபு - (இ)

பெண்ணுரிமை பற்றி, நம் காலத்தில் நிறையப் பேசுகிறோம். ஆண்கள், பெண்களுக்குத் தர வேண்டிய உரிமைகள் பற்றிப் பேசுகிறோம். இப்படி ஆண்களை நம்பி அழுது புலம்பித் தங்களுக்கான உரிமைகளை, தங்களுக்கான உலகத்தைப் பெண்கள் பெற முடியுமா எனக் கவிஞர் சிந்திக்கிறார். புதிய மரபுகள் உதயமாக வேண்டும் என்கிறார்.

"கையில் மரப்பாச்சி வைத்து விளையாடியது போதும்" என்கிறார். "கத்திகளோடு விளையாடிப் பழகுங்கள். கண்களில் தீட்ட மை தீட்ட வேண்டாம். விடுதலைப் பிரகடனம் எழுத மை தேடுங்கள். கூந்தலிலிருந்து இனிமேல் எடுத்தெறிவது சிக்கல்களாக மட்டும் இருக்க வேண்டாம்; அவை, புராணக் குப்பைகளாக இருக்கட்டும். பூக்கள் உங்கள் முடிகளை அலங்கரிப்பதைவிட ஆட்சி மகுடத்தால் அலங்கரியுங்கள்" என்கிறார். "அந்தக் கண்ணகி சமணச் சாமியாரின் புத்திரி. ஆகவே வெளியே திரிந்த கணவன் வீட்டுக்கு வந்ததும் காலில் கிடந்ததைக் கழற்றிக் கொடுத்தாள் என்ற பழங்கதையைச் சொல்லி, இப்போது அப்படி வந்தால். காலிலிருந்து பெண்கள் எதைக் கழற்ற வேண்டும் என்பதைக் கவிஞர் சொல்கிறார். குஷ்டரோகியைச் சுமந்து பரத்தை வீட்டுக்குக் கொண்டு சென்ற பத்தினிகளாக நீங்கள் இருக்க வேண்டாம். உலகக் கூரைமீது வாலண்டினாபோல நீங்கள் வலம் வர வேண்டும். இனி

வாழ்க்கைத் துணையாக நீங்கள் இருக்க வேண்டாம். வாழ்க்கை முதல்வியாக நீங்கள் மாற வேண்டும் என்கிறார்.

இடையிடையே நாம் கவனித்துக் கொண்டுதான் இருக்கிறோம். மண வாழ்க்கையைப் பெண்ணுக்கு உரிமைப் படுத்துகிறார். இவர் தமிழ்க் கவிஞர்களுக்குள் ஒருவராகத்தான் இருக்கிறார். பெரியார் தந்த பாடம் இவர் ஆன்மாவுக்குள் ஏன் நுழையவில்லை? மணவாழ்க்கை என்ற வரையரைக்குள் வைத்துத்தான் பெண்ணைப் பார்க்க வேண்டுமா? நவீன காலம் நமக்குள் ஏன் இன்னும் வரவில்லை?

## *அந்த நந்தனை எரிச்ச...*

## தலையைப் பறி கொடுத்தவர்களுக்குத் தரப்படும் மகுடங்கள் - (ஈ)

வெள்ளைத் தாமரைப் பூவில் வீற்றிருப்பவள் கலைமகள். இவள் கல்வி மற்றும் கலைகளுக்குத் தெய்வம். கல்விக் கூடங்கள் இன்று என்னவாக இருக்கின்றன? கலைமகளுக்கு இங்கு என்ன மரியாதை என்பதையெல்லாம் இந்தக் கவிதையில் கொட்டுசிறார் தமிழன்பன். இந்த நீண்ட கவிதையில் அங்கும் இங்குமாகச் சில வரிகளைப் பார்ப்போம்.

"கரியை, பூமி வைரமாக மாற்றுகிறது. நமது கல்விக் கூடங்கள் வைரங்களைக் கரிகளாக மாற்றுகின்றன" என்கிறார். "துச்சாதனர்கள் இந்தக் கல்விக்கூடங்களில் கலைமகளைத் துகிலுரிகின்றனர்" என்கிறார். இரவிவர்மா ஓவியத்தில் புன்னகையை நிரப்பும் கலைமகள், எங்கள் இதயங்களில் சோகங்களை நிரப்புகின்றாள் என்கிறார். தலையைப் பறி கொடுத்தவர்களுக்குத்தான், இந்தக் கல்வி நிலையங்கள் பட்டங்களை மகுடங்களாகச் சூட்டுகின்றன என்கிறார். காகிதப் பாடைகளில் தம் நினைவுப் பிணங்களை அடுக்குவதற்குப் பெயர்தான் தேர்வு என்கிறார். தேர்வுகள் முடிந்த பிறகு ஆசிரியர் இல்லம் தேடிப் பெற்றோர் நடத்தும் கல்விச் சுற்றுலாக்கள் குறித்துக் கவிஞர் விரித்துரைக்கிறார். ஆள் வைத்து நானூறு

ரூபாய் கொடுத்தால் அது புறநானூறு; அப்படி இல்லை. தானே கொடுத்தால் அது அகநானூறு. இன்னும் குறுந்தொகை, நெடுந்தொகைகள் எல்லாம் இந்தக் கவிதையில் ஏறியுள்ளன. கலைமகளைப் பார்த்துக் கேட்கிறார் கவிஞர், உன் ஆலய தீபங்கள் ஒரு நொடியைப் பிரகாசப்படுத்தினால்கூடப் போதும். ஆனால் யுகங்களையே அல்லவா கருக வைக்கின்றன?

இப்படி நமது கல்வி நிறுவனங்கள் குறித்த விமர்சனத்தைக் கலைமகள்மீது வைக்கிறார். கலைமகளே! நம்மவர்கள் இப்படித் தெய்வம் என்று சொல்லி ஏமாற்றுகிறார்கள். இப்படி ஏமாற்றப்படுவதைக் கலைமகளும்தான் ஏற்றுக்கொள்கிறாள். தெய்வமாக இருப்பதற்கு இந்தத் தண்டனைகளும் தேவைதான். கலைமகளை இவ்வாறு நம்மோடு உறவாடவிட்டுக் கவிதை செய்கிறார் கவிஞர்.

## *அந்த நந்தனை எரிச்ச...*

### புதிய சுருதியில் ஒரு பூபாளம் - (உ)

கவிஞர்கள் கனவு காணுகிறார்கள். ஆனால், ஒரு கவிஞன் சமதர்மவாதியாக இருந்துவிட்டால், அவன் காண்பது ஒரு பெருங்கனவு. அவன் கனவு காணும் உலகில் தேசப்பிரிவுகள் இல்லை; போர்கள் இல்லை; வண்ண வேறுபாடுகள்கூட இல்லை; இந்த உலகம் பிரபஞ்ச வெளியில் அற்புத அழகோடு, புழுதிகள்கூட இல்லாமல் அவனுக்குள் உலவுகிறது. உலகின் நடுப்பகுதியில் ஒரு போதி மரத்தை நடுகிறார் இந்தக் கவிஞர். இவரது கனவுகளிலிருந்து இங்குச் சில பகுதிகள், சில காட்சிகள் தரப்படுகின்றன. இன்று இல்லையென்றாலும் இந்தப் பெருங் கனவு என்றாவது ஒரு புதிய உலகைப் படைக்கும்.

பிரபஞ்சச் சுருதியில் பிசிறு விழுந்துவிட்டதாம். ஆகவே, “ஒரு புதிய சுருதியில் இந்தப் பிரபஞ்சத்தைப் படைப்போம்” என்கிறார் கவிஞர். “நட்சத்திரங்களை நகர்த்தும் பார்வையோடு பூமியின்மேல் படிந்த புழுதியைத் துடைப்பதில் நமது பணியைத் தொடங்குவோம்” என்கிறார் கவிஞர். கவிஞர்

எங்கிருந்து பேசுகிறார் என்று நமக்கு வியப்பு ஏற்படுகிறது. பூமியின் தரையில் நின்றா இவர் பேசுகிறார்? அப்படித் தெரியவில்லை. வானத்தில் இடம் கொண்டல்லவா இந்தக் கவிஞர் பேசுகிறார். "ஆதாம் ஏவாள் கடித்துத் துப்பிய ஆப்பிள் விதைகள் அல்ல நாம்" என்கிறார். பிரபஞ்சப் பரப்பில், உயிர்த்தெழுந்த உலகில் உயர் பிறப்புக்கள் நாம் என்ற உணர்வோடு பேசுகிறார். உண்மைதான். இந்தப் பிரபஞ்சத்திற்கு உணர்வு தந்தவன், உயிர்ப்புத் தந்தவன், அழகு தந்தவன் மனிதன் தான். ஐயமில்லை. ஆனால் இந்த மனிதன், இன்று அப்படியா இருக்கிறான் - என்ற கேள்வியோடு கவிதைக்குள் பயணம் செய்வோம்.

"ஓர் இதழ் உதிர்ந்தால் உயிர் வாழாத அழகிய மலர் இந்தப் பூமி" என்கிறார். அனைத்து நாடுகளும் இந்தப் பூவின் அழகிய இதழ்கள். "பொதுமை வண்டு இதில் மகரந்தச் சேர்க்கை புரியட்டும்" என்கிறார். இனி, சீனன் என்றும், அமெரிக்கன் என்றும், இந்தியன் என்றும் எவனும் இருக்க மாட்டான். இருப்பவன் மனிதன் மட்டுமே என்கிறார். இனங்களுக்கு இடையில் கலப்பும் பொதுமையும் நேருமென்றால், சீனத்தன் என்று எவனை இங்குத் தேட முடியும்? கங்கையும், வால்காவும், யாங்ட்சியாவும் நனைப்பது ஒரே மண்ணை மட்டுமல்ல; ஒரே மனத்தையுந்தான். உலகத்தின் நடுவில் புதிய போதி மரம் ஒன்றை நடுவோம் என்கிறார். அதன் ஞானத்தைக் காற்றுகள் உள் வாங்கட்டும் என்கிறார்; "ஒட்டுப் போடாத ஆகாயம்போல் இனி இந்த உலகமும் ஒன்றுதான்" என்கிறார். "வெள்ளை அமாவாசைகளிலிருந்து கறுப்பு நிலாக்களை விடுதலை செய்வோம்" என்கிறார். உயிரணு ஒவ்வொன்றுள்ளும் ஒரே நிறம் பூச, விஞ்ஞானத் தூரிகை எடுப்போம்" என்கிறார். இனி வேர்வை நதிகள் கண்ணீர்க் கடலில் விழுவதைத் தடுப்போம்; ஆனந்த வாருதியில் அவை சங்கமம் ஆகட்டும் என்கிறார். இனிப் பாடுபடுபவனின் காலில் இலாடம் அடிக்க முடியாது. அவன் தூக்கிய திருவடிகளில் ருத்ரதாண்டவம் கருக்கொண்டு விட்டது என்கிறார். தாயின் கருவறைச் சுவரிலேயே தனியுடைமை ஒழிக என்று எழுதிவிட்டுக் குழந்தைகள் வெளியே வரும் என்கிறார். மனிதனே இனி மதம்; இனி ஜனநாயகம் மக்களுக்கே மாலை

சூட்டட்டும்; கட்சிகள் வேண்டுமானால் கை தட்டட்டும் என்கிறார்.

இப்பொழுது நாம் தேசங்கள் என்றும் தேசியம் என்றும் பேசுகின்றோம். கறுப்பர்களின் உலகம் என்றும், பெண்களின் உலகம் என்றும் பேசுகின்றோம். அதாவது இந்த உலகைப் பெண்கள் வசப்படுத்திக் கொள்ளட்டும். கறுப்பர்கள், தலித் மக்கள் வசப்படுத்திக் கொள்ளட்டும்; அப்போதாவது சமத்துவம் தழைக்கும் என்றும் சொல்கிறோம். ருத்ரதாண்டவம் மூலம்தான் நம்மிடமிருந்து பிறர் அபகரித்துக்கொண்ட உலகை விடுவிக்க முடியும் எனச் சொல்லுகிறோம். கறுப்பர்களும் பெண்களும் பறித்துக்கொண்ட உலகில், வெள்ளையர்களுக்கும் ஆணாதிக்கவாதிகளுக்கும் என்ன விதி வைக்கப் போகிறோம்? இவர்களையெல்லாம் எப்போது மனிதர்களாக மாற்றப் போகிறோம்? ஆதிக்கத்திற்கு எதிரான போரில் நமக்கு ஏற்பட்ட கறைகளும் காயங்களும் எப்போது ஆறும்? என்று இந்த உலகம் ஒரு பூவாக மாறும்? பிரபஞ்சத்திற்கு எப்போது ஒரு புதிய அழகு சேரும்? என்றெல்லாம் கவிஞர் நம்மைச் சிந்திக்க, கனவு காணத் தூண்டுகிறார். இவ்வாறு செய்வதன்மூலம் வண்ணங்களை நாம் இழந்துவிடுவோமா? எல்லோருக்கும் ஆனதொரு ஒற்றை முகம் ஏற்பட்டுவிடுமா? விஞ்ஞானம் இப்படி வழியடைத்துவிடுமா என்றும்கூட நாம் சிந்திக்கிறோம்.

## *அந்த நந்தனை எரிச்ச...*

**நீதிமன்றத்தில் வழக்குகளல்ல,**
**வாழ்க்கையே விசாரிக்கப்படும் - (ஊ)**

கவிஞர் எப்போதும் கனவே கண்டு கொண்டிருப்பவர் என்று நாம் நினைக்க வேண்டியதில்லை. அவர் கனவு காண்பனவற்றைக் கனவுகள்தானே என்று நாம் கருதிவிடவும் முடியாது. அந்தக் கனவு வழியே கவிஞரின் சிந்தனைத் திறன் நம்மைத் தொடுகிறது. கவிஞனுக்குள் ஓர் அரசியல் அறிஞன் இருப்பதை நாம் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். நீதி

மன்றங்களில் வழக்குகளல்ல, வாழ்க்கையே விசாரிக்கப்படும்; தீர்ப்புகள் அல்ல, நியாயங்களே வழங்கப்படும் என்று தொடங்குகிறது இந்தக் கவிதை.

பழங்காலத்துச் சிபி, தன் தசை அரிந்து கொடுத்துப் புறாவுக்கு நீதி வழங்கினான். இன்றைய சிபி, புறாக்களின் கால்களில் கத்தியைக் கட்டி விடுவான். வேடனின் வில் பறிமுதல் செய்யப்படும். அவனது முந்தைய குற்றங்களுக்காக அவன் தசை அரியப்படும் என்கிறார் கவிஞர். சிபி, புறாவின் கதையை இப்படிப் புரட்டிப் போடுகிறார் கவிஞர். சம நீதி என்பது நம் காலத்தில் ஒரு சாசனம் என்றாகிறது.

மாணவர்கள் புத்தகங்களை மேயும் ஆடுகள் அல்ல என்கிறார். அவர்கள் ஒளியின் புதல்வர்கள். கல்விக்கூடங்கள் அவர்களை இரண்டாவது முறை கர்ப்பம் தரிக்கின்றன என்கிறார். இப்படிச் சமத்துவ நீதி காண்கிறார் கவிஞர்.

## *அந்த நந்தனை எரிச்ச...*

### **பகலின் உச்சரிப்பு நீ - (எ)**

தமிழன்பன் நீண்ட, மிக நீண்ட அரசியல் கவிதைகளை எழுதுகிறார். நம் நெஞ்சில் ஆணி அறைவதைப்போல உண்மைகளை எடுத்துரைக்கிறார். இந்தக் கவிதையிலிருந்து அங்கங்கே சில அற்புதமான தெறிப்புகள் நமக்குள் வந்து விழுகின்றன. சிலவற்றை இங்குத் தொகுத்துக் கொள்வோம்.

நீ தொட்டது பொன்னாக வேண்டாம்; இரும்பாகட்டும். ஏனெனில், ஆபரணங்களைவிட ஆயுதங்களே நமக்குத் தேவை என்கிறார். பகலின் ஒற்றை உச்சரிப்பு நீ! கோடி நட்சத்திரங்களின் முணுமுணுப்பைவிட அர்த்த அடர்த்தி மிக்கவன் நீ என்கிறார். தேதிகளை நீ தினமும் கிழிக்கிறாய்; கோழைகளைத் தினமும் தேதி கிழிக்கிறது; தேசப் படத்தில் நதிகளும் மலைகளும்

தினமும் தெரிந்தன. இனி, தரிசனமாவது உன் முகமாகட்டும் என்கிறார். நீ ஆயுதம் தாங்க வேண்டாம். தாயகத்தின் கையில் நீயே ஆயுதமாக இரு; எந்தப் பகைவனிடமிருந்தும் இந்தியாவைக் காப்பாற்று; அதோடு இந்தியனிடமிருந்தும் இந்தியாவைக் காப்பாற்று.

இப்படி, இரத்தின வரிகள் இந்தக் கவிதையில் எத்தனையோ இடம் பெற்றுள்ளன. இவை கவிதைக்குள் பாய்ச்சல் வரிகள். ஓடி வருபவன் உயரத் தாண்டுகிறான். அதுபோல் ஓடி வரும் வார்த்தைகள் இங்குப் பாய்ச்சலாகின்றன. இந்தப் பாய்ச்சலில் கவிதை பீறிடுகின்றது.

*அந்த நந்தனை எரிச்ச...*

**ஒரு வார்த்தை; ஏழு ரோஜாக்கள்! - (ஏ)**

கவிஞனுக்கு மலர்கள் பிடிக்கும். அதைப் போலவே குழந்தைகளும் கவிஞனுக்குப் பிடிக்கும். குழந்தைகளைக் கொண்டாடாத கவிஞர்கள் இல்லை. குழந்தைகளைக் கொஞ்சும் போது நமக்குக் கவிதைகள் பிறக்கின்றன. குழந்தைகள் எழுத்துகள் படிக்கின்றனர். எழுத்துகள் எழுதியும் உச்சரித்தும் படிக்கின்றனர். குழந்தைகளை நெஞ்சில் நிறுத்தும்போது, எத்தனை வகை வகையான கற்பனைகள், இந்தக் கவிஞனுக்குள் பிறக்கின்றன? குழந்தையும் கவிதையும் ஓரினம். குழந்தைகளிடமிருந்து கவிதை கற்க முடியும். குழந்தைகள் நம் நெஞ்சில் ஊறும் கவிதைகள்.

கவிஞர் எழுதுகிறார். குழந்தைகளே! நீங்கள் வாசிக்கும்போது எழுத்துகள், தம் வடிவக் கோணலை மறந்து மகிழ்ச்சி பூக்கின்றன என்கிறார். எழுத்துகள், தாம் ஏன் இப்படி வளைந்தன என்று கேட்டு, பதில் சொல்கிறார் கவிஞர். எழுதும் உங்களுக்கு எளிதாக இருக்க வளைந்து கொடுத்தல்லவா இந்த வடிவம் பெற்றன என்கிறார். நீங்கள் சிலேட்டில் ஒரு வரி

எழுதினால், அதை ஆகாயம் ஆயிரம் முறை மின்னல்களாக அடித்து அடித்து எழுதிப் பார்க்கிறது என்கிறார். "அழகிய உங்கள் ஆரஞ்சு இதழ்கள் உச்சரிக்கக் குவியும்போது, மொழியின் கன்னம் முத்தத்தால் சிவந்து விடுகிறது" என்கிறார். "உங்கள் உதட்டில் ஒரு வார்த்தை மலர்ந்தால், அதை இயற்கை ஏழு ரோஜாக்களாக உச்சரிக்கும்" என்கிறார்.

இப்படியே செல்லுகின்றன கவிஞரின் வருணனைகள். "குழந்தையின் பார்வையில் படும் எழுத்து நதிகளே புண்ணிய நதிகள்" என்கிறார். குழந்தைகள் சீவும் பென்சிலின் கூர்மையில், மடமைக்குத் தயாராகும் கழுக் கம்பங்களைக் காண்கிறார். "செதுக்கிய பென்சிலின் செதில்கள் ஞான வயல்களுக்குப் போடும் உரங்கள்" என்கிறார். உங்கள் பேனாவிலிருந்து உதிரும் மைத்துளிகளை ஒற்றியெடுத்து, கலைமகள் தன் கண் இமைகளுக்கு மை தீட்டிக் கொள்கிறாள். இது விதி என்று தலையில் எழுதும் - இறைவன் எழுதிய எழுத்துகளை அழிக்க, நீங்கள் ரப்பரை எடுக்கும்போது, அவன் எழுதுகோலைக் கீழே போட்டு விடுகிறான்" என்கிறார். இப்படியே இன்னும் செல்லுகின்றன கவிஞரின் வண்ணக் காட்சிகள்.

## *அந்த நந்தனை எரிச்ச...*

### சக்கரங்களுக்குப் பதிலாகச் சிறகுகள் - (ஐ)

நமது சமூகத்தில் மாசுக் கட்டுப்பாடு தேவை என்று இன்று நிறையவே பேசுகிறோம். நவீன அறிவியலும் தொழில் நுட்பமும் வளர்ந்த சூழலில், பல்வகை மாசுகள் நம்மைக் கடுமையாகவும், கூர்மையாகவும் பாதிக்கின்றன. இவற்றில் ஓசையும் உண்டு. காதைக் கிழிக்கிற ஓசைக்கு மத்தியில் நாம் வாழ்கிறோம். இதனால் நம் வாழ்க்கை கிழிபடுகிறது. நவீனகாலத்துக்கு வந்து விட்ட கவிஞர் தமிழன்பன், ஓசைகள் பற்றிக் கவிதை சொல்கிறார்.

"ஓசைச் சக்கரங்களின் அசுர உருளலில் அரைபட்டு என் ஆன்மா அலறுகிறது" என்று தொடங்குகிறார் கவிஞர். செடி

கொடிகளில் கருச் சிதைவுகள். ஓசைகளை விலக்கிக் கொண்டு, கதிர்கள் என் சாளரத்தை எட்டுவதற்கு முன்னால், அதன் உடம்பெல்லாம் முறிவுகள். ஒன்றையொன்று தின்று கொழுத்த இரைச்சல்கள் வாய்பிளந்து திரிகின்றன. என் அந்தரங்க யாழின் மீதும், அவற்றின் கூரிய நகங்கள் என்கிறார். பூமிக் கோளத்தையே ஒரு பலூனாக ஊதி : டைத்துவிட எத்தனிக்கும் இரைச்சல்கள் என்கிறார். ஒட்டுமொத்தமாய் ஊமைப்படுத்த வேண்டும். இன்றேல் தெரிவு செய்து அவற்றில் சிலவற்றை மாத்திரம் குறைத்து, மௌனத்தின் மார்பில் மாலையாக்க வேண்டும் என்கிறார். சிலவற்றைப் புல்லாங்குழலிடம் போதனை பெற அனுப்ப வேண்டும். சப்தங்களுக்குச் சக்கரங்கள் வேண்டாம். இனிப் பூஞ்சிறகுகளைப் பொருத்துவோம் என்று கவிதையை முடிக்கிறார்.

ஓசைகள் நம்மை, நம் உலகத்தை உடைக்கின்றன என்பது உண்மைதான்; புல்லாங்குழலும் குழந்தையின் மழலையும் நம் ஆன்மாவை வளர்க்கின்றன என்பதும் உண்மைதான்; ஓசையில் வெடிக்கும் தொழில் நாகரிகத்திற்குள் நுழைந்துவிட்டோம். இந்த உலகம் முதலாளிகளின் கைகளில் நசுங்கிச் சாவதற்கு முன், நல்ல இசைகளை நம் நெஞ்சில் நிரப்பிக்கொள்வோம். சாவதற்கு இதைவிட நல்ல வழி இல்லை.

16

## நாமிருக்கும் நாடு

### ருத்ர தாண்டவம் - (அ)

அணு ஆயுத வெடிப்புக் குறித்து, தமிழில் ஒரு மிகச் சிறந்த கவிதையை எழுதியவர் பிரமின் “நாய்க்குடை” என்ற தலைப்பில் சிற்பியும் ஒரு கவிதை எழுதியுள்ளார். வாழ்க்கை வசீகரமாக இருக்க வேண்டும் என்பதில் பேரார்வம்

உடையவர்கள் கவிஞர்கள். வாழ்க்கையை முற்றாக அழிக்கும் அணு வெடிப்பைத் தமிழன்பனாலும் ஏற்க முடியவில்லை. அழிப்புக் கடவுள் என, சிவனை நம் புராணங்கள் சொல்கின்றன. அணு வெடிப்பில் சிவனும் அழியத்தான் வேண்டும் என்று நாம் ஆசைப்படலாம். கவிஞர் என்ன கருதுகிறார் பார்ப்போம்.

உறங்கிய அணுவினுள் மனித வெறி இறங்கியது; நிமிர்ந்து தெறித்தது அணு என்று சரியாகவே சொல்கிறார் கவிஞர். சிவன் சடாமகுடம் எரிந்தது. நெற்றிக் கண்ணைப் பொசுக்கியது கங்கை. நெற்றிக்கண் அப்படி எரிந்தபொழுது குற்றங்களின் நெஞ்சம் குளிர்ந்தது என்கிறார். ஏனெனில், குற்றங்களுக்கு இனித் தண்டனை இல்லை. சிவனது கண்டத்தினுள் புரோட்டீனியம் தகித்தது; சாம்பலானது ஆலகாலம். சாய்வு நாற்காலியில் விழுந்தான் சிவன். அசுர கணங்கள் கைகொட்டிச் சிரித்தன. பார்வதியின் மாங்கலிய மஞ்சள் கரிந்தது. கோடி கோடிக் கதிர்க் கைகள், காற்றின் கைகளை நெறித்தன என்கிறார். கழிவுகளை உண்ட கடலின் வயிற்றில் புற்று நோய் ஏற்பட்டது. மானுடத்தை வளர்க்க, காலம் கைவசம் வைத்திருந்த நாட்களைச் சூனியத்தில் கரைத்தது என்கிறார் கவிஞர். மானுடத்திற்கு எதிரான அறிவியலின் வளர்ச்சியினை அடையாளம் கண்டு, எதிர்க்க வேண்டியதன் அவசியத்தை இந்தக் கவிதை குறிப்பிட்டு, மையத்தில் வெளிப்படுத்துகிறது.

## *நாமிருக்கும் நாடு*

### ஒரு நல்ல தொடக்கம் தொடருமா? - (ஆ)

ஆயுதக் குறைப்புப் பற்றி வல்லரசுகள் பேசுகின்றன. ஒழிப்பது பற்றிப் பேசுவதில்லை. ஆயுதங்கள் இருக்கும்வரை உலகம் அவற்றின் அழிவுக்கு உட்படத்தான் செய்யும். கவிஞர்கள் இதைக் கண்டு கொள்கின்றனர். என்ன இருந்தாலும் அரசியல்வாதிகளுக்குள் அதிகாரம் எஞ்சி இருக்கத்தான் செய்யும். அவர்கள் கவிஞர்கள் ஆக மாட்டார்கள்.

ஆயுதக் குறைப்பு என்று அரசியல்வாதிகள் பேசுகின்றார்கள். ஆகவே, இனி, குருதி கொட்டாமல் சூரியப் பிரசவம் நடக்குமோ? நச்சு நதிகளில் நனையாத காற்று இனிக் கிடைக்குமோ? விண்வெளி, மண்ணின் ஒவ்வோர் அணுவுக்கும் அமைதியைப் பிரகடனம் செய்யுமோ? எது எப்படி நடக்கும் என்று கேட்கிறார் கவிஞர். வேங்கைகள் நகம் வெட்டிக் கொள்வதாகச் செய்யும் விளம்பரம்தான் இந்த ஆயுதக் குறைப்பு. கத்தியின் நீளம் குறைக்கப்படுகிறது. ஆனால் கசாப்புக் கடைகள் இல்லாமல் மறையுமோ? துப்பாக்கிகளின் மௌன விரதத்தை நம்பி வாழ்க்கை விளையாடி மகிழ முடியுமோ என்கிறார். ஏவுகணைகள் செய்யும் செலவைக் குறைத்து, வல்லரசுகள் எல்லாருக்கும் ரொட்டி சுட்டுத் தருமோ? ஆயுதப் பட்டறைகள் சமாதானத் தேவதைக்கு அணிகலன்கள் தயாரிக்குமோ? போர் நம்மை ஒழிக்கும் முன், போரை நாம் ஒழிக்க முடியுமோ? கடைசி வெடிகுண்டின் திரியை எடுத்து, சமாதானத்தின் முதல் விளக்கை ஏற்றுவோமா? என்று கவிதையை முடிக்கிறார்.

கவிஞருக்குள் சந்தேகமும் சஞ்சலங்களும் தொடர்கின்றன. நமக்கு வாழ்வை, விதியை வகுத்தவர்கள் இந்த வல்லரசுகள். போர் இல்லாமல், ஆயுதத் தயாரிப்பு இல்லாமல், போர்களுக்குப் பிறரைத் தூண்டாமல், ஆயுதங்கள் விற்காமல் இவர்களுக்கு வாழ்வு இல்லை. அதே சமயம், ஆயுதக் குறைப்பு என்னும் முகமூடி அணிந்து கொள்கிறார்கள் இவர்கள். இனியும் முடியாது என்ற நிலையில்தான் நட்சத்திரப் போர்த் தயாரிப்பை நிறுத்தினார்கள். முப்பது முறை அழிக்கவல்ல அணு ஆயுதங்கள் இருக்கின்றன என்ற கணக்குத் தெரிந்தபிறகு, அணு ஆயுதக் குறைப்புப் பற்றிப் பேசினார்கள். மலர்களுக்கும், பறவைகளுக்கும், குழந்தைகளுக்கும், கவிஞர்களுக்கும்தான் இவ்வுலகம் சொந்தம். அரக்கர் நமக்கு அந்நியர். அவர்களை நாம் நம்ப முடியாது.

## *கிழக்குச் சாளரம்*

**பிணங்களிலிருந்து பிறந்தவர்கள் - (இ)**

அணுக்கதிரால் உலகம் அழிந்து கொண்டிருக்கிறது. மனிதர்கள் செத்துப் பிணமாய் விழுகிறார்கள். இந்தப் பிணங்கள் உயிர்த்தெழுந்து கேட்கின்றன, "எங்களை இப்படிக் கொன்ற விஞ்ஞானம் எங்கே?" - இப்படிக் கவிதை செல்கிறது. பிணங்களிலிருந்து பிறந்தவர்கள் சொல்கிறார்கள், "அகால மரணம் அனுப்பிய வினாக்கள் நாங்கள்! அரக்க அரசியலுக்கு அணு ஆயுதத்தைப் படைத்துத் தந்த அந்த விஞ்ஞானம் எங்கே? குரோதத்தனமான அந்த விஞ்ஞானத்தின் இரத்தம் பருகுவோம். திரும்பவும் இறப்போம்" என்கின்றனர்.

மேலும் அந்தப் பிணங்கள் கேட்கின்றன, "கல் அறுவடைக்குக் காலத்தை நிறுத்திய உலகில், எல்லாவற்றையும் அழித்துவிட்டு, மீண்டும் தற்காலத்திற்குத் தள்ளும் அந்த விஞ்ஞானத்தின் கபாலத்தை நொறுக்க வேண்டும். எங்கள் கைகளிலும் கற்கள். எங்கே அந்த விஞ்ஞானம்? அணுக் கதிர்களால் கருவினுள் சிதைந்து பிறந்து மூர்க்கமாகிவிட்ட பிணங்களின் குமுறல்!" - இவ்வாறு கவிதை முடிகிறது.

அணு விஞ்ஞானம் கோடிக்கணக்கான மனித உயிர்களைக் கொல்கிறது என்பது உண்மைதான்; இப்படி உருவம் அழிந்து அகால மரணம் அடைந்தவர்களின் குரல் நமக்குள் கேட்கிறது என்பதும் உண்மைதான்; இந்த விஞ்ஞாத்தைப் பலி கொள்ள வேண்டும் என்ற ஆத்திரமும் உண்மைதான்; இவ்வளவுதான் உண்மையா? அணு விஞ்ஞானத்தை யார் படைத்தார்கள்? அணு குண்டுகளை யார் தயாரித்தார்கள்? என்றெல்லாம் நமக்குள் தொடர்ந்து கேட்கிறோம். உலக அழிவுக்கு இந்த ஏகாதிபத்தியங்கள்தான் காரணம். இவற்றின் கைகளில்தான், இந்த விஞ்ஞானிகளும் அணு ஆயுதங்களும். கோடிக்கணக்கான மக்களை அகால மரணத்திற்குள் ஆயிரம் வகைகளில் தள்ளுபவர்கள் இந்த ஆதிக்கவாதிகள். அணுக்கதிர்கள் மூலம் மட்டுமா நம் வாழ்க்கை சிதைகிறது? இரசாயன உரங்கள் தொடங்கி, எத்தனை ஆயிரம் வகைகளில்

நம் வாழ்க்கையை இவர்கள் சிதைக்கிறார்கள்! கவிதை இன்னும் விரிந்து செல்வதற்கு இடம் இருக்கிறது. தமிழன்பன் செல்வார்.

17

# நாமிருக்கும் நாடு

## தாழ்ப்பாள் புலவர்கள் தள்ளிப் போகட்டும் - (அ)

தமிழ்க் கவிதை, நம் காலத்தில் தன்னைப் புதுப்பித்துக் கொண்டபொழுது பண்டிதர்கள் பாராட்டவில்லை; காய்ந்தார்கள்; கரித்துக் கொட்டினார்கள்; இந்தக் கவிதைகளில் இலக்கணம் இல்லை என்றார்கள். இன்னும் எவ்வளவோ குற்றச் சாட்டுகளை அடுக்கினார்கள். புதுக் கவிதை என்னும் கவிதை முறைக்கு வந்து சேர்ந்தார்கள்; பதில் சொன்னார்கள். காலம் மாறிவிட்டது. இது ஜனநாயக யுகம் என்றார்கள். தமிழன்பனும் பதில் சொல்கிறார். இளம் கவிஞர்களை ஊக்குவிக்கிறார். எப்படி என்று பார்ப்போம்?

"காலம் தீர்ப்புச் சொல்லட்டும், கவிஞனே நீ கவி எழுது" என்று தொடங்குகிறார் கவிஞர். புதிய மயில்கள் ஆடக் கூடாது என்று அரங்கை இடிப்பது அடாவடித்தனம்; மடி கனத்து நிற்கும் அரும்புகளைப் பார்த்து, இவை முட்கள் என்று அலறுவதும், இரவுத் திருவிழாவுக்கு ஏற்றி வைத்த நட்சத்திர விளக்குகளைக் கண்ணிவெடிகள் என இவர்கள் கதறுவதும், மன ஆரோக்கியம் கெட்டதன் அடையாளம் என்கிறார் கவிஞர்.

"குழந்தைகளுக்கு வாயடங்க உத்தரவு போடுவதுதான் சரி என்றால், தொல்காப்பியனுக்கும் தொட்டிலே தூக்குக் கயிறாக இருந்திருக்கும்" என்கிறார். "எவனும் எழுதக் கூடாது என்று சட்டம் போடுவது சர்வாதிகாரம். எவனும் எழுதுவான். எவனும்தான் எழுதுவான். இது ஜனநாயக யுகம்" என்று இளம் கவிஞர்களின் சார்பில் உரிமைப் பிரகடனம் வெளியிடுகிறார் கவிஞர். "புதுக் கவிதை என்பது, திறந்த வெளிக் கவிதை,

தாழ்ப்பாள் புலவர்கள் தள்ளிப் போகட்டும்; சரித்திரம் செய்த சாதனை இது" என்கிறார். "யாப்பு மதிலைக் கவிதை தாண்டி வந்ததே ஜனநாயகத் திடலில் மக்களைச் சந்திப்பதற்காகத் தான்" என்கிறார். "இது கண்ணாடிச் சில்தான். இதில் ஜனநாயகம் முகம் பார்த்துக்கொள்ள முடியும். தன் விகாரப்பட்ட பார்வையைக்கூட, அது வேறு எதன் மூலம் பார்த்துக் கொள்ளும்?" என்று கேட்கிறார். இந்தப் புதுக் கவிதை ஜனநாயகத்திற்குப் பிறந்த கவிதை. ஜனநாயகத்தின் சீரழிவையும் தனக்குள் காட்டும் கவிதை. நமக்கும் தேவையான கவிதை.

## *நாமிருக்கும் நாடு*

## இலட்சியங்கள் இறப்பதில்லை - (ஆ)

தமிழன்பனின் கவிதை ஆக்கத்தில் முக்கியமான ஓர் உத்தி, முரண்கள். முரண்பாடுகளைக் கையாளுவதில் தமிழன்பன் எப்பொழுதும் திளைக்கிறார். செயற்கையாக உற்பத்தி செய்யப் படுபவை அல்ல, இந்த முரண்கள். இன்றைய வாழ்வின் அடித்தளத்திலிருந்தே எழுபவை இந்த முரண்கள். உண்மையானவை இந்த முரண்கள் என்பதால், இவை கூர்மையாகக் குத்தி நம்மைக் கிளறுகின்றன. ஒரு கவிதையை இங்குக் காண்போம்.

இறந்து போனது அந்த இதயம். எனினும் அது இன்னும் துடித்துக் கொண்டிருக்கிறதாம். "இன்னும் ஏன் துடிக்கிறாய்?" என்று கேட்கிறார் கவிஞர். இதயம் சொல்கிறது, "வாழ்கிறவர்கள் சிலர் வந்து என்னுள் துடிக்கிறார்கள். ஆகவே நான் துடிக்கிறேன்." கவிஞருக்கு ஐயம். வாழ்கிறவர்கள் இறந்துபோன இதயத்திற்குள் வந்து, எப்படித் துடிக்க முடியும்? என்று கேட்கிறார். "வீணுக்குச் செத்தவர், வாழ்பவர் இதயத்திற்குள் வர இயலும் என்றால், வாழ்பவர் இறந்த இதயத்திற்குள் ஏன் வர முடியாது?" என்று அந்த இதயம் கேட்கிறது. கேட்கக் கூடாத கேள்விதான். எனினும் கவிஞர் கேட்கிறார். "உன் துடிப்பு ஓய்வது எப்போது?" அதற்கு, "என்னை மரணம் எய்தும்போது" என்று சொல்கிறது இதயம். "அப்படியானால் நீ இன்னும்

சாகவில்லையா?" என்று கவிஞர் கேட்க, இதயம் சொன்னது, "செத்தவனே! நீதான் மனிதன் என்று என்னிடம் இப்போது பேசிக்கொண்டிருக்கிறாய்; என் இலட்சியம் ஈடேறாது போனலும் நான் இறப்பதில்லை......" என்று சொன்னது இதயம். கவிஞர் மௌனமாகிறார். இனிப் பேசுவதற்கு என்ன இருக்கிறது?

கவிஞருக்கு மட்டுமல்ல; நமக்கும் ஓர் ஐயம் எழுகிறது. நாம் இப்போது உயிரோடு இருக்கிறோமா? அல்லது செத்து விட்டோமா? இலட்சியங்களில் வாழ்பவனுக்குச் சாவு இல்லை என்றால், நமக்குள் என்ன இலட்சியம் இருக்கிறது? எந்த இலட்சியம் நம்மைச் சாகாது வைத்திருக்கும்? இலட்சியங்களுக்குச் சாவு இல்லை என்றால், மனிதனுக்கும் சாவு இல்லை என்பது உண்மைதான். ஏசுவின் இதயமும், புத்தரின் இதயமும் நமக்குள் இன்னும் துடித்துக்கொண்டுதான் இருக்கின்றன.

## *நாமிருக்கும் நாடு*

### பாரத தரிசனம் - (இ)

தமிழன்பனின் கவிதைகளில் சமூக உணர்வுகளுக்குப் பஞ்சமில்லை. தமிழன்பனின் கவிதைகளிலிருந்து தற்கால இந்திய அரசியல் பற்றி, அவரது திறனாய்வுகளைத் தொகுத்தால் அதுவே ஒரு தனிப்பெரும் நூலாகிவிடும். அந்த நூலுக்குப் "பாரத தரிசனம்" என்று பொருத்தமாகப் பெயரிடலாம். இப்பொழுது, பாரத தரிசனம் என்று அவர் எழுதியுள்ள ஒரு கவிதையைப் பார்க்கலாம்.

"ஏழையின் சிரிப்பில் இறைவன் இருக்கிறான்" என்ற வாசகத்திற்கு, "இறைவன் இல்லை என்பதுதான்" என்று தொடங்குகிறார். "ஏழைகளின் வீடுகளிலிருந்து வெளிப்படும் புகை, அவர்களின் மனத்திலிருந்துதான் வெளிப்படுகிறது. அவர்களின் கண்களில் உதிர்வன உப்புத் துகள்கள் அல்ல;

இந்தியாவின் நம்பிக்கை நட்சத்திரங்கள். பாம்புக் கூண்டில் வாழ்வதுகூடப் பத்திரம்தான். சுரண்டும் சமூகத்தில் இவர்கள் வாழ்வதுதான் அதிசயம்" என்கிறார். "கண்ணபிரானுக்குத் தர குசேலனிடம் அவல் இருந்தது; இன்று ஏழை இந்தியனிடம் உலக்கையைத் தவிர வேறு என்ன இருக்கிறது?" என்கிறார். "சலுகைகளால் மனித ஆன்மா சிறுமையடைகிறது. அரசு, ஏழைகளின் கண்ணீருக்கான காரணத்தைத் துடைக்க வேண்டும். கைக்குட்டைகள் தயாரித்துப் பயனில்லை" என்கிறார். "நிவாரணங்கள், கடன்கள், நிதி உதவிகள் என்பவை இந்த இருட்டின் கனத்தைத் துரத்த முடியாத மெழுகுவர்த்திகள்; இவை, சூரியனுக்கு மாற்று அல்ல" என்கிறார். "மார்புப் புற்று நோய் நீங்கிப் பாரத மாதா நலிந்தவர்க்கெல்லாம் பால் தருவாளா? ஒரு சிலருக்குத்தான் இவள் பால் தருவாள் என்றால், இவள் மார்பை அறுத்தெறிய ஏழை இலட்சுமணர்கள் வாள் எடுப்பார்கள்" என்று முடிக்கிறார்.

கவிஞர் சரியாகத்தான் சொல்கிறார். சலுகை அரசியலைச் சரியாகத்தான் பார்க்கிறார். பாரத மாதாவை இவர் வெறுக்க வில்லை. குசேலர் கையிலுள்ள உலக்கைகளுக்கு வேலை இருக்கிறது; இலட்சுமணனும் வாள் எடுக்கத்தான் வேண்டும். இது யாருடைய பாரதம்? பாரத மாதாவின் புத்திரர்கள் யார் என்றெல்லாம் கேட்க வைத்திருக்கிறது இந்தக் கவிதை.

## *நாமிருக்கும் நாடு*

### கிழிபடாத காலமும் நரை தொடாத இயற்கையும் - (ஈ)

இயற்கை அழகில் உடலும் உள்ளமும் தோய்ந்து குளிர்வது நம் எல்லோருக்கும் இயல்புதான். கவிஞரும் ஒரு மலைச் சரிவில் கிடந்தபடி ஓர் இயற்கையை இரசிக்கிறார். இந்த இரசனை கவிஞர் மனத்தினுள் எத்தனை ஆழத்திற்குப் புகுந்து, கவிஞரை என்ன செய்கிறது என்று பார்க்கலாம்.

“மனிதனை வசனமாக எழுதிவிட்டு இயற்கையை இப்படிக் கவிதையாக எழுதியது யார்?” என்று கவிஞர் வியந்து கேட்கிறார். “வாயாடும் வார்த்தைகளை விட்டுவிட்டு இப்பொழுது மௌனத்தில் கிடக்கிறேன். நேற்று, இன்று, நாளை எனக் காலம் கிழிபடவில்லை. அதைப்போல இயற்கையை மூப்பும் அதன் அடையாளமாகிய நரையும் தொடவில்லை. என் வயதுகள் என்னைவிட்டுக் கழன்றுவிட்டன. என் பால்யத் தொட்டிலில் நான் விரல் சூப்பிக் கிடக்கிறேன்” என்கிறார். ”படுத்துக்கொண்டே கடல் கண்ணாடி பார்க்கிறதோ! நீலம் என்னுள் நிரம்ப, நான் நீலத்திற்குள் நிரம்புகிறேன்” என்கிறார். ஆம்; வானம் கவிஞருக்குள் வந்து விட்டது. கவிஞரும் வானமாகி வந்து விட்டார். கவிஞருக்குள் பரவசம் கொப்பளிக்கிறது. வந்து போன வசந்தத்தைத் தேடுகிறது ஒரு மரம். அது அசைந்தாடுகிறது. கூந்தல் முடிக்கக்கூட அதற்கு நேரமில்லை. பிரிந்து போன பறவைகளை அது வானத்தில் தேடுகிறது. அதன் வேர்களுக்கு ஈரம் தேவை என்றால், என்னையும் என் கவிதைகளையும் பிழிந்து தருவேன் என்கிறார். துயரங்களையே எப்போதும் தியானிக்கிறதோ இம் மலை? ஆயினும் அதைச் சுமப்பது தரைக்குப் பெருமை. அதைத்தான் ஓடைகளும் பேசுகின்றன என்கிறார். எவரும் காண முடியாதபடி இந்தச் சரிவில், நான் தொலைந்து போக மாட்டேனா? என்னைத் தேடி வருபவர்களும் இங்குத் தொலைந்து போக மாட்டார்களா? என்று முடிக்கிறார் கவிதையை.

தன்னைத் தொலைப்பது, தன்னை இழப்பது ஒரு பரவசம். இயற்கைக்குள், கவிதைக்குள், இசைக்குள் இப்படி நாம், நம்மை இழக்கிறோம். இயற்கையாகிறோம்; கவிதையாகிறோம்; இசையாகிறோம்; பரவசப்படுகிறோம்; இது அத்வைதமா? துவைதமா? இது என்ன மதம்? மலைகளைச் சுமப்பது மண்ணுக்குப் பெருமை. நாம் மலையா, மண்ணா? நமக்குள்ளும் பறவைகளைத் தேடுகிறோம்; பறவையாகிறோம்; வானமாகிறோம்; அனுபவங்கள் இப்படித்தான், நமக்குள் அர்த்தப் படுகின்றன; நம்மை உயிர்ப்பிக்கின்றன.

# நாமிருக்கும் நாடு

## ஒரு கவிஞனின் கவிதைகள் - (உ)

ஒரு மாலை நேரம். கவிஞனின் எழுதுகோல் இளைப்பாறிக் கொண்டிருந்ததாம். அப்போது அவருடைய பழைய கவிதைகள் புத்தகத்திலிருந்து புறப்பட்டு வந்தனவாம். ''இயல்பாக நான் பிறப்பதற்கு முன்பு, ஏன் என்னை அவசரமாகப் பெற்றெடுத்தாய்?'' என்று ஒரு கவிதை அவனைக் கேட்கிறது. ''ஆன்மாவில் நிறம் பெறுவதற்கு முன்பே, நீ ஏன் ஆகாயத்தில் தூரிகை தோய்த்தாய்?'' என்று கேட்கிறது அந்தக் கவிதை. ''நான் உண்மை சொன்னதாக நீ எழுதினாய். நான் உண்மையின் நிழல்கூட இல்லை. என்னை ஏன் அவமானத்தில் ஆழ்த்தி விட்டாய்'' என்கிறது ஒரு கவிதை. "பூவில் அமர்ந்திருந்த என்னை இழுத்துக்கொண்டு போய், சந்தையில் விற்றுவிட்டாய்; தேடலில் நான் இருந்தேன்; என்னை இழுத்துக்கொண்டு போய் எவனிடமோ விற்றாய்; துப்பாக்கியைக்கூட நீ தொட்டவன் இல்லை; எனக்குள் எப்படி கொரில்லாக்களை நிறுத்தினாய்? வார்த்தைகளால் என்னை வன்முறைகளுக்குள்ளாக்கினாய்; கட்சிகளுக்கு விற்றாய்; விளம்பரத்திற்காக என்னைத் துகிலுரித்தாய். உனது பேய் வெறியால் என்னைப் பிணமாக்கினாய்." இப்படியெல்லாம் கேட்கிற கவிதைகளுக்கு, அவனால் பதில் சொல்ல முடியவில்லை. எப்பொழுதோ, யாருக்காகவோ தான் எழுதிய இரங்கற்பாவின் மடியில் அவன் விழுந்தான் என முடிகிறது கவிதை.

கவிஞர்கள் அவசர அவசரமாய்க் கற்பனையை மட்டுமே மூலதனமாகக் கொண்டு, உண்மையை உரத்துச் சொல்கிறேன் என்ற பாவனையோடு நாம் எழுதினால்தான் பொழுது விடியும் என்ற போலித்தனத்தோடு கவிதை எழுதித் தள்ளுகிறார்கள்; வெளியிடுகிறார்கள்; புகழைக் கேட்டுப் பெறுகிறார்கள்; புத்தகங்களோடு வாசகர்கள்மீது ஆணவமாய் அமர்ந்து கொள்கிறார்கள்; இவன் எழுதி விடிவது ஒரு புறமிருக்கட்டும். தனக்குள்ளே விடிவில்லை; ஒளியில்லை; உண்மையில்லை என்பதை இவன் எப்படிப் புரிந்துகொள்வான்? இவனுக்குள் ஏதோ அதிர்வு இருந்தது. என்னதான் முளைக்கிறது என்று இவன் காத்திருக்கக் கூடாதா? தனக்குள்ளிருந்து கிளம்புவது

மலராகவும் இருக்கலாம்; முள்ளாகவும் இருக்கலாம். தனக்குள்ளிருந்து கிளம்புவது, தீபமாகவோ பூதமாகவோகூட இருக்கலாம்; காத்திருந்தால் இவை மெல்ல மெல்லத் தலைகாட்டி, பின் வெளியேறும். தன்னைத் தானே இவன் மேலும் தோண்ட வேண்டும். தனக்குள் இவன் ஒளியேற்றுவான்.

இப்படிப் பொருள்படுத்தக் கூடியதாக இருக்கிறது இந்தக் கவிதை. காத்திருக்க வேண்டும்; தேடல் வேண்டும்; தனக்குள் இருக்கும் பொய்யனை, போலியை வெளியேற்றிக் கொள்ள வேண்டும்; தான் அற்றுப் போக வேண்டும்; தானற்ற நிலையில் தான் இயற்கையோடும் உயிர்களோடும் அத்துவிதம் இவனுக்கு வாய்க்கும். இந்த நிலையில் அவன் ஒளியாவான்; உரமாவான்; அவனுக்கு வண்ணங்கள் தேவையில்லை. பனித்துளிகள், பறவையின் பாடல் போதும். அவன் நிறைய எழுதத்தான் வேண்டும் என்பதில்லை. ஆழ்ந்து பார்க்கும்போது, ஓர் உண்மை புரிகிறது. அவன் மனிதன். இயல்பாகவே அவன் மனிதன். ஆணையிட்டு அன்பைப் பெற முடியாது; அடக்கத்தில்தான் அன்பு சுரக்கும். ‘அடக்கம் அமரருள் உய்க்கும்’ என்றார் வள்ளுவர். அன்பிற்கு அடைக்கும் தாழ் இல்லை என்றும் கூறுவர். அன்பு என்பது பொய்யாத விளக்கு. கவிதையும் இப்படி இயல்பாகிவிட வேண்டும். எழுதி எழுதிப் பொய்யான கவிதைகளைத் தீர்த்துக்கொள்ள வேண்டும். அதன் பிறகுதான் உண்மைக் கவிதை பிறக்கும்.

தமிழன்பனின் இந்தக் கவிதையை, தமிழ்க் கவிஞர்கள் மத்தியில் வைத்துப் பார்க்க வேண்டும். அதன் ஒளியில் எது உண்மையான கவிதை என்பதும் தெரியும்.

## 18

## *சூரியப் பிறைகள்*

தமிழில் ‘ஹைக்கூ’ வடிவத்தில் கவிதைகள் வந்து பத்து, இருபது ஆண்டுகளாகின்றன. குறள் வடிவத்தைக் கைவிட்ட தமிழ்க் கவிஞர்கள், ஹைக்கூவை எப்படியோ பற்றிக் கொண்டார்கள். வெளியிலிருந்து ஓர் அறைகூவலாய் ஹைக்கூ

வந்தது ஒரு காரணமாய் இருக்கலாம். பட்டாம் பூச்சிகள் இந்தக் கவிதைகளில் அடிக்கடி பறந்து வந்ததுகூட ஒரு காரணமாகலாம். இயற்கை அழகை தமிழ்க் கவிஞனால் ஒதுக்க முடியாது. ஹைக்கூ கவிதைகளுக்குள் இயற்கை ஈரத்தோடு வந்ததும்கூட இன்னொரு காரணம் எனலாம். எல்லாவற்றையும் விட 'ஹைக்கூ' கவிதைக்குப் பின்னணியாய் இருப்பது 'ஜென்' மெய்யியல். ஜென் மெய்யியலோடு கடந்த சில பத்து ஆண்டுகளில் நமக்கு உறவு ஏற்பட்டிருக்கிறது. இந்த உறவு மேலோட்டமான உறவுதான். ஜே. கே. என்றும் ஓசோ என்றும் இப்பொழுது அதிகம் படிக்கும் இளைஞர்கள், அவர்கள் ஜென் மெய்யியலைப் படித்திருக்கிறார்கள். இந்த மெய்யியல் இவர்கள் வாழ்க்கையில் ஊறியதாய்த் தெரியவில்லை. இவர்கள் கொஞ்சம் தியானம் பயில்கிறார்கள். கடவுள் நம்பிக்கை இவர்களிடம் விடைபெற்றுக் கொண்டிருக்கிறது. விடை கொடுக்கத் தெரியாமல் தவிக்கும் இவர்கள், ஜென்னின்மீது சற்றுச் சாய்ந்து கொள்கிறார்கள். ஜென் மெய்யியலுக்கும் ஹைக்கூக் கவிதைகளுக்கும் நெருக்கம் அதிகம். குறிப்பு மொழிகளில் இரண்டும் பேசுகின்றன. ஒரு 'ஹைக்கூ' கவிதைக்கு ஒன்றிற்கு மேற்பட்ட பொருள்கள் இருக்க வேண்டும். ஹைக்கூவோடு மேலோட்டமான உறவு கொண்டுள்ள நமக்கு, ஹைக்கூக் கவிதைகள் அநேகமாக ஒற்றைப் பரிமாணத்தில்தான் வருகின்றன. தமிழன்பனும் இதற்கு விதிவிலக்காகத் தெரிய வில்லை. ஹைக்கூ எழுதுபவர் கவிதைகளில் பத்துக்கு ஒன்று தேறினால் அதுவே ஒரு சாதனை. எப்படியோ ஹைக்கூவைப் பற்றிக்கொண்டு, கவிதைப் படிகளில் ஏறி வருகிறார்கள். தமிழன்பனின் 'சூரியப் பிறைகள்' தொகுப்பிலிருந்து சில நல்ல கவிதைகளை இங்குக் கொஞ்சம் தொகுத்துக் கொள்ளலாம். இக் கவிதைகள் நம் சிந்தனைக்கு உரியவை. இவற்றுக்குள் நுழைந்து அகல நீளங்களை நான் ஆராயவில்லலை. பறக்கும் பட்டாம் பூச்சிகளைப் பார்த்து மகிழ்வதுபோல, நாமும் இந்தக் கவிதைகளைப் படித்து மகிழலாம்.

* வெளிச்ச நதியில்
வெள்ளம் எனக்கோ
வெற்றுக் குடமே கனக்கிறது.

* கனவைக்
கடித்துக் குதறிய நாய்,
இப்போது சூரியனுள்.

* களத்து மேட்டில்
பதர் தூற்றுகிறார்கள் - எனக்கொரு
முறம் தரமாட்டார்களா?

* உள்ளத்தில் ஓர்ஊற்றுத் தோண்டினேன்
உட்கார்ந்து குடிக்க
என்னோடு ஆயிரம் பேர்.

* விரலுக்கும் நெற்றிக்கும்
வெகுதூரமா?
கலங்கும் திலகங்கள்.

* இதழ்கள்
பிரிக்கப்பட்டன செந்தாமரையில்
இலக்குமிக்கு நிற்க இடமில்லை.

* மழை நாளில் நான் கேட்ட
நூறு கதைகளிலும் - இப்போது
கொளுத்தும் கோடை.

* ஓட்டுப் போட்டுவிட்டுத்
திரும்பி வந்த பிணம் திடுக்கிட்டது,
தனது கல்லறையில் வேறொரு பிணம்.

* மாயன்
மந்திரியானால் என்ன?
மாடுகளுக்குப் புல்லே போதும்!

* பயம்
ஊர்ந்து கொண்டிருக்கும் - இது
பாம்பு போன தடம்.

* திரும்பத் திரும்ப
நிலா ஒளி - பாறை
திடீரென்று மலர்ந்து விட்டது.

* தென்றல் வந்து போனபின்
கண்விழித்துக்
கை பிசைந்து கொள்ளும் அரளிகள்.

* வயதுகளை விலக்கிக் கொண்டு போய்ப்
பார்த்தேன், தொட்டிலில்
அஸ்தமிக்காத என் முதல் வைகறை.

* தாமரையில் ஒரு
நெருப்புத் துண்டு, விழுந்தது
சூரியனின் சாம்பல்.

* கவிதைக்கு
ஆயிரம் கைகள்
கப்பறை நிறைய ஓட்டைகள்,

* சிலம்பை
உடைத்து என்ன பயன்?
அரியணையிலும் அந்தக் கொல்லன்.

* ஆண்டாள் தமிழில் நனைந்த
மார்கழிப் பனி
சூரியன் மார்பில்.

* ஆகாயமும் அழகு
பூமியும் அழகு. ஆம்;
என் கையில் ரொட்டித் துண்டு.

* என்னின் துணுக்குகள் எனக்கே இரை.
என்னைப் பிடிக்கத் தூண்டில்
என் கையில்.

* ரோஜாவை
ரசிக்கும் பார்வையைத் துடைத்துக் கொள்,
மிதிபடப் புல்லின் ரத்தம்.

19

# கருவறையிலிருந்து ஒரு குரல்

## கருவறையிலிருந்து ஒரு குரல் - (அ)

வித்தியாசமான படிமங்களுக்காகவும், கவிதைகளுக்காகவும் நாம் காத்திருக்கிறோம். தமிழன்பனின் இந்தக் கவிதை ஒரு வித்தியாசமான கவிதை. இந்தக் கவிதையில் அரசியல் முற்பட்டுத் தெரிந்தபோதிலும், அரசியல் அல்லாத பிற களங்களுக்குள்ளும் இந்தக் கவிதை வழியே நாம் பயணம் செய்ய முடியும். கவிதைக்கு இப்படித்தான் பன்முகத் தன்மை கிட்டுகிறது. வாசகன் தனக்குள் வளம் கொண்டிருந்தால், இப்படிப் பன்முகப் பயணம் சாத்தியப்படும். சில சமயம் கவிஞனைத் தாண்டியும் வாசகன் செல்ல முடியும். அவனுக் குள்ளும் இயங்குபவன் ஒரு கவிஞன். 'சிலையை உடை' என்ற பசவய்யாவின் கவிதையும் இங்கு நினைவுக்கு வருகிறது.

பாறை கருவுற்றிருக்கிறது. அதனருகில் காதை வைத்துக் கேட்கிறார் கவிஞர். உள்ளே துடிப்புத் தெரிகிறது. சிலை ஒன்று வெளிவரத் துடிப்பதாய் இருக்க வேண்டும். கவிஞர் கேட்கிறார், "ஆராதனைக்காகவும், அபிடேகத்திற்காகவும் துடிக்கிற தெய்வச் சிலையா நீ! குருக்களின் கருத்திலேயே, நான் தெய்வமில்லை. இது எனக்குத் தெரியாதா?" என்று பாறைக்குள்ளிருந்து பதில் வருகிறது.

"கோவில் சிலையாக வேண்டாம். அருங்காட்சியகங்களில் வரலாற்றுக்குச் சான்றாக, நீ வந்து அமரக்கூடாதா?" என்று கேட்கிறார் கவிஞர். "என்னைப் படைத்த கரங்களை வரலாறு எங்கே மதித்தது? என்னையும் என் போன்ற சிலைகளையும் படைக்க வைப்பவர்கள் மன்னர்கள். வரலாறு, மன்னர்களின் வெண்கொற்றக் குடைகளுக்குக் கிழிசல் ஏற்பட்டால் ஒட்டுப் போடுவதற்காகத்தானே ஓடுகிறது" என உள்ளிருந்து ஒரு குரல் வருகிறது. "தலைவர்களின் சிலையாக நீ வெளிவரப் போகிறாயா?" என்று கவிஞர் கேட்கிறார். "நான் என்ன

தண்டிக்கப்பட்ட பாறையா?" என்று உள்ளிருந்து வரும் குரல், "கல்லின் ஆன்மா களங்கப்படுவதே உங்கள் தலைவர்களுக்குச் சிலையாவதில்தான்" என்று தொடர்ந்து ஒலிக்கிறது. "எனக்குள் இன்னும் கரு முதிர்ச்சி பெறவில்லை. ஆகவே இந்த ஓட்டுக்குள் இன்னும் திரவ வடிவில் இருக்கிறேன். எந்த வடிவத்திலும் இன்னும் நான் வார்ப்பாகவில்லை. ஒருவேளை நாளை யாரேனும் உளியும் சுத்தியும் எடுத்து வந்தால், அவருக்கு என் விருப்பம் தெரிவிப்பேன்; சிலைப் பிறப்பு எனக்கு வேண்டாம்; இந்த நாட்டில் ஏழைகள் முன்னேறிச் செல்வதற்கான படிகளில் ஒரு படியாக இருப்பதே என் விருப்பம்." - இப்படி ஒரு பதில் கருவறைக்குள்ளிருந்து வருகிறது.

கோவில்களில் சிலைகளுக்கு மரியாதை இல்லை; வரலாற்றிலும் சிலைகள் அவமதிக்கப்படுகின்றன; தலைவர் சிலைகளோ பாறைகளுக்குத் தண்டனைகளாகி விடுகின்றன; ஆகவே மக்கள் நலம் கருதி இந்தப் பாறையின் உள்ளே கரு இன்னும் திரவ நிலையிலேயே இருக்கிறது.

கவிஞர்கள் எப்போதும் சமூகத்தின் மனசாட்சிகள். ஆகவே, இவர்கள் ஷெல்லி கூறியதுபோல நீதியரசாகளாகித் தீர்ப்பு வழங்குகிறார்கள். இங்கு மீண்டும் நாம் சிந்திக்கிறோம். தமிழ்ச் சூழலில் கோவில், வரலாறு, தலைவர்கள் எனப் பலவற்றையும் நாம் பார்த்துவிட்டோம். கோவிலுக்கும் தலைவருக்கும் சிலை வடிக்கும் கவிஞர்களையும் நாம் பார்த்திருக்கிறோம். இவர்களுக்கிடையில் தமிழன்பன் வித்தியாசமாய்த் தெரிகிறார். இவர் இன்னும் திரவ நிலையில்தான் இருக்கிறார். திரவ நிலையில் இருப்பவர்கள்தான் திசைகளற்றுப் பயணம் செய்யவும் முடியும்.

## *கருவறையிலிருந்து...*

## இன்று மரத்தோடு... - (ஆ)

சூழலியல் சிக்கல்கள் பெருகி வரும் நம் காலச் சூழலில், இயற்கை பற்றிய ஞானம் நமக்கு வாய்த்திருக்கிறது. மரங்கள் அழகானவை; நமக்கு வாழ்க்கை தருபவை; கிளைகள்

விரித்திருக்கும் மரம் வானத்தை மட்டுமல்ல; நம்மையும் தழுவிக் கொள்கிறது. மரத்தின் வேர்களோடு நாமும் மண்ணிற்குள் தேடிச் செல்கிறோம். மரத்தின் ஈரம் நம் நெஞ்சை இளக்குகிறது. நாமும் மரமாக மாட்டோமா என்று தவிக்கிறோம். மரமாகிவிட, நாம் வேறு; மரம் வேறு என்ற வேறுபாடற்று அத்துவிதம் அடைய நாம் தவிக்கிறோம். இந்த அத்துவிதத்தின் மூலம்தான் மரத்தோடு மட்டுமல்லாமல், உயிர்களோடும் ஒன்றுபட்டு நமக்கான உயிர்ப்பை நாம் பெற முடியும். வறண்டு கொண்டிருக்கிற இந்த வாழ்க்கைச் சூழலில், நமக்குள் உயிர்ப்பை நாம் எப்படிப் பெற முடியும்? கவிஞர்கள் இயற்கைக்குள்ளிருந்து இந்த உயிர்ப்பை நமக்கு மீட்டுத் தருகிறார்கள்.

“மனிதனோடு வாழ்ந்தவன் நான். இப்போது மரத்தோடு வாழ்கிறேன்'' என்று தொடங்குகிறார் கவிஞர். ‘‘பச்சை வீட்டுக்குள் ஒரே பரவசம். என் கைகால்கள் கிளைகளுக்குள், வீட்டுக்குள் இருந்ததுபோல் முடங்கிக் கிடக்காமல், இப்போது விசாலிக்கின்றன. பூமியின் இதயம் ஈரமானது. வேரோடு சேர்ந்து நானும், இந்த ஈரத்தோடு உறவு கொள்கிறேன்'' என்கிறார் கவிஞர்.

‘‘உச்சியில் கிளைகளும் இலைகளும். நட்சத்திரங்கள் இப்போது அருகில் வந்துவிட்டன. நட்சத்திரங்களோடு நான் பேசுகிறேன். அரும்பும் மலர்களும் காற்றில் அசைந்தாடுகின்றன. அவற்றோடு நான் கண்ணாமூச்சு விளையாடுகிறேன். இரவில் நிலா கதை சொல்கிறது. எனது உச்சி, நகரும் காற்றின் கைகளில். அங்கு மனிதர்கள் முன்பு என்னிடம் பேசியதெல்லாம் விபரீதமாகவே தோன்றியது (அன்பற்றவை மனிதர்களின் வார்த்தைகள்). பறவைகள் பேச்சு எனக்கு இப்போது புரிகிறது. எனக்கு இப்போது கால் கைகள் இல்லை. வேர்களும் கிளைகளுமே இப்போது கைகால்கள். பருவங்கள் கழிகின்றன. அத்துவிதம் அறிகிறேன். எனது உண்மை உடல் சாய்கிறது (எனது மனித உடல் சாய்கிறது). மரமும் நானுமாகச் சில பூக்களைப் பொழிந்தோம்” என்று கவிதையை முடிக்கிறார்.

மரங்கள் பேசுமா? பறவைகள் பேசுமா? என்றெல்லாம் நாம் கேட்கிறோம். நாம் அறிவுடையவர்கள். வரலாற்றின் வழியே யார்

யாரோ அறிவு என்று சொல்லி, நமக்குள் திணித்திருக்கிறார்கள். அந்த அறிவுக்கு வார்த்தைகள்தான் வாகனம். மனிதனுக்குத் தான் மொழியுண்டு. விலங்குகளுக்கும் பறவைகளுக்கும் மொழி இல்லை. மனிதன்தான் உயிரினங்களின் உச்சம். இப்படித்தான் நாம் பேசுகிறோம். இதற்குப் பெயர் அறிவு வாதம். இந்த அறிவு வாதத்தின் விபரீதங்களை நாம் நன்றாகவே அனுபவித்து வருகிறோம். இந்த அறிவு வாதத்தின் விளைவாக நச்சுகளில் நம்மையும் இந்த உலகத்தையும் நாம் மூழ்கடித்துவிட்டோம். இந்த அறிவு வாதத்திலிருந்து, இப்பொழுது நாம் விடுபட்டாக வேண்டும். பறவைக்கும் ஒலி மாற்றங்கள் உண்டு. மரங்களுக்கும் கூட ஒலி மாற்றங்கள் உண்டு. மூளைதான் அறிவின் வாகனம் என்பது உண்மை இல்லை. பழங்காலத்து முனிவர்கள் மூளையை நம்பி இருக்கவில்லை. உயிர்களோடு அவர்கள் உரையாடினார்கள். இந்த உரையாடலுக்கு இன்று நாம் திரும்பியாக வேண்டும். கவிஞனுக்குள் இந்த உரையாடல் நிகழ்கிறது. நாம் காது கொடுத்துக் கேட்க வேண்டும். உயிர் இனங்களின் பேருணர்வை, நுண்ணுணர்வை நாம் புரிந்து கொள்ள வேண்டும். நமக்குத்தான் இவ்வுலகம் என்பது பொய். நாம் இல்லையென்றால் உயிர் இனங்கள் செழிக்கும். மரமாவதில் நாம் தொடங்கினோம். எல்லாமாகவும் நாம் வாழ்ந்து பார்க்க வேண்டும்.

## *கருவறையிலிருந்து...*
## இன்னும் ஒரே ஒரு... - (இ)

1970-75களில் நாம் நினைக்கும் ஆதிக்க உலகம், நம் அடி பட்டு விழுந்துவிடும். நாளையே புதிய உலகம் பூக்கும் என்று நம்பினோம். நம்பியது நடக்கவில்லை. ஆதிக்கங்களே உலகை அபகரித்துக்கொண்டன. நமக்கே தெரியாமல் நமக்குள்ளும் ஆதிக்கத்தின் கரங்கள் நீண்டன. வாழ்க்கை என்றும், வசதி என்றும், பதவி என்றும், நுகர்வு என்றும் ஆதிக்கங்கள் நம்மை வளைத்துக்கொண்டன. புரட்சியாளர்களும் இப்படி ஆதிக்கத்தின் பொறிகளில் அகப்பட்டனர். இப்பொழுது மீண்டும் சிந்திக்கிறோம். நமக்குள்ளும் வந்து நம்மை அகப்படுத்திக் கொண்டிருக்கிற, இந்த ஆதிக்கங்களின்

கரங்களிலிருந்து நம்மை எவ்வாறு விடுவித்துக்கொள்ள முடியும்? இந்தச் சிந்தனையோடு இந்தக் கவிதைக்குள் நுழைவோம். பதவியா, பணமா, இன்பமா, பாதுகாப்பா என்றெல்லாம் நமக்குள் நாமே அடைத்துக் கொண்டிருக்கிறோம். கவிஞர் சொல்வதைக் கவனிப்போம்.

"ஆலகால மரத்திற்கு இறுதி அறிவிப்பைச் செய்து விட்டோம். வாருங்கள் இன்னும் ஒரே ஒரு வெட்டு" என்கிறார் கவிஞர். (ஆலகால மரம் நமக்குள்ளும் இருக்கிறது. அதிலிருந்து நம்மை விடுவித்துக்கொள்ள வேண்டும். எங்கே வெட்டுவது?) "இருளின் இறுதிக் கண்ணி இற்றுவிடப் போகிறது. ஏற்றுங்கள் இன்னும் ஒரே ஒரு மெழுகுவர்த்தி" என்கிறார் கவிஞர் (நமக்குள்ளும் படர்ந்திருக்கும் இருள் இது, என்று தெரிந்து நாம் மெழுகுவர்த்தி ஏற்ற வேண்டும்). குரலை உயர்த்துங்கள். இருள் ஒழியும் என்கிறார் கவிஞர். முகத்தில் புன்னகை ஏற்றுங்கள் என்றெல்லாம் சொல்கிறார்.

கவிஞரின் உள்ளத்தை நாம் கண்டறிய வேண்டும். யாருக்காக நமது குரலை உயர்த்துவது? நம் முகத்தில் எப்படிப் புன்னகை பூக்கும்? எதை வெட்டுவது? எங்கே வெட்டுவது? இப்படி நாம் கவிஞரோடு சேர்ந்து சிந்திக்க வேண்டும். எதிரி வெளியில்தான் இருக்கிறான் என்று கட்சிக்காரர்கள் சொன்ன கதையை நம்பி நாம் ஏமாற வேண்டியதில்லை. கோட்டைக்கு வெளியே இருந்த எதிரி, இப்பொழுது உள்ளே வந்து நமக்குள்ளும் புகுந்து பத்திரமாக இருக்கிறான். நமக்குள் நிகழும் போட்டி, பொறாமை, உரத்த குரல், அலங்காரம், மேடைப் பேச்சு, ஊர்வலங்கள், அறைகூவல்கள் ஆகியவற்றினுள் அவன் பத்திரமாக இருக்கிறான்.

## *கருவறையிலிருந்து...*
## ஆன்மாவில் அமர்ந்து... - (ஈ)

"விளக்கு எரிந்து கொண்டிருக்கட்டும். அவசரத்தை அதன் திரிகளுக்கு அறிமுகப்படுத்தினால், விடியும் முன்பே மடிந்து போகலாம்" என்று தொடங்குகிறார். "பனித் துளிகளும்

பசும்புல்லின்மேல் தூறிக்கொண்டிருக்கட்டும். தென்றல் மெல்லவே வீசட்டும். கோடையிலும் குளிர் தேவைதான். மொழியில் இரைச்சல் வேண்டாம். மிதமான உச்சரிப்பால் வார்த்தையும் வாழும்; நாமும் வாழலாம். இறுக்கிப் பிடித்தால் மலர்கள் மூச்சிழக்கும். இதழ் விரிவில் அன்பு அலை வீசட்டும். காட்டாற்று வேகம் வேர்களுக்கு விபத்தாய் முடியும். அன்பை அவசரத்தில் ஊதிப் பெருக்கினால் உடைந்துவிடும். இயற்கை ஒரு மலருக்குள்ளிருந்து, அன்பை மெதுவாகத் தூவுகிறது. நாமும் ஆன்மாவுக்குள் இருந்து, அன்பை, அதன் அர்த்தத்தை விரிப்போம்" என்கிறார் கவிஞர்.

உரத்த முழக்கங்களால் விடிவு வந்துவிடும் என்று சொன்ன கவிஞர், இப்பொழுது வேறு விதமாய்ப் பேசுகிறார். அவசரமாய்த் திரியை இழுத்துவிட வேண்டாம்; வார்த்தைகளை மெல்லப் பேசுங்கள்; மொட்டுகள் மலருவது அவசரமாய் நிகழாது. இப்படிப் பேசுகிறார் கவிஞர். உண்மைதான். நமக்கு வெட்டவும் தெரிய வேண்டும்; விசிறவும் தெரிய வேண்டும். இடியின் ஒலியும் தேவை; பறவைகளின் பாடல்களும் தேவை; கோடையும் தேவை; வசந்தமும் தேவை. இப்படிச் சொல்வது முரணா? கவிஞர் தன்னைத் தானே மறுத்துக்கொள்கிறாரா? இப்படி நாம் கேட்கக்கூடும்.

அறத்திற்குத்தான் அன்பு சார்பு என்பவர், அன்பை அறியாதவர்கள். மறத்திற்கும் அன்புதான் ஆதாரம் என்றார் வள்ளுவர். இடி இல்லை என்றால், மழையும் இல்லை. வசந்தத்தின் வரவை எதிர்பார்த்தவன், கோடையின் உள்ளும் பயணம் செய்ய வேண்டும். வெட்டினால்தான் ஊற்றும் சுரக்கும். வெட்டுவது ஆக்கமா, அழிவா? கவிஞர் நம்மை ஒரு சுழலுக்குள் இழுத்துவிடுகிறார். இந்தச் சுழலிலிருந்துதான் நாம் கரையேற வேண்டும். பனித்துளிகள் மெல்லத்தான் படரும். அன்பில் தழைப்பது, இவ்வையம். எதிரி இல்லாமல் நமக்குள் தூண்டுதல் இல்லை. உயரத் தாண்டுதல் இல்லாமல் நம் கால்கள் வலுப்பெற முடியாது. எதிரியும் நமக்கு நன்மை செய்கிறான். அவன் எதிரி கூட இல்லை. அவனுக்கும் வாழ்வு தருவது நம் கடமை. அதாவது அவனை மனிதனாக்க வேண்டும்.

*கருவறையிலிருந்து...*

**அப்பாலுக்கு அப்பால்... - (உ)**

அழுத்தமான கருத்துகள் கவித்துவத்தை இயல்பாகப் பெறுகின்றன. மனிதனின் பயணத்திற்கு முடிவு இல்லை. முடிவு என்று ஒன்றை வைத்துக்கொண்டால், மனிதனுக்கு எல்லை வந்து விடுகிறது. பயணம் தடைப்படுகிறது. எல்லையற்ற பயணம் தான் மனிதனுக்கு அளவில்லாத ஆற்றல் வழங்கும். இதே கருத்தைத் தமிழன்பன் பலமுறை சொல்லியிருக்கிறார். மீண்டும் மீண்டும் சொல்ல வேண்டிய கவித்துவம் சார்ந்த கருத்து இது. அழகுக்கும் எல்லை இல்லை. எட்டுத் திசைகளிலும் கைகளை விரித்துப் போகும் அளவுக்கு அழகுகள் மனிதனுக்கு வசப்படும். எல்லைக் கோடுகளை இழுத்துக்கொண்டே செல்பவன் பின்னால் திசைகள் பூச்சொரியும். மனிதனின் பயணம் எதையும் அடைவதற்கு அல்ல, கடப்பதற்குத்தான் என்கிறார் கவிஞர். வேர்கள் எதுவரை செல்ல வேண்டும் என்பதற்குத் தீர்மானம் வகுக்காதே என்கிறார். "வேலிகளில் சிக்கி இரத்தம் சிந்தும் சூரியனை விண்கூடத் தொட்டுத் தூக்கிவிடாது" என்பது இக் கவிதையில் ஓர் அற்புதக் காட்சிப் படிமம். (இந்தப் படிமம் ஒன்றுகூடப் போதும். இதிலிருந்தே முழுக் கவிதையும் வார்த்துக் கொள்ளலாம்.)

மனிதன் இறுமாந்திருப்பான் என்றால், அவன் சூட்டிக் கொள்ளும் மகுடமணிகள் இருண்டு போகத்தான் செய்யும். (இறுமாந்திருப்பவன் உள்ளத்தில் ஏது ஒளி?) மனிதனின் சிந்தனைக்கு, பயணத்திற்கு முடிவு இல்லை. முடிவு என்பது கல்லறை; தொடரும் பயணத்தில் இருப்பவன், கல்லறைக்குள்ளிருந்து எழுபவன்.

முடிவு அல்லது இலக்கு என்பது தேவையில்லையா? தேவைதான் என்றபோதிலும், எல்லையற்றது நம் பயணம் என்ற சிந்தனைதான், தொடர்பயணத்திற்கு நம்மைத் தூண்டும். கவிஞர் சரியாகத்தான் சொல்கிறார். தமிழன் தனக்கென எந்த இலக்கை வைத்திருக்கிறான்? எந்தப் பயணத்தில் இருக்கிறான் என்று சிந்திக்கும்பொழுது, கவிஞரின் கருத்து, நமக்குக் கூடுதலாகப் புரிகிறது.

## கருவறையிலிருந்து...

**தேடல் - (ஊ)**

மனிதன் எப்பொழுதும் தேடலில் இருக்க வேண்டும். இலக்கு வைத்துக்கொண்டு பயணத்தை நிறுத்தி வைத்துவிடக் கூடாது. இந்த உண்மை நமக்குப் புரிகிறது. இந்த வகைத் தேடலை எப்படி நிகழ்த்தலாம்; எவ்வாறெல்லாம் நிகழ்த்தக் கூடாது என்பது பற்றியும் நமக்குச் சிந்தனை தேவை.

ஒருவன் தனது நிழலை வைத்துக்கொண்டு, தன்னை வரைந்து கொள்ளலாமா? அதாவது தனது மனக் கற்பிதங்களை முன் வைத்துத் தன்னை வடிவமைத்துக் கொள்ளலாமா என்பதாக, கவிஞரைப் புரிந்துகொள்ளலாம். இப்படிச் செய்தால் நிழலுக்கு அடியில் ஒளிந்திருக்கும் கொஞ்ச நஞ்சம் ஒளியும் மறைந்து போகும்.

கவிஞர் சரியாகத்தான் சொல்கிறார். அவன் குரலெடுத்து எதையெதையோ உரத்துப் பேசுகிறான். அந்தக் குரலுக்குள் அவனது தேடல் தெரிகிறதா? தெரிவதில்லை. அவனது சொற்கள் அர்த்தமற்றவை. அவனுக்குள் தேடல் இல்லை. ஆகவே உரத்துக் கத்துகிறான். அவன் புத்தகங்களுக்குள் அடிக்கடி போய் வருகிறான். தனக்கென பிம்பம் சமைத்துக் கொள்கிறான். ‘அறிஞன்’ என்றும் ‘மேதை’ என்றும் அவன் தன்னைக் காட்டிக்கொள்கிறான். அவனுக்குள் ஞானம் இல்லை. புத்தகங்களை வாரி அவன் போர்த்துக் கொண்டிருக்கிறான். புத்தகங்களுக்குள் ஞானம் அகப்படுவதில்லை. ஆலயத்திற்குள் அவன் ஆன்மா தேடல் நிகழ்த்தச் செல்கிறது. ஆலயத்திற்குள் இருந்து அவன் என்ன தேட முடியும்? உள்ளே சென்ற ஆன்மா, தன் வழியைத் தொலைத்துவிட்டு உள்ளே அலைந்து கொண்டிருக்கிறது. அங்கும் இங்கும் அவனுக்குள் கிழிசல்கள். அவனுக்குள் எங்கும் ஊசித் துளைகள். எதை மறைக்க அவன் தைத்துக் கொண்டிருக்கிறான்?

கவிதையை இப்படி நாம் அர்த்தப்படுத்துகிறோம். நிழலுக்குள், புத்தகங்களுக்குள், கோயிலுக்குள் ஒருவனுடைய தேடல் அடைபட முடியாது. அவன் தேடுவது அகப்படாது.

அவற்றை உதறிக்கொண்டு ஒருவன், திசைகளற்றுத் தன்னைத் தேட வேண்டும். தனது நிழல் எது என்று அவனுக்குத் தெரிய வேண்டும். தன்னைத்தானே ஏமாற்றிக் கொள்வதற்குத்தானே உற்பத்தி செய்யும் சொற்களின் உண்மை அவனுக்குத் தெரிய வேண்டும். எல்லைக்குள் ஞானம் அகப்படுவதில்லை. எல்லையற்ற பெருவெளி - வள்ளுவர் சொல்லும் 'பேரா இயற்கை'க்குள் ஒருவன் தன்னைத் தேட வேண்டும். ஜென் பேசுகிற ஞானம் எல்லையற்றது; கவிஞனுக்குள்ளும் நிகழ்கிறது இந்தத் தேடல்.

## *கருவறையிலிருந்து...*

### சூரியனும்
### ஒரு சதைத் துண்டு - (எ)

நாம் எங்கிருந்து நம் குணங்களைப் பெறுகிறோம்? யாரோடு பழகி, எந்தச் சூழலில் வாழ்ந்து, யாருக்காக உழைத்து, யாரோடு சேர்ந்து இந்தக் குணங்களைப் பெறுகிறோம்? நாம் நல்லவரா அல்லது தீயவரா? அல்லது இரண்டும் கலந்தவரா? நல்லவர் என்று நம்மை நாமே சொல்லிக்கொள்கிறோம். தீயவர் என்று நம்மை நாமே அறிமுகப்படுத்திக் கொள்வதில்லை. புகழை நாம் விரும்பவில்லையா? போட்டியில் நாம் ஈடுபடவில்லையா? அடுத்தவர்க்கான நலனை நாம் அபகரிக்கவில்லை... நமக்கான வாழ்வுகளும் வசதிகளும் நமக்கு எப்படிக் கிடைத்தன? நமக்கிருக்கும் அழகை எங்கிருந்து சேகரித்தோம்? நாம் பெற்றிருக்கும் அறிவை நமக்காக உற்பத்தி செய்தவர் யார்? இப்படியெல்லாம் நம்மைச் சிந்திக்க வைக்கிறது இந்தக் கவிதை. நம்மை இப்படிச் சிந்திக்க வைப்பதற்காக, இந்தக் கவிதை நமக்குத் தேவை.

கழுகுடன் பழகி நாமும் கழுகானோம்; தாங்குவது அல்ல கழுகு; தாக்குவது கழுகு. இதயத்தின் ஈரம் கழுகுக்குத் தேவையில்லை. வானத்தைத் தன் சிறகால் அது அடைத்துக் கொள்கிறது. தன் கூரிய நகங்களால் வானத்தைக் கிழிக்கிறது. அந்தக் கழுகிற்குக் கொத்தவும், குதறவும் தெரியும். பிணத்தின்

முகத்திலும் அதற்கு மகிழ்ச்சி விரியும். இந்தக் கழுகின் அலகின் கூர்மைதான் நீதியை வரையறுக்கிறது. கருணை மனுவை அந்தக் கழுகு பரிசீலிப்பதில்லை. கழுகோடு நமக்கு உறவு வலுப்பட்டது. ஆகவே, நமக்குச் சாளரத்துச் சூரியனும் ஒரு சதைத் துண்டு என்கிறார்.

கழுகோடு பழகித்தான் நாமும் கழுகானோம்; பொருளோடு அதிகாரத்தில் அமர்ந்து பழகி நாமும் கழுகானோம். நமக்குள் அன்பில்லை. கழுகான நாம்தான் நீதி நியாயங்களை வரையறை செய்கிறோம். எல்லாவற்றையும் நாமே தீர்மானிக்கிறோம். தனக்குள் கழுகைக் கண்டவன், அந்தக் கழுகை வெளியேற்றுவான். அதற்கு வசப்பட மாட்டான். கவிஞர் காட்டும் கழுகின் வழியே நம்மை நாமே பார்த்துக் கொள்கிறோம். இது நமக்குத் தேவையான கவிதை; தமிழன்பனை நாம் பாராட்டத்தான் வேண்டும்.

## *கருவறையிலிருந்து...*

### **ஓவியத்தின் விரல் இடுக்கில்**

**தூரிகை - (ஏ)**

"இந்த விநாடிகளை ரோஜாக்களாக மாற்ற எதனால் முடியும்" என்ற கேள்வியில் தொடங்குகிறது இந்தக் கவிதை. கடந்த காலத்தின் சக்திமிக்க விநாடிகள் இப்பொழுது திரும்பி வருவது சாத்தியமல்ல (உண்மைதான்; காலம் திரும்பி வருவதில்லை). எதிர்காலம், தானே வந்து இந்த விநாடிகளை ரோஜாக்களாய் மாற்றுவதும் சாத்தியம் இல்லை. அபூர்வமான இசையின் விரல் பட்டு, இந்த விநாடிகள் ரோஜாக்களாய் மலருமா? பட்டுப் பூச்சிகளாய், பரிணாமம் பெற்ற கனவுகளாய் இந்த விநாடிகளை மலர்த்த முடியுமா? இப்படியெல்லாம் கவிஞர் கேட்கிறார். இரத்தத்தைத் தொட்டு வரையும் தூரிகையால் இது சாத்தியப்படுமா? இப்படிக் கவிஞனுக்குள் பரபரப்பும் இழப்பும். இன்றைக்குள் வந்து இந்த நொடிகளை ரோஜாவாய் எதனாலும் மாற்ற முடியாது. தானேதான் இதைச் செய்ய வேண்டும். எப்படி? நொடிகளுக்குள் நுழைந்து ரோஜாவாய் மலர்ந்ததேன்

என்கிறார் கவிஞர். நொடிகள் கவிஞனுக்குள் நுழைந்து நூறு நூறு மலர்களை மலர்த்தின என்கிறார். இந்த நொடிகளுக்குள் கடந்த காலமும் எதிர் காலமும் கைகோத்துக் கொண்டிருக்கின்றன. அவை இந்தக் கணத்திற்குள் தங்குகின்றன. பட்டுப் பூச்சிகளின் சிறகுகள், இதற்குள் படபடக்கின்றன. தூரிகை ஓவியத்தின் விரல்களுக்கு வந்து நிற்கிறது என்று கவிதை முடிவு பெறுகிறது.

ஜே.கே.யை நான் படித்திருக்கிறேன். நிதர்சனத்துக்குள் நாம் விழ வேண்டும் என்பார் அவர். எதிர்காலத்திற்குள் நம்மை அழைத்துக்கொள்ள வேண்டாம். நமக்குள் எப்பொழுதும் திறந்திருப்போம். இயற்கையும் மனிதர்களும் தாராளமாய் உள்ளே வந்து போகட்டும். நம்மைத் திறந்து வைத்தால் நமக்குள் ரோஜாக்கள் மலரும். பட்டுப் பூச்சிகள் வந்து செல்லும். நமக்குள் ஓவியங்கள் தம்மைத் தாமே வரையும். காலங்கள் நமக்குள் கைகோத்துக் கொள்ளும். இது ஜே.கே.யின் ஞானம்; சித்தர்களின் ஞானம். எதையும் அழித்துக் கட்ட வேண்டியதில்லை. நமக்குள் நெகிழ்விருந்தால், நமக்குள் நிலா வந்து போகும். அந்தக் கணங்களில்தான் கவிதையோடு நாம் உறவு கொள்கிறோம்.

## *கருவறையிலிருந்து...*
## இவன்... இவன்... இவன்... இவன்... - (ஐ)

இவனிடம் ஒளியில்லை, வீரமில்லை, சொரணை இல்லை. இவன்மீது சூரியக்கதிர்கள் விழுவதில்லை. நிலவின் கதிர்களும் இவன்மீது விழும்போது கறுத்து விடுகின்றன. இவனுக்குள் ஜீவகீதம் இல்லை. இவனுக்குள் மரணமே விரியும். வறுமைக் கோட்டுக்குக் கீழே வாழும் இவன் சுதந்திரமாகச் சிரித்ததும் இல்லை. அழுததும் இல்லை. ஆத்மார்த்தத்தோடு தன்னோடும் பிறரோடும் இவன் பேசியதில்லை. கனவில் இவன் மனம் சுழலும். ஆன்மா புழுதியில் அலறும். நிர்ப்பந்தங்களே இவனுக்கு நியதி. இவன் அறங்களை நிராகரிக்கிறான். வாழ்வதற்கு வாய்ப்பில்லை. சாவதற்கு எப்போதும் சந்தர்ப்பங்கள் இருக்கின்றன. இவனுக்கு

உண்மை தெரியாது; பொய்யும் தெரியாது; சந்தேகங்களில் வாழ்கிறான்.

இப்படி ஒரு நீண்ட வருணனையை இந்தக் கவிதை தருகிறது. இவன் யார் என்பதைத் திரும்பத் திரும்பச் சொல்கிறார் கவிஞர். இவன் இந்தியன். இவன் என் சகோதரன் என்று சொல்கிறார். வரலாறு நம்மை இப்படித்தான் வைத்திருக்கிறது. நம் தலைவர்கள் நம்மை இப்படித்தான் வைத்திருக்கிறார்கள். நம்மை நாமே வரைந்து கொள்ளவில்லை. நம்மீது யாரும் நீந்திச் செல்லலாம்; நாம் எடுப்பார் கைப்பிள்ளைகள்; நமக்குள் கிழக்கும் மேற்கும் இல்லை; சூரியனும் சந்திரனும் இல்லை; இசை, ஓவியம் இல்லை; வானம், காற்று இல்லை. இப்படித்தான் நம்மைப் பற்றி வரைந்து காட்டுகின்றார் கவிஞர். உலக வரலாற்றுச் சூழலை வைத்து, இந்திய வரலாற்றுச் சூழலில் வைத்து, நம்மை நாமே இப்படி அர்த்தப்படுத்திக்கொள்ள வேண்டும். 'குணம்நாடி, குற்றமும்நாடி அவற்றுள் மிகை நாடி மிக்க கொளல்' என்றார் வள்ளுவர். நமக்குள் குற்றங்கள் தூக்கலாகத்தான் தெரிகின்றன. அவைகள் நம் குணங்களை அழித்துக் கொண்டிருக்கின்றன. நம் உயிரைக் கொடுத்துத்தான் நமக்கான வாழ்க்கையை, தேசத்தை, பொருளியலை, அரசியலைப் பெற முடியும். இப்படி ஒரு வரலாற்று நெருக்கடியில் தமிழர்களாகிய நாம் இருக்கிறோம். இந்த நெருக்கடியிலிருந்து விடுவிக்க வல்ல நல்ல கவிதைகள் தேவை.

# 20

## *கிழக்குச் சாளரம்*

### வேப்ப மரத்தின் நினைவாய்... - (அ)

சுற்றுச் சூழல் மாசுபட்டதன் விளைவாய், இன்று நம் வாழ்க்கை நெருக்கடிகளில் சிக்கித் தவிக்கிறது. தொழில் பெருக்கம், நகரப் பெருக்கம், வாகனங்களின் பெருக்கம், முதலாளிகளின் பொறுப்பின்மை, அதிகாரிகளின் சுயநலம்,

மக்களின் கல்வியறிவின்மை - இப்படி எத்தனையோ காரணங்களால் இந்த நெருக்கடி நேர்ந்திருக்கிறது. இந்த நெருக்கடியில் கவிதைக்கு ஒரு நன்மை கிடைத்திருக்கிறது. மரங்களை வாழ்விப்பது பற்றி இப்பொழுது பேசுகிறோம். மரங்களும் உயிரினங்களும் நம் நேசத்திற்கு உரியனவாய் மாறியிருக்கின்றன. வெட்டப்படும் மரங்கள் நமக்குள் கேள்வி எழுப்புகின்றன. உயிரினங்களோடு நாம் உரையாடுகிறோம். மரங்கள் நமக்குத் தாயாய், சகோதரியாய், நண்பனாய் இருந்திருக்கின்றன. இந்த மரத்தை நமக்குள் வைத்து இன்று வளர்க்க விரும்புகிறோம்.

தமிழன்பன் தனது சொந்த ஊரில் வெட்டப்பட்ட ஒரு வேப்பமரம் பற்றி, இங்குக் கவிதை எழுதுகிறார். நீண்ட கவிதை. தொடரும் தன் நினைவுகளைக் கவிதையாகத் தருகிறார்.

“வீட்டின் முன் வெறுமை. வீதி மூளியாகிவிட்டது” என்று தொடங்குகிறார். “என் தந்தைகூட, என் தாத்தாவின் முகத்தை மறந்து போயிருந்தார். என் தாத்தாவின் முகத்தை மறவாதிருந்த வேப்ப மரம், இப்பொழுது இங்கு இல்லை. வெட்டப்பட்டது” என்கிறார். பருவங்களை இந்த வேம்பு எனக்குக் கற்பித்தது. கிழிந்த பாவாடையில், தேங்காய்த் தொட்டியில் குழந்தைகள் இந்த மரத்தினடியில் கொட்டை பொறுக்கினார்கள்; பங்குனியில் உதிர்ந்த பூக்களைக் கூட்டி எடுத்து, பெண்கள் ரசம் வைத்தார்கள்; தாழ்ந்த கிளைகளில் ஆண்கள் தங்கள் பற்களின் அழுக்குகளுக்குப் பதில் தேடினார்கள்; இவர்களில் யாரேனும் ஒருவர் கோடரிக்குக் குறுக்கே போய்த் தடுத்திருக்கக் கூடாதா?” என்று கவிஞர் கவலைப்படுகிறார்.

இந்த ஈங்கூர் வீதியில் எத்தனையோ பிறப்புகள் இறப்புகள். எல்லாமே இந்த வேப்பமரத்துக்குத் தெரியும். இந்த, செகதீசன், தமிழன்பன் ஆனதுகூட இதற்குத் தெரியும். தமிழன்பன் எழுதிய முதல் கவிதையாகிய ‘விறகு வெட்டிக்கு’ நிழல் கொடுத்ததும் இந்த மரம்தான்.

“இந்த வேப்ப மரத்தின் கிளைகளை உலுக்கினால், எத்தனையோ நினைவுகளைக் கொட்டியிருக்கும். ஆயிரம் சம்பவங்களுக்கு, அது சாட்சியாய் இருந்தது. இப்பொழுது,

இந்த மரத்தில் என்ன எஞ்சியிருக்கிறது? தண்ணீரில் மூழ்குபவனின் தலை கடைசியாய்க் காட்சி தருவதைப்போல அடிமரம் மட்டும் இன்னும் மிஞ்சியிருக்கிறது. வெங்கடாசலம் ஆசாரி ஓய்வு நேரத்தில் அடித்த கஞ்சிராவால், இதன் காய்கள் கனிந்தன. குளத்துப் பாளையம் ஆசாரியின் குதிரைக் குட்டியை வேம்பின் கிளைகள் ஆசையாய்த் தொட்டதுண்டு. இலாடம் அடிக்கக் கவிழ்க்கப்பட்ட மாடுகளின் வாயோரம் நுரை கண்டு, தடுக்க முடியாமல் அதன் கவிதைகள் துடித்ததுண்டு. ஆடிக் கிருத்திகைகளில் மலையேற வந்தவர்களின் 'அரோகரா' சத்தததைக் கேட்டு, அந்த மரம் கிறுகிறுத்தது உண்டு. தைப்பூசத்திற்குக் காவடி எடுத்து வரும் பக்தர்களின் கால்களில் குடம் குடமாய்ப் பெண்கள் தண்ணீர் கொட்டுவார்கள். அப்பொழுது வேம்பு அவர்களுக்கு விசிறி வீசியதுண்டு."

இப்படி எத்தனையோ நினைவுகளைக் கவிஞர் சொல்கிறார். மின்சாரக் கம்பம் நடப்பட்ட சங்கதி, புதிதாக எழுந்த மஞ்சள் நிற மாடி, மார்க்கோனிப் பெட்டியில் கேட்ட செய்தி, புளிய மரத்தில் தூக்கிட்டு யாரோ இறந்த செய்தி, இவற்றுக்கெல்லாம் அந்த மரத்தோடு தொடர்பு கூறும் கவிஞர், தன் தங்கை கண்ணம்மா, திருமணம் ஆகிப் புறப்பட்டபோது வேம்பு தந்த ஆறுதலையும் மறக்காமல் குறிப்பிடுகின்றார். இப்படி எவ்வளவோ செய்திகள் இந்தக் கவிதையில். இறுதியில் இப்படிச் சொல்கிறார் கவிஞர். "வேம்பின் பழம் ஒன்றைத் தாம் விழுங்கிவிட்டபோது, வயிற்றுக்குள் போன கொட்டையிலிருந்து மரம் முளைக்கும் என்று அவர் சித்தப்பா சொன்னாராம். அந்தக் கொட்டை இனியேனும் முளைத்து வளருமா என்று கவலைப் படுகிறார் கவிஞர். எவரும் வெட்ட முடியாதபடி அந்த வேம்பு வளருமா?" எனக் கவிதையை முடிக்கிறார்.

வேம்பு, நம் மரபோடு பெற்ற இணக்கத்தைச் சொல்லி முடியாது. அந்த அளவுக்கு வேம்பு நமக்கு உரம் தந்திருக்கிறது; உவப்பாய், கசப்பாய் இனித்திருக்கிறது; நம் குழந்தைகளைத் தாலாட்டியிருக்கிறது; சிறுவர்களின் வளர்ச்சிக்குக் கைகொடுத்திருக்கிறது; விழாக்களில் நம்மோடு உறவு

கொண்டாடியிருக்கிறது வேம்பு; நம் வீட்டு உத்திரமாய் இருக்கிறது. நம் வீட்டுப் பயிர்களைக் காத்திருக்கிறது; நம் உடல் நோய் தீர்ந்திருக்கிறது; உள்ளத்தைக் குளிர்வித்திருக்கிறது; வேம்பு இல்லாமல் நமக்கு வாழ்க்கை இருந்ததில்லை; வேம்பு நமக்கு உயிர் தந்திருக்கிறது; மரபை நமக்குள் வளர்த்திருக்கிறது; இந்த வேம்பிலிருந்து இப்பொழுது நாம் பிரிந்தாக வேண்டும். இப்படி ஒரு தண்டனை நமக்கு வந்திருக்கிறது. வேம்பைக் காப்பாற்ற இயலாத நம் இனம் வாழ்ந்தாலென்ன? செத்தாலென்ன? என்று நமக்குள் வேகிறோம். வேம்பு நமக்கு ஒரு மரமல்ல. வேம்பு நமக்கு ஒரு நண்பன்; சகோதரன்; தந்தை; தெய்வமும்தான். வேம்பின்மீது விழுகிற கோடரி, இனத்தின் மீதும்தான் விழுகிற கோடரி. தமிழன்பனுக்குள்ளும் வேம்பு விளைந்திருக்கிறது. அன்றியும் வெடித்திருக்கிறது.

கிழக்குச் சாளரம் தமிழன்பனின் முழு அளவிலான முத்திரை பதிந்த தொகுப்பு. அவரது முன்னைய கவிதை வாழ்வில் இடையில் ஓர் உச்சம். கவிதை பயில விரும்பும் இளைஞர்கள் இந்த உச்சத்தில் ஏறி, இறங்கி, தவறி விழுந்தும் கவிதையைக் கற்றுக்கொள்ளலாம்.

தமிழ்க் கவிதை நூல்களில் இந்த நூல், ஒரு மணி மகுடம். வரலாறும், மெய்யியலும் இந்தக் கவிதைகளுக்கு உரமேற்றி உள்ளன. தமிழ்க் கவிதை நெஞ்சை நிமிர்த்திக்கொள்ள, தலை நிமிர்ந்து பார்க்க இந்தத் தொகுப்பு ஒரு தூண்.

## *கிழக்குச் சாளரம்*

### கதவுகள் - (ஆ)

“நம்மைச் சுற்றிலும், நமக்குள்ளும் எங்கெங்கும் கதவுகள்” என்று தொடங்குகிறார் கவிஞர். “மனிதனைச் சந்தேகித்தவன் கதவு செய்தான்; பிறகு கதவுகளைச் சந்தேகித்தவன் காவல் போட்டான்” என்று எங்கெங்கும் கதவுகள் என்பதை விளக்குகிறார் கவிஞர்.

“கதவுகளுக்காக மரம் வெட்டப்பட்டபோது காடுகள் வெட்கப்பட்டன. மரத்தால் செய்யப்பட்ட பொம்மைகள், தமக்குள் இரத்தம் வடித்தன. குழந்தைகளுக்காகத் காத்திருந்த விளையாட்டுகளும்கூடத் தேம்பி அழுதன. மரம் வெட்டப்பட்ட பொழுது, காடுகளை விட்டுக் காற்றுகள் ஓடின. புழுங்கிச் செத்தன பூக்கள்” என்கிறார் தமிழன்பன்.

“பளிங்கு மனங்கள் பௌர்ணமி அலைகளில் குளித்த வேளையில் மனிதக் கற்பனைக்குள் ஏது பூட்டுகள்?” என்கிறார். “சரித்திரம் சாவிகள் தயாரித்தது. காலத்தின் இடுப்பில் கள்ளச் சாவிகள் குலுங்கின. தயவைப் பதுக்கி, கதவைப் போட்ட கடவுள்தான் முதல் குற்றவாளி” என்கிறார். இப்பொழுது கதவு இறுகிவிட்டது. திறந்து மனிதனைப் பார்க்க முடியாத கடவுள் திண்டாடுகிறார். கடைசியாக இப்படிக் கவிதையை முடிக்கிறார். “கதவு உடைபடும் ஓசை இப்பொழுதும் எமக்குள்ளும் - எங்கெங்கும் கேட்கின்றது” என்கிறார்.

கதவுகள் இல்லாதது ஒரு காலம். அது மேன்மையான காலம். அப்புறம் கதவுகள் எங்கெங்கும் வந்தன. நமக்குள்ளும் வந்தன. அதற்குமேல் பூட்டுகளும் வந்தன. கதவுகளுக்காகக் காடுகள் அழிக்கப்பட்டன. கதவுக்குள் கடவுளும் பூட்டப்பட்டார். நமக்குள்ளும் பூட்டுகள். ஒன்றுக்குமேல், பூட்டை அடுத்து மேலும் பூட்டுகள். இதுவே சரித்திரமும் ஆயிற்று. இனி, பூட்டுகளை உடைத்தாக வேண்டும். கதவுகளைத் தகர்த்தாக வேண்டும். அப்பொழுதுதான் கடவுளை மட்டுமல்ல; வரலாற்றையும் நம்மையும் விடுதலை செய்ய முடியும்.

தமிழன்பனுக்குள் பல திசைச் சிந்தனைகள்; பன்முகப் பரிமாணங்கள்; கவிதைக்குள் செழுமை கூடுகிறது; கவிதைக்குள் வரலாறு வந்திருக்கிறது; கடவுள்மீதுகூடத் தமிழன்பனுக்குக் கருணை பிறக்கிறது.

*கிழக்குச் சாளரம்*

## இறந்தவனை வரவேற்ற இறந்தவர்கள் - (இ)

"புதிதாக இறந்தவன், முன்பே இறந்தவர்களோடு சேர்ந்து கொள்ளச் செல்கிறான்." - இப்படித் தொடங்குகிறது கவிதை. "வாழ்க்கையிலிருந்து விடுபட்ட அவனது முகத்தில் கவலை இல்லை. முகத்திலொரு புன்னகை. அவனைப் பார்த்து முன்பே இறந்தவர்கள் கேட்கிறார்கள், இத்தனை நாளாய் எப்படி இறக்காமல் இருந்தாய்? தூய காற்று இல்லை; நல்ல நீர் இல்லை; எப்படிப் பிழைத்திருந்தாய்?'' என்று கேட்கிறார்கள். ''உழைப்புக்குக் கூலியில்லை; உண்பதற்கு வழி இல்லை; இதுவரை எப்படிப் பிழைத்திருந்தாய்?" என்று கேட்கிறார்கள்.

"மத இனக் கலவரங்களில் எப்படி நீ தப்பிப் பிழைத்தாய்? கட்சியின் கட்டளைப்படி தலைவருக்காக நீ தீக்குளிக்க வில்லையா? கடன் கடலில் மூழ்கி, சாவின் கரையில் நீ ஒதுங்க வில்லையா? உன்னை நம்பினால் மண நாள் வராது என்று ஓடிப் போன உன் மகள், உனக்காக ஒரு முழக் கயிற்றை விட்டுச் செல்லவில்லையா? எப்படி இதுவரை நீ பிழைத்திருந்தாய்? போதை மாத்திரைக்குள் நொறுங்கிய உன் மகன் ஏன் என்னைப் பெற்றாய் என்று உன்னைச் சாகடிக்கவில்லையா?'' இப்படி அவனைக் கேள்விகள் கேட்டுத் துளைக்கின்றனர். செத்து நூறு வயதான கிழவர் ஒருவர் குறுக்கிட்டுச் சொன்னார், "வாழ்க்கை தேடி இங்கு வந்தவனை மறுபடியும் கேள்வி கேட்டுச் சாகடிக்காதீர்கள்!" - இப்படிக் கவிதை முடிகிறது.

வித்தியாசமான கவிதை; முரணில் செழிக்கிற கவிதை. செத்தவர்கள் வாழ்கிறார்கள். உயிரோடு இருப்பவன் செத்தவனாகிறான். சாவதற்கு இங்கு ஆயிரம் காரணங்கள். வாழ்வதற்கான காரணங்கள் இங்கு இல்லை. செத்தவனுக்குத் தான் இங்கு நிம்மதி. இப்படி நம் சூழலைச் சொல்கிறார் நம் கவிஞர்.

"வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம்." கவிதை தெரிந்தவன், இப்படி எதை வைத்தும் ஆழமாகக் கவிதை சொல்லலாம். தமிழ்ச் சூழல் இப்படி நாறித்தான் கிடக்கிறது. இந்த அவமானம் நமக்கும் சேர்த்துத்தான்.

## *கிழக்குச் சாளரம்*

**கலைமகள் வந்தாள் - (ஈ)**

கலைமகள் வழிபாட்டுக்கு அவள் பீடத்திற்குமுன் வைத்திருந்த பொறிகடலை, அவல் எல்லாம் கலைமகளுக்குப் பிடித்திருந்தனவாம்; விளக்கின் கொழுந்திலிருந்து தலையாட்டிக் கொண்டிருந்த அவள், கலப்படக் கர்ப்பூரத்தைக் கண்டு சிரித்துக் கொண்டாளாம்; சரியாக உடைபடாத தேங்காயை மானசீகமாகத் திருத்தி வைத்தாளாம்; இரவிவர்மா படத்திலிருந்து வந்தவள், எத்தனையோ ஆண்டுகளுக்கு முன் மீட்டிய வீணையை மீட்ட விரும்பினாளாம்; முகம் சுளித்துக் கொண்டாளாம்; வெள்ளைத் தாமரையைத் தொட்டபோது, கையெல்லாம் அழுக்குப் படர்ந்ததாம்; அடுக்கி வைக்கப்பட்டு, சந்தனம் குங்குமம் பூசப்பட்ட புத்தகங்கள்மீது அவள் பார்வை படிந்து சென்றதாம்; அவற்றின் பக்கத்தில் கருவிகள் சில. மண்வெட்டியைக் கண்டவள், அதைக் கையில் எடுத்துக் கொண்டு பக்கத்தில் உள்ள காட்டின் மேட்டைக் கரைக்கப் புறப்பட்டாளாம்.

இரசித்து மகிழத்தக்க கற்பனை. நம் சிந்தனையைக் கிளறுகிற கவிதை. எல்லாமே ஏறுமாறாக இருக்கிற சூழல். கல்விக்கு இங்கு மரியாதை இல்லை. எல்லாமே காடு மேடாகக் கிடக்கிறது. கலைமகளுக்கு இப்போது வீணை வேண்டாம். பழைய பாட்டும் வேண்டாம். மண்வெட்டியை எடுத்துக்கொள்கிறாள். காடுமேடுகளைத் திருத்துவதுதான் இன்று நமக்குத் தேவைப்படும் கல்வி. எங்கும் கோணல் மாணல்கள். அகத்திலும் புறத்திலும் எல்லாவற்றையும் வெட்டிச் சரிப்படுத்த வேண்டும். கலைமகள் விழா என்பதற்கு, இதுதான் அர்த்தம். கவிதையும்,

தமிழன்பனின் கவிதையிலிருந்து எடுத்துக்கொள்வது மண்வெட்டியைத்தான்.

## கிழக்குச் சாளரம்

### சேயானாள் ஒரு தாய் - (உ)

கதைக் கவிதை இயற்றுவதில் தமிழன்பனின் தனித்திறன் குறித்துச் சொல்ல வேண்டியதில்லை. இந்தக் கவிதையிலும் ஒரு கதை சொல்கிறார். கதைக் கருவினுள் உணர்வேற்றிச் சொல்கிறார். அவை நம் நெஞ்சைக் கலங்க வைக்கும்; கரைய வைக்கும்.

தாய் இறந்த மூன்றாம் நாள், இடுகாட்டில் பால் ஊற்றுவதற்காக மகன் வந்திருக்கிறான். தாய் மரணம் குறித்துப் பெரிதும் வருந்துகிற மகன் அவன். அவனுக்கு ஆறுதல் சொல்வதுபோலத் தாய் பேசுகிறாள், இந்தக் கவிதையில். உன்னோடு நான் இணைந்துவிட்டேன். உனக்குள்ளும், உன் சந்ததிக்குள்ளும் வாழ்கிறேன். நான் இறந்துவிட்டேன் என்று நீ கலங்க வேண்டாம் என்கிறாள் இந்தக் கவிதைத் தாய்.

"எனக்கென உன் விழிகளில் நீர் இருக்கும்வரை மரண வெப்பம் என்னை, என்ன செய்துவிடும்?" என்கிறாள் தாய். "பாசம் பயிரிட்டுத் தந்த தாலாட்டுகளை நான் பாடினேன். அந்தப் பாடல்கள் உன் நரம்புகளுக்குள் இருக்கும்வரை நான் எப்படிச் சாவேன்? உன்னை வளர்க்கும்போது ஒத்தி வைத்திருந்த என் தூக்கங்களில் நான் கனவாக இருக்கிறேன். தாய்மை எனக்குள் சுரந்த பாலின் கடைசிச் சொட்டு உனக்குள் கலக்கும் முன்பே, உனக்குள் நான் முழுதாய்க் கரைந்து போனேன். உன் சுவாசத்தோடு நானும் கலந்திருக்கிறேன். காலதேவன் என்னிடமிருந்து எதை எடுத்திருக்க முடியும்? உனக்குப் பின்னிய கம்பளிச் சட்டையின் கடைசி இழையில் என் வாழ்க்கையின் கதகதப்பையும் வைத்துப் பின்னியுள்ளேன். நிலாப்பொழுது களில் நான் சொன்ன கதைகளை நீ மறந்திருக்கலாம். ஆனால், உன் மகனுக்கு அவன் அம்மா

சொல்லும் கதைகளில் நான் இருப்பேன். எவ்வளவு நேரம் நீ இங்கே நிற்பாய்? பாலை ஊற்றி விட்டுப் புறப்படு" என்று முடிக்கிறாள் தாய்.

மனிதர்கள் சாவதில்லை. தம் குழந்தைகளுக்குள் மனிதர்கள் வாழுகிறார்கள். குழந்தைக்குக் கற்றுக் கொடுத்த கதைகளுள்ளும், பாடல்களுள்ளும் வாழுகின்றார்கள். தாய், தன் மகனுக்குத் தந்த பாலின் வழியே, தன் மகனுக்குள் வாழுகிறாள். அன்பு வீணாவதில்லை. ஆன்மா அழிவதில்லை என்பது இங்கும்தான் உண்மை. தாய், தன் மகனுக்குச் சொல்லும் உண்மை ஆயிரம் ஆண்டுகளாக நம் மரபின் வழியே வந்த கதைகள். அவற்றுக்கும் சாவு இல்லை. இப்படித்தான் மரபை-நம் முன்னோர்களை நமக்குள் தரிசிக்கிறோம். அவர்கள் நம் வழியே வாழுகிறார்கள். கவிதையாய், கற்பனையாய், அன்பாய், ஆற்றலாய் வாழ்கிறார்கள். கவிஞன் எளிதாகப் புரிந்து கொள்கிறான் இந்த உண்மையை. கவிதையும் தாய்மையும் நெருக்கமானவை. இந்த மரபைக் கண்டறிந்து, நமக்குள் பதிய வைப்பதற்குக் கவிஞன் வேண்டும். புதியவை விளைவ தில்லையா என்ற கேள்விக்குப் பதிலென்ன? மரபிலிருந்து புதுமை விளைகிறது. மரபை மறுக்கிறபோதும், மரபு ஒதுங்கி நின்று நமக்கு ஒத்துழைக்கிறது; உரம் தருகிறது. "எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவு" என்பதும் நம் மரபு.

## *கிழக்குச் சாளரம்*

**மற்றவர்கள் - (ஊ)**

நம் வாழ்க்கையைத்தான் நாம் வாழ்ந்து கொண்டிருப்பதாக நாம் கருதுகிறோம். கல்வியை, தொழிலை, உடைகளை, அழகு சாதனங்களை நமக்காக நாம்தான் தேர்ந்தெடுத்துக் கொள்வதாக நினைத்துக் கொள்கிறோம். நம் அறிவை, நம் தேர்வை நாமே பாராட்டிக் கொள்கிறோம். குழந்தைகளை, மாணவர்களை நம் விருப்பப்படி வளர்ப்பதாக நாம் நினைத்துக்

கொண்டிருக்கிறோம். ஆனால், கவிஞர் எப்படிச் சொல்கிறார் என்று பார்ப்போம்.

“எனது பகலைச் செதுக்க உளி அவர்கள் கையில். என் தூக்கத்திற்கு அவர்களே கனவு தயாரிக்கிறார்கள். எனது நடையை, உடையை, என் மீசையைக்கூட அவர்கள் தயாரிக்கிறார்கள். என் கண்களிலிருந்து என்னைப் பற்றி நோட்டம் விடுவதும் அவர்களே. என் பயணத்தை அவர்கள் தான் தீர்மானிக்கிறார்கள். அவர்கள் தீர்மானித்தபடி நான் நடக்கிறேன். என் சிறகுகளுக்குத் திசைகளை அவர்களே வகுக்கிறார்கள். என் தனிமைக்குள்ளும் அவர்கள் கதவு வைத்திருக்கிறார்கள். அவர்களது அபிமான நடிகரை என் சுட்டு விரல் கொண்டு அவர்கள் காட்டுகிறார்கள். இப்படி என்னைப் பற்றிய எல்லாவற்றையும் அவர்களே தீர்மானிக்கிறார்கள் என்றபோதிலும், எனக்குள் நான் ஒரே இடத்தில் ஒட்டிக் கொண்டிருக்கிறேன். அவர்களை எனக்குள்ளிருந்து அகற்றும் முயற்சியில் என்னை நானே எனக்குள்ளிருந்து வெளியேற்றிக் கொண்டால், எனக்குள் தொடராது” என்று முடிக்கிறார் கவிஞர்.

‘அவர்கள்’ என்று கவிஞர் சுட்டுவது, யாரை என்று நாம் எளிதாகப் புரிந்துகொள்ள முடியும். அவர்கள் என்னை ஆக்கிரமித்திருக்கிறார்கள் என்ற ஒற்றைப் பரிமாண உணர்வு மட்டுமே எனக்குள் உயிராய் ஒட்டிக் கொண்டிருக்கிறது. இந்த ‘நான்’ என்ற உணர்வை முற்றாக நான் இழந்துவிட்டால், அப்புறம் எனக்குள் தொந்தரவு இருக்காது. ஆனால் இது சாத்தியம் இல்லை. மிஞ்சியிருக்கிற இந்த உணர்விலிருந்து தொடங்கி, அவர்களை எனக்குள்ளிருந்து வெளியேற்றி, அவர்கள் வசப்படுத்திக்கொண்ட உலகை நான் கைப்பற்றிக் கொள்ள வேண்டும்.

அவர்கள் ஆதிக்கவாதிகள். என்னை, அவர்கள் விருப்பப்படி தயாரிப்பதன் மூலமே, அவர்கள் தமது உலகைப் படைத்துக் கொள்கிறார்கள். அவர்களின் உலகுக்குள் என்னை அடிமையாய் வைத்திருக்கிறார்கள். உண்ணக் கொஞ்சம் உணவு, பருகக் கொஞ்சம் நீர், சுவாசிக்கக் கொஞ்சம் காற்று என அனுமதித்து, என்னை அவர்கள், தமக்கு அடிமையாக வைத்திருக்கிறார்கள்.

என்னை நானே விடுவித்துக்கொள்ள, அவர்களை, நான் அழித்தாக வேண்டும். அவர்களால் கறைபட்ட உலகைத் திருத்தியமைக்க வேண்டும். இப்படித்தான் நான் எனக்கான உலகைப் படைத்துக்கொள்ள வேண்டும். இப்படி நமக்குள் தூண்டுதலை எழுப்புகிறார் கவிஞர்.

வரலாறும் மெய்யியலும் கவிஞருக்குள் கைகோத்துக் கொண்டிருக்கின்றன. இங்கு இப்படிக் கவிதை அற்புதம் நிகழ்த்தியிருக்கிறது. எவ்வளவு ஆழ்ந்த உண்மைகளைக் கவிஞர் நமக்குள்ளிருந்து கண்டெடுக்கிறார்!

## *கிழக்குச் சாளரம்*

**தன் பிணத்தை,**
**தான் தொட்டுப் பார்க்கையில்... - (எ)**

"மரணம் நெருங்கிக் கொண்டிருக்கிறது. வளர்ச்சியை, முன்னேற்றத்தை வளைத்துப் போட்டவன், தான் விலக்கி வைத்த வாழ்க்கையிடம் ஒரு முறை பேசிப் பார்க்க விரும்புகிறான். உலராத இரத்தத்தில் கிடக்கும் மேடுகளை விலக்கிக்கொண்டு ஓடுகிறான். கழிந்த மூச்சுகளைக் கடந்து செல்கிறான். காற்றில் அறையப்பட்ட அலறல்களைக் கடந்து செல்கிறான். இறுதியாக, அவன் தன் வாழ்க்கையைப் பார்த்தான். அது எழுந்து வரவில்லை. சட்டென்று தொட்டுப் பார்த்தான். சில்லிட்டு இருந்தது. அது எப்போது செத்ததோ?" என்று முடிக்கிறார் கவிஞர்.

வளர்ச்சி என்றும் முன்னேற்றம் என்றும் ஓயாது அலைந்தவன், தனக்குள் எப்போதோ செத்துப் போனான்; காற்றை அவன் மாசுபடுத்தினான்; பிறர் இரத்தங்களைச் சுண்ட வைத்தான்; உடல்கள்மீது ஏறி நடந்தான்; இதற்கெல்லாம் வளர்ச்சி என்று பெயர் சொன்னான்; முன்னேறியதாக முழக்க மிட்டான். தனக்குள் செத்த, தனது வாழ்க்கையின் பிணத்தை இத்தனை நாள் சுமந்துகொண்டுதான் இவன் நடந்தான். கவிஞர் நன்றாகத்தான் சொல்கிறார். முரணில் சிறக்கிறது கவிதை.

## கிழக்குச் சாளரம்

### அடுத்து வருபவர்களால் ஆற்றிக்கொள் - (ஏ)

வீட்டைக் காலி செய்துவிட்டுப் போகிறவர்களைப் பார்த்துக் கவிஞர் சொல்கிறார். "முடிந்தால் உங்கள் புன்னகைகளை இங்கே மாட்டி வைத்துவிட்டுப் போங்கள்" என்கிறார். "அடித்த ஆணிகளிலிருந்து நீங்கள் மாட்டிய படங்களைக் கழற்றுவதில் பிழையில்லை. ஆனால் அந்த ஆணிகளில் உங்கள் காயங்களை மாட்டிவிட்டுப் போகாதீர்கள்" என்கிறார்.

''சந்தேகங்களால் - சண்டைகளால் உடைந்து சிதறிய உங்கள் அமைதியைப் பத்திரமாகக் கொண்டுபோய் வைத்தியம் பாருங்கள் என்கிறார். அறைக்கதவின் தாழ்களைக்கூட, பிடுங்கிப் பையில் போட்டுப் போகிறீர்கள். அப்படியே அடுத்தவர் பற்றிப் பேசிய அவதூறுகளைச் சுவர்களின் காதுகளிலிருந்து சுரண்டி எடுத்துச் செல்லுங்கள் என்கிறார். மின் குமிழிகளை எடுத்துச் செல்லும் நீங்கள், வருபவர்முன் கண் திறக்கக் காத்திருக்கும் கொல்லை அரும்புகளை விட்டுவைக்கக் கூடாதா? கடன்காரர்களின் கால் செருப்பால் புண்ணாகிவிட்ட வாசற்படியில் சொல்லி வையுங்கள், அடுத்து வருபவர்களால் ஆற்றிக் கொள்ளும்படி."

வீட்டின் சொந்தக்காரர்களுக்கும் குடியிருப்பவர்களுக்கும் உறவில் எப்போதும் உரசல் உண்டுதான். சந்தேகமில்லை. ஆனால், இந்தக் கவிதையில் வீட்டுச் சொந்தக்காரரை நல்லவராகவும், குடியிருந்தவரைக் குறை சொல்பவராகவும் கவிஞர் சித்தரிக்கிறார். குடியிருந்தவர் பார்வையிலிருந்தும் கவிஞர், இன்னொரு கவிதை எழுதிப் பார்க்கலாம்.

உறவு, சிக்கலாகும்போது விலகிக்கொள்வதுதான் அறிவுடைமை. தவிர, உடைமைக்கு எப்பொழுதும் தனிப்புத்தி உண்டு. சற்று வித்தியாசமான கவிதை. கவிதைக்குள் புதிய கருப்பொருளைத் தொடர்ந்து கொண்டு வருகிறார்.

## *கிழக்குச் சாளரம்*

### விலைபோகும் தலைகள் - (ஐ)

ஒரு வேடிக்கையான கவிதை; எனினும் உண்மை சொல்லும் கவிதை. யதார்த்தத்தை இப்படி நவீனத்துவப் பாணியில் சொல்வது, இன்று யதார்த்தத்தின் உண்மை சொல்வதாகவும் இருக்கிறது. தட்டிப் பார்த்து, தரம் பார்த்துத் தேங்காயை வாங்குகிறோம். அதேபோல், எந்தத் தலை எதற்குப் பயன்படும் என்று இன்று பேரம் பேசித் தலைகளை வாங்குகிறார்கள் என்று கவிஞர் தொடங்குகிறார்.

குயுக்தி, தந்திரம் படிந்த தலைகள், முதலாளிகளுக்கு; எண்ணும் எழுத்தும் பழுத்த தலைகள், அலுவலகங்களுக்கு; மாயம், சூது தெரிந்த தலைகள், கட்சிகளுக்கு; சில தலைகள், மஞ்சள் பத்திரிகைகளுக்கு; கனவுத் தோட்டத்தைக் கபாலத்தில் வளர்க்கும் தலைகள் சினிமாக்களுக்கு.

இப்படி நல்ல விலைக்குத் தன் தலைகளை விற்றவர்கள் காசு பணம் சேர்த்தார்களாம்; காடு தோட்டம் வாங்கினார்களாம்; இன்னும் வந்த விலைக்குத் தம் தலையை விற்றவர்கள் பல பேர். தலையோடு இருப்பவர்கள் பட்டபாடு கண்டு, சில தலைகள் பரிதவித்தன. சில கெட்டிக்காரர்கள் மற்றவர்கள் தலையையும் சேர்த்து விற்று, பணத்தைத் தம் கணக்கில் போட்டுக் கொண்டார்கள். ஆனால் விலை போகாத் தலையை உடையவர்கள் வீதி கூட்டுகிறார்கள்; விறகு வெட்டுகிறார்கள்; வயல் சேற்றில் புதைகிறார்கள்; பள்ளிகளில் பாடம் நடத்துகிறார்கள்; இலக்கியம் எழுதுகிறார்கள்; இப்படிக் கவிதையை முடிக்கிறார்.

தலைகளின் வணிகம் இங்குச் சிறப்பாகத்தான் நடைபெறுகிறது. தலை, சிலரை அரியணையில் அமர்த்துகிறது; சிலரைப் பள்ளிகளில் வீழ்த்துகிறது; நல்லது சிந்திக்கும் தலைகளுக்கு இங்கு வேலை இல்லை; வேடிக்கையான கவிதை; ஆனால் உண்மை சொல்லும் கவிதை.

# *கிழக்குச் சாளரம்*

## நிபந்தனை - (ஓ)

"அவர், இவர் என்று ஆட்களைப் பற்றி, உதட்டைத் திறந்து என்னிடம் பேச வராதீர்கள் என்கிறார் கவிஞர். பூக்களைப் பற்றிப் பேசத் தெரிந்தால் வாருங்கள். நம் நேரமும் மணக்கும். அன்றியும் பொய் சொன்னதாய்ப் பூக்களைப் பற்றிக் குறை சொல்ல முடியாது" என்கிறார்.

கவிஞர் தொடர்கிறார்: "நல்லபடி தொடங்குவீர்கள், நாலாவது வாக்கியத்தில் முட்களைப் போட்டு மூடி வைப்பீர்கள். வானவில் பற்றி உங்களிடம் வார்த்தைகள் உண்டா? அப்படியானால் அள்ளி வாருங்கள். நம் உரையாடல், வண்ணங்களால் மின்னும்; அன்றியும், கட்சி மாறியதாய் அவற்றின்மீது களங்கம் கற்பிக்க முடியாது. இதேபோல் அவர் இவர் என்றும், அறிவாளி என்றும் தொடங்கி, அப்புறம் ஆழமாய்க் குழி வெட்டுவீர்கள். நிலாவை, சூரியனைப் பற்றிப் பேசுவதானால் வாருங்கள். நமக்கும் ஒளி கிடைக்கும்; அன்றியும், அவை ஊழல் செய்ததாய், நம்பியவர்களை நட்டாற்றில் விட்டதாய்ப் பேச முடியாது" - என்கிறார் கவிஞர். இறுதியில் இப்படிக் கேட்கிறார், "அருவியை, நதியை, கடலை அறிவீர்களா? நம் அனுபவ நரம்பு குளிரும்" என்கிறார் கவிஞர்.

எனக்குப் பேசிக்கொண்டிருக்கப் போதுமானவை மலை, வானம், சூரியன், அருவி, நதி, கடல்கள் என்று முடிக்கின்றார்.

வஞ்சகர்களிடம், தந்திரசாலிகளிடம் என்ன மனிதத் தன்மை இருக்க முடியும்? வானம் என்றும், நதி என்றும், கடல் என்றும் பேசுபவர்களிடம் வஞ்சகம் இருக்க முடியாது; தந்திரம் இருக்க முடியாது; அவர்கள் நிலாவிடமிருந்து ஒளி பெற்றவர்கள். மலர்களிடமிருந்து மணம் பெற்றவர்கள். அருவிகளிடமிருந்து குளிர்ச்சி பெற்றவர்கள். அவர்களோடுதான் நமக்கு உரையாடல் சாத்தியம்.

அழகியல் தோட்டத்தில் ஒரு முக்கியமான கவிதை என்று இதைக் குறிப்பிடலாம். மனிதர்களுக்குள் மலர்களும், நதிகளும், வானமும், கடலும் இயங்க வேண்டும்; இவர்கள்தான் மனிதர்கள்; இவர்கள்தான் கவிஞர்கள்.

## *கிழக்குச் சாளரம்*

### எது அழகு? - (ஒ)

“திசைகளைத் திறந்துகொண்டு வந்த அழகு, ஓர் அரும்பைத் திறக்கும் அரூப விரல்களைக் கண்டு அதிசயித்தது” என்று தொடங்குகிறார் கவிஞர். கண்ணுக்குத் தெரியாமல் அரும்பு மலருவதைக் கவிஞர் இங்குக் குறிப்பிடுகிறார்.

“தண்ணீர் முடிச்சுகளை அவிழ்த்துக்கொண்டு கரைக்கு வந்த அழகு, முற்றுப்புள்ளியாய் முதிர்ந்து கிடக்கும் மணல்களைக் கண்டு அதிசயித்தது. கிளைகளிலும், நிழல்களிலும் அழகைக் கண்ட கவிஞர்கள், வேர்கள் வெளிப்படுத்தாத பேரழகை பூமிக்குக் கீழே இப்போது விசாரிக்கிறார்கள்'' என்கிறார். கிளைகளைக் காட்டிலும், நிழல்களைக் காட்டிலும் வேர்களின் அழகு பேரழகு. வேர்களுக்கு அடியில் உள்ள மண்ணின் அழகு இன்னும் அதிக அழகு.

வார்த்தைகளில் சந்தம் சொட்டச் சொட்ட வடிக்கும் கவிதையின் அழகு, ஒரு ஞானியின் மௌனத்தின் முன் உடைந்து சிதறியது. “வார்த்தைகளைக் காட்டிலும் மௌனத்தின் அழகு பேரழகு” என்கிறார்.

“அழியும் அழகு உண்மை அழகு அல்ல” என்கிறார். “அழியாத சத்தியத்தின் நெற்றியில் எது திலகமாய்ச் சுடர்கிறதோ அதுவே பேரழகு. ஆன்மாவின் முற்றத்தில் ஒரு தெறிப்புக்கு எது பூரணத்தைப் போதிக்கிறதோ, அதுவே அழகு'' என்று முடிக்கிறார்.

இங்கெல்லாம் அழகு பற்றிப் பேசும்பொழுது ஆன்மா என்றும், பூரணத்துவம் என்றும், அழியாதது என்றும், சத்தியத்தின் வெற்றி என்றும் கவிஞர் குறிப்பிடுவதை நாம் கவனிக்கிறோம். அலைகளின் அழகைக் காட்டிலும் மணல்கள் அதிக அழகு; கிளைகளைக் காட்டிலும் வேர்கள் அதிக அழகு; வார்த்தைகளைக் காட்டிலும் மௌனம் பேரழகு; கவிஞரின் ‘அழகு’ தேடல் நமக்கு வியப்பளிக்கிறது. ஆன்மிகம் என்று இவர் வெளிப்படையாகப் பேசவில்லை. ஆனால் பூரணத்துவம் என்கிறார்.

*கிழக்குச் சாளரம்*

**எப்போதும்**

**எதையாவதும் - (ஔ)**

அனுபவங்கள் நமக்குத் தேவை என்பதைத் தொடர்ந்து வற்புறுத்துகிறார் கவிஞர். ஏதாவது ஓர் அனுபவம் நமக்கு எப்பொழுதும் இருக்கட்டும் என்கிறார். அனுபவங்கள் மூலம் தான் வாழ்க்கை என்றால், அனுபவங்களை இடைவிடாமல் நாம் வரவேற்கத்தான் வேண்டும் என்கிறார். கவிஞர் என்ற முறையில் அதை இப்படிச் சொல்கிறார். அனுபவங்களுக்கும் அனுபவம் வாய்க்கட்டும் என்கிறார். அதாவது, நமக்காக மட்டுமே நாம் வாழ்ந்து கொண்டிருக்க வேண்டாம்; பிறருக்காகவும், பிறர் நம் மூலம் பெறும் அனுபவங்களுக்காகவும் நாம் வாழத்தான் வேண்டும் என்பது, தமிழன்பன் கருத்தாக இருக்கலாம். பிறரும் தம் வாழ்க்கையை நம் மூலம் வாழ இடம் கொடுப்பதும், நமக்கு ஓர் அனுபவம்தான். வள்ளுவர் இப்படிக் கூறியிருக்கிறார்: 'தன்னை அகழ்பவரையும் தாங்குகிறது நிலம்.' இப்படி இடம் கொடுத்துத்தான், தான் நிலமாகியிருக்கிறது. தாய் தன் மகனுக்கு, அவன் தரும் தொல்லைகளுக்கு இடம் கொடுத்துத்தான் தாயாகிறாள். முன்பொரு கவிதையில் - தமிழன்பன், 'இடம் மாறி வாழ்ந்து பார்' என்று கூறினார். அதன் தொடர்ச்சிதான் இந்தக் கவிதை. அழகியலை இப்படியும்தான் நாம் கற்றுக்கொள்ள வேண்டும்.

கவிஞர் தொடர்கிறார்: "கெட்டது என்று ஒன்றில்லை. அதையும்தான் வாழ்ந்து பார்க்க வேண்டும். மறுமுறை வரும் பொழுது அது நல்லதாகவும் வரலாம்" என்கிறார். 'கேட்டினும் உண்டோர் உறுதி' என்று கூறிய வள்ளுவர் வாய்மொழிக்குக் கவிஞர் இங்கு அர்த்தம் சொல்கிறார். வாழ்க்கையை எவ்வளவு விரித்துப் போடுகிறார் கவிஞர்! நதிக்கு ஓட்டம் அனுபவமாகிறது; ஓட்டத்திற்கு நதி அனுபவமாகிறது; கவிஞனை அனுபவிக்காமல், அவனைப் பற்றிக் கவிதை என்ன பேசும் என்று கேட்கிறார்? "பறப்பதைச் சிறகு மட்டுமா அனுபவிக்கிறது? ஆகாயமும் கூடத்தான் என்கிறார். கசப்பைக் கைவசம் வைத்திருக்கும் வேப்ப மரம்கூடப் பனியை, மழையை, நிலாவை

நுகர்கிறது'' என்கிறார். ''நிலாவும் வேப்ப மரத்திற்கு அனுபவமாகிறது'' என்கிறார். கசப்போடு நாம் இருந்தால் மற்றவர்கள் குளிராய், ஈரமாய் அனுபவப்படுவார்கள். இன்பத்தில் இருந்தால் ஓர் அனுபவம்; துன்பத்தில் இருந்தால் இன்னோர் அனுபவம். இறுதியாய் இப்படி முடிக்கிறார். கடைசி நேரத்தில் ஓட்டைகளை அடைப்பதற்கு ஏதாவது இருக்க வேண்டும் என்கிறார்.

கசப்பான அனுபவங்களும் வாழ்க்கைக்குத் தேவைதான். தவிர்க்க முடியாத துயரங்கள் நேரும்பொழுது, வாழ்க்கையே சோகம் என்று சொல்வதுகூடத் தேறுதற்கு ஆன முயற்சிதான். ஓட்டையை அடைக்கிற முயற்சிதான்.

வாழ்வில் ஏற்ற இறக்கங்கள் தேவைதான். வெற்றியும் தோல்விகளும் வாழ்க்கைக்குத் தேவைதான். தோல்வியிலிருந்து கற்றுக்கொள்ளத்தான் வேண்டும். ஊனங்கள் நம் வாழ்வை அழிக்க வேண்டியதில்லை. அழகின்மையைக்கூட ஓர் அர்த்தத்தில் மாலை மாற்றிக்கொள்கிறார்கள் மணமக்கள். கருவுற்ற தாயின் கனாக்களில் நட்சத்திரங்கள் மின்னுகின்றன.

கவிதையில் இன்னும் ஓர் அடுக்கு. மாத இறுதி; கடன் தர ஆளில்லை. எனது நேரம் தீப்பிடித்து எரிகிறது. பாதைகளை விழுங்குகிறது பூமி. இப்போதும் நினைத்துப் பார் என்கின்றார் கவிஞர். எங்கோ மனிதனின் படகுகளைத் தோளில் சுமந்தபடி பாடுகிறது கடல்; இப்படிச் சொல்லும் கவிஞர், ஒருவேளை இடம் மாறி வாழ்ந்து பார்; இந்த உலகம் எப்படி என்று உனக்குத் தெரியும் என்று முடிக்கிறார் கவிஞர்.

நமது சோகம் நம்மை அடைத்துக் கொள்ள வேண்டியதில்லை. சோகத்திற்கே உலகம் சொந்தமில்லை. நிரந்தரமாய் எந்தச் சோகமும் தங்கி விடுவதில்லை. சோகத்தில் தழும்பேறிய நெஞ்சில்தான் அனுபவங்கள் விரிவடையும். வாழ்க்கை அர்த்தமாகும். இடம் மாறி வாழ்ந்து பார்ப்பதன் மூலமும், நமக்குள் உலகம் விரிவு பெறும். அனுபவங்களில் நம் வாழ்க்கை அர்த்தம் பெறும். வாழ்வின் அழகை, அர்த்தங்களைச் சேகரிக்க வழி சொல்கிறார் கவிஞர். அழகியல் குறித்து மேலும் ஒரு கவிதை. கவிதையில் கனம் கூடத்தான் செய்கிறது.

## கிழக்குச் சாளரம்

### அந்த ஒரு கணம்.... - (க)

மீண்டும் அழகைத் தேடிக் காணும் மனநிலை பற்றி ஒரு கவிதை. அடிக்கடி என்னென்னவோ சிக்கல்கள்; வேதனைகள்; குழப்பங்கள் நம் மனத்தில் வந்து அமர்ந்துகொள்கின்றன. இறுக்கமாய் அமர்ந்துகொள்ளும் இவற்றை விலக்கிப் பார்ப்பது கடினமாகத்தான் இருக்கிறது. இதுபோன்ற சந்தர்ப்பங்களில், நாம் வாழ்க்கையை நொந்து கொள்கிறோம். இயற்கையின் அழகு நமக்குத் தெரிவதில்லை. குழந்தையைக்கூடக் கொஞ்ச முடிவதில்லை. தமிழன்பன் அருமையாகச் சொல்கிறார். இவற்றை முடக்கி வைக்க முடியும் என்றால், அந்தக் கணத்தில் தான் இயற்கையின் அழகு நமக்குள் வந்து இடம் பிடிக்கும். இயற்கையின் அழகுக்கு இடம் கொடுக்கிற நெஞ்சில் கவலைகள் விலகத்தான் செய்யும். இப்போது அவரது கவிதையைப் பார்க்கலாம்.

மூச்சை இறுக்கும் அந்தச் சுமையை ஒருகணம் விலக்கி வைத்தால், இளகும் நெஞ்சில் ஊற்றெடுக்கும் ஒய்வை நாம் பருகலாம் என்று எண்ணிப் பார்க்கிறார்; பறவைகளின் பாடல்களில் மார்பு முளைத்து எனக்குப் பால் சுரக்கும் என்கிறார்; ஆகாயத்தின் அபூர்வக் கிளைகளில் அமரும் சில மலர்கள் என்கிறார்; வானம் என் ஆன்மாவுக்குப் பரிசளிக்கச் சில நட்சத்திரங்களைத் தேர்வு செய்யும் என்கிறார்; பாதை நெடுகப் பருத்திச் சூரியன் எனக்குக் கிரணங்களை நட்டு வைப்பான் என்கிறார்; அண்மையும் சேய்மையும் அந்தக் கணத்தில் ஒன்று சேரும். நான் அடைய வேண்டிய இலக்கு என்னை நெருங்கி வரும் என்கிறார்.

நெஞ்சில் சுமையை வைத்துக்கொண்டு இயற்கையை, வாழ்வை நோவதில் அர்த்தமில்லை. நெஞ்சை, இயற்கை குடி கொண்டிருந்தால் வாழ்வின் கனம் தெரியாது. எது, எதற்கு ஆதாரம்? எது, எதற்கு வழி விடுகிறது என்றெல்லாம் நமக்குள் கேட்டுக்கொள்ளலாம். எனினும், தமிழன்பன் சொல்லும் அந்தக் கணம், ஓர் அற்புதமான கணம்தான் என்பதில் ஐயமில்லை.

அழகைத் தரிசனம் செய்ய விரும்பும் ஒருவரின் தன்முயற்சியைக் கவிஞர் வேண்டுகிறார்.

## *கிழக்குச் சாளரம்*

**அழகின் முகவரி - (கா)**

கொடுமைகளுக்கு எதிராகக் கொடி பிடிக்கும் முகம் சிவந்த சொற்களில், அநியாயங்களின் மார்பில் பாய்ந்து - கொட்டும் குருதியோடு வெளிவரும் கட்டாரிக் கூர்மையில் இருக்கும் அழகு, தம்மிடம் இல்லையே என்று பொறாமையால் வேகும் பூரண நிலவும், பூபாள ஞாயிறும் என்று தொடங்குகிறார் கவிஞர்.

தொடர்ந்து சொல்கிறார், "போலிகளின் முகத்திரை கிழிக்கும் அசல்களின் ஆத்திரத்தில், பொய்களை அம்பலப்படுத்தும் சத்தியத்தின் ஆவேசத்தில் மிளிரும் அழகு தம்மிடம் இல்லை என்பதால், கைகளைப் பிசையும் பிருந்தாவனங்கள், கண்களைக் கசக்கும் மல்லைச் சிற்பங்கள்" என்கிறார்.

"இனம், மொழி, நாடு காக்கும் தியாக வேள்வியில் அவி சொரிந்தவர் முகத்தில் சாவு எழுதிய, சாகாத அழகு ஒப்பனைகள் நெஞ்சில் வெப்பத்தை வளர்க்கும் நிஜங்களின் விசாரணைக் கூண்டில், நிழல்களை நிறுத்தும்; சரித்திரம் ஆகும் அந்த அழகு, தனது சந்ததி என்னும் சங்கிலித் தொடர்ச்சி சட்டென்று அறுந்தால், பிறக்கும் குழந்தைகள் கண்களைத் திறக்கும் நம்பிக்கையோடு. அந்த அழகு, புதிய உதயத்தின் முகத்தில் நம்பிக்கையோடு அமரும்" என்று முடிக்கிறார் கவிஞர்.

பூரண நிலவையும், காலைக் கதிரவனையும் அழகியவை என்று நாம் சொல்கிறோம். இப்படியெல்லாம் அழகுகளை நாம் வரிசைப்படுத்துகிறோம். ஆனால் இவைகளே பொறாமை கொள்ளும். வேறுசில அழகுகள் குறித்து, இந்தக் கவிதையில் பேசுகிறார் கவிஞர். நியாயங்களை நிலைநாட்டுவதற்காக, அநீதிகளை அழித்தொழிப்பதற்காக ஆயுதங்கள் எடுக்கும் பொழுது, நாடு, மொழி, இனம் என்பனவற்றைக் காப்பதற்காகச்

சத்திய ஆவேசம் கொள்ளும்பொழுது, அவற்றுக்காகக் குருதி சிந்தும்பொழுது ஏற்படும் அழகை, 'சாகாத அழகு', 'சரித்திரத்தில் தங்கும் அழகு' என்று கவிஞர் பாராட்டுகின்றார்.

இயற்கையில் காணப்படும் அழகைவிட, நியாயத்திற்காக மனிதர்கள் நிமிர்ந்து நிற்கும்பொழுது, நமக்குள் தெரிவது பேரழகு. வரலாற்றை இத்தகையவர்கள்தாம் படைத்திருக் கிறார்கள். இவர்கள் இப்படி வரலாற்றை வளப்படுத்தவில்லை யென்றால், பிருந்தாவனங்கள் தோன்றியிருக்க முடியாது; மகாபலிபுரத்தில் சிற்பங்கள் அழகு பெற்றிருக்க முடியாது; இவை இரண்டும் முரண்பட்ட அழகுகளாக இருக்க முடியாது; பிருந்தாவனத்தில் மட்டும் அழகு காண்பவனுக்கு - சத்திய ஆவேசத்தின் அழகு தெரியாது; சத்திய ஆவேசத்தின் அழகை தரிசனம் செய்வோர்க்கு மாமல்லபுரத்தின் சிற்பங்களின் அழகு வசப்படும். மனித வரலாற்றைப் படைக்கிற அரசியலையும், அழகியலையும் கவிஞர் இங்கு இணைத்திருக்கிறார். தமிழ்க் கவிதையில் இது ஒரு புது மலர்ச்சி.

## *கிழக்குச் சாளரம்*

### குடை ராட்டினம் - (கி)

குடை ராட்டினம் பக்கவாட்டில் வேகம் கொள்கிறது. மானைத் துரத்துகிறது புலி. புலியிடமிருந்து தப்பித்து ஓடுகிறது மான். புலியின் வேகம் குறையுமா? இரத்தம் பருகுமா? மான் தன் உயிரை இழந்துவிடுமா? நமக்குள் மெல்லத் துடிக்கிறோம். நாம் சிந்திக்கிறோம். ஓடுவதும் தப்புவதும்தான் வாழ்க்கை. நமக்குள் போட்டிருக்கிற விதி, இது ஒரு வளையம்; ஒரு சுழற்சி; புலிக்கு நகமும் மானுக்குத் தசையும் வகுத்த விதி, எதைத் தத்துவப்படுத்துகிறது என்று கவிஞர் தனக்குள் கேட்டுக் கொள்கிறார். குடை ராட்டினம் நின்றது; புலியும் நின்றது; மானும் நின்றது. இவ்விரண்டுக்கிடையிலும் முரண்பாடு; தீராத முரண்பாடு. இவ்விரண்டுக்கிடையில் வந்து நிற்கிறான் குடை ராட்டினக்காரன். உங்களது உயிரோட்டமான ஓட்டத்தை உங்களிடமிருந்து விடுவித்து, நான் எடுத்துக்கொண்டேன்

என்கிறான் குடை ராட்டினக்காரன். கவிதை இத்துடன் முடிந்திருக்கலாம்.

புலி துரத்துவதும் மான் தப்பி ஓடுவதுமாக நமக்கும்தான் வாழ்க்கை அமைந்துவிட்டது. சில சமயம் நாம் புலியாய் இருக்கிறோம்; சில சமயம் மானாய் இருக்கிறோம்; தப்பி ஓடுகிறோம்; அடிபட்டு விழுகிறோம். இப்படியெல்லாம் இயற்கை நமக்கு விதித்திருக்கிறதா? குடை ராட்டினக் காரனுக்குள் இந்த விதி பெற்றுள்ள வடிவம் என்ன? உண்மையில் குடை ராட்டினக்காரனும் இந்த விதிக்குள் அகப்பட்டுவிட்டான். இவனும்தான் இராட்டினத்தைத் துரத்துகிறான். வாழ்க்கை இவனுக்கு வசதியாக அகப்படுகிறதா? இவன் சோகம் பெரியதுதான். இவன் சோகத்தினுள் நம் சோகத்தை நாம் உணர்கிறோம். டார்வினை நினைத்துக் கொள்கிறோம். நப்ப வழியில்லை. வெற்றி கொள்ள நினைக்கிறோம். என்றாவது வெற்றி கொள்வோமா? இப்படிக் கவிதைக்குள் நம்மைச் சிக்க வைக்கும் இதன் தரம் தனிச் சிறப்புடையது.

## *கிழக்குச் சாளரம்*

### இசை - (கீ)

“வாராய், கவிதையாம் மணிப்பெயர்க் காதலி” என்று பாரதி சோகத்தோடு பாடினான். பல மாதங்கள் அவருக்குள் கவிதை சுரக்காதபோது இப்படிப் பாடினார். திருப்பெருந்துறையில் தனக்குக் காட்சி தந்த சிவபெருமானின் கோயில்தோறும் தேடிச் சென்று, இயலாத நிலையில், மாணிக்கவாசகர் சோகத்தோடும் பாடினார். தமிழன்பனுக்கும் இப்படி ஒரு சோகம். தனக்குள் கொஞ்ச காலம் வற்றிவிட்ட இசையைத் திரும்பத் தேடிச் செல்கிறார். ஏன் இப்படி வற்றியது? காரணம் தெரியவில்லை.

“வைகறையை அழகுபடுத்திய இசை, எனக்குள் எப்படி வற்றியது? எனக்கு இது பிடிக்கவில்லை” என்கிறார். என்ன வாழ்க்கை இது என்று நொந்து கொள்கிறார். எனது ஆன்மாவில்

பிரபஞ்சத்தின் ஆழ்ந்த உண்மைகளைப் பிசிறின்றி எழுப்பிக் கொண்டிருந்த இசை, எப்படி வற்றியது என்று கவலைப் படுகிறார்? வாழ்க்கையும் தானும் எதிர் எதிர் வீடுகளில் குடி இருப்பதாக உணர்கிறார். இவர்களைச் சேர்த்து வைக்க யாரும் வரவில்லை. இனி இசையைத் தேடிக் கண்டுபிடித்தாலன்றி, தனக்கு வாழ்க்கை இல்லை; இன்பம் இல்லை; தேடிக்கொண்டே காலத்தின் பின் சென்றால், கால் படும் இடமெல்லாம் மடிந்த இசையின் சாம்பல் என்கிறார். இதயத்திலிருந்த இசைக் கனல் என்ன ஆயிற்று என்று தன்னைத்தானே கேட்டுக்கொள்கிறார். ஆயிரம் இதயங்களின் சடலங்களை விலக்கிக் கொண்டு பின்னோக்கிச் செல்கிறாராம். அங்கங்கே இசை சிதறிக் கிடந்ததாம். இவற்றையெல்லாம் எப்படி ஒதுக்கினேன் என்று கேட்கிறார். தானும்கூடச் செத்து விட்டதுபோல் உணருகிறார். மக்கள் தன்மீது கனலை மூட்டுகிறார்களாம். அலறித் துடித்து எழுவதற்காகத் தன் ஜீவனால் கங்குகளை ஊதினாராம். கங்குகளிலிருந்து கனலாய், இசையாய்த் தான் மீண்டும் பிறந்ததாய்க் கவிதையை முடிக்கிறார்.

இப்பொழுது சிந்திக்கிறோம். இசை இவருக்குள் ஏன் வற்றியது? கடந்தகால நினைவுகளிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டதாலா? தன்னைச் சுற்றிலும் உள்ள ஆயிரம், பல்லாயிரம் உயிர்களின் துடிப்பைக் கேட்கத் தயங்கி, ஒதுங்கி இருந்ததனாலா? இவற்றோடெல்லாம்தான் இசை இயங்குகிறது என்பது கவிஞர் கருத்தாம். தன்னைத்தானே, தன் கடந்த காலத்திற்குள் தேடிச் செல்கிறபொழுது, நாம் மறந்துவிட்ட இயற்கை நமக்குள் எழுகிறது. விலகி வந்துவிட்ட உறவுகள் நமக்குள் சிலிர்த்துக்கொள்கின்றன. நிகழ்காலத்தின் இறுக்கம் நமக்குள் தளர்கிறது. இறுக்கத்தை உதறிக் கொள்ளுகிறபோது, இசையால் நம்மை உயிர்ப்பித்துக் கொள்கிறோம்.

இப்படி அர்த்தப்படுத்திக்கொள்ளத் தமிழன்பன் கவிதை நமக்குள் வழி விடுகிறது. இங்கு இசை என்பது சொற்களால், ஒத்திசைவால் உருவாகிற இசை மட்டுமல்ல; வாழ்வினுள்ளிருந்து கிளம்புகிற ஊற்று. இந்த ஊற்றில் குளித்தெழும்போது, நமக்குள் உயிர்த்தெழுகிறோம்.

# 21

## *என் வீட்டு எதிரே ஓர் எருக்கஞ் செடி*

**வெறுமையில்**
**நிரம்பும்போது... - (அ)**

இந்த மரத்திலிருந்து கதவு செய்யலாம்; நாற்காலி, முக்காலி களும் நமக்குத் தேவைதான்; பழைய புத்தகங்கள் போட்டு வைக்கப் பெட்டி செய்யலாம்; குழந்தைகளுக்கு விளையாட்டுச் சாமான்கள் செய்யலாம்; குழந்தைகள், பெரியவர்கள் ஆனபிறகு இந்த மரப் பொருள்களை வேறு ஏதாவது பயன்படும் முறையில் பயன்படுத்திக்கொள்ள முடியும். இந்த மரத்தை ஆயிரம் வகைகளில் நாம் பயன்படுத்திக்கொள்ள முடியும்.

இவ்வாறு எழுதினால் இது எப்படிக் கவிதை ஆக முடியும்? மரத்திற்குள் இருக்கிறது வெறுமை. அதிலிருந்து ஒரு பொருளைச் செய்யும்பொழுது, மரத்தின் வெறுமை தீர்கிறது. அந்தப் பொருள் பயன்படாதபொழுது, மீண்டும் அங்கு வெறுமை வந்துவிடுகிறது. மனிதனாகிய நான் என்ன செய்ய முடியும்? மரத்தினுள் நுழைந்து அதற்குப் பொருள் தருகிறேன். பொருளின் பயன் முடிந்த பிறகு, மீண்டும் வெறுமை வந்து விடுகிறது. உண்மைதான். மரத்திற்கு மட்டுமல்லாமல், இந்த உலகத்திற்கும்கூட மனிதன்தான் அர்த்தம் தருகிறான். மனிதன் இல்லையென்றால் இவை பொருள்களாக இருக்க முடியாது. இவற்றுக்குப் பெயர்களும் பயன்பாடுகளும் இல்லை. மனிதன்தான் இவற்றுக்குப் பெயரும் அழகும் அர்த்தமும் தந்தான். ஆழ்ந்து சிந்திக்கும்போது, மனிதன் தன்னை உலகின் மையமாக்கிக் கொண்டது இந்தச் சிந்தனை. இதன் காரணமாகப் பிற உயிர்களின்மீது மனிதன் ஆதிக்கம் செய்வதாக, இதன் வரலாறு முடிந்திருக்கிறது. இப்பொழுது ஆதிக்கத்தை நாம் களைந்து கொள்கிறோம். மனிதன் இப்போது மையமில்லை.

மரத்திற்கு எனத் தனி வாழ்க்கை உண்டு. மரமும் இவனுக்கு அடிமை இல்லை. மரம் மனிதனோடு ஒத்துழைக்க முடியும்.

மரத்தின் தனி வாழ்வை, மனிதனுக்கு மதிக்கத் தெரிய வேண்டும். மரம் மனிதனோடு சேர்ந்து விளையாடும். ஆதரவாக இருக்கும். அந்த மரமே நமக்கு மழை தருகிறது. காற்றைத் தூய்மையாக்குகிறது. மரம் நமக்குத் தாய். தமிழன்பனுக்கு என்ன நேர்ந்தது? வேம்பு வெட்டப்பட்டபோது வருந்தியவரல்லவா தமிழன்பன்? மரத்திற்கு வெளியே ஏன் இவர் நிற்கிறார்? மரத்தை ஏன் தனக்குள் உள்வாங்கிக்கொள்ள இயலவில்லை?

*என் வீட்டு எதிரே...*

**வாழ்க்கையின் கடைசிக் காட்சியில்**
**ஒரு நடிகன்... - (ஆ)**

மரணப் படுக்கையில் கிடக்கிறான் அந்த நடிகன். பாத்திரங்களுக்காகத்தான் அவன் ஒப்பனை செய்து கொண்டான். கண்ணீர் விட்டான். பாத்திரங்களுக்காகவே அவன் வாழ்ந்தான். தனக்கென அவன் வாழவில்லை. மரணப் படுக்கையில் கிடக்கும் அவனுக்கு நன்றி சொல்ல, அவனது பாத்திரங்கள் சுற்றிலும் அமர்ந்துள்ளார்கள். "உன் புன்னகையை மனைவிக்குக்கூட நீ தரவில்லை. எங்களுக்குத் தந்தாய்! சுய சோகங்களுக்காக ஒரு சொட்டுக் கண்ணீரைக்கூட, நீ சேகரித்து வைக்கவில்லை" என்று பாத்திரங்கள் பேசுகின்றன. உறவினர்கள் மட்டுமே அவன்முன் இப்போது வந்து நடிக்கிறார்கள். பொய்யாய்ப் புலம்புகிறார்கள். ஆனால், அவனுக்கோ சோகம் எதுவுமில்லை. தன் பாத்திரங்களுடன் இரண்டொரு சொல் பேசிவிட்டு, அவன் தன் ஆன்மாவுக்குள் அடங்கினான் என்று முடிக்கிறார் கவிஞர்.

சிவாஜிகணேசன் மாதிரி ஒருவரை இங்கு நினைத்துக் கொள்கிறோம். கட்டபொம்மனுக்குள், வ.உ.சி.க்குள்-இப்படி எத்தனையோ பாத்திரங்களுக்குள் அவர் வாழ்ந்தார். இன்னும் வாழ்வார். இப்படி அவர் தன்னைக் கரைத்துக் கொண்டிருந்தார். கவிதை சொல்கிறது, "நடிகர் தனக்காக ஒப்பனை செய்து கொள்ளவில்லை; அவருக்குள் பாத்திரங்கள் இயல்பாகப்

பொருந்தியுள்ளன என்று. இப்படியெல்லாம் முற்றாகப் பொருந்த முடியுமா? இடைவெளி இல்லையா? தனக்கான உறவுகள், சோகங்கள் இல்லாமல் இருக்க முடியுமா? நடிப்பின் மூலம் எல்லாவற்றையும் வெளியேற்றிவிட முடியுமா? அந்த இடைவெளிக்குள் கவிஞர் ஏன் நுழையவில்லை? இப்படி யெல்லாம் நமக்குள் கேள்விகள் எழுகின்றன. எப்படியோ கவிதை, தன் பணியை இங்குத் தொடங்கவில்லைபோலத் தெரிகிறது.

## *என் வீட்டு எதிரே...*

## **பிளிறி வந்த களிறு - (இ)**

“களிறு பிளிறியது; தூரத்து மலைகளும் துணுக்குற்றன. அங்குசக் கூடாரங்கள் பற்றி எரிந்தன. அதன் தந்தங்கள் கிழக்கைப் பிளக்கும் என்று மக்கள் நம்பினர். முரசுகள் முழங்கத் தயாராக இருந்தன.”

“மேளதாளங்கள் அதன் மனத்தைத் தடவிவிட்டன. புத்தாடைகள், வேகத்தடைகள் ஆயின. ஆலய வாசலில் அதற்கு மாலையிட்டனர். பட்டு முகபடாம் போர்த்தினர். அண்டா அண்டாவாய் நெய்ச்சோறு வந்தது. காதுகள் விசிறியாய் வீசி, அதன் ஆத்திரம் தணித்தன. துதிக்கையில் சிக்கியிருந்த பகை நழுவியது. இலட்சியம் நெகிழ்ந்தது. அகலப்பட்டையில் மணிகள் தைத்து அதன் கழுத்தில் போட்டனர். பிளிறல் மாறிவிட்டது. தொடர்ந்து அதன் கால்களில் கனத்த சங்கிலி கள், கோபத்தின் சாம்பல் அதன் அக்கம் பக்கம் பரவியது. இப்பொழுது அசைவுகள் இல்லை. பாறை ஒன்று உடம்புக்குள் புகுந்து அதன் வடிவில் தன்னைக் கருத்தரித்துக் கொண்டது. பிறகு ஒரு நாள், காலம் தொட்டுப் பார்த்தது. யானை செத்துப் போயிருந்தது!”

நம் எல்லோருக்கும் தெரிந்த கதைதான் இது. அரசியல் இயக்கங்கள் புரட்சிகரமான முழக்கத்தோடு கிளம்பி வந்து அரியணை கிடைத்தவுடன், அதன் சொகுசில் தன்னை இழந்து

போகின்றன. எல்லா இயக்கங்களும் இப்படியே. தமிழகத்தின் சோகம் சொல்லி முடியாது. தேர்தல், அரசியல் எல்லோரையும் விழுங்கிவிடுகிறது. தமிழன்பன் குறியீட்டுக் கவிதையில் அழகாகத்தான் கதை சொல்லியிருக்கிறார்.

## *என் வீட்டு எதிரே...*

**ஆழங்களில் வாழும்போது... - (ஈ)**

“கடல்களின் ஆழத்தை அறியப் போனபோது, எனக்குக் கைகளும் கால்களும் நீண்டுவிட்டன” என்று தொடங்குகிறார் கவிஞர். “என் வளர்ச்சிக்குக் கடல் தேவை என்பதை அப்போது அறிந்தேன். என் கைகளில் சிக்கிய திசைகளில் எத்தனையோ சூரியன்கள்'' என்கிறார். “கர்ப்பத்திற்குள் கடல் என்னை அழைத்தது” என்கிறார். “ஓர் உயிரணுவாய் உதிர்ந்துவிட்டேன் அதனுள்” என்கிறார். “கடல் என்னை ஒளியாய் மறுபிரசவம் செய்தது” என்கிறார். “நான் மொழியை மறந்தேன். என்னிடம் இப்போது சந்தேகங்கள் இல்லை. ஆழத்திலிருந்த மௌனங்களை இப்பொழுது நான் பாடுகிறேன்” என்கிறார். “கடலின் மார்புக் கூட்டிற்குள் நகருகிறேன். சிப்பிகள் என்னை நிரப்பிக் கொள்கின்றன. இன்பத்தில் நிறைந்திருக்கிறேன். தூண்டில்களுக்குப் பேட்டி கொடுக்க எனக்கு நேரமில்லை.”

“என்னை எதிர்பார்த்துக் கரையில் காத்திருக்கிறது மரணம். மரணமும் நரைத்துத் தளர்ந்து போயிற்று” என்று கவிதையை முடிக்கிறார்.

‘கவிதையின் ஒரு பாய்ச்சல்’ என இந்தக் கவிதையைக் குறிப்பிட முடியும். கடலுக்குள் தான் கரைந்து போனதை, கவிஞர் இங்குச் சொல்கிறார். கடல் இங்கே ஒரு குறியீடு. இயற்கைக்குள், பிரபஞ்ச இயக்கத்தினுள், வரலாற்றினுள், எதனுள்ளும் நாம் கரைந்து போக முடியும். கடல் ஒரு தாயாய்க் கவிஞரை வாழ வைக்கிறது. இப்படியே இயற்கையும் வரலாறும் நம்மைத் தாயாய்க் காத்து நிற்கும் நமக்குச் சில இரகசியங்கள் சொல்லும். நமக்குக் கவிதைகள் தரும். நமக்குள் ஒளியேற்றும்.

நமக்கும்தான் மரணம் இல்லாமல் போகும். நம் புலன்களை, நம் பார்வையை, நம்மை விரிவு செய்துகொள்ள இதுவே நெறி. கவிதை வழியேதான் இந்த நெறி நமக்குள் தட்டுப்படும். நமக்குள் இருக்கும் கவிஞனைத் தேடிச் சென்றால்தான் இயற்கையாய், வரலாறாய், பிரபஞ்சமாய் நாம் விரிவு பெற முடியும்.

*என் வீட்டு எதிரே...*

**கதவைத் திறக்க**

**- இந்தக் கவிதையைத் தவிர.... - (உ)**

"பழக்கப்பட்ட வாழ்க்கை மீட்ட முடியாத பாடலாயிற்று. மலைகளைத் தகர்க்க, கிளர்ச்சி செய்யத்தான் வேண்டும். இவன் மாவீரன். மலைகளைத் தகர்க்கக் கிளம்பினான். துரைத்தனம் துப்பாக்கிகளை நீட்டியது. சட்டத்தின் முன்னிலையில், நீதிபதியின் கண்களில் இவனொரு தீவிரவாதி. மக்களுக்காக இவன் குரல் கொடுத்தான். பாலங்கள் தகர்ந்தன; வண்டிகள் தடம் புரண்டன; இங்கெல்லாம் அரசாங்கம் அவன் பெயரையே எழுதி வைத்தது. விசாரணையின்போது அவனுடம்பின் காயங்களிலிருந்து பூமியின் இரத்தம் வழிந்தது. அவன் முணகவில்லை. அவனுக்குள்ளிருந்து எச்சரிக்கைகளை எடுத்துப் பேசின பத்திரிகைகள். தட்டிக் கேட்பவர்களுக்கெல்லாம் பதில், சவப்பெட்டிகளில் தரப்படும் என்பதும் அவன் அறிந்த செய்திதான். அவன் இரகசியங்களில் தியாகியானான். இரகசியங்கள் உடைபடும் ஓசை, வரலாற்றின் செவிட்டுச் செவிகளில் கேட்கவேயில்லை. அவன் மரணத்தைத் தாண்டி ஓடி வந்தான். கதவைத் திறந்து, இந்தக் கவிதை அவனை ஏற்றுக் கொள்கிறது" என்று முடிக்கிறார் கவிஞர்.

"யார் இந்த நாயகன்? எங்கிருந்து இவன் கிளம்பினான்? இவன் எப்படி விசாரணைக்கு உட்பட்டான்? இரகசியமாய், எப்படி இவன் கொல்லப்பட்டான்? எங்கே புதைக்கப்பட்டான்? பாலங்களையெல்லாம் இவன்தானா தகர்த்தான்? வண்டிகள் தடம் புரண்டது இவனால்தானா? இவன் பெயரில் எவ்வளவு

குற்றங்கள்? எத்தனைப் பொய்கள்? அரசும் பத்திரிகைகளும் செய்வது என்ன?

இதுவும் நம் காலத்தின் கதைதான். இந்தக் கதையில்தான் இவனும் வாழ்கிறான். இவன் தமிழரசனாக இருக்கலாம்; சுப்புவாக இருக்கலாம்; பாலனாக இருக்கலாம்; இன்னும் எவராகவேனும் இவன் இருக்கலாம்; கவிஞரின் அஞ்சலி நம் நெஞ்சை உருக வைக்கிறது. கவிதைக்கு இதுவும்தான் பயன். வரலாற்றைப் புரட்டிப் பார்க்கிற கவிதை, நமக்கு இன்றைய தேவை.

## *என் வீட்டு எதிரே...*

**அரசியல் கலவாத நாய் - (ஊ)**

“என் வீட்டுக்குப் பின்புறம் ஒரு நாய் செத்துக் கிடந்தது. அதன் பற்களால் ஈக்களைக் காயப்படுத்தக்கூட முடியவில்லை. அஞ்சி, கெஞ்சிக் குழைத்த வால் சுதந்திரமாகக் கிடந்தது. அதன் கண்ணில் விசுவாசம் இல்லை. கொத்தும் காக்கைகளுக்கு இப்பொழுது கொஞ்சம்கூடப் பயமில்லை. அது ஓடிய ஓட்டமெல்லாம் திரும்பி வந்து உடலை உலுக்கிப் பார்த்தும் ஒன்றும் பயனில்லை. அதன் குரைப்புகள் ஒன்று கூடி முயன்றும் அதை எழுப்ப முடியவில்லை. எலும்புகளால் நிறைந்திருந்த அதன் கனவுகள், இப்பொழுது சில்லிட்டுப் போய்விட்டன. பாலுறுப்பு இப்பொழுது பசியின்றிக் கிடக்கிறது. காற்றில் நாற்றம் பரவியிருக்கிறது. இதன் இறந்த செய்தியை உலகிற்கு உரைக்க ஒரு நாயும் இல்லை. இப்பொழுது ஒன்று எனக்கு நிச்சயமாயிற்று. இது, அரசியல் கலவாத நாய்'' என்று முடிக்கிறார் கவிஞர். களிற்றை வைத்து முன்பொரு கவிதை செய்தார் கவிஞர். இப்பொழுது நாய். இவை இரண்டுமே அரசியல்வாதிகளைக் கேலி செய்கிற கவிதைகள். இந்த நாயும், அரசியல் கலந்திருந்த நாயாக இருந்திருந்தால் இறந்த நிலையிலும், இதற்கு என்னவெல்லாம் நிகழ்ந்திருக்கும்? என்னவெல்லாம் சொல்லி இதைப் பாராட்டியிருப்பார்கள்? யாராவது இந்த நாயைக் குறை சொல்லியிருப்பார்களா?

த.11.

பத்திரிகைகள் எவ்வளவு பாராட்டியிருக்கும்? இந்தக் கவிதையின் மூலமும் கவிஞர் நம்மோடு ஓர் இரகசியம் பேசுகிறார். அரசியல்வாதிகள் இப்படிச் செத்துப் போக வேண்டிய நாய்கள்தாம். நாய்க்குக்கூட நாம் அவமரியாதை செய்ய விரும்பவில்லை. இந்த அரசியல்வாதிகளுக்கு நாம் என்ன செய்ய வேண்டும்? இவர்களின் ஓட்டங்கள், குரைப்புகள், காமப்புணர்ச்சிகள் எல்லாவற்றையும் நினைத்துக் கொள்கிறோம். இவர்கள் காற்றை நாறடித்தவர்கள்; உயிர்களை வதைத்தவர்கள். கவிதைக்குள்ளேயும் இவர்களை நாம் கீழிறக்கிப் பார்க்கிறோம். கவிதையும் நாறத்தான் செய்கிறது.

## *என் வீட்டு எதிரே...*

**கடவுள்**
**கொலை செய்யப்பட்டாரா? - (எ)**

"மர்மமான முறையில் கடவுள் செத்துக் கிடந்தார்... நாத்திகர்கள் கொன்றிருப்பார்களோ? விசாரணை எழுந்தது. இல்லாத கடவுளை அவர்கள் எப்படிக் கொல்ல முடியும்? அர்ச்சகர்களாகத் தங்களையும் அமர்த்த வேண்டும் என்று போராட்டம் நடத்துகிற கலகக்காரர்கள் கொன்றிருப்பார்களோ? அல்லது கடவுள் தங்களிடமிருந்து கைநழுவிப் போய்விடக் கூடாது என்பதற்காகப் புரோகிதர்களே கொன்றிருப்பார்களோ? அல்லது ஆபரணங்களையும் தம்மையும் கொள்ளையடிக்க வந்த கும்பலை எதிர்க்கத் துணிந்தபோது கடவுள் கொல்லப்பட்டிருக்கலாம். இப்படியெல்லாம் காவல்துறை, தடயங்கள் தேடி அலைந்தது. இதற்கிடையில் மாற்றுக் கடவுள்களால், இந்தக் கடவுள் கொல்லப்பட்டிருக்கலாம் என்ற முறையில் குரல்கள் எழுந்தன."

"இறுதியாக, கோயிலின் உள்ளே ஒரு குறிப்பைக் காவல்துறை கண்டுபிடித்தது. கடவுள் அந்தக் குறிப்பை எழுதி வைத்திருந்தார். என்னை எப்பொழுதும் நம்பியிருக்கும் மக்களைக் காப்பாற்ற முடியவில்லை என்பதால், நான்

தற்கொலை செய்து கொள்கிறேன்; என் சாவுக்கு யாரும் காரணமில்லை." - இப்படிக் கவிதை முடிவடைகிறது.

## கடவுள் மக்களைக் காப்பாற்றவில்லை

கடவுள் பெயராலும் கலவரங்கள் வெடிக்கின்றன. கலவரங்களைக் கடவுளால் தடுக்க முடியவில்லை. புரோகிதர்களுக்குக் கடவுள் தேவைப்படுகிறார். அவர்களின் எல்லையைவிட்டுக் கடவுள் போய்விடக் கூடாது. கடவுள் நம்பிக்கை இல்லாதவர்களும் அர்ச்சகர்களாய் அமர்ந்து நம்மை வாழ்வித்துக்கொள்ள வேண்டும். கடவுளைக் கொள்ளை அடிக்கவும் சிலர் கிளம்பி விடுகின்றனர்.

இந்தச் சூழல்கள் எல்லாம் நமக்கு உணர்த்தும் உண்மை என்ன? கடவுள் இல்லை. அப்படி அவர் இருந்தால், அவர் தன்னைக் காத்துக் கொள்ளவும் முடியாது. அவர் தற்கொலைதான் செய்து கொள்வார். இப்படிச் செல்கிறது, கவிஞரின் சிந்தனை. கடவுள் இல்லை என்பதற்குக் கவிஞர் தரும் சில ஆதாரங்களை இந்தக் கவிதை கொண்டிருக்கிறது. மனிதர்களின் பார்வையில் கடவுள் எப்படியாகிவிட்டார் என்பதைக் காட்டும் ஒரு கேலிச் சித்திரமாகவும் இக் கவிதையைக் கருதலாம்.

# *என் வீட்டு எதிரே...*

**பறந்து போ... - (ஏ)**

"பறந்து போ"

"பறந்து கொண்டே உரையாடு பறவையிடம். மீன்களோடு பேச விரும்பினால், நீந்திக்கொண்டே பேசு. மலையின் மனத்தைப் புரிந்துகொள்ள வேண்டுமானால் உன் கைவசம் உயரங்கள் இருக்கட்டும். வெப்பத்துள் நுழைந்து நெருப்பைப் புரிந்துகொள். ஈரமில்லாதவனிடம் மழை, தன் இதயத்தைக் காட்டாது. பாதைகளை வைத்துப் பயணங்களைப் புரிந்து கொள்ள முடியாது. உன்னைத் தூவிக்கொண்டே செல் - அண்மைகளில், சேய்மைகளில் எழுதும் கடிதங்களில் நீ

இல்லையெனில், அதைப் பெறுபவனுக்கு என்ன கிடைக்கும்? உன்னை மீட்டிக்கொண்டே நீ வீணையை மீட்டினால், இசை இன்னதென்று புலப்படும். பொழுதோடு சேர்ந்து நீயும் வெளுத்தால், கிழக்கு உனக்குப் புரியும்." இவ்வாறு சொல்லும் கவிஞர் மேலும் சொல்கிறார். "பொய்யைப் புரிந்துகொள்ள உண்மையாக இரு. மரணத்தைப் புரிந்துகொள்ள வாழ்க்கையாக இரு."

"நமக்குள் வெளிச்சம் இருந்தால் மட்டுமே இருளை மட்டுமல்லாமல், வெளிச்சத்தையும் புரிந்துகொள்ள முடியும்; நமக்குள் உயரங்கள் இருந்தால் மட்டுமே, பிறர் உயரங்களைப் புரிந்துகொள்ள முடியும்; தனக்குள் ஒளி நிறைந்தவன் யாருக்குள் இருக்கும் ஒளியையும் புரிந்து கொள்ளுவான். குள்ளனுக்கு உயரங்கள், உன்னதங்கள் எப்படி எட்டும்? அவன் எல்லாவற்றையும் குறுக்கித்தான் பார்ப்பான். பயணங்கள் இல்லாதவன் பாதையைப் புரிந்துகொள்ள இயலாது; தனக்குள்ளே இசை இல்லாதவனுக்கு வீணை தெரியாது; தனக்குள் அன்பு இல்லாதவனுக்குப் பிறர் அன்பு புரியாது; அன்பின் மூலம்தான் பிற மனிதர்களைப் புரிந்துகொள்ள முடியும்; உயிர்களைப் புரிந்துகொள்ள இயலும். கவிஞனுக்கு ஒளியும், உண்மையும், இசையும், பறத்தலும் தேவை. இவை இல்லையென்றால், அவன் கவிஞனாக மட்டுமல்ல, மனிதனாகவும் இருக்க முடியாது.

தமிழன்பன் கவிதைகளில் இந்தக் கவிதை, தமிழன்பனின் முத்திரை பெற்ற கவிதை. 'அறிவை விரிவு செய்து அகண்டமாக்கு' என்ற பாரதிதாசனின் கவிதைக்கு நிகராகும் கவிதை.

## *என் வீட்டு எதிரே...*

**காலம் காத்திருக்கிறது - (ஐ)**

முன்னைய கவிதையின் தொடர்ச்சி என்று இந்தக் கவிதையைச் சொல்லலாம். "தூரங்கள், தொட முடியாதவை அல்ல. விலகிய சமீபங்களின் வேறு பெயர்தானே தூரங்கள்" என்று தொடங்குகிறார் கவிஞர்.

"நிற்க நினைக்காதவன் சக்கரங்களைத் தியானிப்பான். பனித்துளியில் மூழ்கிப் போகும் பயமுள்ளவனுக்கு, கப்பல் செய்யக் கற்றுக் கொடுப்பதால் என்ன பயன்?" என்று கேட்கிறார். நமக்கு நம்பிக்கை இல்லாதபோது தூரங்கள் வளருகின்றன. பக்கமும் தூரமும் நம் பார்வை படைத்தவை. இயக்கம் இல்லாதவனுக்கு இவற்றுக்கிடையில் வேற்றுமை எப்படித் தெரியும்? சமீபங்களைத் தொட்டுக்கொண்டே நாம் ஓடுவோம். காலம் வெற்றிக் கனியோடு காத்திருக்கிறது" என்று கவிதையை முடிக்கிறார் தமிழன்பன்.

தனக்குள் இருள் நிறைந்தவன், வெளியில் இருக்கும் வெளிச்சத்தைப் பார்க்க மாட்டான். நம்பிக்கை இல்லாதவனுக்குத் தூரங்கள் தெரிய மாட்டா. தனக்குள், வேகம் உள்ளவனுக்குத்தான் தூரங்கள் வசப்படும். நாம் கடந்து சென்ற அண்மைக்குத்தான், பிறகு தூரம் என்று பெயர். இப்படிக் கவிஞர் முன்னும் பின்னுமாக நம்மைக் காலத்திலும் இடத்திலும் நகர்த்துகிறார். இதே முறையில் வீரனையும் கோழையையும் வேறுபடுத்தலாம். அநேகமாக இந்த முரண்களுக்குள் எல்லாவற்றையும் இணைத்துப் பேசலாம். இந்த முரண் இயக்கத்தில்தான் கவிதை செழிக்கிறது.

## *என் வீட்டு எதிரே...*

**குத்தகை முத்தங்கள் - (ஒ)**

முன்னைக் கவிதையின் திசையிலேயே இந்தக் கவிதையும் செல்கிறது. "எதுவரை என்று இலக்கு வைத்துக்கொள்ளாமல் பயணம் செல்ல வேண்டும். இதுவரை என்று பயணம் சென்றால் எதுவுமே நமக்குக் கிடைக்காது." இப்படிப் பேசுகிறார் கவிஞர். "பாரிமுனை என்று இலக்கு வைத்துக்கொண்டு பயணம் போய் இடையில் வரும் ஆயிரம்விளக்கைக் கோட்டை விடலாமா?" என்று கேட்கிறார் கவிஞர். இலக்கைத் தீர்மானித்துக் கொண்டால் இரசனை இல்லை. ஒவ்வொரு நொடியும் பயணம் அனுபவமாக வேண்டும் என்பது கவிஞர் கருத்து. "கதையின் முடிவுதான் முக்கியம் என்று, முடிவில் மனம் பதித்தவனுக்குக்

கதையில் என்ன கிடைக்கும்?'' என்கிறார். "தேர்வைவிடக் கல்விதான் இலட்சியம். இலக்கு மட்டுமே இலட்சியம் என்றால், இயற்கை நதிகளை மூட்டையாகக் கட்டிக் கொண்டு போய்க் கடலில் கொட்டிவிடலாம்'' என்கிறார். "எதுவரை எனினும் அதுவரை அதுவும் ஒரு வெற்றி. அந்த வெற்றிக்கு முத்தம் குத்தகை'' என்று முடிக்கிறார் கவிஞர்.

இலக்கு முக்கியம் இல்லையா என்றால், இலக்கு முக்கியம் தான்; அதற்காகப் பயணத்தைக் கோட்டைவிட முடியாது. சாதனை முக்கியம்தான்; அதைவிட வாழ்க்கை முக்கியம். உறவுகள் முக்கியம்; இரவை எதிர்பார்த்துப் பகலில் விழித்திருப்பதால் என்ன பயன்? நூறு மதிப்பெண் இலட்சியம் என்று கருதி, குழந்தைகள் விளையாட்டைத் துறப்பதால் என்ன பயன்? செல்வத்தை இலட்சியமாக வைத்து, வாழ்க்கையை இழந்துவிடலாமா?

இப்படி, நூறு கேள்விகள் கேட்டு, வாழ்க்கையின் ஒவ்வொரு கணத்தையும் அர்த்தப்படுத்தி, அழகுபடுத்த வேண்டும் என்கிறார் கவிஞர். கவிஞனுக்கு அழகு முக்கியம். நீதி முக்கியமா என்று சிலர் கேட்கலாம். ஒவ்வொரு கணத்திலும் நமக்குள் வரும் அழகை இழப்பது எப்படி வாழ்க்கையாகும்? அதற்காகக் கணங்களுக்குள் தங்கிவிடலாமா? முடியாது. வேகம் தெரிந்தவனுக்குத்தான் நிதானமும் தெரியும். இலக்குத் தெரிந்தவனுக்குத்தான் பயணமும் தெரியும். நாம் எங்கும் இறுகிவிடக் கூடாது. இதுதான் கவிதை நமக்குள் வேண்டுவது.

## *என் வீட்டு எதிரே...*

**அழகாகவா?... நீயாகவா?... - (ஒ)**

இரவில் தான் கண்ட ஒரு கனவைச் சொல்வதுபோலக் கவிஞர் தொடங்குகிறார். தன்னை ஓவியமாக ஓவியர்கள் தீட்ட வேண்டும் என்பது அவரின் விருப்பமாக இருந்திருக்கலாம்.

முதலில் வருகிறார் இரவிவர்மா. வண்ணங்கள் நிறைந்த வாளியோடு வருகிறாராம். முகத்தில் வண்ணங்கள் அடித்து மினுமினுப்பேற்றுகிறார் இரவிவர்மா. கவிஞரின் தாய்க்கே சந்தேகம் வந்துவிட்டதாம். இரத்தம் சொரிந்து நான் இவனுக்குத் தந்த நிறம் எங்கே போயிற்று என்று தாய் கவலைப்படுகிறாளாம்.

அடுத்து வருகிறார் மைக்கேல் ஆஞ்சலோ, உளியோடும் சுத்தியோடும். கவிஞரின் கன்னத்தில் உட்கார்ந்து கூர்மையாக அவரது மூக்கைச் செதுக்குகிறாராம். சந்ததி அடையாளத்தை நான் இவனுக்குத் தந்தது இவன் மூக்கில்தானே? யார் இதைக் கெடுப்பது என்று கேட்டுக் கல்லறையிலிருந்து கவிஞரின் தந்தை ஓடி வந்தாராம்.

கடைசியில் பிகாசோ வருகிறார். தூரிகையில் தொட்டு கவிஞர் முகத்தில் ஒரு கோடு இழுக்கிறார். தந்தையின் ஆத்திரம் அடிபட்டுப் போயிற்று. கவிஞரின் மொத்த வடிவத்தை, அவருக்குள் இருக்கும் சாரத்திலிருந்து திரட்டி வரையத் தொடங்கினார் பிகாசோ. அந்த வடிவம் அழகாக இருக்குமா என்று கவிஞர் கேட்கிறார். பிகாசோ பதிலுக்குக் கேட்கிறார்: "அழகாக இருக்க வேண்டுமா? நீயாக இருக்க வேண்டுமா?" க்விஞர் சொல்லுகிறார், "அழகாக இருக்க வேண்டும்" என்று. "அதற்கு வேறு ஆள் பார்" என்று விருட்டென்று புறப்பட்டார் பிகாசோ. "தூக்கம் கலைந்துவிட்டது" என்பதாகக் கவிஞர் முடிக்கிறார்.

'கனவில் கண்டதுபோன்ற சில காட்சிகள்' என்றாலும், ஓவியம் என்றால் என்ன என்பது பற்றிய சரியான புரிதலை இங்குக் கவிதையாக்கித் தருகிறார். உருவத்தை அழகு படுத்துவதல்ல ஓவியம்; ஒன்றை அதே வடிவத்தில் வரைவதும் அல்ல ஓவியம்; உள்ளத்தின் வெளிப்பாடு ஓவியம்; பிகாசோவின் கலை இத்தகையது; கவிஞனுக்கு உள்ளம் முக்கியம்; உண்மை முக்கியம்; அதுதான் ஒளி மற்றும் அழகு.

## *என் வீட்டு எதிரே...*

### கவிதை தேவை - (ஔ)

“வார்த்தைகளை வழங்கவும், வாழ்க்கையை வழங்கவும் எனக்கொரு கவிதை தேவை” என்கிறார் கவிஞர்.

“சந்தங்கள் எழுப்பாவிட்டாலும் பரவாயில்லை. எனக்கான எதிர்காலத்தின் காலடி ஓசை என் காதில் பட வேண்டும்” என்கிறார். “வேலை தேடி அலையும் என் பிள்ளை வீட்டிற்குத் திரும்பும்போது, கதவைத் திறந்து வைத்து அவனை வரவேற்க இரண்டு அடிகள் இருந்தால் போதும்” என்கிறார். “காவியமாய்க் கவிதை நீண்டிருக்கத் தேவையில்லை. இரவில் மின்மினிகளோடு இரண்டொரு வார்த்தைகள் பேச, எனக்குத் தேவை கவிதை” என்கிறார். “படிமம், குறியீடுகளைவிட, கவிதை எனக்கு ஒரு படி அரிசியைக் கொண்டு வர வேண்டும்” என்கிறார். “என் வீட்டிற்கு முன் நிர்வாணமாய் நிற்கும் மரத்திற்கு இலைகளைப் போர்த்து விட்டு, கவிதை என்னிடம் வரட்டும்” என்கிறார். “பல் வலியோடு படுத்திருக்கும்போது, மாத்திரைகளைக் கரைத்துக் குடிக்கக் கவிதை வேண்டும்” என்கிறார். “எனது கோப்பைத் தேநீரைக் கொஞ்சம் சுவைப்படுத்த கவிதை வேண்டும். சொர்க்கத்தின் சாவி தனக்குள் இருப்பதாய்ச் சொல்லும் கவிதை தேவையில்லை” என்கிறார். “விழிப்பை ஓர் ஆடையைப்போல் அவிழ்த்து எறிந்துவிட்டு, உறக்கக் குளத்தில் நான் குதிக்கும் பொழுது உடன் குதிக்கக் கவிதை தேவை. என்னைக் கோதி விட, விரல்களோடு கவிதை இருந்தால் போதும். எந்த விமரிசகன் பற்றியும் எனக்குக் கவலை இல்லை” என்கிறார். “இந்தக் கவிதைக்கு என்னையே தந்து விடுவேன்” என்று முடிக்கிறார்.

வார்த்தைகளில் கவிதை இல்லை; சந்தங்களில் கவிதை இல்லை; காவியங்கள் இல்லை கவிதை; அலங்கார வளைவுகள் மின்னுவதில் கவிதை உண்டா? இருக்க முடியாது. படிமங்களுக்கும் குறியீடுகளுக்கும் கவிதை தன்னை இழந்து விடுமா? இழந்துவிடாது.

பின், கவிதை எங்கே இருக்கிறது? கவிதை நிர்வாணமாய் இருக்க முடியும். நம் நிர்வாணத்தைத் தானும் எடுத்து அலங்கரித்துக்கொள்ள முடியும். இலைகள் உதிர்ந்த மரத்து இலைகளாக வந்து கவிதை அமர முடியும். வேலை கிடைக்காது என் மகன் சோர்வுறும்போது, அவனை வரவேற்க எனக்குள் ஈர நெஞ்சம் வேண்டும். என் தேநீரில் சர்க்கரை இல்லை. எனினும், அந்தத் தேநீர் சுவையாக உள்ளது. நீர்கூட எனக்குச் சுவையாக முடியும்.

என் நெஞ்சம் தளர்வுறும்போது, என் முடியைக் கோதிவிடக் கவிதை தேவை. அதாவது, கவிதை என்னை ஆரத் தழுவிக் கொள்ள வேண்டியதில்லை; குளிப்பாட்ட வேண்டியதில்லை; நட்சத்திரங்களைக் கொண்டு வந்து கொட்ட வேண்டியதில்லை. வானத்தைத் தன் வார்த்தைகளில் வளைத்துப் பிடிக்க வேண்டியதில்லை; இப்படியெல்லாம் கவிதை பெரியதாய் தோரணையோடு வரவேண்டியதில்லை. கவிதைக்கு இந்த ஆர்ப்பாட்டங்கள் தேவையில்லை. "பருகும் நீராய், உண்ணும் வெற்றிலையாய்" என்று இறைவனைத் தன்னுள் அனுபவித்தவர் ஒரு பெருங்கவிஞர். எருக்கஞ் செடியில் பூக்கிற கவிதை நமக்குப் போதும்.

இப்படியெல்லாம், தமிழன்பன் கவிதைக்குரிய அர்த்தம் சொல்கிறார் இந்தக் கவிதையில். இமயத்தின் உச்சியில் ஏறிப் பார்க்கிறவர் இந்தக் கவிஞர். அப்புறம் கீழிறங்கி வந்து மண்ணின் மலர்ச்சியையும் க்காண்பவர் ஆகிறார். கவிஞருக்குள் இரண்டு எல்லைகளும் இருக்கின்றன. சுமார் இருபது ஆண்டுகளுக்கு முன்பு, லெனின் குறித்து இரண்டு கவிதைகள் நான் படித்தேன். லெனின் எவ்வளவு பெரியவர் என்ற முறையில் ஒரு கவிதை; லெனின் எவ்வளவு எளியவர் என்பது பற்றி இன்னொன்று; இரண்டாவது கவிதைதான் நமக்கு இன்றும் என்றும் தேவையான கவிதை.

மலைகள் ஏறி, வானத்தை எல்லாம் வலம் வந்த பிறகுதான் நமக்குப் புரிகிறது, இந்த மண் புனிதமானது என்று. 'பணியுமாம் என்றும் பெருமை' என்பது வள்ளுவரின் வாய்மொழி; 'சிறுமை அணியுமாம் தன்னை வியந்து' என்கிறார் அடுத்த அடியில். கவிதைக்கும் இந்த இலக்கணம் பொருந்தும்.

## *என் வீட்டு எதிரே...*

**என் வீட்டு எதிரே**
**ஓர் எருக்கஞ் செடி - (க)**

எருக்கஞ் செடிக்கு நம் சமூகத்தில் எந்த மரியாதையும் இல்லை. சிலரது மரணத்திற்கு அது உதவுகிறது. கருக் கலைப்புக்குக் கொடூரமான முறையில் பயன்படுத்துகிறார்கள் எருக்கை. கிராமங்களில் இப்படியெல்லாம் எருக்கஞ் செடி நமக்குள் ஒரு விகாரமாய், கசப்பாய்ப் பதிந்துள்ளது.

இயற்கையின் எத்தனையோ மலர்ச்சிகளில் எருக்கஞ் செடியும் ஒன்று. எருக்கஞ் செடியையும் நாம் நேசிக்கத்தான் வேண்டும். சிவபெருமானுக்கு எருக்கம் பூக்களால் ஆன மாலையிடுவது நம் மரபில் ஒரு தனி அழகு.

நகரத்தில் எருக்கஞ் செடிக்கு என்ன மரியாதை கிடைக்கும்? தமிழன்பன் வீட்டு வளாகத்தில் எப்படியோ முளைத்த ஓர் எருக்கஞ் செடி பற்றி, இந்தக் கவிதையில் சொல்கிறார். கிராமத்தில் வளர்ந்தவர், எருக்கஞ் செடியை எவ்வாறு நேசிக்காமல் இருக்க முடியும்?

"தாவரக் குற்றவாளி இது. ஆகவே நாடு கடத்தப்பட்டது போன்று தன் வீட்டின் முன் வாழ்கிறது" என்று தொடங்குகிறார். "இந்தச் செடி செய்த குற்றம் ஏதுமில்லை. குற்றம் நமக்குள் தான் உள்ளது. அதை நாம் கண்டுபிடிக்க வேண்டும். காற்று இதன் குடுமியைப் பிடித்து அறைகிறது" என்கிறார். குற்றவாளி என்பதனால் காவல் துறை விசாரிப்பதுபோல் என்கிறார் கவிஞர். "எந்தச் செடி கொடியும் அருகில் இல்லை. யாரோடும் இது பேச முடியாது. தனக்குத் தானே உரையாடிக்கொள்கிறது. இந்தச் சோகம் காரணமாக வேர்களில் இரத்தம் வடிகிறது" என்கிறார். "நந்தவனக் கனவு இந்தச் செடிக்கு இல்லை; வசந்த காலக் கனவுகளும் இதற்கு இல்லை. வாழ்க்கையும் மரணமும் இதன் இதயத் துடிப்புகளை உறிஞ்சுகின்றன. வாழ்க்கையின் மையத்தில் இந்தச் செடி இல்லை. மரணத்திற்கு அருகே உள்ளது. இதன் இலைகளைக் கிள்ளி விளையாடத் தென்றல்

வருவதில்லை. இயற்கைகூட எல்லாச் செடிகளுக்கும் பசுமையைத் தந்த பிறகு, எஞ்சியிருக்கும் பசுமையில் தண்ணீரைக் கலந்துதான் இந்தச் செடிக்குத் தந்திருக்கிறது" என்கிறார். "இயற்கைக்குக்கூட இந்தச் செடியின்மீது பாசம் குறைந்துவிட்டது."

"அடுக்கு மாடியில் உள்ள குழந்தைகளின் அழுகை ஒலி கேட்டுத்தான் இந்தச் செடி வளர்ந்திருக்கிறது. அழுகை ஒலியைக்கூட அனுபவித்துத் தன்னை வளர்த்துக்கொள்ள வேண்டியிருக்கிறது இந்தச் செடிக்கு. பறவைகள் வந்து இந்தச் செடிக்குப் பாடுவதில்லை. வழி தப்பிய வண்ணத்துப் பூச்சி ஒரு நாள் இந்தச் செடியைச் சுற்றிப் பார்த்துவிட்டுப் போனது. வெளிறிய இலைகளோடு, அமர்ந்திருக்கப் பிடிக்காத இந்தச் செடியின் நீல நிறப் பூக்கள், அந்த வண்ணத்துப் பூச்சியோடு பறந்து செல்லத் துடித்தன" என்கிறார் கவிஞர். "அடுக்கு மனைகளின் ஈரத் தொட்டியிலுள்ள செடிகள் இந்தச் செடியை எட்டிப் பார்த்தனவாம்; ஈழத் தமிழனை இங்குள்ள தமிழன் எட்டிப் பார்ப்பதுபோல்" என்கிறார் கவிஞர். "ஏன் என்று கேட்கவா முடிகிறது?" என்று முடிக்கிறார் கவிஞர். நமக்கு வருத்தமாகத்தான் உள்ளது; ஏன் என்று கேட்டால் என்ன குறைந்துவிடும்? என்ன நேர்ந்துவிடும்? என்று நமக்குள் கேட்டுக் கொள்கிறோம். எருக்கஞ் செடியின்மீது இரக்கம் இல்லாமல், அன்பு இல்லாமல் இப்படிக் கவிதை செய்ய முடியாது. நாகரிகப் பெருக்கம் ரோஜாவை அழகுபடுத்தியிருக்கிறது. எத்தனையோ வண்ணங்களில் வாரிக் கொட்டி ஓவியங்களை, நிழற்படங்களை, திரைப்படங்களை அழகுபடுத்தியிருக்கிறது. நாகரிகப் பெருக்கம் எருக்கஞ் செடியை, அரளிப் பூக்களை எப்படிக் கவனிக்கும்? கிராமங்களை விட்டு நகரங்களுக்கு வந்து சேர்ந்துவிட்டோம். நமக்குள் எளிமை இல்லை; எளியவர்களை நேசிக்கும் அன்பு இல்லை; சிட்டுக் குருவிகள்கூட நமக்கு இன்று தேவையில்லை.

"நெருஞ்சிப் பூவின் தலையில்கூட ஓர் அழகிய மலரைச் சூட்டியிருக்கிறான் இறைவன்" என்ற அந்த விவிலிய வாசகம் நம்மைப் பற்றி என்ன சொல்கிறது? நாம் எதை இழந்தோம்? எதைப் பெற்றோம்? வேர்களை இழந்தோம்; அலங்காரங்களைச்

சூடிக்கொண்டோம். நமக்குள் பனி ஈரம் இன்னும் உள்ளதா? சிவன் அரளிப் பூவை அணிந்து கொண்டான்; எருக்க மலர்களை அணிந்து கொண்டான். எளிமையில்தான் இறைவன்; எளிமையில்தான் அழகு; எருக்கஞ் செடியோடு நாம் இன்னும் பேசத்தான் வேண்டும். நம்மை நாம் கழற்றிக் கொண்டால், உதிர்த்துக் கொண்டால், எருக்கஞ் செடியோடு நாம் இன்னும் பேச முடியும்.

## *என் வீட்டு எதிரே...*

### பிரார்த்தனை முடிச்சுகளும் ஒரு மரமும் - (கா)

"ஆத்தா கோயில் மண்டப வாசலில் ஒரு மரம். அந்த மரத்தின் கிளைகளில் எத்தனையோ முடிச்சுகள். தளிர்களும் இலைகளும் முடிச்சுகளால் திணற, உள்ளே நுழைய முடியாமல் காற்றும் கவலைப்பட்டது. சூரிய ஒளியும் உள்ளே செல்ல முடியாமல் முணகியது. பறவையின் குரலுக்கு வேர்கள் ஏங்கின. மஞ்சள் துண்டுகள் முடிச்சுகளோடு இருந்தன. இந்த முடிச்சுகளை ஆத்தா தன் விரல்களால் அவிழ்க்க வேண்டுமாம்.

ஆம்பளைப் புள்ள வேண்டியும், புள்ளைக்குப் படிப்பு வர வேண்டியும், பொண்ணுக்குக் கண்ணாலம் கூடி வர வேண்டியும், எதிர்க்கட்சிக்காரன் சாக வேண்டியும் இப்படி எத்தனையோ முடிச்சுகளால் மரம் தவித்தது. ஆத்தாவுக்கு முடிச்சுகளைப் பிரித்துப் பார்க்க நேரமில்லை. எவரிட்ட சாபத்தால் இப்படி ஆனாய் என்று ஆத்தா வருந்துகிறாள். ஆத்தாவும் தன் வேதனையைப் போக்க, அந்த மரத்தில் ஒரு முடிச்சுப் போடுவாளோ?

அடுத்த நாள் சுழன்று அடித்தது சூறாவளி. அத்தனை முடிச்சுகளும் பிரிந்து அவிழ்ந்தன. மரத்தின் நெஞ்சில் நிம்மதி. ஆத்தா முகத்திலும் புன்சிரிப்பு என்று முடிக்கிறார்.

கடவுள் தற்கொலை செய்து கொண்டார் என்ற பாணியில் ஒரு கதை இது. ஆத்தா எங்கிருந்து மக்களின் கவலைகளைத் தீர்க்கப் போகிறாள்? இந்தக் கவலைகளெல்லாம் மரத்தின் மூச்சைத் திணறடிக்கத்தான் வேண்டுமா? இந்த மனிதர்களின் வேண்டுதலால் ஆத்தாவும் திணறத்தான் வேண்டுமா? வேண்டும்தான் ஒரு சூறாவளி. இந்தச் சூறாவளி துன்பக் கடலைத் தீர்க்குமோ? தீர்க்காதோ? மரத்திற்கு விடுதலை தர வேண்டும்; ஆத்தா முகத்தில் புன்சிரிப்பு மலர வேண்டும்; இப்படித்தான் ஆத்தாவுக்குக் கவிஞர் விடுதலை தருகிறார். மீண்டும் ஒரு நாத்திகவாதக் கவிதை. ஆத்தாவை நம்பும் மக்களுக்கு என்ன வழி? ஆத்தாவும் இல்லையென்றால்?

## *என் வீட்டு எதிரே...*

### அவனது
### இரண்டாவது வாழ்க்கை - (கி)

கவிஞர்கள் இயற்கையிடம் நேசம் கொள்ளாமல் இருக்க முடியாது. அதுவும் அண்மைக்காலத்தில் சூழலியல் பற்றி, நாம் அதிகம் பேச வேண்டியுள்ளது. இந்நிலையில் இயற்கை அழிவுக்காகக் கவிஞர் கூடுதலாகவே கவலை கொள்ள நேர்ந்துள்ளது.

தன் நண்பன் பற்றிக் கதை சொல்வதுபோல இந்தக் கவிதை அமைந்தாலும், இதில் வெளிப்படும் இயற்கை நேசம் நம் நெஞ்சை நெகிழ்விக்கிறது. தமிழன்பனின் அற்புதமான கவிதை என்று இதற்கு முத்திரை இடலாம்.

இறந்து போன தன் நண்பன் குறித்து இப்படி எழுதுகிறார்: "அவனுக்கு அரசியல் தெரியாது; அவனது பேசாத பேச்சுகளில் கூட அரசியல் வாடை கிடையாது" என்கிறார் கவிஞர். செடி, கொடி, மரங்களை அவன் சொற்கள் வளர்க்கும் என்கிறார். "அவனது சொற்களை அவையும் வளர்க்கும்" என்கிறார். "காலையில் சூரியத் தோட்டத்தில் ஒளியைக் கிள்ளி வந்து உன் கண்களில் சூட்டிக்கொள்" என்று சொல்வானாம் நண்பன்.

"இரவில் அவன் நாக்கு, நட்சத்திரங்களைப் பயிரிடும். பூக்களைப் பற்றி அவன் பேசும் வாக்கியங்களில்கூட வாசம்" என்கிறார். "அவன் சுவாசப் பைக்குள் போய் வந்த காற்றோடு நாம் பேசினால், வனங்களைச் சுற்றி வந்த அவனது அனுபவங்களை அந்தக் காற்று நமக்குச் சொல்லும்" என்கிறார். "படைப்புத் தொழிலின் நிறம் பச்சை" என்பானாம் அந்த நண்பன். "மரம் வெட்டும் ஓசை கேட்டால் அவன் உடம்பு பதறுமாம். விறகு வெட்டிகள் வீதியில் போனால் எழுந்து நின்று அவன் மௌன அஞ்சலி செலுத்துவானாம். ஓரடி வளர்ந்துள்ள பூஞ்செடியில் ஓரடியாய்க் குறுகி உட்கார்ந்து கொள்வானாம். உன் கவிதைகளிலிருந்து ஒரு குயிலை அனுப்பு. நான் மரத்திலிருந்து ஒரு கிளையாய் வருவேன்" என்பானாம்.

ஒரு நாள் காலையில் கவிஞரிடம் சொன்னானாம். கவிஞர் வீட்டுக் கொல்லைப்புறத்தில் பச்சை நிறத்தைப் பார்க்க அவன் விரும்பினானாம். அதற்காக விதைகளை வாங்கிவரப் புறப்பட்டுப் போனான். திரும்பி வரும்போது பல்லவன் மோதிப் பாதையில் கிடந்தான். அவனது இறுகிய கைப்பிடியில் ஒரு விதைப் பொட்டலம். அதற்குள் அவன் முளைக்கத் துடித்துக் கொண்டிருந்தானாம்.

கவிஞர் அந்த விதைகளை வீட்டுக் கொல்லையில் விதைக்கிறார். இப்போது வீட்டுக் கொல்லையில்தான் நண்பனின் இரண்டாவது வாழ்க்கை.

இப்படி ஒரு சாவு அவனுக்கு நேர்ந்ததே என்று நாம் கவலைப்படுகிறோம். கவிஞரின் கற்பனையாக இருக்குமோ என்று நாம் ஐயுற்றாலும், இப்படி நேர்வதற்கான சாத்தியத்தை நாம் மறுப்பதற்கு இல்லை. நண்பனைப் பற்றிக் கவிஞரின் சொற்கள் எந்த அளவுக்குக் கற்பனையோடு விரிகின்றன! அந்த நண்பனுக்குள்ளும் ஒரு கவிஞன் இருக்கத்தான் செய்கிறான். எல்லாவற்றையும் அவன் கவிதையாய்ப் பார்க்கிறான். இயற்கையை வாழ்விப்பதில்தான் அவனும் உயிர் வாழ்கிறான். அதற்காகவே தன் உயிரையும் கொடுக்கிறான். கொல்லைப்புறச் செடிகளில் அந்த நண்பன் இன்னும் வாழ்கிறான். இயற்கையோடு இணைந்தவனுக்குள் காடு மணக்கும்; சூரிய

ஒளி சிந்தும்; இலைகள் அவனுக்குள் துளிர்க்கும்; மலர்கள் அவனுக்குள் விரியும்; இப்படி ஒரு மனிதனை எட்டிப் பிடிக்க, உள் நுழைந்து துழாவ, அவன் ஆன்மாவைத் தரிசனம் செய்ய நமக்குக் கவிதை வேண்டும். கவிதை இங்குதான், தன் இன்றியமையாத் தேவையை உணர்த்துகிறது.

கவிதையை நாம் ஏன் கற்க வேண்டும்? நமக்குள் இருக்கும் ஒரு கவிஞனைக் கண்டுகொள்ள - உயிர்ப்பித்துக் கொள்ள - கவிஞனாய் விழித்து எழ.

## *என் வீட்டு எதிரே...*

**நதி விற்ற காசில் படகா? - (கீ)**

இன்றையத் தமிழ் இலக்கியச் சூழலில் புதிய அணுகுமுறைகள் சில ஆரவாரத்தோடு முன் வைக்கப்படுகின்றன. தலித்தியம் என்றும், பின் நவீனத்துவம் என்றும், மேஜிகல் ரியலிசம் என்றும் ஆரவாரத்தோடு சிலர் பேசுகின்றனர். மேற்கத்திய இலக்கிய அணுகுமுறைகளை, இங்கு இவர்கள் இறக்குமதி செய்கின்றனர். இவ்வகை அணுகுமுறை இல்லாமல், இலக்கியம் பற்றிய பார்வையோ, படைப்போ இங்கு இருக்க முடியாது என்கிறார்கள்; எதார்த்தம் செத்துவிட்டது என்கிறார்கள்.

தானும் ஓர் இலக்கியவாதி என்ற முறையில், இவர்களின் தீவிரப் போக்கைத் தமிழன்பனால் ஒத்துக்கொள்ள முடியவில்லை. இவருக்குள்ளிருந்தே ஓர் அழுத்தமான குரல் எழுகிறது. எங்கள் இலக்கியம் எங்கே? எங்களுக்கான இலக்கியம் எங்கே என்று உரத்த குரலில் இவர் கேட்கிறார். இவர் இப்படிக் கேட்பதன் பொருள் நமக்குப் புரிகிறது. இந்தப் புதியவர்கள் கொண்டு வரும் அணுகுமுறைகள் வரலாற்றுக் காலம் முழுவதும் வந்த தமிழ் இலக்கியத்தை, தமிழ் இலக்கிய வளத்தை நமக்குள்ளிருந்து மறுத்துவிடும்; அகற்றிவிடும். தமிழ் இலக்கியத்திற்கும், தமிழ் மரபிற்கும் நாம் அந்நியர் ஆகி விடுவோம். நாம் தமிழர்களாக இருக்க மாட்டோம். முகமழிந்து, நிலமிழந்து, நமக்குள் இருக்கிற கவிதைகள் இழந்து நாம்

வறியவர்களாகி விடுவோம். தமிழன்பன் கவலைக்கு இப்படி ஒரு காரணம் என்று நாம் புரிந்துகொள்ள முடியும்.

இன்னும் ஒரு காரணம். கோடை வெயில் கொதிக்கிறது; கொடியவர்கள் நம்மிடமிருந்து எல்லாவற்றையும் சூறையாடுகிறார்கள்; காவலர்கள் கணவனைச் சிறையில் அடைத்துவிட்டு, அந்தப் பெண்ணைக் கற்பழிக்கிறார்கள்; கணவனை அடித்துக் கொல்கிறார்கள்; இடுப்பில் அரைக்கால் சட்டைக்கும் வழி இல்லாமல் தலித் சிறுவன், மூக்கொழுகிக் கொண்டு அழுகிறான். இதைக் கவிதை சொல்ல வேண்டும். சகிக்க முடியாத இந்தக் கொடுமை நம்மை விட்டு அகல வேண்டும். இது இன்றைய எதார்த்தம். இதைக் காண்பதற்கு, கண்டு கொதிப்பதற்கு, இதை ஆரவாரத்தோடு எழுதுவதற்குப் பதிலாக, எந்த உத்தியில் இதைச் சொல்ல வேண்டும்? மேஜிக் ரியலிசமா, சர்ரியலிசமா என்பதில் கவனம் செலுத்துபவர்களைத் தமிழன்பன் காய்கிறார்.

எதார்த்தம் மறந்துவிட்டு புதிய எழுத்துகள் என்று சிலர் மறுப்பதையும் கேலி செய்கிறார் தமிழன்பன். துப்பறியும் கதைகள் படைப்பவர்களைச் சாடுகிறார்; பெண்ணியம் என்று சொல்லி, காமச்சுவை வளர்ப்பதைக் காய்கிறார்; மக்கள் இலக்கியம் படைப்பதாகச் சொல்லிக்கொண்டே மக்கள் இலக்கியக்காரர்கள் பட்டியல் தயாரிப்பதில் காலங்கழிக்கிற மார்க்சியரைச் சாடுகிறார்.

இலக்கியத்தின் தோல் எல்லா நாடுகளிலும் இப்படித்தானா என்று கேட்டு, தமிழ்நாட்டில்தான் ரொம்பக் கெட்டி என்கிறார்; சிங்கள அரசால் ஈழத் தமிழர் படும் சித்திரவதைகளை உருக்கமாகச் சொல்கிறார்; நம் இலக்கியவாதிகள் இந்த எதார்த்தத்தைக் காண எப்படித் தவறுகிறார்கள் என்று சாடுகிறார்;

இறுதியாக இப்படிச் சொல்கிறார்: இலக்கியம் இல்லாமல் மனிதன் இருந்ததுண்டு; மனிதனில்லாமல் இலக்கியம் இருந்ததில்லை. இனி ஒன்று கேட்போம் என்கிறார். நதி விற்ற காசில் படகா? மனிதனை மறந்துவிட்டு இலக்கியமா?

பின், நவீனத்துவம், மேஜிக் ரியலிசம் முதலிய மேற்கத்தியப் பார்வைகளுக்கு, இங்குத் தேவை இருக்கிறதா என்ற கேள்வி குறித்து நாம் நிதானமாக விவாதிக்க முடியும். முன்னையத் தமிழ் மரபை அறவே ஒதுக்கிவிட்டு, மேலை இலக்கிய அணுகுமுறையை இங்கு இறக்குமதி செய்பவரைத் தமிழன்பன் காய்வதையும் இங்கு நாம் புரிந்துகொள்ளலாம். எதார்த்தம் செத்துவிட்டதா, இல்லையா என்ற விவாதத்தையும்கூடக் கொஞ்சம் தள்ளி வைத்துவிட்டுத் தமிழன்பனைப் புரிந்து கொள்ளப் பார்க்கலாம். சாண்டில்யர்களுக்கு இங்கு அவசியம் இல்லை என்பதைத் தமிழன்பனோடு நாமும் சொல்லலாம். மார்க்சியரைக்கூட, தமிழன்பன் சாடுவதைக் கொஞ்சம் தள்ளி வைக்கலாம். இவற்றுக்கான நியாயங்கள் குறித்துப் பிறகு பேசலாம். தமிழன்பனைப் புரிந்துகொள்வது இங்கு முக்கியம். இங்கு எத்தனை வகைக் கொடுமைகள் நடக்கின்றன? இவற்றை நேர்முகமாகப் பார்த்து இலக்கியம் செய்ய வேண்டாமா? இந்தக் கொடுமைகளுக்கு என்ன தீர்வு என்று சொல்ல வேண்டாமா? இவற்றையெல்லாம் காண்பதற்கும், சொல்வதற்கும்தானே இலக்கியத்தில் பார்வைகளும் உத்திகளும். உத்திகளும், பார்வைகளும், இருக்கும் எதார்த்தக் கொடுமைகளை மறைப்பதாக இருக்க முடியுமா? இப்படித் தமிழன்பன் கேட்பதைப் புரிந்துகொள்கிறோம்.

இலக்கியவாதிகளில் பலருக்கு இங்கு நடக்கும் மனிதக் கொடுமைகள் குறித்து அக்கறை இல்லை என்பதையும் புரிந்து கொள்கிறோம். உத்திகளைக் காண்பதில் நானா, நீயா யார் பெரியவன்? என்று விவாதிப்பதிலேயே சிலர் தம்மை இழந்து விடுவதையும் பார்க்கிறோம். காமக் கதைகள் சொல்லும் வணிகர்களையும் இங்குப் பார்க்கிறோம்.

இன்னும் ஒன்று சொல்லலாம். நமக்குப் புதிய அணுகுமுறைகள் வேண்டும். பின் நவீனத்துவம் முதலிய அணுகுமுறைகள் நம் சிக்கலை இன்னும் கூர்மையாகச் சொல்ல முடியும். நம் மரபு பற்றிய புரிதலைக் கூர்மைப்படுத்தவும், நம் மரபை இன்னும் ஆக்க முறையில் பயன்படுத்தவும், இந்தப் புதிய அணுகுமுறைகள் நமக்குச் சிறப்பாகப் பயன்படும். ஆனால், தமிழ் மரபு அறியாத வெற்று இறக்குமதியை,

ஆரவாரம் செய்கிற இந்தப் போலி இலக்கியவாதிகள்மீது நமக்கு மரியாதை இல்லை. இவர்களுக்குத் தமிழுணர்வு இல்லை; தமிழுணர்வு சார்ந்த அரசியல் இல்லை; இவர்கள் நம் எதிரிகளும் அல்லர்; இவர்களைத் தமிழராக்குவது எப்படி என்பதுதான் நமக்குச் சிக்கல். மண்ணோடும் மக்களோடும் உறவு இல்லாமல் இவர்களுக்கு வாழ்வும் இல்லை; ஒட்டுண்ணிகளாய் இவர்கள் இருப்பது நமக்கு உடன்பாடில்லை.

தமிழன்பன் இந்தக் கவிதையில் ஒரு விவாதம் நடத்துகிறார். இதன் காரணமாக இது கவிதையா? என்று சிலர் கேட்கக்கூடும். கவிதையா, இல்லையா என்று விவாதிப்பதை ஒரு கணம் தள்ளி வைத்துவிட்டு, நாம் இப்படிச் சொல்லலாம்: "இந்த விவாதம் நமக்கு முக்கியம்; கவிதை இதைச் செய்யலாமா, கூடாதா என்பது முக்கியம் அல்ல; இப்படி விவாதம் செய்வதால் கவிதையின் கற்புக்கு இழுக்கு நேர்ந்துவிடாது. கவிதை என்ன என்று தெரிந்துதான் சொல்கிறோம். இந்த விவாதத்தால் கவிதை அழிந்து விடாது."

## 22

## *உன் வீட்டுக்கு நான் வந்திருந்தேன்... வால்ட் விட்மன்*

ஏகாதிபத்திய எதிர்ப்புணர்வும் விடுதலையுணர்வும் மிக்கவர் கவிஞர் தமிழன்பன். ஓர் அழகியல் கவிஞர் என்று சிறப்பாக இவரைக் குறிப்பிட முடியும். அந்த அளவிற்கு அரசியல் உணர்வும், கவித்துவ உணர்வும் உச்ச அளவில் கொண்டவர் தமிழன்பன். 1996ஆம் ஆண்டு இடையில் இவர், அமெரிக்கா விற்குச் சென்று திரும்பினார். அமெரிக்காவில் பார்த்துப் பரவசப்படத்தக்க எத்தனையோ இருக்கின்றன என்பது உண்மைதான். மாபெரும் பேராறுகள், நயாகரா நீர்வீழ்ச்சி, கொலராடோ பள்ளத்தாக்கு என்று எத்தனையோ இயற்கைப் பெருங்காட்சிகளும், இயற்கை விநோதங்களும் அமெரிக்காவில் பார்க்கத்தக்கவை. நாகரிகத்தின் உச்சியிலிருக்கும் நாடுகளில்

ஒன்று அமெரிக்கா. இப்படித் தொடங்கி, அமெரிக்காவின் சிறப்புகள் என்று எவ்வளவோ சொல்கின்றனர்.

அமெரிக்கா செல்பவர்களுக்கு ஏதாவது ஒரு வகையில் அரசியல் பற்றிய புரிதலோ, நாகரிகம் பற்றிய உணர்வோ இருக்க முடியும். முதலாளிய உணர்வில் மூழ்கியவர், அமெரிக்க நாகரிகத்தின் அற்புதங்கள் குறித்துப் பேச முடியும். ஏகாதிபத்திய எதிர்ப்புணர்வு உள்ள ஒருவர் இப்படிப் பேச முடியாது. இயற்கை அழகை இரசிக்கும் பேருணர்வு தமிழன்பனுக்கு உண்டு. இவரும் அமெரிக்காவில் இயற்கைக் காட்சிகளை இரசிக்கத்தான் செய்கிறார். ஒரு புதுக் கவிஞர் என்ற முறையில், உலக அளவில் புதுக் கவிதையின் மூலவர்களில் ஒருவராகிய வால்ட் விட்மனின் இல்லத்திற்கும் தமிழன்பன் சென்றிருக்கிறார். அவருடைய 'புல்லின் இதழ்கள்' உலக அளவில் ஆயிரக்கணக்கான கவிஞர்களுக்குள் பூத்திருக்கிறது. வால்ட்விட்மன்மீது தமிழன்பன் கொண்டிருக்கிற நேசத்தை, அவர் எழுதியுள்ள கவிதைகள் நமக்குச் சொல்கின்றன.

அமெரிக்கா ஐன்ஸ்டினுக்குப் புகலிடம் தந்தது. பிரபஞ்சத்தின்மீது புது வெளிச்சம் பாய்ச்சியவர் அந்தப் பேரறிஞர். அணுகுண்டின் ஆக்கத்திற்குத் தானும் ஒரு காரணம் என்ற முறையில், தன் இறுதிக் காலத்தில் மனம் வெதும்பியவர். சோஷலிசச் சிந்தனைகளில் தன் மனித நேயத்தை மலர்த்திக் கொண்டவர் ஐன்ஸ்டின். தன்னை மறந்த நிலையில், ஐன்ஸ்டின் நடந்து சென்ற தெருக்களில் தமிழன்பனும் நடந்திருக்கிறார். பிரபஞ்ச இயக்கத்தின் பேருணர்வை வெளிப்படுத்திய வகையில் ஐன்ஸ்டின் ஒரு பெருங்கவிஞர். இன்னொரு கவிஞர் அவரை நேசிக்காமல் இருக்க முடியாது.

அமெரிக்கா குறித்த தமிழன்பனின் கவிதைகளில், மைய உணர்வாக இருப்பது அவரது அரசியல் உணர்வு. மாபெரும் ஏகாதிபத்தியமாய்த் தன்னை வளர்த்துக் கொண்டிருக்கிற அமெரிக்காவை, இன்று நம்மால் நேசிக்க முடியாது. ஆபிரகாம் லிங்கனையோ, வால்ட்விட்மனையோ தோற்றுவித்த அமெரிக்காவாக இருந்த அந்த நாடு, இன்று இல்லை.

அமெரிக்காவும் ஒரு காலத்தில் தன் விடுதலைக்கான புரட்சி ஒன்றைச் செய்தது என்பதுகூட உண்மைதான். ஐரோப்பாவி லிருந்து கத்தோலிக்க மதத்திற்கும் மன்னர்க்கும் எதிராகக் கலகம் செய்தவர்கள் என்ற முறையில் நாட்டை விட்டு வெளியேறியவர்கள், அமெரிக்காவின் கிழக்குக் கரையில் குடியேறினார்கள். பல தேசங்களிலிருந்து குடியேறியவர்கள் அவர்கள். பிரிட்டன் அவர்கள்மீது ஆட்சி அதிகாரத்தைத் திணித்தபொழுது, அவர்கள் கிளர்ந்து எழுந்தார்கள்.

இவையெல்லாம் அமெரிக்க வரலாற்றில் ஒரு சிறந்த பகுதி. கிழக்கில் தமக்கென நாடுகளை அமைத்துக்கொண்ட அவர்கள், நாளடைவில் தம் தேசம் மறந்து, இனம் மறந்து அமெரிக்கர்கள் ஆனார்கள். மேற்கு நோக்கித் தம் அரசின் எல்லைகளை விரிவு படுத்தினார்கள். அங்கெல்லாம் ஆயிரக்கணக்கான ஆண்டு களாகக் குடியமைத்து வாழ்ந்திருந்த செவ்விந்தியர்களைக் கொன்று அழித்தார்கள். வரலாற்றில் அமெரிக்கா செய்த இந்தக் கொடுமைகளை உலகம் உள்ளளவும் மறக்க முடியாது. தெற்கே பரவிச் சென்றபொழுது, மாபெரும் 'இன்கா' நாகரிகத்தை அழித்தார்கள். நீக்ரோக்களை ஆப்பிரிக்காவிலிருந்து கைப்பற்றிக் கொண்டு வந்து அடிமைகளாக்கி உழைக்க வைத்தார்கள். தங்களுக்கென ஓர் அரசியல் அமைப்பை நிறுவிக் கொண்டார்கள்.

இன்று அமெரிக்கர் உலக அளவில் என்னவெல்லாம் செய்கின்றனர். ஒற்றை ஏகாதிபத்தியம் என்ற வடிவில் 21ஆம் நூற்றாண்டு அமெரிக்காவின் நூற்றாண்டு என்கிறார்கள். இந்திய அரசியலுக்குள் அமெரிக்காவின் ஊடுருவலை நாம் ஒவ்வொரு நாளும் பார்க்கிறோம். செவ்விந்தியர்களைக் கொன்று ஒழித்ததைப்போல, அவர்கள் எந்த நாட்டிலும் எதையும் செய்வார்கள்.

தமிழன்பன் கவிதைகளில் இந்த ஏகாதிபத்திய எதிர்ப்புணர்வு தான் முன் நிற்கிறது. கவித்துவச் செறிவோடு அந்த எதிர்ப்புகளைத் தம் கவிதைகளில் வெளிப்படுத்துகிறார். அட்லாண்டிக் கடலை நோக்கி, நியூயார்க் நகரில் நிற்கும் சுதந்திரச் சிலை தமிழன்பனுக்குப் பரவச உணர்வை

ஏற்படுத்தவில்லை. ஏழு கீற்றுகளாக அமைந்திருக்கிற அதன் கிரீடம், ஏசுவின் தலையில் சுமத்தப்பட்ட முள் கிரீடமாக அவருக்குக் காட்சி தருகிறது. சுதந்திரச் சிலை கவிஞருக்குள் இப்படிக் கேள்வி எழுப்புகிறது, 'என்னை ஏன் டாலருக்கு விற்கிறார்கள்?' ஆம்; உலக அளவில் சுதந்திரத்திற்காகவும், ஜனநாயகத்திற்காகவும் செயல்படுவதாகச் சொல்லும் அமெரிக்காவிற்கு டாலர்கள்தான் முக்கியம். சுதந்திரச் சிலையைக் கேவலப்படுத்துபவர்கள் அமெரிக்கர்கள். அவர்கள், எதையும் விற்கத் தொடங்கி விட்டார்கள். சுதந்திரச் சிலை அவர்களைப் பொறுத்தவரை புனிதமான சிலை அல்ல. தமிழன்பனுக்குள் இப்படிப் பலவகை உணர்வுகள் கொந்தளித்திருக்க வேண்டும்.

பால்டிமோரில் டால்பின்களின் விளையாட்டைப் பார்த்து, மனம் கொதிக்கிறார் தமிழன்பன். கண்ணாடிக் கூண்டில், நீர்த் தேக்கத்தில் சிறைப்படுத்தப்பட்ட டால்பின்கள், பார்வையாளர் களுக்கு மகிழ்ச்சியூட்டுவதாக இருப்பினும், மொத்தத்தில் அடிமைகளின் ஆட்டமாக இருந்ததாகச் சொல்கிறார் தமிழன்பன். இங்கு டால்பின்களுக்கு விடுதலையில்லை; விடுதலையுணர்வு இல்லை; எஜமானர் விருப்பப்படி இவை ஆடுகின்றன; குதிக்கின்றன; அமெரிக்கர் இப்படி இந்த அற்புத விலங்கின், குழந்தைத்தனமான விலங்கின் சுதந்திரத்தைப் பறித்துவிட்டனர்.

அமெரிக்கர் முதலில் அமைத்த பதின்மூன்று நாடுகளுக்கு அப்பால், மேற்குநோக்கிச் சென்று செவ்விந்தியர்களை அழித்தொழித்தார்கள். அதற்கு அடையாளமாக 600 அடி உயரத்தில் ஒரு வளைவு அமைத்திருக்கிறார்கள். பார்வையாளர்கள், எந்திரச் சாதனங்களின் உதவியால் அந்த வளைவில் ஏறி மகிழ்கிறார்கள். தமிழன்பனுக்கு மகிழ்ச்சி இல்லை. நேர்மை தவறிய அமெரிக்க ஆதிக்கத்தின் சின்னமாக அந்த வளைவைக் காண்கிறார். அவமானத்தின் குனிவாகி விட்டது அது; என்றும் நிமிராது என்கிறார்.

முன்னொரு காலத்தில் செவ்விந்தியர்கள் வாழ்ந்த பிரதேசங்களுக்குள் பயணம் செய்தபொழுது, அவருக்கு

ஏற்பட்ட ஆத்திரத்திற்கு அளவில்லை. ஒளி புகாத, கறுத்த மலைப் பிரதேசங்களில் செவ்விந்தியர்களின் காலடி ஓசைகளை அவர் காதுகள் கேட்கின்றன. கவிதைகளில் தம் கடுஞ்சினத்தைத் தமிழன்பன் வெளிப்படுத்துகிறார்.

இறுதியாக, சில கவிதைகளில் அமெரிக்காவில் வாழும் தமிழர்களோடு உரையாடுகிறார். கணியன் பூங்குன்றனை மறக்க வேண்டாம் என்கிறார். வள்ளுவர் வரை நினைவுபடுத்துகிறார்; தந்தையர் உணர்வும், குழந்தைகளின் உணர்வும் வேறுபட்டுச் செல்வதைக் குறிப்பிடுகிறார்; அந்தக் குழந்தைகளிடம் தமிழுணர்வு இனி, தங்க முடியாது. இதற்கு என்ன செய்ய முடியும்? என்று தன் ஏக்கத்தை வெளிப்படுத்துகிறார். அமெரிக்கக் குடிமக்கள் ஆகிவிட்ட நிலையில் அமெரிக்காவோடுதான் இவர்களுக்கு வாழ்வு. தமிழோடு, தமிழ் நாட்டோடு இவர்களுக்கென்ன உறவு இருக்க முடியும்? வேர்களிலிருந்து பிடுங்கி எறியப்பட்டவர்கள் இவர்கள். தம் வேர்கள் குறித்து இவர்கள் என்றாவது கவலைப்படுவார்களா? தெரியவில்லை. இவர்களுக்கு ஏதேனும் அடையாளம் எதிர்காலத்தில் இருக்க முடியுமா? தெரியவில்லை.

## *உன் வீட்டுக்கு...*

### கண்ணாடிப் பிரமிடுக்குள் - (அ)

“கேர்ல்வெஸ்டன் மழைக் காடு. அங்கு நான் ஒரு தாவரமாய் வளர்ந்து வந்திருக்கிறேன். கறுக்காத கண்ணாடி வானம் பூந்தூறல் போடுகிறது. என் இலைகளில் இருந்த மானுட வாடையைக் கழுவிவிட்டேன். மரமாகிவிட்ட என் தோளில் சினேகா உட்கார்ந்துகொண்டாள். கிளையில், நான் பூத்த ஒரு பூவாக.”

“தன்னில் அனுபவமாகிப் பிறப்பெடுத்த இந்தக் கவிதையை-தமிழரசி படித்துக் காட்ட, மரமான பிறகு, தமிழன்பன் கவிதைகளில் உணர்ச்சிகள் கொப்பளிக்கின்றன'' என்றார் குமாரகணேசன். பல நாட்டு அறங்களின் பொது மொழி பச்சை என்று படித்துக் கொண்டேன். பூமி சொல்லிக் கொடுத்தது,

“ஆகாயம் யாப்புக்கு வெளியே அழைத்துச் சென்று கவிதை கற்றுக் கொடுத்தது! வண்ணங்கள், சுதந்திரமாகப் பறக்கின்றன. தண்ணீரில் புள்ளி வைக்காத கோலங்களை மீன்கள் போடுகின்றன. இந்த மழைக்காட்டில் மரமாகிவிட்ட பிறகு, எனக்குக் காற்றின் உடம்பு புரிகிறது. வெயிலின் மணமும் விவரமாகிறது. மனிதனாக இருப்பதன் அவலத்தை, மரமாக இருந்து தெரிந்து கொள்ளலாம். கண்ணாடிப் பிரமிடுக்குள் வளர்வன சவங்களின் கதைகளல்ல; ஆசிய-ஆப்பிரிக்க உயிர் வகைகள்.

இந்தத் தொகுப்பிலுள்ள அற்புதமான கவிதைகளில் இதுவும் ஒன்று. பிரமிடு வடிவில் அமைந்த கண்ணாடிக் கூண்டுக்குள் ஒரு மழைக் காட்டைப் பார்க்கச் சென்றார் தமிழன்பன். உடன் இருந்தவர்கள் குமாரகணேசன், தமிழரசி, சினேகா ஆகியோர்களைக் காட்டுக்குள் தமிழன்பன் இழந்து விடுகிறார். மரமாகிவிட்டார். மரத்தின் இரகசியம் அவருக்குப் புரிகிறது. வானம், காற்று, சூரியன் எல்லாமே அவருக்குத் தம்மை உணர்த்துகின்றன. மரமாக இருப்பதன் அர்த்தமும், மனிதனாக இருப்பதன் அவலமும் தனக்குப் புரிகின்றன என்கிறார்.

நமக்குள் இருக்கும் இயற்கையை நாம் எழுப்பிக்கொள்ள வேண்டும். கவிதை நமக்குள் வளர இது வழி; கவிதையாய் மாறவும் இது ஒரு நெறி.

## *உன் வீட்டுக்கு...*
## டால்ஃபின் நடனம் - (ஆ)

“திடீரெனச் சுருதி மாறிவிட்டது என் கவிதைக்கு” என்று தொடங்குகிறார் கவிஞர். கண்ணாடிச் சிறைக்குள் கடலின் குழந்தைகள். தங்கள் சுதந்திரம் தட்டுப்படுமா என்று, அவை தண்ணீரைக் கிழிக்கின்றனவாம். டால்ஃபின்கள் தண்ணீரை வாரிப் பார்வையாளர்மீது எறிகின்றனவாம். இது என்ன புஷ்பாஞ்சலியா? நெருப்புப் பொறியாஞ்சலியா? என்று கவிஞர் வியக்கிறார்; வெதும்புகிறார்.

டால்ஃபின்கள் சிறைப்பட்ட நிலையில் இப்படி ஆடுகின்றன. ஆழ அகலங்களில் கற்ற சுதந்திரம் எல்லாம் உங்களுக்கு மறந்து போய்விட்டதா என்று கவிஞர் கேட்கிறார். அடிமை நீச்சலால் உங்களுக்கு மூச்சுக் கறுக்கவில்லையா? நிர்ப்பந்த விளையாட்டுகள், வற்புறுத்தலினால் உங்களுக்கு வாடிக்கையாகி விட்டனவா என்று கேட்கிறார். ஆட்டுவித்தபடி ஆடிவிட்டு எஜமான் கொடுக்கும் வாயூட்டை வசமாய் வாங்கி உண்ணுகிறீர்கள். செத்த சுதந்திரத்திற்காகப் போடப்படும் பிண்டச் சோற்றுக்கு வாய் திறக்கும் உங்களை எப்படி வாழ்த்த முடியும்? உங்களால், தண்ணீர் தன்மீது படிந்த களங்கத்தை எங்கே போய்க் கழுவும்? உங்களை உதிர்த்து விடுவதற்காக என் கவிதைகளையும் உதறி விடுகிறேன் என்கிறார் கவிஞர்.

டால்ஃபின்கள் தம் சுதந்திரம் இழந்தது குறித்துக் கவிஞர் கவலைப்படுவதில் நியாயம் இருக்கிறது. சுற்றுலாப் பயணிகளின் தேவைக்காக, இப்படி டால்ஃபின்கள் ஆட்டுவிக்கப்படுவது நமக்கு வருத்தமளிக்கிறது. டால்ஃபின்கள் மட்டும்தானா? எத்தனைக் கோடி மனிதர்கள் இப்படி ஆட்டுவிக்கப் படுகிறார்கள்? இப்படிக் கவலைப்படும் நமக்குள்ளும்தான், என்ன சுதந்திரம் மிஞ்சியிருக்கிறது? டால்ஃபின்கள் மாதிரிதான் நாமும் ஆடுகிறோம்; ஆட்டுவிக்கப்படுகிறோம். அமெரிக்கர்கள் தான் நம்மை அதிகம் ஆட்டுவிக்கிறார்கள். டால்ஃபின்களுக்குத் தங்கள் சோகம் தெரியுமா? தெரிந்த பிறகும், ஆடாமல்தான் இருக்க முடியுமா? எனினும் டால்ஃபின்கள் அற்புதக் குழந்தைகள்.

*உன் வீட்டுக்கு...*

**புகை மலைகளும்**

**கவிதைத் திரிகளும் - (இ)**

'அப்பலாட்சி'யன் மலைக் குன்றுகளுக்கு நண்பர்களுடன் பயணம் போகிறார் தமிழன்பன். புகை மலைகள் என்று அவை அழைக்கப்படுகின்றன என்றும் தெரிகிறது. கண்கொள்ளாக் காட்சியாக விரியும் அதன் இயற்கை அழகுகளுக்கிடையில், தான் சிறுவனாக மாறிப்போன நிகழ்வைக் கவிஞர் சொல்கிறார்.

இந்த மலைகளுக்கிடையில் வாழ்ந்த செரோக்கிய இனக் குழு மக்கள் ஜனநாயக நெறியைத் தேர்ந்தவர்கள். ஆண்ட்ரூ ஜாக்சன் என்ற அமெரிக்க அதிபர், ஒரு சட்டத்தின் மூலம் அந்த இனக் குழு மக்களை அந்த மலைகளிலிருந்து அகற்றினாராம். ஓர் அற்புதமான நாகரிகத்தை இப்படி அகற்றிவிட்டு, அந்த மலைகளின்மீது அமெரிக்கர்கள் தம் ஆதிக்கத்தை விரிவுபடுத்தி இருக்கிறார்கள். இந்தக் கவிதையும் அமெரிக்க ஆதிக்கத்திற்கு எதிரான தமிழன்பனின் சினத்தை வெளிப்படுத்துகிறது.

புகை மலைகளை நோக்கி வண்டியில் வேகமாய் நண்பர்களுடன் செல்கிறார் கவிஞர். அடுக்கடுக்காகத் தொடர்ந்து வருகிற மலைக்கூட்டங்களைப் பார்த்து 'மலைகளின் பாராளுமன்றமோ?' என வியக்கிறார். சாயலில் இமயமலையோடு இரத்த சம்பந்தம் உடையவைபோல, இவை ஒரு காலத்தில் இருந்ததைச் சொல்கிறார். இப்பொழுது வட்ட வட்டமாய் வார்த்து எடுத்ததைப்போல அந்த மலைகள் இருப்பதைச் சொல்கிறார். ஒரு கணம் இளம் வயதில் சென்னி மலையில் தொட்டாங்குச்சியில் ஈர மண்ணை நிரப்பி இட்டலி சுட்டுக் கொண்டிருந்த தன் இளமையை அவர் உணருகிறார். வட்ட வட்டமான சிறிய மலைகள், தம் தோற்றத்தால் கவிஞர் சிறுவனாக இருந்தபோது ஈர மண்ணில் விளையாட்டாய்ச் சுட்ட தொட்டாங்குச்சி இட்டலிகளை நினைவுபடுத்தி விடுகின்றன. மலைகளின் பேரழகுகளுக்கிடையில் நாம் குழந்தையாகி விடுவது வியப்பொன்றும் இல்லை.

பூமியின்மீது நூறு நூறு மார்புகள். மேகங்கள் தாறுமாறான மாராப்புகள். இடையிடையே பள்ளத்தாக்குகள் என்று அந்த மலைகளின் தோற்றத்தைச் சொல்கிறார்.

செரோக்கிய மக்கள் அந்த மார்புகளில் பால் குடித்து வளர்ந்தவர்களாம். ஆயிரக்கணக்கான மரங்கள் அடர்ந்து வளர்ந்த அந்த மலைகளுக்கிடையில், 'ஆண்டவன் ஒருவனே' என அந்த மக்கள் பாடம் படித்தனராம். பால் வேறுபாடு அற்றும், சாதி வேறுபாடுகள் அற்றும் ஜனநாயகத் தென்றல் அங்கு இதமாக வீசியது என்கிறார்.

1830 அவசரச் சட்டப்படி, கூண்டுகளிலிருந்து பறவைகளைத் துரத்துவதுபோல அந்த மக்களை அரசாங்கம் வெளியேற்றியது. "ஒவ்வொரு பூவிலும் அந்தக் குழந்தைகளின் இரத்தம்; ஒவ்வொரு மரக்கிளையிலும் அவர்களின் எலும்புகள்; இப்படி வெள்ளை மிருகம் கற்பழித்த காரணத்தால், அந்த மலைகளும் புத்தி பேதலித்தன" என்கிறார். செரோக்கிய மொழியின் - 86 எழுத்துகளும் இன்றும் புண்களாய் அந்த மலைகளில் பிரிந்திருக்கின்றன என்கிறார் தமிழன்பன். புகைமலை வரலாறு, தனக்கு மூச்சுத் திணற வைக்கிறது என்கிறார். கவிஞரின் கண்களின் முன்பு செரோக்கிய சிறுவர் சிறுமியர், சிரித்தபடி பூமியில் செல்வதைக் கவிஞர் மனக்கண்ணில் பார்க்கின்றார்; அவர்கள், அந்தப் பூமியின் இசை எச்சங்கள் என்கிறார்; அவர்களை, தரையில் நடக்கும் சித்திர எழுத்துகள் என்கிறார்; பூமிக்கு அவர்கள், புது வசந்தம் தருபவர்கள் என்கிறார்; மூலதனமாக அழகையெல்லாம் இயற்கை இங்கே முடக்கி வைத்திருக்கிறது. இந்த ஏகபோகத்தைத் தகர்த்தால், அமெரிக்காவின் 'கெட்ட நிலத்திற்கும்' (Bad Lands. S.D.) வாழ்க்கை கிட்டும். இப்படிக் கவிதையை முடிக்கிறார்.

அமெரிக்கர் செய்த குற்றங்களைத் தொடர்ந்து பட்டிய லிடுகிறார் கவிஞர். இயற்கை எப்படித்தான் இவர்களைப் பொறுத்துக்கொண்டு பசுமையாக இருக்கின்றதோ என்று நாம் வியக்கிறோம். அவர்களின் உலகளாவிய ஏகபோகத்தைத் தகர்த்தால், நம் எல்லார்க்கும் வாழ்க்கை கிடைக்கும். உலகில் முன்பிருந்த எத்தனை அறிவுச் செல்வத்தைக் கொள்ளையடித்து, இவர்கள் குபேரர்களாக இன்று உலகில் வளம் பெறுகிறார்கள். கவிஞரின் கோபமும், கொந்தளிப்பும் நியாயமானவையே. ஐயமில்லை.

## *உன் வீட்டுக்கு...*

**செயிண்ட் லூயி வளைவு - (ஈ)**

அமெரிக்காவின் கிழக்குக் கடற்கரையில் குடியேறி அரசு அமைத்த வெள்ளையர்கள், மேற்கு நோக்கிச் சென்றதற்கு

அடையாளமாக, செயிண்ட் லூயி நகரத்தில் 630 அடி உயரமுள்ள வளைவு ஒன்றை அமைத்துள்ளனர். இதைத் தமிழன்பன் பார்த்து, எழுதிய கவிதை.

உச்சியில் ஒரு கூடம். அதன் சாளரத்தின் வழியே ஊரைப் பார்க்கலாமாம். உச்சியில் இவர்களை ஏற்றிச் செல்ல வசதி (விஞ்ச்) அமைத்திருக்கிறார்கள்.

மேற்குக் கரைப் பக்கம் வெள்ளையர் என்ற வெள்ளம் சென்றதற்கு அடையாளமாய்ப் போடப்பட்ட பாலம் இது என்று சொல்லுகின்றனர். ஆனால், தமிழன்பன், நிமிர்ந்து எழுந்த செவ்விந்தியரை அமெரிக்கர்கள் வளைத்ததற்குச் சாட்சி இந்த வளைவு என்கிறார். செவ்விந்தியரின் இரத்த ஓலம், இந்த வளைவு ஓரம் காது வைத்துக் கேட்டால் ஒலிக்கிறது என்கிறார், தமிழன்பன். பழங்குடிகளுக்கு இழைக்கப்பட்ட அநீதிகளின் ஆழத்தில், அரைக்கால் பங்கு உயரம்தான் இந்த வளைவின் உயரம் என்கிறார். இரும்பு இப்படியா வெட்கப்பட்டு வளைந்து சரிந்தது என்கிறார்? உயரம் நோக்கி அந்த விஞ்சில் செல்லும் போது, அந்த நாளில் நொறுக்கப்பட்ட அடிமைகளின் எலும்புகளின் வழியே, தாம் பயணம் செய்வதாய் உணர்கிறார் கவிஞர். வெள்ளெலும்புகளின் வாய்களில் சிவந்த சடலத் துணுக்குகள், தன் உள்ளத்தின் ஆழத்தில் தெரிந்தன என்கிறார். தொலைவில் நியூயார்க்கின் சுதந்திரச் சிலை. இன்னொரு பக்கம் ஆழம்பட்ட தன் காயங்களில் சுமந்து கொண்டிருப்பதைப் போல் கப்பல்களைச் சுமந்துகொண்டிருந்தது மிசிசிபி. மேற்கில் மறையும் சூரியனுக்குள்ளும் துப்பாக்கிக் குண்டுகள் துளைத்த காயங்களுக்குள் டாலர் பதித்துக் கொண்டிருக்கின்றனர் அமெரிக்கர் என்கிறார். வளைவிலிருந்து கீழே இறங்கியபோது வளைவு எப்படி என்று கேட்ட ஒருவருக்கு, 'ஒருபோதும் நிமிராது' என்று கவிஞர் பதில் சொல்லியிருக்கிறார்.

செவ்விந்தியர்களின் ஆவி அமெரிக்கக் கொலைகாரர்களை என்றும் மன்னிக்க முடியாது. வரலாறும் அமெரிக்கக்

கொலைகாரர்களைக் குற்றம்சாட்டிய வண்ணமே என்றும் தொடரும்.

தமிழ்க் கவிஞன் அமெரிக்கனை மன்னிக்க மாட்டான். தமிழ்க் கவிதைகளில் என்றும் அழியாத ஓர் அற்புதக் கவிதை இது. வரலாற்று நிகழ்வுகளைத் தனக்குள் குறுக்கும் நெடுக்குமாய் வளைத்துக் கொள்கிற இந்தக் கவிதையில், ஆழமும் கனமும் ஓர் அதிசயம்தான். செவ்விந்தியர்களை இப்படிக் கொன்றழித்த நாட்டினுள் எப்படித்தான் குடியேறி, இந்தத் தமிழர்கள் வாழ்கின்றனரோ? செவ்விந்தியர்களுக்கு நேர்ந்த கதி இவர்களுக்கு ஒரு நாள் நேராது என்பது என்ன நிச்சயம்? ஒருவேளை இந்தக் கவிதை ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டு, அமெரிக்க அதிகாரிகள் படித்தார்கள் என்றால், எப்படியிருக்கும்? உலகத்தின் முன்னிலையில் என்றும் ஒரு குற்றவாளியாய் அமெரிக்காவை ஆவணப்படுத்தும் இந்தக் கவிதை, தமிழ்க் கவிஞனின் விடுதலை உணர்விற்கும் ஒரு சான்று. உண்மைதான்; தமிழின் ஆழத்திலிருந்து இவன் வந்திருக்க வேண்டும். ஓரத்திலிருந்து நுழைந்து வருபவனுக்கு இந்த உண்மை புரியாது.

தமிழ்க் கவிஞர் உலகம் சுற்றி வர வேண்டும். வரலாற்றின் உயரங்களை மட்டுமல்லாமல் ஆழங்களையும், காயங்களையும் கவிதைகளில் பதிவு செய்து நமக்குத் தர வேண்டும். முன்னைய நூற்றாண்டுகளில் நமக்கு நேர்ந்த துயரங்களை, எதிர்காலத்தில் ஆதிக்க உலகம் நமக்கு வைத்திருக்கும் தண்டனைகளையும் இன்று நாம் அறிந்துகொள்ள இக் கவிதைகள் உதவும். எத்தனையோ இனங்கள் புவிப் பரப்பிலிருந்து துடைக்கப்பட்டு விட்டன. இன்னும் மிஞ்சியிருக்கிறது தமிழினம். இதைத் துடைக்கும் வேலையும் என்றோ தொடங்கிவிட்டது. இறுதி நாள் என்று என்பது இன்னும் உறுதிப்படவில்லை. செவ்விந்தியனுக்குள் தமிழனையும் வைத்துப் பார்க்க வாய்ப்பு இருக்கிறது.

## *உன் வீட்டுக்கு...*

**நகைக் குகை - (உ)**

தெற்கு டகோடாவில் உள்ள தேசியச் சின்னமாகிய ‘நகைக் குகைக்கு’த் தமிழன்பன் சென்றிருக்கிறார். தரைக்கடியில் ஒன்றரைக் கிலோ மீட்டர் ஆழம் செல்கிறது இந்தக் குகை. அமெரிக்காவில் உள்ள விநோத இயற்கைச் செல்வங்களுக்குள் இதுவும் ஒன்று. இந்தக் குகையின் அற்புதத்தை இந்தக் கவிதையில் தமிழன்பன் விவரிக்கிறார்.

பூமியின் கர்ப்பத்திற்குள் இவர் செல்கிறார். பூமி, தன் வரலாற்றை இதன் குகைக்குள் புதைத்து வைத்திருக்கிறது. பக்கங்கள் மின்னுகின்றன. சூரியனிடமிருந்து தெறித்து விழுந்த இந்த உலகத்தின் அற்புதம், இன்னும் அங்குப் பசுமையாக உள்ளது. சூரியனிடமிருந்து விடுபட்டு வந்தபொழுது, அதன் கனவுகளை இந்தப் பூமியில் வைத்துத்தான் உலகம் காப்பாற்றி வருகிறது. ஆழத்தில் எங்கெங்கும் கவிதைகள். புரிகிற கவிதை, புரியாத கவிதையை நோக்கிப் புறப்பட்டுச் செல்லக் கவிஞரைத் தூண்டுகிறதாம். வெயில் பட்டுக் கறுக்காத வெளிச்சங்கள், பளிங்குகளின் மூலப் படிவங்கள் என அந்தக் குகையிலுள்ள பாறைகளை வியந்து சொல்கிறார். நகைக் குகைக்கு, தன் கவிதைகளைக் கவிஞர் தர, குகை தன் ஆழத்தை அள்ளித் தந்திருக்கிறது.

இருண்ட குகைக்குள் செல்லும்போது, இந்தப் பூமியின் பழங்காலத்தை நோக்கிச் செல்கிறோம். தொன்மையான பழங்காலம் நமக்குள் எழுப்பும் உணர்வுகள், விநோதமாகத்தான் இருக்க முடியும். நமக்குள் எட்ட முடியாத உணர்வுகளாக அவை இருக்க முடியும். சந்திரனிலிருந்து எடுத்து வந்த ஒரு கல்லை யூஸ்டனில் கவிஞர் தொட்டபொழுதும், இத்தகைய உணர்வுகள் அவருக்கு ஏற்பட்டிருக்க முடியும். நமக்குள் உள்ள கவிஞனுக்குப் புதிய அனுபவங்கள் எப்பொழுதும் முக்கியம். புரிந்துகொள்ள முடியாத சில அனுபவங்கள் நம்மை மயக்குகின்றன. நமக்குள்ளும் இந்தக் குகைக் காட்சியில் கொஞ்சம் எட்டிப் பார்க்கத்தான் செய்கிறது.

## *உன் வீட்டுக்கு...*

**கருமலைகள் - (ஊ)**

தெற்கு டகோடாவில் உள்ள கரிய மலைகளுக்குத் தமிழன்பன் சென்றிருக்கிறார். சூரிய ஒளி உள்ளே சென்றால் வெளிவராத கருத்த மலைகள் அவை. அமெரிக்காவில் உள்ள இயற்கை விநோதங்களில் இதுவும் ஒன்று. இங்குத்தான் செவ்விந்தியர்கள் வாழ்ந்தனர். ஆயிரக்கணக்கில் கொல்லப்பட்ட செவ்விந்தியர்களின் ஆவிகள் இங்கே உலவிக் கொண்டிருக்க முடியும். அதனால் இந்த மலைகள் கறுத்தனவோ என்று நமக்குள் ஐயம் எழத்தான் செய்யும். கவிஞர் என்ன சொல்கிறார் என்று கேட்கலாம்.

பிணமான வாழ்வைச் சேகரித்து வைத்ததுபோலவும், கருச்சிதைவுகளை ஒன்று சேர்த்து வைத்ததுபோலவும், அந்த மலைகள் காட்சி தருகின்றன. சரியில்லை என்று ஒரு சங்கீதத்தால் விலக்கப்பட்ட பிசிறுகளைத் தொகுத்தது போலவும், கெட்ட கனாக்களின் திரட்டுகள்போலவும் அம் மலைகள் இருந்தன என்கிறார். மேலும் தொடர்ந்து சொல்கிறார், 'சின்ன பின்னமான இயற்கையின் சிந்தனையில் அவை இருந்தன' என்கிறார். இப்படிக் கரிய மலைகள் இருப்பதை முரண்பட்ட உணர்வுகள் வழியே கவிஞர் சொல்கிறார். சங்கீதம் இனியது; கனாக்கள் இனியவை; உயிர் வாழ்க்கை இனியது; ஆனால் இங்கு என்ன நேர்ந்திருக்கிறது? இங்கு உயிர் இல்லை. சங்கீதம் சிதைந்து கிடக்கிறது. கனாக்கள் அச்சுறுத்துகின்றன. யார் இதை ஏற்றுக்கொள்ள முடியும்? - கவிஞர் கொதிக்கிறார்.

சூறையாடப்பட்டது இந்தப் பூமி. இந்த அழிவை அழகுபடுத்த முடியுமா என்று இது முயற்சி செய்கிறது. பூமியின் தொண்டையில் இருந்து புறப்பட்டு வந்த விக்கல்கள் இந்தக் கரிய மலைகள். காற்று ஈனக்குரலில் இங்கு அழுகிறது என்கிறார். இந்த மலையின் கழுத்தை நெரிக்கும் திறந்தவெளியின்மீது விரல்கள். இவை தூண்களாய், கூர்முகடுகளாய், கோபுரங்களாய்,

பிரமிடுகளாய்க் காட்சி தருகின்றன. இங்கு முண்டு முடிச்சுகள், பிளவுகள், பள்ளங்கள் இப்படிக் கருமலை அடுக்கங்கள். கருகிப் போன இயற்கையின் கற்பனைகளாக இவை இருக்கின்றன. இங்கு, இந்தச் செவ்விந்தியர்களின் தலைவர்கள் பவனி வந்த குதிரைக் குளம்படி ஓசைகள் இன்னும் கேட்கின்றன. ஒரு கணம் இந்தக் கரிய மலைகள் அவர்கள் பாசறைகளாக மாறுகின்றன. மறுகணம் காயம்பட்டு வீழ்ந்த வாழ்க்கையின் இரத்தக் கறை படிந்த சதைத் துண்டுகளாய் இந்தக் கரிய மலைகள் மாறி விடுகின்றன. கர்ப்பப்பையில் புற்றுநோய் கொண்ட இந்தக் கரிய மலைகள், இந்தக் கவிஞனை எப்படி வரவேற்கும்? பறவைகளுக்கும்கூட இங்குப் பாடல்கள் இல்லை. நிலா ஒளியும் இங்கு இருண்டு போகிறது. இந்தக் கரிய மலைக்கும், தன்னுடன் பயணம் செய்த சோமுவின் மகன் குழந்தை இலட்சுமணன் சிரிப்பால், ஒரு கொத்து மலர்கள் கிடைத்தன என்று கவிதையை முடிக்கிறார் கவிஞர்.

எந்தக் கவிஞனுக்கும் இப்படிப் புதிய அனுபவங்களும் ஓர் அறைகூவலைப் போல்தான் எதிர்ப்பட முடியும். தனக்குள்ளிருந்து, எந்தப் பழைய உணர்வுகளைக் கிளறிக் கொண்டு, இந்தப் புதிய வினோதமான அனுபவத்தை எதிர்கொள்ள முடியும்? கவிஞர் தனக்குள் ஆழமாகத் தோண்டித்தான், இந்த அனுபவங்களை எதிர்கொள்ள முடியும். அதன்பிறகுதான் அவற்றைத் தமக்குள் அனுமதிக்கவும், அழகுபடுத்தவும், பதியமிடவும் கூடும். நமக்கு மட்டுமல்ல; கபாடபுரத்தில் நாம் வாழவில்லையா? நாமும்தானே எத்தனையோ எதிரிகளால் வளைக்கப்பட்டோம்; அழிக்கப்பட்டோம்; நமக்குள்ளும் புகுந்து சென்றால், குதிரையின் குளம்படிகள் மட்டுமா கேட்கும்? இழந்துபோன இந்தச் சோக வரலாற்றைச் செவ்விந்தியர்கள் எப்படித் தாங்கிக் கொள்வர்? இயற்கைகூட இவர்களது வரலாற்றை மதிக்கவில்லையா? இப்படியெல்லாம் நம் நெஞ்சம் துணுக்குறத்தானே செய்யும்! இவ்வாறு, பழைய வரலாற்றுக்குள், வரலாற்றுச் சிதைவுக்குள் மீண்டும் நுழைவது, முன் சொன்ன

இருண்ட குகைக்குள் நுழைந்து வருவதைப்போலத்தான். கவிதைக்கு இந்த ஆழம் போதுமா? எத்தனை ஆயிரம் மனிதர்களின் எத்தனை நூற்றாண்டுகளின் சோகம், கரிய மலைகளாக மாறியிருக்க வேண்டும்? இந்தச் சோகத்திற்குள் தமிழன்பன் நம்மைத் தள்ளிவிடுகிறார்; அனுபவிக்கிறோம் நாம்.

*உன் வீட்டுக்கு...*

**ககோக்கியாவில் கேட்ட**
**இரத்தக் கதைகள் - (எ)**

செவ்விந்தியர்களின் சின்னங்களைச் சேகரித்து வைத்திருக்கும் ககோக்கியாவிற்குக் கவிஞர் சென்றிருக்கிறார். மிசிசிபி-மிசௌரி நதிகள் சந்திக்குமிடத்தை ஒட்டி அமைந்திருக்கிறது ககோக்கியா. வரலாற்றுக்கு முற்பட்டு வாழ்ந்த செவ்விந்தியர்களின் சின்னங்கள், இங்குச் சேகரித்து வைக்கப்பட்டிருக்கின்றன. அவற்றைப் பார்க்கும்பொழுது, கபாடபுரம் தமிழ்க் கவிஞனுக்கு நினைவுக்கு வருகிறது. மொகஞ்சதாரோ வீடுகள் கவிஞனுக்குத் தன் கதவு திறந்தனவாம். செவ்விந்தியர்களின் தொன்மை நாகரிகத்தின் சின்னம், 'இன்கா நாகரிகம்' சிதைந்து போன மச்சு பிச்சு நகரத்தைப் பாப்லோ நெரூடா, கவிஞரின் நினைவுக்குக் கொண்டு வந்தார். செவ்விந்தியர்கள் உயிர் பெற்று எழுந்து, தம் இரத்தக் கதைகளைக் கவிஞனுக்குச் சொல்லுகின்றனர்.

"இயற்கையின் அற்புதப் படைப்பாய் நாங்கள் பிறந்தோம். வெள்ளையன் கண்களில் நாங்கள் வேட்டையாடப்படும் விலங்குகளாய் எப்படித் தெரிந்தோம்?'' என்று அந்தச் செவ்விந்தியர்கள் கேட்கின்றனர். அந்த வெள்ளை நாட்டு மிராண்டிகள், எங்களைக் காட்டுமிராண்டிகள் என்று நினைத்தனர். சூரிய நகரம் என்று இந்தப் பூமியை நாங்கள் அழைத்தோம். வானம் மழையை அனுப்பி எங்களை வாழ்த்தியது என்கின்றனர், அந்தச் செவ்விந்தியர்கள். இன்கா

நகரத்தில் வரிசை வரிசையாய் வீடுகள். சூரிய நாழிகை காட்டி, ஊருக்குள் பூங்காக்கள். உற்பத்திகள். ஒழுங்கான வாழ்க்கை முறை எல்லாம் இருந்தன. அவர்களின் தாய்மொழி புன்னகை (சூ). இவையெல்லாம் அநாகரிகங்களா என்று அந்தச் செவ்விந்தியர்கள் கேட்கின்றனர். அந்தப் பச்சை இரத்தக் கதைகள் இன்றும்தான் செவிகளில் கேட்டுக் கொண்டிருக்கின்றன, என்கிறார் கவிஞர்.

செவ்விந்தியர்களின் தொன்மையான நாகரிகம் பற்றிய நினைவுகள், கபாடபுரத்தைக் கவிஞருக்கள் எழுப்புகின்றன. மொகஞ்சதாரோவும் நம் முன் வருகிறது. கபாடபுரத்தைக் கடல் அழித்தது என்கிறார்கள். மொகஞ்சதாரோவை யார் அழித்தார்கள் என்று நமக்குத் தெரியும். இன்று நம் தமிழ் நாகரிகத்தை அழிப்பவர் யார் என்பதைச் சேர்த்தே நாம் நினைவு கொள்வோம்.

## *உன் வீட்டுக்கு...*

**எண்ணச் சிறகுகள் - (ஏ)**

அமெரிக்காவில் குடியேறியுள்ள தமிழர்களின் ஒரு பகுதியினராவது தமிழ்ப்பற்று உடையவர்கள் என்று சொல்லலாம். இவர்களிலும் பலர் அமெரிக்கக் குடியுரிமை பெற்ற தமிழர்கள்; அமெரிக்கத் தமிழர்கள், தமிழ் அமைப்புகள் வைத்துக் கொண்டு ஆண்டுதோறும் தமிழ் விழா நடத்தி, தங்கள் தமிழுணர்வைக் காத்துக் கொள்கின்றனர். தமிழ் நாட்டிலிருந்து தமிழ் அறிஞர்களை இவர்கள் விழாக்களுக்கு அழைக்கின்றனர்.

அமெரிக்கத் தமிழனின் குழந்தைகள் அமெரிக்கச் சூழலில், அமெரிக்க நாகரிகத்தை உள்வாங்கிக் கொள்பவர்கள். பெரியவர்கள் போற்றும் தமிழ்ப் பண்பாடு இவர்களுக்குள் இயல்பாய்த் தங்காது. இதனால் பெரியவர்கள் வருந்துகின்றனர். அமெரிக்காவிலேயே வாழப்போகிற இந்தக் குழந்தைகளுக்குத்

தமிழ்ப் பண்பாட்டு உணர்வை எப்படிக் க்றபிக்க முடியும்? இருநூறு முந்நூறு ஆண்டுகளுக்கு முன், அடிமைகளாய் அமெரிக்காவிற்குக் கொண்டு செல்லப்பட்ட கறுப்பின மக்களின் வாரிசுகள், இப்பொழுது அமெரிக்கர் என்றாலும், அமெரிக்க வெள்ளையரின் நிறவெறிக் கொடுமை காரணமாகத் தங்கள் சொந்தத் தாயகம் பற்றி நினைத்துக் கொள்கின்றனர்.

ஆப்பிரிக்காவோடு அவர்கள் கொண்ட இரத்த உறவு, அவர்களுக்குள் கிளர்ச்சி பெறுகிறது. அமெரிக்க நாகரிகத்தில் தீவிர மாற்றங்களைக் கறுப்பின மக்கள் ஏற்படுத்த முடியும். எதிர்காலத்தில் அமெரிக்கத் தமிழர்களுக்கும் இப்படி ஒரு சூழல் ஏற்படலாம். ஆகவே, அந்தக் குழந்தைகளுக்குள்ளும் தமிழுணர்வை எந்த வடிவத்திலேனும் காப்பாற்றி வைத்திருக்க வேண்டும். அன்றியும், அமெரிக்க நாகரிகத்தோடு இந்தத் தமிழர்கள் முற்றாகக் கரைந்துவிடுவது சாத்தியம்தானா?

அமெரிக்காவில் இன்றும் தமிழ்ப் பற்றோடு வாழ்கிற தமிழுணர்வு மிக்கவர்கள், இன்றும் தமிழில் கதை எழுதுகிறார்கள். வள்ளுவர் முதலிய தமிழ்க் கவிஞர்களை இன்றும் அவர்கள் படிக்கிறார்கள். நவீன சாதனங்கள் மூலம் தமிழ் மேன்மை பெறுவதற்கு அவர்கள் உழைக்கவும் செய்கிறார்கள். தமிழ் இலக்கியத்தோடு தம்மை இணைத்துக் கொண்டிருக்கிற அவர்களின் கவியரங்கில், தமிழன்பனும் கலந்து கொள்கிறார்.

இவர்களோடு கவிதையின் வழியே, ஓர் உரையாடல் நிகழ்த்துகிறார் தமிழன்பன். வால்ட்விட்மன்போன்ற கவிஞர்கள், உலகம் அனைத்தையும் தமக்குள் உள்வாங்கிக் கொண்டவர்கள். அவர்கள் உலக அளவிலான கவிதையை நவீனப்படுத்தியவர்கள். அவர்களிடமிருந்து நாம் கற்றுக்கொள்ள முடியும். அதே சமயம், அவர்களின் வாரிசுகளுக்குத் தமிழ்க் கவிதையின் ஆழத்தை நாம் கற்றுக் கொடுக்கவும் வேண்டும். கவிதையைப் பொறுத்தவரை நாம் யாருக்கும் இளைத்தவர்கள் இல்லை. தமிழ்க் கவிஞனும் உலகைத் தழுவிக்கொள்ள முடியும். அமெரிக்கரோடும்,

ஆப்பிரிக்கரோடும், ஜப்பானியரோடும், ரஷியரோடும் தமிழ்க் கவிஞன் உரையாடல் நிகழ்த்த வேண்டும். தொன்மையான தன் இலக்கிய மரபை அவர்களிடம் கொண்டு சேர்க்கத் தமிழ்க் கவிஞனால் முடியும்.

'எண்ணச் சிறகுகள்' கவிதையில் தமிழன்பன் என்ன கூறுகிறார் என்பதைக் கேட்போம். "இங்குள்ள உப்பு ஏரியின் உதடுகளிலும் உங்கள் தமிழ் இனிப்பை ஊட்டுங்கள். மரணப் பள்ளத்தாக்குக்கும் வாழ்வு ஒன்றை வழங்குங்கள். வள்ளுவர் வழியாக, பாரதிதாசனின் சிவப்புக் கவிதையைப் பயிரிட்டு வையுங்கள்" என்று தமிழ்க் கவிஞர்களைத் தமிழன்பன் கேட்டுக கொள்கிறார். டாலர்களின் காதலர்களாய் மட்டும் நீங்கள் இங்கு வரவில்லை. வால்ட்விட்மன் வாரிசுகளுக்கு நீங்கள் விருந்தினர் என்கிறார். லிங்கன் சந்ததியினருக்கு, கணியன் பூங்குன்றனின் மரபினராக நீங்கள் வந்துள்ளீர்கள். மார்ட்டின் லூதர் கிங் மரபினருக்கும் உறவினராய் வருகை தந்துள்ளீர்கள். உங்களை மகிழ்ந்து வாழ்த்துகிறேன் என்கிறார் தமிழன்பன்.

உண்மைதான். தமிழர்கள் அமெரிக்காவில் யாரோடு, எந்தச் சக்திகளோடு தங்களை இணைத்துக்கொள்ள வேண்டும் என்பதைச் சரியாகவே சொல்கிறார். அன்றியும் தமிழ்க் கவிஞர்கள் அமெரிக்க மக்களுக்கு எவற்றைத் தர முடியும்? அவர்களுக்குத் தருவதற்கு நம்மிடம் உள்ள செல்வங்கள் என்னவென்றுப் தமிழன்பன் சரியாகவே சொல்கிறார். ஆதிக்கங்களைத் தமிழர்கள், தமிழ்க் கவிஞர்கள் உள்வாங்கிக் கொள்ள முடியாது.

நெடுந்தொலைவு, தமிழகத்திலிருந்து அமெரிக்காவிற்கு வந்தவர்கள் இந்தத் தமிழர்கள்; இந்தத் தமிழ்க் கவிஞர்கள்; இவர்களால் இங்குக் கூடுகட்டிக்கொள்ள முடியுமா? சிறகு விரிக்க முடியுமா? எப்படி இந்த நாகரிகத்தை உள்வாங்கிக் கொள்ள முடியும் என்ற கேள்விகள் நமக்குள் எழத்தான் செய்யும். இவர்கள், கவிஞர்கள் என்ற முறையில், தம் சிறகை விரித்து, வானத்தை உள்ளடக்க முடியும். காவிரிக் கரையில்

தமிழ் கற்றவனுக்கு மிசிசிபி நதியை உறவாக்கிக் கொள்ள முடியும். இப்படிப் பறக்கிறது தமிழன்பனின் எண்ணச் சிறகுகள்!

செல்வத்தை மட்டுமே சிந்திக்கிறவன் தனக்குள் முடங்கிப் போகிறான். தீப்பெட்டிக்குள் முடங்கிப் போகிறவன் ஊழி நெருப்பாய் உயர முடியாது. தனக்குள் இருக்கும் சிறகுகளைக் கண்டறிந்தவன், வானத்தையே வளைத்துக் கொள்ள முடியும். மனிதன் எல்லாவற்றையும் தன் உயரத்திற்குக் குறுக்கிவிட்டான். இப்படி, மனிதன் தன்னைத்தானே குறுக்கிக் கொள்கிறபோது, அவனுக்குள் இருக்கும் கவிஞன் அழிந்து போகிறான். தமிழ்க் கவிஞனுக்குத் தன் சிறகுகளை விரித்துக்கொள்கிற திறமுண்டு. அமெரிக்காவில் வாழும் தமிழ்க் கவிஞர், சிறகை விரித்து எந்த நிலத்தையும், விண்ணையும் தழுவிக்கொள்ள வேண்டும் என்கிறார், தமிழன்பன். வால்ட்விட்மன்களும், எஸ்ரா பவுண்டுகளும் இந்த அரங்குக்குள் வந்து தமிழ் வீணைகளில் தங்கள் இராகங்களை மீட்டட்டும் என்கிறார். இராபர்ட் பிராஸ்ட், தனது நெடுந்தொலைவுப் பயணத்திற்கு இடையில் இங்கு வந்து தமிழ்க் கவிஞரிடம் தமிழ்க் கவிதை கேட்டுவிட்டுச் செல்லட்டும்; இப்பொழுது சிறகை விரிப்போம், காத்திருக்கிறது வானம் என்று முடிக்கிறார் தமிழன்பன்.

தமிழன்பனின் ஆசைகள் சிறப்பானவை; வரவேற்கத் தக்கவை. அமெரிக்க அரங்கில் தன்னைச் சூழ்ந்துள்ள தமிழ்க் கவிஞர்களுக்குத் தமிழன்பன் என்ன சொல்ல விரும்புகிறார்? அமெரிக்கக் கவிஞர்களின் கவிதைகள் தமிழுக்கு வரட்டும். தமிழ்க் கவிதைகள் அமெரிக்க மண்ணில் பயிராகட்டும் என்கிறார். இதற்கு என்ன அர்த்தம்? மொழி பெயர்ப்புகள் இதற்குப் போதுமா? மொழி பெயர்ப்பையா அவர் குறிப்பிடுகிறார்? அப்படியில்லை. அமெரிக்க நிலத்தைத் தமிழ் நிலமாக்க வேண்டும். தமிழுக்குள் நீராய் ஓடும் உறவுகளை அமெரிக்க நிலத்தில் பயிர் செய்ய வேண்டும். வெறுக்கத்தக்க ஆதிக்கக் கலாச்சாரத்திற்குத் தமிழ்க் கவிஞன் தன்னை அடிமைப்படுத்திக்கொள்ள முடியாது. ஆதிக்கத்திற்கு எதிராய்த்

தமிழ்க் கவிஞன் செயல்பட வேண்டும். இங்குத்தான் லிங்கனோடும், விட்மனோடும் தமிழ்க் கவிஞன் கைகோத்துக் கொள்ள முடியும். தமிழ்க் கவிஞனுக்குள் இருக்கும் கணியன் பூங்குன்றன், அமெரிக்கக் கவிஞனோடு இப்படித்தான் உறவாட முடியும். டாலர்கள் தேடுவதற்காகத் தமிழ்க் கவிஞர்கள் அமெரிக்காவுக்குச் செல்லவில்லை என்பது எந்த அளவிற்கு உண்மை! டாலரைத் தேடுவது என்றாலும், தமிழன் அங்கு எப்படித் தன்னைத் தக்க வைத்துக்கொள்ள முடியும்? இந்த நெருக்கடி பற்றித் தமிழன்பன் ஏதாவது சொல்லுகிறாரா?

உண்மையில் கவிஞர்களுக்குத் தேவையான கடமையைத் தமிழன்பன் எடுத்துரைக்கிறார். எந்த மொழிக் கவிஞனுக்கும் இதுதான் கடமை. சமத்துவத்தில்தான் மனிதன் தழைக்க முடியும். கவிதைப் பயிருக்கு மூல வித்து சமத்துவம்தான். டாலர் மட்டுமே தேடி வந்தவர்க்குக் கவிஞர் என்ன சொல்ல முடியும்? டாலரையும், கவிதையையும் சமரசப்படுத்தி வைத்துக் கொள்வது சாத்தியம்தானா? இந்தக் கேள்வி அமெரிக்கச் சூழலில்மட்டும் ஒரு தமிழ்க் கவிஞன் கேட்டுக் கொள்கிற கேள்வியாக இருக்க முடியாது. இங்கும் நாம் கேட்பது இந்தக் கேள்வியைத்தான். அதிகாரத்தோடும், பதவியோடும், செல்வத்தோடும் இங்குள்ள தமிழ்க் கவிஞனுக்குச் சமரசம் தேவைதானா? இவன் கவிதையை வளர்க்க முடியுமா? இவன் புகழை வளர்த்தவன் தமிழை வளர்ப்பானா?

*உன் வீட்டுக்கு...*

**இங்கும்**

**ஒரு தமிழகத்தைப் படையுங்கள் - (ஜ)**

எம். எஸ். சுப்புலட்சுமியும், ஏசுதாசும் தமிழ்க் குழந்தைகளின் உதடுகளில் ஒட்டவில்லை. எப்பொழுதாவது தங்கள் வீட்டிற்கு வரும் தமிழரை வரவேற்க, பெற்றோர்கள் சொல்லிக் கொடுத்த

'வணக்கம்' என்பதைக் குழந்தைகள் சொல்கிறார்கள். சித்திரங்களிலும், சிலைகளிலும் உள்ள தமிழ்-இந்தியக் கடவுளர்கள் இந்தக் குழந்தைகளுக்கு அந்நியர்கள். தமிழ் மண்ணின் மகத்துவங்கள் இந்தக் குழந்தைகளிடம் ஒட்டுவதில்லை. வாழ்க்கை வேகத்தில் இந்தக் குழந்தைகளிடம் தமிழைக் கொண்டு போக முடியவில்லை. விலக்கி வைக்கப் பட்ட மனைவிபோல் இங்குத் தமிழ்ப் பண்பாடு. வகுப்பறையில் உள்ள உடன் கற்கும் அமெரிக்கப் பெண்ணோடு, ஒரு தமிழ் இளைஞனுக்கு உறவு ஏற்பட்டது என்றால், தன் பெற்றோர்க்கும் அந்தப் பெண்ணுக்கும் இடையில், அந்த இளைஞன் சிக்கித் தவிக்கிறான். வள்ளியோடு முருகன் டேட்டிங் வைத்துக் கொள்ளவில்லையா என்று இவன் முணுமுணுக்கிறான். கண்ணன் புல்லாங்குழலில் இங்கு ரேப் இசை கொப்பளிக்கிறது. இங்கு விநாயகனுக்கு அவல் பொரி தர முடியாது. கடவுளர்களே சுதிமாறிப் போகிறார்கள் என்றால், பிள்ளைகளைக் குறை சொல்ல முடியுமா?

இப்படி இங்கு ஒரு பெரும் சிக்கல் உள்ளது. வள்ளுவன், இளங்கோ, ஔவையை இந்தக் குழந்தைகளுக்குக் கற்றுக் கொடுங்கள்; கும்மியும் கோலாட்டமும் இவர்களுக்குக் கற்றுக் கொடுங்கள்; வாழுமிடத்தைத் தமிழ் நிலமாய் மாற்றாமல் வாழ்க்கையை மட்டும் தமிழாய் மாற்ற முடியுமா என்று கேட்கிறார்.

என்ன செய்ய முடியும்? அமெரிக்காவில் குடியேறிய தமிழர்களுக்கு இந்தச் சிக்கல் என்றால், இங்கு என்ன வாழ்கிறது என்று நம்மை நாமே கேட்டுக் கொள்ளத்தான் வேண்டியிருக்கிறது. எங்கும் ஆங்கிலப் பள்ளி. தமிழ்ப் பண்பாட்டிற்கு இங்கு என்ன இடம்? தமிழ் இசைக்கு இங்கு வாழ்வுண்டா? வள்ளுவரையும், இளங்கோவையும் இங்கு யார் கற்கிறார்கள்? வெறும் கவிதை வரிகளை மட்டும் கற்றுக்கொள்வதா கல்வி? எதுகை, மோனை, படிமம், குறியீடு என்பனவற்றை அடுக்கி வைப்பதா கவிதை?

இப்படியெல்லாம் நமக்குள் கேட்டுக்கொள்கிறோம். வாழும் நிலத்தைத் தமிழ் நிலமாய் மாற்றாமல், தமிழ்ப் பண்பாட்டை எங்கே விதைக்க முடியும்? தமிழன்பன் நமக்கும்தான் இதைச் சொல்கிறார். இன்றைய தமிழ்ச் சூழலில் நமக்கு நேர்ந்துள்ள மாபெரும் நெருக்கடி இது. இங்குத் தமிழ் கற்பது என்றால், கவிதை கற்பது என்றால் என்ன பொருள்? எதற்குக் கற்க வேண்டும்? எப்படிக் கற்க முடியும்? வாழும் நிலத்தைத் தமிழ் நிலமாய் மாற்று என்பதைத் தவிர, வேறு என்ன சொல்ல முடியும்?

# 23

# தமிழன்பன் கவிதைப் பின்னணி பற்றி மேலும் சில கருத்துகள்

தமிழன்பனின் 'நானும் என் கவிதையும்' என்னும் உரையைக் கேட்டபோது, அவருக்குள் ஆழமாகப் பதிந்திருக்கிற சமூக உணர்வு குறித்த வரலாறு சற்றுத் தெளிவுபடுகிறது. அவருடைய தாத்தா பெரும் புலவர். அவர் வழியாக, இவர் தந்தைக்கு வந்து சேர்ந்த சொத்துகளையெல்லாம் உறவினர்களாலேயே இழக்க வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது. ஜெயப்பிரகாஷ் நாராயணன், அசோக் மேத்தா, லோகியா ஆகியவர்கள் சென்னிமலைக்கு வந்திருந்தபொழுது, அவர்கள் கூறிய கருத்துகள் இவர் நெஞ்சில் ஆழமாகப் பதிந்தன. ஏற்கனவே பெரியார் வழி முற்போக்காளராக இருந்த இவர் உள்ளத்தில், உடைமைக்கு எதிரான உணர்வு ஆழமாகப் பதிந்தது. அடுத்து வந்த ஆண்டுகளில் மார்க்சியம் இவருக்குள் பதிந்திருக்க வேண்டும்.

ஜெ.பி. நாராயணன் முதலியவர்களின் கொள்கையைச் சமூக ஜனநாயகம் என்று குறிப்பிடுகின்றனர். இதற்கும்

மார்க்சியத்திற்கும் இடையில் ஒற்றுமை, வேற்றுமைகள் உண்டு. எனினும் சோசலிசத் தலைவர்கள் வழியே, தமிழன்பனுக்குள் வளர்ந்து வந்தது மார்க்சியப் பார்வை; பகுத்தறிவை விடாத மார்க்சியப் பார்வை. பகுத்தறிவுக்கும் மார்க்சியத்திற்கும் இடையில், ஒரு பக்கத்தில் முரண்கள் உண்டு. மார்க்சிய நோக்கில் பகுத்தறிவை ஆழப்படுத்திக் கொள்ளக்கூடிய வாய்ப்பைப் பெரியார் தவற விட்டுவிட்டார். பெரியாரிடமும் மார்க்சியத்தின்பால் ஆழ்ந்த பற்று வளரவில்லை. தமிழன்பன், மாவோவை நோக்கி வளர்ந்திருக்கிறார். பெரியாரை விடவும் அவரால் இயலவில்லை. 'இசங்கள்' பற்றித் தமிழன்பனுக்கு மரியாதை இல்லை. தனக்குள் இடம் பெற்றிருப்பது மார்க்சியம் என்று யாராவது கூறினால், அந்தக் கூற்று இவருக்கு உவப்பாக இல்லை. என்னைப் பொறுத்தவரை மார்க்சியம் ஓர் இசம் அல்ல. மார்க்சியம் ஒரு மெய்யியல். அதை அரசியலாகக் குறுக்கும்போதுதான் இப்படி 'இசமா'க்குவது எனக்கு உடன்பாடில்லை.

'இலக்கியக் குடும்பம்' இதழில் கவிதைகள் குறித்துத் தமிழன்பன் சில கட்டுரைகள் எழுதியிருக்கிறார். 'கவிதை மக்களுக்குப் புரிய வேண்டும்' என்பது உண்மைதான். ஆனால், 'மக்களுக்குப் புரிந்தால்தான் அது கவிதை' என்பவர்கள் கூற்று, தமிழன்பனுக்கு உடன்பாடில்லை. கவிதையை ஆழ்ந்து கற்பதற்குத் தேவையான பயிற்சியைக் கெடுத்துவிடக் கூடாது. கவிதையை ஆழ்ந்து கற்பதன்மூலம் ஒருவன் தன்னைக் கவிஞனாகக் காண முடியும். தொடர்ந்து ஆராயும்பொழுது, கவிஞன் ஒரு மெய்யியலாளனாக இருப்பதையும் நாம் காண முடியும். எந்த மனிதனுக்குள்ளும் இயல்பாகவே ஒரு கவிஞன் - ஒரு படைப்பாளி - ஒரு மெய்யியலாளன் இருக்கிறான். இறுதியில், கணிதம் உட்பட எல்லாமே கவிதையின் கூறுகள் அல்லது வெளிப்பாடுகள். டால்ஸ்டாய் மட்டுமல்லாமல், டார்வினும் மார்க்சும்கூடக் கவிஞர்களே. ஐன்ஸ்டினும் ஒரு பெருங்கவிஞன். சாக்ரடீசும் பிளாட்டோவும் பெரிய கவிஞர்கள். உலகத்தை, பிரபஞ்சத்தை, வரலாற்றை மனிதன் தனக்குள்

செறித்துக் கொள்கிறான். இப்படி அவற்றைத் தன்வயப்படுத்திக் கொள்வது கவித்துவம். கவிதை என்று ஒருவன் ஏதும் எழுதாமலேயே கவிஞனாக இருக்க முடியும். கவிதை எழுதுவதற்குப் பயிற்சி தேவை. எழுத்திலக்கணம் முதலியவை தேவை. இப்படி எவ்வளவோ தேவைகளை உள்ளடக்கியது இந்தப் பயிற்சி. கவித்துவத்தின் வழியே வெளிப்படும் ஊற்றை, வாய்க்கால்கள் அமைத்து ஓடவிடும்பொழுது கவிதையாகிறது. கவித்துவம்தான் எனது தேடல். கவிதைகளை ஆராய்வதன் விளைவு, கவித்துவத்தைத்தான் நான் தேடுகிறேன்

கார்லோஸ் வில்லியம் அவர்களின் கவிதை ஒன்றை எடுத்துக் கொண்டு, தமிழன்பன் தரும் விளக்கம் நமக்குப் பல உண்மைகளை வெளிப்படுத்துகிறது. கவிதை, வார்த்தைகளில், வரிகளில் வெளிப்படுகிறது என்பது ஓர் உண்மை. கவிதையின் அர்த்தம் காண, நாம் கவிதை எழும் சூழலைத் தேடிச் செல்ல வேண்டும். கவிஞரின் சில அனுபவங்கள் இந்த வரிகளில் வெளிப்படுகின்றன. வரிகளின் வழியே தேடிச் செல்லும்போது, ஓர் அனுபவம் மட்டுமல்லாமல், அவனுடைய அனுபவத்தின் பன்முகத்தன்மை தெரிய வருகிறது. கவிஞனைக் கண்டறி வதற்காக, நமக்கு முன்னவர் சிலர் ஆராய்ந்தனர்.

கவிதையில் வெளிப்படும் அனுபவத்தின் வழியே, கவிஞனைக் கெட்டியாகப் பிடித்துக்கொள்ள வேண்டும். இவ்வகை ஆய்வு, இப்பொழுது பொருட்படுத்தப்படுவது இல்லை. 'கவிஞனுக்குள் வெளிப்பட்ட அனுபவம் - அவன் வழியே வெளிப்படுகிற சமூகத்தின் அனுபவம்-' வரலாற்றின் ஒரு கீற்று அல்லது முரணியக்கம். இப்படித் தொடரும்போது, கவிஞன் வழியே வரலாற்று இயக்கத்தை, பிரபஞ்ச இயக்கத்தை நாம் பார்க்கிறோம். தொடக்க நிலைக் கவிஞனுக்குள் இந்தப் பேரியக்கம் தன்னைத் திறந்து கொள்வதில்லை. குடும்பம் முதலிய வரையறைகள் அவனை அடைத்துக் கொண்டிருக்கும். கவிதையின் பேரியக்கத்திற்கு அவனே தடையாகவும் இருந்து விடுவான். அரசியலுக்காகத்தான் கவிதை எழுத வேண்டும்

என்று கருதுபவன், இப்படித் தனக்குத்தானே தடை விதித்துக் கொள்கிறான். இப்படி எவ்வளவோ தடைகள். இவற்றை யெல்லாம் விலக்கிக்கொண்டு, தன் பயணத்தைத் தொடர வேண்டும். இந்த இடைக் காட்சிகளுக்கு முக்கியத்துவம் இல்லாமலும் இல்லை. ஆனால் இவற்றுக்குள் முடங்கிவிடக் கூடாது. காட்சிகளைக் கடந்து சென்றால், கவிஞனுக்குள் தரிசனம் விரியும். அவன்தான் பெருங்கவிஞன். வால்ட் விட்மன் இப்படித்தான் ஒரு பெரும் கவிஞராக இருக்கிறார். எந்தப் புள்ளியில் தொடங்கினாலும், இறுதியில் ஒரு பெரும் தரிசனங்களுக்குள் பாய்கிறார். அங்கு வால்ட்விட்மன் இல்லை. தரிசனம் மட்டுமே விரிந்து கிடக்கிறது. வால்ட்விட்மன் அத்வைதி. அத்வைதிக்கு மட்டும்தான் பெரும் தரிசனங்கள் சாத்தியம் என்பது இல்லை. ஒரு மார்க்சியனுக்கும் பெரும் தரிசனங்கள் சாத்தியம்தான்.

தமிழன்பனுக்குள்ளும் அங்கங்கே தரிசனங்களின் பல அழுத்தமான இரேகைகள் தட்டுப்படுகின்றன. அவருக்குள் தரிசனம் பெருங்காட்சியாய் விரிந்து, தம்மை ஈர்த்துக் கொள்கிறது. மேலும் மேலும் இத் தரிசனங்கள் அழுத்தம் பெற வேண்டும் என்று நாம் விரும்புகிறோம்.

## 24

## தமிழ்க் கவிதையில் ஒரு சாதனையாளர்

தமிழன்பன் கவிதைகள், இதுவரை பார்த்த வகையில் சில கருத்துகளை - மதிப்பீடுகளை இங்குத் தர முடியும்.

தமிழன்பன் தன் கவிதைகளின் வழியே நம் கால வரலாற்றைத் தொட்டுச் செல்கிறார். தனக்கான மெய்யியல் என அவர் வரையறுத்துக் கொள்ளவில்லை என்றபோதிலும்,

அங்கங்கே அவரது மெய்யியல் பார்வை பல இடங்களில் பளிச்சிடுகிறது. வரலாற்றை அவர் தொடுகிறார் என்ற வகையில் கவிதைக்கு ஆழம் சேர்ந்திருக்கிறது. மார்க்ஸ், மாவோ எனத் தெளிவோடுதான் பேசுகிறார். இந்த நெறியில் இன்னும் விரிவாகச் செல்ல இயலுமானால், கூடியவரை அகண்டம் தழுவியதாகத் தன் கவிதையை எப்பொழுதும் உருவாக்க முடியும். அகண்டத்தைத் தொட்டுவிடுகிற கவிதைகள் இவரிடம் அங்கங்கே இருக்கின்றன.

தமிழ்க் கவிதையில் தமிழன்பன் ஒரு சாதனையாளர் என்பதை மிக எளிதாகச் சொல்லிவிட முடியும். பல சமயங்களில், சந்தர்ப்பங்கள் தருகிற தூண்டுதல் காரணமாக இவரும் நிறையக் கவிதைகள் எழுதியிருக்கிறார். கவித்துவம் இடம் பெறும்படியாகவும் அவற்றை எழுதியிருக்கிறார். தன்னை வெளிப்படுத்திக்கொள்ள எழுதுகிறார். கட்டுரை எழுதத் தொடங்கும்போது, கவிதை தன்னைச் சிறைப்படுத்தி வைத்திருப்பதைச் சொல்லியிருக்கிறார். ஆகவே இவரை அசலான கவிஞர் என்று கண்டுகொள்ள முடிகிறது. இதுதான் தமிழன்பனின் பலம்.

தமிழகச் சூழலில் இன்று ஒருவர் அசலான கவிஞராக இருக்கிறாரா? இருக்க முடியுமா? - என்ற கேள்விக்கு இடமுண்டு. வானம்பாடிகளின் வருகைக்கு முன்பே இவர் கவிதை எழுதினார். வானம்பாடிகளின் இயக்கச் சூழல் மேலும் ஒரு தூண்டுதலாக இருந்தது. தமிழ் இலக்கியத்தில் ஆழமாகத் தோய்ந்த ஒருவர், கவிதை எழுதாமல் இருக்க முடியாது என்பதோடு, இருபதாம் நூற்றாண்டுச் சூழல் தமிழனுக்குள் நிறைய கொந்தளிப்புகளை ஏற்படுத்தியிருந்தன. இவற்றை உள்வாங்கிக் கொண்டு பாரதியும் பாரதிதாசனும் கவிதை செய்தனர். இந்தச் சூழல் தமிழ்க் கவிஞரை ஆழமாகவே பாதித்திருக்கிறது. வானம்பாடி இயக்கமும் இந்த ஆற்றலின் ஒரு வெளிப்பாடுதான். வானம்பாடிக் கவிஞர்களிடமிருந்து இவரைத் தனியே பிரித்து எண்ணத்தக்க தனித்தன்மைகள் பல

இவருக்கு இருக்கின்றன. மார்க்சியப் பார்வையிலான அரசியல் ஆளுமை இவருக்குள் சிறப்பாக வெளிப்படுகின்றது. தமிழ்க் கவிதையின் வளம் இவருக்குள் விரிவு பெற்றிருக்கிறது. இந்த வளத்தின் ஒரு பகுதி திருத்தக்கதேவர் பாணியிலான கற்பனை வளம். இந்தப் போக்கு, தமிழ்க் கவிதைக்கு ஓர் ஆற்றல் என்று சொல்ல முடியாது. எனினும், இந்தப் போக்கையும் தமிழன்பன் தனக்குள் கொண்டிருக்கிறார். இதன் காரணமாக அவரது கவிதை நம் மதிப்பீட்டில் குறைந்துவிடவில்லை.

மகாகவி என்று ஒரு கவிஞரை மதிப்பீடு செய்கிற போக்கு, உலக அளவிலான இலக்கிய வரலாற்றுக்குள் செயல்படுகிறது. மகாகவி என்பதற்கு எல்லோரும் ஒப்புக்கொள்வதாகிய பொதுவான காரணிகள் இருப்பதாகச் சொல்ல முடிவதில்லை. தமிழகத்தைப் பொறுத்தவரை கம்பரைக் 'கவிச்சக்கரவர்த்தி' என்று கூறும் வழக்காறு இருக்கிறது. இவருக்கு நிகராகத் தமிழ்க் கவிதையில் இன்னொருவரைச் சொல்ல முடியாது என்று கூறுகிறார்கள். கம்பருக்குத் தருகிற மரியாதையை நாம் திருவள்ளுவருக்கும், இளங்கோவுக்கும் தருகிறோம். இத்தகைய மதிப்பீடுகூடப் பாரதியார் வழியில்தான் நமக்கு உருவாயிற்று. இது மட்டுமில்லை. பாரதியை மகாகவி என நம்புகிறோம். மகாகவி என்பதற்கான இலக்கணத்தைக்கூட, பாரதியிடமிருந்து தான் எடுத்துக்கொள்கிறோம்.

பாரதி ஒரு மகாகவி. தன் காலத்தை முழுமையாகத் தனக்குள் உள்வாங்கிக் கொண்டிருந்தார். தன் கால உலக அளவிலான வரலாற்றின் வீச்சும் பார்வையும் அவருக்குள் செறிவு பெற்றிருந்தன. ஆங்கில ஆதிக்கத்திற்கு எதிராகத் தொடங்கிய விடுதலைப் போரில், அவர் தன்னை முழுமையாகக் கரைத்துக் கொண்டிருந்தார். இந்தியாவின் தத்துவங்களும், சமயங்களும் அவரிடம் வளமான முறையில் ஒரு புள்ளியில் குவிந்திருந்தன. தேசமே அவருக்குத் தெய்வம். கண்ணனும் புத்தரும் நம் தேச விடுதலைக்கு, நமக்கு அருள் புரிபவர்கள். தொழிலாளர்கள் தெய்வம்; பெண்ணும் தெய்வம்; எழுத்தும் தெய்வம்; அப்புறம்

அறிவே தெய்வம்; உண்மையின் பேர் தெய்வம்; இப்படி வேதங்களைப் பாரதி புதுப்பித்தார். நம் காலத்திற்குரியதாக மரபின் ஆற்றலை வரித்துக்கொண்டார். தமிழுக்குப் புது மலர்ச்சி தந்தார். ஒரு யுகத்தையே நமக்குள் கொண்டு வந்தார். இன்றும் நாம் பாரதியின் யுகத்தில் வாழ்வதாகத்தான் நம்புகிறோம். பாரதியையும் பாரதிதாசனையும்கூட நாம் வேறுபடுத்தி/எதிர் நிறுத்திப் பார்க்க முடியாது. வறுமை அவரை எளியவராக்கி விடவில்லை. துன்பங்கள் அவருக்குள் சுடர் விட்டன. பாரதியைப் பற்றி இன்று சிலர் சொல்லும் குறைகள், பாரதி என்ற பெரு நெருப்பில் சாம்பலாக்கி விடுகின்றனர்.

பாரதிக்குப் பின்னர் மகாகவி என்ற பெருமைக்குரிய கவிஞர்/ கவிஞர்கள் தமிழில் உண்டா என்ற குரல் அடிக்கடி எழுகிறது. பாரதிதாசனைச் சிலர் கடுமையாகக் குறை கூறுகின்றனர். பாரதிதாசனிடம் உள்ள குறைகள் வெளிப்படையாகவே தெரிகின்றன. ஆனால், தமிழ்த் தேசத்தின் வரலாற்றோடும் வாழ்வோடும் இறுக்கமாகத் தன்னைப் பிணைத்துக்கொண்ட கவிஞர் என்று இவரைத் தவிர வேறு யாரையும் சொல்ல முடியாது. பாரதிக்கு இந்தியத் தேசியம் பின்னணி. இந்தியத் தேசியத்தின் செழுமைகள் எல்லாம் பாரதியிடம் பொங்கி வழிந்தன. பாரதியின் இந்தியத் தேசியத்தைப் பார்ப்பனீயம் என்று கூறுவதில் அர்த்தமில்லை. தமிழ்த் தேசியத்தின் முதற் பெரும் கவிஞர் பாரதிதாசன்தான். பாரதியின் தமிழ்த் தேசியம், இந்திய தேசியத்தின் உள் முரண்பாடு இல்லாமல் பொருந்தி இருக்கிறது. ஆனால் விடுதலைக்கு முன்னரும் சரி, பின்னரும் சரி, காங்கிரஸ் கட்சியின் இந்தியத் தேசியம் என்பது, சாதி முதலிய அருவருப்பான கூறுகளைத் தனக்குள் கொண்டதாக மாறியது. இந்தச் சூழலில் இந்தியத் தேசியத்திலிருந்து பாரதிதாசன் விலகியதை ஒரு குற்றம் என்று சொல்ல முடியாது.

தமிழ்த் தேசியத்தை வளர்த்தெடுக்க வேண்டிய காலச் சூழலில், பாரதிதாசன் தன்னை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டார். தமிழனை சாதி, மதம் முதலிய தளைகளிலிருந்து

விடுதலை செய்ய விரும்பினார்; பெண்ணுக்கு உயர்வளித்தார்; பொதுவுடைமை உணர்வைத் தனக்குள் முழு அளவில் தாங்கியிருந்தார்; தமிழுக்கு, தமிழனுக்கு ஒரு தீங்கு என்றால் சிங்கமெனக் கிளம்பினார்; பாரதியைக் காட்டிலும் தமிழ் இலக்கியத்தின் வளம் பாரதிதாசனுக்குப் பேராறாய்ப் பெருகிப் பொங்கியது. தமிழ் வாழ்வையும் பாரதிதாசனையும் பிரித்துப் பார்க்கவே முடியாது. எல்லா உணர்வுகளும் அவருக்குள் கவிதையாய்ப் பொங்கின.

தமிழ்த் தேசியம் அவருக்குள் முழுமையாய் இயங்கியது. "தமிழ் என்பதற்கு ஆயிரம் அர்த்தங்கள்" சொன்னார். அகம் என்றும், புறம் என்றும், அறிவு என்றும், அன்பு என்றும், காதல் என்றும், கற்பு என்றும், கலை என்றும், இளமை என்றும், இயற்கை என்றும், நிலம் என்றும், நீர் என்றும், விடுதலை என்றும், பொதுவுடைமை என்றும், இப்படிப் பாரதிதாசனுக்குள் தமிழ் வாழ்ந்தது; வளர்ந்தது; ஆகவே பாரதிதாசனும் ஒரு மகாகவிதான். பாரதியைப்போல் சமயங்களின் ஆழம் பாரதிதாசனுக்குள் இல்லை. பெரியாரிடமும் ஆன்மிகம் இல்லை என்று சொல்ல முடியாது. அந்த ஆன்மிகம் பெரியாருக்குள் அடங்கியிருந்தது. அன்றியும், சாதி முதலியவற்றைத் தகர்த் தெறியும் நோக்கில் மதங்களைக் கடுமையாகப் பெரியார் தாக்கினார். புரோகிதத்தையே மதமாகக் கண்டார். புரோகிதத்தை ஒழித்துவிட்டால் போதும், மீதியிருக்கிற கடவுள் பற்றி அவருக்குக் கவலை இல்லை. அப்படி ஒருவர் இருந்தால் இருந்துவிட்டுப் போகட்டும் என்பது பெரியார் கருத்து. பாரதிதாசனுக்குக் கடவுள் உண்டா இல்லையா என்ற தர்க்கத்தில் அக்கறை இல்லை. சைவம் அவரிடம் கவர்ச்சி ஏற்படுத்தியிருந்தது என்பதுகூட உண்மைதான். தமிழ் இலக்கியத்தைப் பெரியார் சாடியது பாரதிதாசனுக்கு உடன்பாடில்லை. சுருக்கமாகச் சொன்னால் மேற்பரப்பிற்கு அடியில் மதம் தனக்குள் பொதிந்து வைத்திருக்கும் அழகுகளும் அர்த்தங்களும் பாரதிதாசனுக்குள் வளம் சேர்க்கவில்லை.

எனினும், பாரதிதாசனிடம் தமிழ் என்பது கடவுளாக இருந்தது; மதமாக இருந்தது என்பதில் ஐயமில்லை.

இன்று பெருங்கவிஞர்கள் தோன்றாததற்கு என்ன காரணம் எனச் சில ஆண்டுகளுக்கு முன்னர், இங்கு நடந்த ஒரு கூட்டத்தில் கவிஞர் அப்துல் ரகுமானை நண்பர் ஒருவர் கேட்டார். "பாரதியாரைப் பொறுத்தவரை இந்தியத் தேசிய விடுதலை என்ற பின்னணி இருந்தது; அதைப்போலவே, பாரதிதாசனுக்குத் திராவிடத் தேச விடுதலை என்ற பின்னணி இருந்தது; அவர்களை ஊக்குவித்த மாபெரும் சக்திகள் அவை; இன்று அப்படி எந்தச் சக்தியும் இல்லை. ஆகவே, பெருங் கவிஞர்கள் இன்று தோன்ற முடியாது." - இவ்வாறு அப்துல் ரகுமான் பதில் சொன்னார்.

மேற்குறிப்பிட்ட கேள்வியை யாரும் கேட்டிருக்கலாம். அப்துல் ரகுமானைப் போலவே இன்றும் சிலரும் இதே பதிலைத் தந்திருக்கலாம். ஆனால் உண்மை என்ன என்று நாம் ஆராய்ந்து பார்க்கலாம். இந்தியத் தேசிய விடுதலை 47இலும் சரி, இன்றும் சரி முற்றுப் பெறவில்லை. அது மட்டுமில்லை. நாம் பெற்ற அரைகுறை விடுதலையையும் நாம் அரசியல் வாதிகளிடமும், அரசாங்கத்திடமும், முதலாளிகளிடமும், அந்நியர்களிடமும் இழந்து நிற்கிறோம். அன்றில்லாத சிக்கல்கள் எவ்வளவோ நம் வாழ்வை இன்று கூறுபோட்டுக் கொண்டிருக்கின்றன. திராவிடத் தேசியம் கைவிடப்பட்டது. எனினும், அதன் உள்ளூறையாக இருந்தது தமிழ்த் தேசியம். இன்று தமிழ்த் தேசியத்திற்கான முனைப்போடு நாம் இருக்கிறோம். இந்தியத் தேசியம், இப்பொழுது பல தேசியங்களின் தொகுப்பு என்று சொல்வதற்கு இல்லை. கூட்டாட்சியும், சோஷலிசமும் இங்குச் சொல்லப் பட்டிருக்குமானால், இந்தியத் தேசியம் நமக்கு எதிரியாக மாறியிருக்க முடியாது. அன்றியும் எந்தத் தேசியத்தையும் ஊடுருவி, சிதைத்து தன் ஆதிக்கத்திற்கான மூலப்பொருள் ஆக்கிக்கொள்ள, உலக அளவிலான ஆதிக்கங்கள் இன்று செயல்படுகின்றன.

ஆகவே, பாரதியார், பாரதிதாசன் காலத்தைவிடவும், இன்று பாதித்திருக்கிற நெருக்கடிகள் பல மடங்கு அதிகரித்துள்ளன. தமிழ் நிலம் அந்நியர்களின் ஆதிக்கத்திற்குட்பட்டு அழிந்து வருகிறது. வரலாற்றிலிருந்து வெளியேற்றப்படுகிற நெருக்கடி தமிழனுக்கு நேர்ந்துள்ளது. தமிழன் தன்னை வரலாற்றிலிருந்து திரட்டிக் கொண்டாலொழியத் தன்னை வாழ்வித்துக் கொள்ள முடியாது. தமிழகத்தில் செயல்படும் அரசியல் சக்திகள், அவை எந்த வண்ணத்தில் செயல்பட்டாலும் தமிழனை அழிப்பதில் முனைந்து நிற்கின்றன.

ஒவ்வொரு தமிழனும் இன்றைய நெருக்கடிகளால் மிகவும் பாதிக்கப்பட்டிருக்கிறான். நாம் யார் என்ற அடையாள நெருக்கடி தமிழனை இன்று கடுமையாகப் பாதித்துள்ளது. வரலாறும், மாபெரும் இலக்கியமும், பண்பாடும் இன்று தமிழனைக் கைவிட்டதுபோல் தெரிகிறது; அல்லது இவற்றைக் கைவிட்டதன் காரணமாகத் தமிழன் கையறு நிலையில் இருக்கிறான்.

நான் ஏற்கனவே கூறியபடி பாரதியும் இன்னும் மாறிவிடவில்லை. பாரதிதாசனையும் பாரதிக்குள் அடக்கிப் பார்ப்பதில் முரண் இல்லை. அநேகமாக, பாரதியின் வழியில்தான் நாம் வரலாறு முதலான எல்லாவற்றையும் உள்வாங்கிக் கொண்டோம். பாரதியை நாம் ஆழப்படுத்தவும் விரிவுபடுத்தவும் நமக்குத் தேவை இருக்கிறது. பாரதியை முன் வைத்துத்தான் மகாகவி என்பதற்கான இலக்கணம் பற்றிப் பேசுகிறோம். மகா கவிஞனுக்கு இன்று தேவையில்லை என்றுகூடச் சிலர் விவாதிக்கலாம். ஆனால் மகாகவி என்ற குறியீட்டின் மூலம் நாம் பெற விரும்பியது என்ன? கவிதையின் வழியே, கவித்துவத்தின் வழியே நாம் இழந்துவிட்ட மாபெரும் வரலாற்றை நமக்குள் மீட்டுக்கொள்ள விரும்புகிறோம்.

இயற்கையை, மனித மேன்மையை, வரலாற்றின் வழியே நமக்குள் வந்து சேர்ந்திருக்க வேண்டிய செழுமைகளை, அறவுணர்வை, அழகியலை, செயல் வீரத்தை நாம் பெற

விரும்புகிறோம். மாமனிதர் எனவும், மேதை எனவும் சிலரை நாம் கண்டறிந்து போற்றும்போது, நமக்குள் பெற விரும்பும் உணர்வுகள் இத்தகையவைதாம். இதன் காரணமாகத்தான் ஏசுவையும், சாக்ரடீசையும், புத்தரையும், மகாவீரரையும், தொல்காப்பியரையும், வள்ளுவரையும், இளங்கோவையும், கம்பரையும் நாம் இன்றும் நமக்குள் வைத்துப் போற்றுகிறோம். காந்தியடிகளை 'மகாத்மா' என்று இந்திய மக்கள் கொண்டாடினார்கள். மகாத்மா ஒரு பேரான்மாவாக இருந்தார். அவர் வழியே இந்திய மக்கள் இந்திய வரலாற்றை, இந்தியாவிற்கே உரிய தனித்த வாழ்வியலை, அறவுணர்வை எல்லா வகை முரண்பாடுகளோடும் தமக்குள் கண்டார்கள். இப்படித்தான் மார்க்சையும், மாவோவையும், பெரியாரையும் வரலாற்றில் நமக்குள் வைத்துப் பார்க்கிறோம். இது ஒருவகை தரிசனம். ஒரு பார்வையில் நமக்குள் எழுவது பெருங்காட்சி; விசுவரூபம் காவியப் பரிமாணம் கொண்டது. காவியங்கள் என்பவை இந்த மாபெரும் காட்சியைத்தான் நமக்குள் பதிவு செய்து வைத்திருக்கின்றன. காவியங்களைப் படைத்த ஒரு சமூகம் தன்னை இழந்துவிட முடியாது. பாரதி இதைப்பற்றி நமக்கு அறிமுகப்படுத்தியிருக்கிறார்.

இருபதாம் நூற்றாண்டில் எத்தனையோ பெரியோர்களை நாம் பார்த்திருக்கிறோம். வள்ளலார் முதலிய பலரை நாம் மறப்பதற்கில்லை. தமிழ்ச் சமூகம் மறைமலையடிகள், திரு.வி.க., மனோன்மணீயம் சுந்தரனார், சோமசுந்தர பாரதியார் முதலியவர்களின் மூலம் தன்னைத்தானே புரட்டிப் பார்த்துக்கொண்டது. பாரதியார் மூலம் நம்மைப் பற்றிய நெருக்கமான பார்வையை நாம் பெற்றோம். பெரியார் நமக்கொரு சிகரம். பெரியாரை மதிக்கத் தெரியாதவனை இன்று தமிழன் என நம்மால் நம்ப முடியவில்லை. நம்மைத் தமிழன் என அடையாளம் கண்டு உணர்த்தியதில் பெரியாரின் பங்கு மதிக்கத்தக்கது. பெரியாரைக் குறுக்கிப் பார்த்தவர்கள், இன்று பெரியாரை அழித்துக் கொண்டிருக்கிறார்கள். பெரியாரையும் கடந்து பெரியாரை

த.14.

உள்வாங்கிக் கொண்டு செய்ய வேண்டிய பயணத்தை மறந்த இவர்கள் தடைச்சுவர்களை எழுப்புகின்றனர்.

முதலாளியத்தைப் பெரியார் மதிக்கவில்லை. ஏகாதிபத்தியத்தின் சொத்துகளை இழப்பீடில்லாமல் எடுத்துக் கொள்ள வேண்டும் என்று கூறிய பெரியார், இன்று அந்நிய சக்திகளின் ஊடுருவலை அறவே ஏற்கமாட்டார். புரோகிதமாய் மாறிவிட்ட மதத்தோடும் பார்ப்பனீயத்தோடும்தான் அவர் போர் தொடுத்தார். மக்களின் ஆன்மிக ஆற்றல்களை நாம் மீட்டுக்கொள்ள வேண்டும். தமிழில் புராணங்கள் இருக்கின்றன என்பதால் அதனைக் காட்டுமிராண்டி மொழி என்றார். ஆங்கிலத்தை ஆதரித்தார். ஒரு தந்தை தன் மகனைக் காய்வதைப் போன்ற ஒரு போக்கு என்றுதான் நாம் இதனைக் காண முடியும். 'தமிழ்நாடு தமிழருக்கே' என்ற பெரியார் தமிழை வெறுக்க முடியுமா? ஆங்கிலத்தை ஆதரிக்க முடியுமா? பெரியாரின் மூலம் 'பெரியாரியம்' என்பதை நாம் கண்டு தொகுக்கிறோம். தமக்குச் சிலை வைப்பதைப் பெரியார் ஏற்கவில்லை. அதைப்போலவே பெரியாரை விலை பொருளாக்குவதைப் பெரியார் ஏற்க முடியாது. தமிழ் இலக்கியத்தைப் பெரியார் போற்றவில்லை. ஆனால் தமிழ் இலக்கியத்திற்குள் ஆழ்ந்து சென்ற பாரதிதாசன், தமிழ் இலக்கியத்தைப் போற்றினார். அவரையும் பெரியார் அடக்கிக் கொண்டுதான் இருந்தார். எனினும் பாரதிதாசனுக்குள் பொங்கிய உணர்வின் வழியே தமிழ் இலக்கியத்தின் ஆழத்திற்குள் நாம் செல்ல முடியும். ஆதிப் பொதுமைச் சமூகம் தமிழ் இலக்கியத்தில் ஆழமாகப் பதிந்துள்ளது. அதைப் பொதுமை உணர்வு, பொதுவுடைமை உணர்வு, சமத்துவ உணர்வு, அறவுணர்வு என்று நாம் அடையாளம் காண முடியும்.

இவ்வளவும் சொல்லிவிட்டு, இப்பொழுது தமிழன்பனிடம் திரும்பலாம். தமிழில் இன்று சிறப்பான கவிஞர்கள் என்று சிலரை நாம் குறிப்பிட முடியும். அப்துல் ரகுமான், இன்குலாப், கலாப்பிரியா என்று தொடங்கி, இவர்களோடு தமிழன்பனையும்

முதல் வரிசையில் வைத்துப் பேசலாம். பழமலை முதலியவர்களை அடுத்த வரிசையில் வைத்துப் பேசலாம். மகாகவி என்பது குறித்து நாம் பேசி வந்தோம். இன்றையச் சூழல் மகாகவியின் தோற்றத்திற்கான சூழல் என்பதில் ஐயமில்லை. காவியம் ஒன்றை எழுதியவரை, மகாகவி எனச் சொல்வது மலையாளத்தில் ஒரு மரபு என்று சொல்கின்றனர். பாரதியை முன்னிறுத்திப் பார்ப்பது நம் மரபு என்று வைத்துக்கொண்டால், காவியம் எழுதினால் மட்டும்தான் மகாகவி என்பதை நாம் ஏற்பதற்கில்லை. பாரத சக்தி மகாகாவியம் எழுதிய சுத்தானந்த பாரதியை இங்கு நாம் ஒதுக்க முடியாது. இடையில் யார் யாரோ காவியம் எழுதியிருக்கின்றனர். வாழ்க்கை வரலாற்றைக் காவியம் என்ற பெயரில் தந்ததைத் தவிர, அவை காவியங்கள்தானா என்ற ஆய்வுக்கு இடமிருக்கின்றது. காவியம் என்பது வானத்தையும் நம்மையும் இணைக்கிற முயற்சி; காலங்களை இணைக்கிற முயற்சி; வரலாற்றை மனிதனுக்குள் விசுவரூபம் கண்டு தெளிகிற முயற்சி; இந்த நோக்கில், இவை காவியங்கள் என்று சொல்ல முடியவில்லை.

பாரதியின் பாஞ்சாலியின் சபதமும், கண்ணன் பாட்டும் அளவில் சிறியன என்றாலும் காவியப் பரிமாணத்தை அவை தம்முள் கொண்டுள்ளன. குயில் பாட்டிற்கும், காவியப் பரிமாணத்தில் அர்த்தம் சொல்ல முயற்சிகள் நடைபெறுகின்றன. பாரதியின் பார்வையில் புத்தரும், ஏசுவும், கண்ணனும், காந்தியும் இணைந்து விடுகின்றனர்; கங்கையும், காவிரியும் இணைகின்றன; வேதங்களை நமக்குள் புதுமை செய்கிறார் பாரதி. தெய்வமும் உள்ளது என உணர்த்துகிறார். காவியப் பரிமாணமும் இயல்பாக உள்ளது. பாரதிதாசன் பற்றி முன்பே குறிப்பிட்டோம். ஒரு மகாகவி எனப் பாரதிதாசனைப் பார்ப்பதில் உள்ள சிக்கல்களையும் குறிப்பிட்டோம். இவற்றைக் கடந்து பாரதிதாசன் ஒரு மகாகவியே என்றும் நாம் கண்டோம்.

கண்ணதாசனுக்குள் ஒரு மகாகவிக்கான அடையாளங்கள் நிறையவே உள்ளன. தன்னைத் தொடர்ந்து அழித்துக்

கொண்டிருப்பதிலும் கண்ணதாசன் முனைந்திருந்தார். இவற்றையும் மீறிக் கண்ணதாசன் ஒரு மகாகவிக்குரிய அடையாளத்தோடுதான் நம்முன் நிற்கிறார்.

## 25

## தமிழன்பனிடம் சமதரும உணர்வுக்கே முதலிடம்

தமிழன்பனிடம் தமிழுணர்வு பல்வேறு வடிவங்களில் வெளிப்படுவதை நாம் பார்க்கிறோம். தமிழை நேரிடையாக வாழ்த்தியோ, வணங்கியோ, வருணித்தோ அவர் கவிதை செய்யவில்லை. இருபதாம் நூற்றாண்டில் தமிழைப் புதுமைப் படுத்திய பாரதியாரும், பாரதிதாசனாரும் அவர் கட்டுண்டு கிடக்கிறார் என்று சொல்லும் அளவுக்குக் கவியரங்கக் கவிதைகள் பலவற்றில் தமிழுக்கு அவர்கள் தந்த ஆற்றலைப் பாராட்டிக் கவிதை செய்துள்ளார். தமிழ்ச் சமூகத்திற்குப் புதிய திசை காட்டிய பெரியாரையும், அண்ணாவையும் பாராட்டிக் கவிதை படைத்துள்ளார்.

சமத்துவ உணர்வைத் தமிழுணர்வு என்று புரிந்து கொள்வதற்கும் போற்றுவதற்கும் ஏற்ற முறையில், மார்க்சியத்தை உள்வாங்கிக் கொண்டு பலபடக் கவிதை செய்துள்ளார். தமிழ்க் கவிதைக்குள் திருத்தக்கதேவர், செயங் கொண்டார் வழியே வெளிப்பட்டிருக்கும் கற்பனைத் திறனையும் அற்புத நவிற்சியையும் நம் காலத் தமிழ்க் கவிதைக்குள் கொண்டு வந்துள்ளார். இயற்கையின் பேரழகுகளைத் தமிழில் பாடுவதில் எப்போதும் பெரு விருப்பம் கொண்டிருக்கிறார். தமிழுக்கு வளம் சேர்க்கிற மிகச் சில கவிஞர்களுக்குள் முக்கியமானவர் எனத் தமிழன்பனை நாம் கொண்டாடுவது தகும்.

1965இல் தமிழுக்காக உயிரீந்த இளைஞர்களை இவர் பெரிதும் பாராட்டுகிறார். இளங்கோவையும், கண்ணகியையும், மாதவியையும் குறித்துக் கற்பனைத் திறன் உச்ச அளவில் விளங்கும் வகையில், இவர் பாடிய கவிதைகள் கண்ணகியையும் மாதவியையும் அவர்களின் கற்புத் திறன், கலைத் திறன் கொண்டு நம் நெஞ்சில் நிறுத்தக்கூடியவை.

தமிழ் எழுத்துகளின் வடிவங்களை, கோணல்களைக்கூட இவர் அழகுபடுத்திப் பாடிய திறன் வியக்கத்தக்கது. பிரபஞ்சம் வானத்தின் பேரழகோடும் பேராறுகளின் விரைவோடும் இவர் கவிதைகளின் வழியே நமக்குள் எட்டிப் பார்க்கிறது. தமிழன்பன் தமிழுக்குத் தந்திருக்கிற அற்புதம் இது என்று நாம் சிறப்பாகக் குறிப்பிட முடியும்.

காலம் காலமாகத் தமிழ்க் கவிதைகளுக்குள் வந்திருக்கிற எத்தனையோ உத்திகள் இவரின் கவிதைகளின் வெளியே நமக்கு வந்து சேர்ந்துள்ளன. இவரது கவிதை ஓட்டத்தில், அங்கங்கே பழந்தமிழ்க் கவிதைகளின் தெறிப்புகளை நாம் கண்டு உணர்ந்து மதிக்கிறோம். கூந்தலுக்கு இயற்கை மணம் உண்டா, இல்லையா என்று ஆராய்ச்சியில் ஈடுபட்டவர்களை இவர் கேலி செய்கிறார். ஆராய்ச்சி என்ற பெயரில் தமிழைப் புண்படுத்துபவர்களை இவர் காய்கிறார். வள்ளுவரைப் பற்றித் தனிக் கவிதைகள் இவர் செய்யவில்லை என்றபோதிலும், இவர் கவிதைகளின் வழியே ஊடோட்டமாக வள்ளுவரின் அறம் இயங்குவதைக் கண்டு சிலிர்த்துப் போகிறோம்.

வள்ளுவரின் அறத்தைத் தனக்குள் தாங்கியிராதவன், தமிழ்க் கவிஞன் அல்லன் என்று நாம் உறுதியாகச் சொல்லிவிட முடியும். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேலாக, ஆயிரத்துக்கும் மேற்பட்ட கவிஞர்கள், தம் கற்பனைத் திறனையும் கலை உணர்வையும் பதிந்து வைத்திருக்கிற தமிழ் மொழியின் வாரிசாக வந்துள்ள ஓர் ஆற்றல்மிக்க கவிஞனுக்குள், பழந்தமிழ்க் கவிதையின் பேரழகுகள் பொங்கி வழிவதில் வியப்பில்லை.

நவீன காலப் பார்வையின் வழியே பழந்தமிழ்க் கவிதை இவரிடம் புதிய அழகு பெறுவதை நாம் பார்த்து மகிழ்கிறோம். நவீன கால வரலாறும், அறிவியலும் மாபெரும் பிரபஞ்சத்தையும் மிக விரிந்த வரலாற்றையும் நமக்கு மிக நெருக்கமாகக் கொண்டு வந்திருக்கின்றன. தமிழன்பன் கவிதை நமக்கு நெருக்கமாக இருப்பதற்கு இதுவும் ஒரு காரணம். இப்படி எத்தனையோ வடிவங்களில் இவரது கவிதைகள் வழியே வெளிப்படும் தமிழுணர்வை நமக்குள் உள்வாங்கிக் கொள்கிறோம். தமிழ்ப் புத்தாண்டின்போதும், பொங்கல் விழாவின்போதும் கவியரங்கக் கவிதைகள் என்ற முறையில் தமிழ் மக்களின் வாழ்வு குறித்து மகிழ்ச்சியோடும், சில சமயம் வருத்தத்தோடும் இவர் பாடுகிறார். உழவர்களை, கைவினைஞர்களை எப்பொழுதும் இவர் நெஞ்சம் நெகிழப் போற்றுகிறார். பாட்டாளி வர்க்கம் குறித்து இவர் பாடும் போதெல்லாம் நம் நெஞ்சில் கனல் தெறிக்கிறது. உலகத்தை மாற்றி அமைக்க வந்தவர்கள் இவர்கள் என்ற பெருமித உணர்வு பொங்கப் பாடும் இவரே, இடி முழக்கமென எழுந்து வந்த நீங்கள், ஏன் இப்படி நைந்து போனீர்கள் என்று கவலையோடு பாடுகிறார்.

மனிதன் மகத்தானவன் என்று கார்க்கி கூறினார். இந்த மனிதனின் மகத்துவத்தை எங்கும் எப்பொழுதும் தொடர்ந்து எழுதுகிறார் தமிழன்பன். மார்க்சியப் பார்வை வழியே மகத்தானவன் என்று தோன்றும் இந்த மனிதன், பகுத்தறிவுப் பார்வையின் வழியே அல்லது தமிழ்ப் பார்வை வழியே என்ன தோற்றம் தருகிறான் என்று நாம் ஆராய்ந்து பார்க்க வேண்டும். அவன் வேறு இவன் வேறு எனத் தோற்றம் வேறுபடும் என்றால், எப்படி என்றும் ஏன் என்றும் நமக்குள் கேட்டுக்கொள்ள வேண்டும். இப்படி ஒருவனுக்கு இரு வேறு தோற்றங்கள் எப்படிச் சாத்தியம்? மார்க்சியனும் பெரியாரியனும் தமிழனும் எப்படி வேறுபாடு அடைகிறார்கள்? வேறுபட முடியுமா? பாரதியும், பாரதிதாசனும் வேறுபடுகின்றனரா? இளங்கோவும்,

வள்ளுவரும் பாரதியும் எங்கே இணைகின்றனர் அல்லது வேறுபடுகின்றனர்? தமிழ்க் கவிதை ஆய்வில் இத்தகைய கேள்விகளுக்கு இடமுண்டு என்பதை நாம் மறுக்க முடியாது. தமிழன்பன் கவிதைக்குள்ளும் இவர்கள் பெறும் மாற்றங்களுக்கிடையில் வேறுபாடுகள் தெரிகின்றன.

வேறுபாடுகள் இல்லாமல் மனிதன் இல்லை என்பதே ஒரு பொதுவான உண்மை. ஆனால், வேறுபாடுகளையும் மீறி மனிதர்கள் ஒரு மையத்தில் இணைய வேண்டும். தமிழினத்தின் உயர்வு பற்றி இன்று நாம் பேசுகிறோம். மார்க்சியத்தையும் பெரியாரியத்தையும் தமிழியத்தையும் இணைத்துக் காணுகிற பெரும்காட்சி இன்று நமக்குத் தேவை. வள்ளுவரின் அறம்தான் இளங்கோவுக்குள்ளும், கம்பனுக்குள்ளும், பாரதிக்குள்ளும், பாரதிதாசனுக்குள்ளும், பெரியாருக்குள்ளும் இயங்குகிறது என்று, இன்று நாம் காண வேண்டும். கணியன் பூங்குன்றனுக்குள்ளும் சாத்தனாருக்குள்ளும் இயங்குவதும் இந்த அறம்தான்; வள்ளுவருக்குள் வெளிப்பட்டது இந்த அறம்; நக்கீரன் கேள்வியால் வெடித்துக் கிளம்பியது இந்த அறம்தான்; வர்க்கங்கள் தோன்றுவதற்கு முன்பு இருந்த ஆதிப்பொதுமைச் சமூகத்தின் அறம் இது; பொதுமை இதன் குணம்; செல்வத்திற்கும் அதிகாரத்திற்கும் இங்கு இடமில்லை; உழைப்பும் பகிர்வும் இதன் செயல்பாடு; இயற்கையின் பேரழகை, பேராற்றலை உள்வாங்கிக்கொண்டது இந்த அறம்; இயற்கையும், சமூகமும், உயிர்களும் ஒன்று என்பது இந்த அறம்; நாயன்மார்களிடமும் ஆழ்வார்களிடமும் இந்த அறம் செயல்பட்டதா இல்லையா? சித்தர்களுக்குள் இந்த அறம் செழிக்கவில்லையா? வேளாண்மை செய்வோர் இந்த அறத்தோடுதானே வாழ்ந்தனர். இந்த அறம் நமது அறிவிற்கு உகந்தது. இந்த அறத்தை மையம் கொண்டுதான் பகுத்தறிவு விரிய வேண்டும். அதுதான் தமிழின் அறம்; தமிழியம்; சமதர்மத்திலிருந்து விலகியவர்கள் நமக்குக் கடவுளர்களும் அல்லர்; கவிஞர்களும் அல்லர்.

வரலாற்றில் நாம் ஒடுக்கப்பட்டோம். யாரால், எப்படி என்னும் வரலாற்று ஆய்வு நமக்குத் தேவை. செவ்விந்தியர்கள் ஒடுக்கப்பட்டார்கள்; அழிக்கப்பட்டார்கள். ஆகவேதான் தமிழன்பனோடு சேர்ந்து நாமும் குமுறுகிறோம். ஒடுக்கப் பட்டவர்களின் விடுதலைக்கான குரல் என்ற முறையில் மார்க்சியத்தை நாம் வரித்துக்கொள்கிறோம். அந்நியப்பட்ட சமூகத்தில் உடைமையாளர்க்கும் சேர்த்துத்தான் விடுதலை என்று முழங்குகிறோம். பார்ப்பனர்களுக்கும் சேர்த்துத்தான் விடுதலை என்பது, நம் சூழலுக்கு ஒத்த புரிதல் என்று நாம் உணர முடியும். தமிழனுக்குள் உலக மனிதன் உண்டு. இந்தியனாவதற்கு நமக்குத் தடை இல்லை. தமிழன் என்ற முறையில் நான் உலக மனிதன்; அதே சமயம் ஆசியன்; அதே சமயம் இந்தியன்; இப்படிச் சொல்லும் ஒவ்வொரு வகைப் பாட்டிற்குள்ளும் வரலாறு சார்ந்த வகைப்பாடுகள் உண்டு.

ஆங்கிலேயர் நம்மை அடிமைப்படுத்தும்போது நாம் இந்தியர்; இந்தியா நம்மை அடிமைப்படுத்தும்போது நாம் தமிழர்; ஏகாதிபத்தியம் நம்மை அடிமைப்படுத்தும்போது நாம் ஆசியர்; நாம் மூன்றாம் உலகத்தவர். தமிழன் இப்படித்தான் தன்னை விரித்துக்கொள்ள வேண்டும். ஏகாதிபத்தியத்திற்கு இடம் கொடுப்பவன் இந்தியனாக/ஆசியனாக இருக்க முடியாது.

தமிழன்பன் கவிதைகளில் சமதர்ம உணர்விற்கே நாம் முதலிடம் தர முடியும். இயற்கையின் ஆயிரம் அழகுகள் தமிழன்பன் கவிதைகளுக்குள் பூத்துக் குலுங்குகின்றன. இந்த இயற்கைப் பேரழகுகளை உள்வாங்கிக் கொள்பவனாக இருப்பவன், இருக்க வேண்டியவன் தமிழன். இவன் கவிஞனாக இருப்பான். இவன் மட்டுமே இயற்கை அழகையும் சமதர்மத்தையும் மையப்படுத்த முடியும். இந்த மனிதனுக்கு எத்தனையோ பெயர்கள். இவனுக்கு நாம் கடைசியாக வைத்த பெயர் பாரதிதாசன்; இவ்வளவு பெரிய பரந்த அளவிலான பார்வையை இந்த இருபதாம் நூற்றாண்டில் மட்டுமே நாம் பெறுகிறோம்.

பார்ப்பனர்களால் நாம் பாதிக்கப்பட்டபொழுது பார்ப்பனர் அல்லாத தமிழ் மக்களை, 'நீ தமிழன்' என்று சொன்னார்கள். இதற்கு அர்த்தம், பார்ப்பனர் வேண்டாம், வேறு வகையில் நாம் சாதிகளை வைத்துக் கொள்ளலாம் என்று அல்ல; இன்று நமக்குச் சாதிகள் வேண்டாம் என்று உணர்த்துவதற்கும், 'நீ தமிழன்' என்கிறார்கள். பார்ப்பனர்களை ஒழிப்போம். சாதிகளோடு உடைமைகளையும் அதிகாரத்தையும் வைத்துக் கொள்வோம் என்று கருதியவர்கள், நாம் அனைவரும் திராவிடர் அல்லது தமிழர் என்றார்கள். இது அரசியல். நமக்குச் சாதியும் வேண்டாம்; தனி உடைமையும் வேண்டாம்; ஒரு சிலரது அதிகாரத்தின்கீழ் நாம் அடங்கி இருக்கவும் வேண்டாம்; 'நீ தமிழன்' என்று சொல்பவர்களுக்கு இப்பொழுது ஒரு சிக்கல். உடைமைக்கு/அதிகாரத்திற்கு எதிராக நாம் திரள்கிறோம் என்பது அவர்களுக்குச் சிக்கல்.

இதேபோலத்தான் ஆங்கிலேயருக்கு எதிராக இந்திய மக்களைத் திரட்டும்போது, நாம் அனைவரும் இந்தியர் என்றனர்; அப்புறம் டெல்லியில் மட்டுமே அதிகாரத்தை வைத்துக்கொள்வது என்று முடிவு செய்தபோது, நாம் இந்தியராக இருக்க விரும்பவில்லை; நாம் தமிழராக இருப்போம் என்றோம் அவர்களுக்கு ஓர் அரசியல், நமக்கு ஓர் அரசியல். இந்தியனாக இரு என்று சொல்பவர்கள் காங்கிரஸ், பாரதிய ஜனதா கட்சியினர். இவர்களோடு ஆட்சி அதிகாரத்தைக் கைப்பற்றுவது அல்லது ஆட்சி அதிகாரத்தில் பங்கு கொள்வது கம்யூனிஸ்டுகளின் குறிக்கோள். ஆகவேதான் நாம் தமிழர் என்ற குரல் இவர்களுக்கு உவப்பாக இல்லை.

நான் தமிழன் என்பது தனி உடைமை விரும்பிகளின் அல்லது ஆட்சி அதிகாரப் பற்றாளர்களின் குரலாகவும் இருக்க முடியும். இவர்களுக்குச் சமதர்மம் உடன்பாடில்லை. இனம் என்றும் மொழி என்றும் உரக்கப் பேசுபவர்களும்கூட இப்படித்தான் உள்ளார்கள். இவர்களுக்கு மேற்கத்திய நாகரிகம் உடன்பாடு தான். ஏற்றத்தாழ்வை அடிப்படையாகக் கொண்டுதான்

மேற்கத்திய நாகரிகம் அமைகிறது. இங்கும் நகர நாகரிகம், கனரகத் தொழில்கள், எல்லாம் வேண்டும் என்பவர்கள், தனிவுடைமைப் பற்றாளர்களாய் இருக்கின்றனர். சமூகத்தில் இவர்கள் 5/10 சதம் மட்டுமே இருக்க முடியும். இவர்களுக்காக 90 சதவிகித மக்கள் உழைக்க வேண்டும், துன்புற வேண்டும். அப்படியானால் யார் தமிழன்? தமிழ் மக்கள் என்பவர்கள் யார்? தமிழ் நிலத்தின் இயற்கை, நீர் நிலைகள், காடுகள் அழிந்தாலும் கவலையில்லை. நாகரிகம் பெருக வேண்டும் என்பவர்கள், தமிழ் மக்களின் விடுதலைக்கு ஆனவர்கள் அல்லர். திராவிடர் கழகம், திராவிட முன்னேற்றக் கழகம், தனித்தமிழ் இயக்கத்தினர் எல்லோரும் தமிழ் நிலத்தின் அழிவு பற்றிப் பேசுவதில்லை; உழைப்பவர்க்கே நிலம் என்று பேசுவதில்லை; நாம் கவனமாக இருக்க வேண்டும். இங்குத்தான் பகுத்தறிவு, தனித்தமிழ் பற்றியெல்லாம் நாம் சிந்திக்க வேண்டும்.

சமதர்மத்தை முழு அளவில் ஏற்றுக்கொண்டு, பகுத்தறிவு தன்னை விரித்துக்கொள்ள வேண்டும். சமதர்மம் என்பதுதான் தமிழியம் என்று கண்டு, தமிழியக்கம் தன்னை விரிவுபடுத்திக் கொள்ள வேண்டும். முதலாளிகளோடு கைகோத்துக்கொள்ள முடியாது. முதலாளிகளின் தேவைகளை உள்வாங்கிக்கொண்டு கவிதை எழுத முடியாது. அவர்களின் அரசியலோ, பொருளியலோ, அறிவியலோகூட நமக்கு உடன்பாடாக இருக்க முடியாது. தமிழியம் விடுதலைக்கான கோட்பாடு தமிழன்பனின் கவிதைகளின் ஊடே செல்லும்போது நாம் இப்படியெல்லாம் சிந்தித்துத்தான் வெளியேறுகிறோம். இன்றும் பெருங்கவிதை படைக்கும் திறன் நமக்கு உண்டு என்று நம்புகிறோம். வள்ளுவரும், இளங்கோவும் நமக்குள் வாழ்கிறார்கள். அவர்களின் இருபதாம் நூற்றாண்டு வாரிசுகள்தான் பாரதி-பாரதிதாசன். இவர்களின் இன்றைய வாரிசுகள் தமிழன்பன், சிற்பி, இன்குலாப் முதலானோர்கள். இவர்களுக்குள் நுழைந்து நம் விடுதலைக்கான தளத்தை விரிவுபடுத்திக் கொள்ளும் முயற்சியாகத்தான் இந்த ஆய்வு.

26

# கூட்டுக்குத் திரும்புகிற பறவையாகத் தமிழன்பன்

தத்துவங்களிலிருந்தும் அரசியலிலிருந்தும் திரும்பத் திரும்ப வாழ்க்கைக்கு நாம் திரும்பியாக வேண்டும். வாழ்க்கையைத் தத்துவமாகவோ அரசியலாகவோ சுருக்க முடியாது என்பது மட்டுமல்ல; அப்படிச் சுருக்கினால் நாம் வாழவும் முடியாது. வாழ்க்கையைத் தத்துவமாக, அரசியலாகச் சுருக்கும்பொழுது வாழ்க்கை தன் சாரம் இழந்து போகும். இந்த நிலையில் தத்துவம் தோல்வி அடையும். வாழ்க்கையை முழு அளவில் உள்வாங்கிக் கொள்கிற தத்துவம் என்று எதனையும் சொல்ல முடியாது. வாழ்க்கையை மேம்படுத்துவதற்காகத்தான் தத்துவம் என்ற உண்மையை நாம் மறுக்கவில்லை. வரலாற்றுக் காலம் தோறும் தத்துவங்கள் மாறி மாறி வந்திருப்பதையும் நாம் கூற வேண்டும். ஒரு தத்துவத்தில் வாழ்க்கை அடங்குவதில்லை. ஒரே காலத்தில் ஒன்றுக்கு மேம்பட்ட தத்துவங்கள் உள்ளன. மாற்றுத் தத்துவம் என ஒன்றோ பலவோ இல்லாமல், ஒரு தத்துவம் தனித்தியங்கவும் முடியாது. தத்துவத்தின் உள்ளும் தளங்களும் கோணங்களும் இருக்கின்றன. ஆகவே, திரும்பத் திரும்ப நாம் வாழ்க்கையை நோக்கிச் செல்ல வேண்டியிருக்கிறது.

தத்துவத்தைவிட, அரசியலைவிட வாழ்க்கை பெரியது. தத்துவவாதிகள், அரசியல்வாதிகள் மட்டுமல்லாமல் எல்லா மனிதர்களும் ஏதோ சில வகைகளில் வாழ்கின்றனர். வாழ்க்கை அதன் இயல்பான போக்கில் என்றும் இருந்ததில்லை என்பதையும் நாம் இங்குக் கவனித்துக்கொள்ள வேண்டும். ஒவ்வொரு காலத்திலும் வாழ்க்கையை தமக்கேற்ற வடிவத்தில் கட்டமைக்கிற சக்திகள் இருக்கின்றன. வர்க்க வேறுபாடுகள், சாதி வேறுபாடுகள் நிலவுகிற சமூகத்தின் ஒரு பகுதியின், பிற பெரும் பகுதியினரின் வாழ்க்கையைத் தமக்குத் தேவையான

முறையில் கட்டமைக்கின்றனர். வாழ்வின் இன்பங்கள், துன்பங்கள், இலட்சியங்கள் முதலியவற்றை இவர்கள்தான் தீர்மானிக்கின்றனர். இந்தக் கட்டமைப்பில் பல்வேறு வகையான வடிவங்களில் அரசியலையும் தத்துவத்தையும் நாம் வைத்துப் பார்க்க வேண்டியிருக்கிறது. சமூகத்தின் மற்றப் பிரிவினரோடு உறவு கொள்ளாமல் நாம் வாழ முடியாது; வரலாற்றுக்கு வெளியில் நாம் செல்லவும் முடியாது; வரலாற்றில் குறிப்பிட்ட காலச் சூழலுக்குள் நாம் இருப்பதைத் தவிர்க்கவும் இயலாது. வரலாற்றில் நாம் வாழ்வதில்லை. ஆனால், வரலாற்று இயக்கத்தினுள் நாம் எங்கோ இருக்கிறோம். வரலாற்றின் நெருக்கடிக்குள் நாம் மாட்டிக்கொண்டும் இருக்கிறோம்.

இயற்கை என்றும், சமூகம் என்றும், பிரபஞ்சம் என்றும், வரலாறு, வாழ்க்கை என்றும் நாம் கருதிக்கொண்டு இருப்பதைக் கூட, கட்டமைப்புக்குள்தான். ஆதிக்கவாதிகள், சிலவற்றை நமக்காகக் கட்டமைக்கின்றனர் என்றபோதிலும், ஆதிக்கச் சக்திகளிடமிருந்து நம்மை விடுவித்துக்கொள்வதற்கான சில கட்டமைப்புகளை நாம் உருவாக்க முடியும். தத்துவங்கள், அரசியல் ஆகியன இந்த நோக்கிலும் செயல்பட முடியும். இந்த இடம்தான் நமக்கு முக்கியம். கவிதை பற்றிப் பேசும்பொழுதும் இந்தப் புள்ளியில்தான் நாம் நிற்கிறோம்.

வாழ்க்கையை நோக்கித் திரும்புவது என்றால் என்ன? அல்லது வாழ்க்கை என்றால் என்ன? ஆதிக்கத்திலிருந்து விடுபடுவது என்றால் என்ன? தரையில் நாம் வாழ்கிறோம். நிலத்தோடும், நீரோடும், உயிரினங்களோடும், காற்றோடும், வானத்தோடும் வாழ்கிறோம். ஆறுகளும் கடல்களும் நம்மைச் சூழ்ந்துள்ளன. நம் உடம்போடு உள்ள உறவுகளோடுதான் வாழ்கிறோம். குழந்தைகளும் நமக்கினியவை. விளையாட்டுகள் தேவை. இனிமையான உணர்வும் வாழ்வதற்குத் தகுந்த இடமும் நமக்குத் தேவை. கதிரவனும் நிலவும் இல்லாமல் நமக்கு வாழ்வு இல்லை. ஒவ்வொரு நாளும் இவற்றோடு உறவு கொண்டு, இவற்றை உள்வாங்கிக்கொண்டுதான் நாம் வாழ்கிறோம்;

குளிர்ந்த நீரில் குளிக்கிறோம்; நல்ல காற்றில் உடல் தோய்கிறோம். திருவிழாக்கள், கொண்டாட்டங்கள் நமக்குத் தேவை. ஆண் பெண் உறவும் ஒரு முக்கியமான தேவை. பயணங்கள் முக்கியம்; புதிய மனிதர்களோடு அறிமுகங்கள் அவசியம்; உடலுழைப்பு, தொழில் திறன்கள் நமக்குத் தேவை. புலன்களின் திறன்களை நாம் வளர்த்துக் கொள்கிறோம். நாம் வாழும் சூழலைத் தொடர்ந்து விரிவுபடுத்திக் கொள்கிறோம்.

இப்படி நூற்றுக்கணக்கில் உறவுகளோடு நாம் வாழ்கிறோம். இவையெல்லாம் நம்மை உயிர்ப்பிக்கின்றன; உணர்வூட்டுகின்றன; இடையில் நமக்கு ஏற்படும் சோர்வுகளை நீக்குகின்றன; நம் உணர்ச்சிகள் கிளர்ச்சியடைகின்றன; பரவசப்படுகிறோம். ஏதாவது ஒன்றுக்கு இழப்பு ஏற்படும்போது வருந்துகிறோம். பிரிவு நமக்குத் துன்பம்; பிரிவின் வழியேயும் நேசத்தைக் கற்கிறோம். துன்பங்கள் நமக்கு வாழ்வுக்கான பார்வையை வளர்க்கின்றன. நாம் நமக்காக மட்டும் வாழவில்லை. தனித்து நாம் வாழ்ந்துவிடவும் முடியாது. நாம் விட்டுக் கொடுக்கிறோம். பிறரும் நமக்கு ஏதாவது தந்தவண்ணம் இருக்கின்றனர்.

இவ்வாறு நாம் புலன்கள் வழியே, நம் உணர்வுகள் வழியே உலகத்தோடு நாம் இணைகிறோம்; உலகத்தை உள்வாங்கிக் கொள்கிறோம்; இயற்கையோடும் பிரபஞ்சத்தோடும் நாம் உறவில் இருக்கிறோம்; காலைச் சூரியன் நமக்குள் சுடரேற்றுகிறது. விண்மீன்கள் நமக்குள் வியப்பாக விரிகின்றன. தாவரங்களும் பறவைகளும் இல்லாமல் நமக்கு வாழ்வில்லை. இவை நம் வாழ்வுக்குள் வண்ணங்களைச் சேர்க்கின்றன.

வாழ்வின் அடிப்படை உறவுகள் இவை. இந்த உறவுகள் சிதைவுறும்பொழுதுதான் திகைக்கிறோம்; தடுமாறுகிறோம்; திகைப்போடும் தடுமாற்றத்தோடும் வாழ்வின் இந்த அடிப்படைகளிலிருந்து நம்மைச் சுருக்கிக்கொண்டு எங்கோ பயணம் செய்கிறோம். புத்தர் போதிமரத்தைத் தேடிச் சென்றார்; சாக்ரடீஸ் தெருக்களில் அலைந்தார்; வாழ்க்கை எங்கே தடம் மாறியது? வாழ்க்கைக்குள் எப்படி நெருக்கடிகள் வந்தன?

யாரால் இவை நேர்ந்தன என்று ஆராய்வதற்குத்தான் இவர்கள் அலைகிறார்கள். குளிர்ந்த நீரையும் மிதமான காற்றையும் விட்டு விலகி நமக்குள் சூடேற்றிக் கொண்டு இவர்கள் அலைகிறார்கள்; சங்கரன்கூட இப்படி அலைந்தவன்தான்; இறுதியில் தத்துவங்களைப் படைக்கிறார்கள்; வாழ்க்கைக்கு விளக்கம் சொல்கிறார்கள். இந்த விளக்கங்களின் வழியே வாழ்க்கையின் பரப்பு மேலும் விரிவடைகிறது. இங்கு வாழும் உனது வாழ்க்கையை, ஆறாயிரம் கற்களுக்கு அப்பால் வாழ்பவன் தீர்மானிப்பதன் உண்மையை இவர்கள் எடுத்துச் சொல்கிறார்கள். இங்கு ஏற்படும் பருவங்களின் கோளாறுகளைச் சூரியனில் ஏற்படும் கரும்புள்ளிகள் நிர்ணயிப்பதை எடுத்துக் காட்டுகிறார்கள். எவனுக்கோ பைத்தியம் பிடித்தால் அவன் உலகை அழிக்கக் கிளம்பிவிடுவான். கிரகங்களில் மனிதன் குடியேற முடியும் என்கிறான்; அணுவிற்குள் உள்ள சக்தியை விடுவிக்க முடியும் என்கிறான்; உலகம் தன் அச்சில் ஒரு கணம் தடுமாறி அப்புறம் நிதானமாய்ச் சுழல்கிறது; இந்த நெருக்கடிகள் நம் வாழ்க்கையை என்ன செய்கின்றன? நமக்குள் அச்சம் ஏற்படுகின்றன. நம் வாழ்க்கை அவலமாகிறது. மரணம் நம்மை நெருங்கி வருகிறது. நாம் ஊனப்படுகிறோம். நம் விதியை மற்றவர் நிர்ணயிப்பதைக் கண்டு நாம் திகைக்கிறோம். எப்படி நம்மை இவர்களுக்கு விட்டுக்கொடுத்தோம் என்று தடுமாறுகிறோம். நாமா அவரா என்றெல்லாம் கேட்டுக் கொள்கிறோம்.

இப்பொழுதெல்லாம் குழந்தைகள்தான் விளையாட்டுகளி லிருந்து வெளியேற்றப்படுகின்றார்கள். உயிரினங்கள் ஒவ்வொன்றாக அழிகின்றன. சூழல் மாசு அடைகின்றது. நீரிலும் காற்றிலும் நஞ்சு ஏறுகிறது. உலகம் எப்படிப் போனால் நமக்கென்ன என்று நம்மால் இருக்க முடிவதில்லை. நாமும் அரசியல்வாதிகள், தத்துவவாதிகள் ஆகிறோம். நமக்குள் சில பகுதிகள் விரிவடைந்தபொழுதிலும், வேறு சில பகுதிகள் சுருங்கி விடுகின்றன. நாம் சுயப்படுகிறோம். ஒளி நமக்குள்

பெருகுவது உண்மைதான். இருளும் நமக்குள் விரிகிறது. வாழ்க்கை நம் கையை விட்டுச் செல்கிறது. நமக்கான வாழ்க்கையை மீட்டுக்கொள்வதற்காக நாம் இப்பொழுது பாடுபடுகிறோம். வாழ்க்கை என்றால் என்ன என்பதை இன்று மீண்டும் சிந்திக்கிறோம். நிலம், நீர், மண், வானம், உயிர்கள், உறவுகள் என்று சிந்திக்கிறோம். இங்கு நாம் மீண்டும் கவிதைக்குத் திரும்புகிறோம். கவிதையின் உயிர் இங்குதான் உள்ளது. நீரில், நிலத்தில், காற்றில், வானத்தில், உயிர் இனங்களில் இவை நமக்குள் தரும் புத்துணர்ச்சியில் கவிதை உள்ளது. மரணமில்லாமல் வாழ்க்கை இல்லை; துயரம் இல்லாமல் வாழ்க்கை இல்லை; நெருக்கடி இல்லாமலும் வாழ்க்கை இல்லை; இவற்றைத் தகர்ப்பதன் மூலம்தான் வாழ்க்கை; இவற்றை அர்த்தப்படுத்துவதன் மூலம்தான் வாழ்க்கை; அறிவைக் கொண்டு வாழ்க்கையைத் திணித்துவிட முடியாது.

அரசியல் கவிதைகள் என்னதான் நமக்குச் சூடேற்றினாலும், துயரங்களை நோக்கி நம்மை இயக்கினாலும் அவை நமக்கு இன்பம் தரவில்லை; நிம்மதி தரவில்லை; நம்மை நிலத்திற்குக் கொண்டு வரவில்லை; தத்துவக் கவிதைகளும் இப்படி நமக்குள் எத்தனையோ கிளர்ச்சிகளை ஏற்படுத்தினாலும், நமக்கு இதமாக இல்லை. பிறர் சொல்லும் புகழ் மொழிகள் அந்தந்தச் சமயங்களில் நமக்குள் வீக்கத்தை ஏற்படுத்துவது உண்மை என்றாலும், நாம் சரிந்துதான் போகிறோம். தற்பெருமைகளும் தன்முனைப்புகளும் நம்மை நாமே கழுவில் ஏற்றிக் கொள்வதைப் போலத்தான்; எதிரிகளைக் காய்வது நமக்குத் தேவைதான்; என்றபோதிலும் நம்மை நாமே காயப்படுத்திக் கொள்ளவும் செய்கிறோம். ஆடம்பரங்கள் தற்காலிகமாக மகிழ்ச்சியை ஊட்டியபோதிலும், எளிமையில் இருக்கும் இன்பம் ஆடம்பரங்களில் இல்லை என்று உணர்கிறோம்.

ஆற்றங்கரையில் அமைதியாக இருக்கும் ஒரு கணத்திற்கு இவை ஈடில்லை. புல்தரையில் ஆற அமர்ந்து புல்லின்

வாழ்க்கையைப் பற்றிச் சிந்திக்கும்போது, நமக்குள் ஏற்படும் எளிமை உணர்வு எத்தனை இன்பமானது? இப்படியெல்லாம் தான் தன்னை எளிமைப்படுத்திக்கொண்டு, புலன் இன்பங் களைக் குறைத்துக்கொண்டு, ஆதிக்கத்திலிருந்து விடுபட்டு, ஆத்திரங்களிலிருந்து விடுபட்டு - நாம் வாழ்கிறோம்; வாழ விரும்புகிறோம். உருவகம், படிமம், குறியீடுகள் என்பனகூடக் கவிதையைக் காயப்படுத்துகின்றன. மௌனம்தான் இனிய கவிதை என்று தமிழன்பன் எத்தனை முறை சொல்கிறார்; இப்படி இயற்கையோடு, உழைப்பின் மூலம் உறவு கொண்டு, உயிரினங்களோடு உறவை வளர்த்துக்கொண்டு வாழும் எளிய வாழ்க்கைதான் இந்த உலகம். எல்லோருக்கும் வழங்கக்கூடிய வாழ்க்கை. இங்குதான் விடுதலைக்கு வழியுண்டு. என்னதான் இனிப்பு சுவையுடையது என்றாலும், நீரின் சுவைதான் மிகவும் இனியது. சூரியனுடைய அழகுக்கு நிகர் இன்னொன்று இல்லை. தாயின் அன்பு நமக்கு அமுதம். இப்படி வாழ்க்கையை எளிமைப்படுத்தி, அதேசமயம் இனிமையும் சுதந்திரமும் உள்ளதாக அதனை நமக்குக் காட்டுவது கவிதை.

கவிஞர் என்ற முறையில் தமிழன்பனும் இந்த வாழ்க்கையை ஆரத் தழுவிக்கொள்கிறார். இந்த வாழ்க்கைதான் கவிதை என்கிறார். எங்கெங்கோ உயரப் பறந்தாலும் பறவைகள் கூட்டுக்குள் திரும்புவதைப்போல, இந்த வாழ்க்கை என்னும் அழகிய கவிதைக்குத் தமிழன்பன் திரும்பத் திரும்ப வந்து சேருகிறார். இப்படி இல்லையென்றால், எருக்கஞ் செடியை எப்படிப் பாட முடியும்?

இப்பொழுது சொல்லலாம். தத்துவங்களும் அரசியலும் தம் இறுதி நோக்காக இந்த வாழ்க்கையைத்தான் சொல்ல வேண்டும். இப்படி ஒரு வாழ்க்கை நமக்கு வந்தவுடன், அங்கு அரசியலுக்கோ தத்துவத்திற்கோ வேலையில்லை. விடுதலைக்கான தத்துவமும் அரசியலும்தான் இத்தகைய வாழ்க்கையை நோக்கி இயங்கும். இந்தத் தத்துவத்தோடும் அரசியலோடும்தான் கவிதை கைகோத்துக்கொள்ள முடியும். தமிழன்பனின் கவிதை இப்படித்தான் இயங்குகிறது.

வானமெல்லாம் சுற்றி அலைந்து திரியும் பறவை, எத்தனையோ ஆவேசங்கள் - அதிர்ச்சிகளில் உணர்வு ஏறிப் பரவசப்பட்டு, பிறகு அவற்றையெல்லாம் உதறிக்கொண்டுதான் கூட்டுக்குத் திரும்புகிற பறவையாகத் தமிழன்பன் கவிதை இயங்குகிறது.

# 27

# தமிழன்பன் கவிதையில் கவித்துவமும் மானுடமும்

கவிதை, உலகை அழகுபடுத்துகிறது; உலகின் அழகுகளை எடுத்துரைக்கிறது; வாழ்க்கை அழகாக இருக்க வேண்டும் என்பதில் கவிதைக்கு அக்கறை அதிகம். வாழ்க்கை அறத்தோடு இருக்க வேண்டும்; சுதந்திரமாக இருக்க வேண்டும்; பிற உயிர்களின் சுதந்திரத்தை மனிதன் அபகரிக்கக் கூடாது. வாழ்க்கையில் சமத்துவம்தான் பேரறம், பேரழகு. இந்த மையத்தைவிட்டுக் கவிதை விலக முடியாது. இந்த மையத்திலிருந்துதான் கவிதை, அரசியல் என்று பேசும்; மெய்யியல் என்று சொல்லும்; சமதர்மம் பற்றிப் பேசும்; இவையெல்லாம் வாழ்வுக்கு அழகு சேர்க்க வேண்டும். இல்லையென்றால், கவிதை இவற்றுக்கு எதிராகக் கிளம்பும். மனிதனுக்குள் இப்படி அறவுணர்வை, அழகியல் உணர்வைக் கிளறுவதன் மூலம்தான், கவிதை என்றைக்கும் தன்னைத் தக்கவைத்துக் கொள்கிறது. சமதர்மம் நிலவுகிற வரையில் கவிதைக்கு அதுதான் குரல். எளிய வாழ்க்கையின் மூலம்தான் சமதர்மம் சாத்தியம். உழைப்பின் மூலம்தான் மனிதன் இயற்கையோடும் சமூகத்தோடும் உறவு கொள்கிறான். இத்தகைய உறவிலிருந்துதான் தன்னைப் பகிர்ந்துகொள்ளலைக் கற்கிறான்.

இதனால்தான் கவிதை ஆதிக்கங்களை ஏற்பதில்லை; எதிர்த்து நிற்கிறது; சில சமயம் ஆதிக்கங்களுக்குக் கவிஞர்கள் வசப்பட்டிருக்கிறார்கள் என்பதும் உண்மைதான். கவிஞரின்

த.15.

தன்னலம் ஒரு காரணமாக இருக்கக்கூடும். அல்லது ஆதிக்கங்கள் வாழ்க்கை முன்னேற்றத்திற்கு ஆதாரமாய் இருக்கின்றன என்று கவிஞன் நம்பியிருக்கலாம். ஆனால், எந்த நிலையிலும் கவிஞன் தனக்குள், தன்னை இழந்துவிடுவதில்லை. ஆதிக்கம் வாழ்க்கையை அழகுபடுத்துகிறது என்ற கருத்தைத் தான் ஆதிக்கக் கவிஞன் ஏற்றுக்கொண்டான். ஆனால் ஆதிக்கத்தின் உண்மை வடிவத்தை உணர்ந்துகொள்ளும் நிலையில், அதன் எல்லையை விட்டுக் கவிஞன் வெளியேறுகிறான். கவிதை இயக்கத்தில் இப்படிச் சிக்கலான காலகட்டங்கள் இப்படிப் பலமுறை நேர்ந்துள்ளன; இன்றும் கூட ஆதிக்க சக்திகளிடமிருந்து கவிஞர்கள் தம்மை விடுவித்துக் கொள்வது நடைபெறுவதில்லை.

ஆதிக்க சக்திகள், பெரும்பாலான மனிதர்களின் வாழ்வு, சிந்தனை உணர்வு முதலியவற்றை தம் தேவைகளுக்காகக் கட்டமைக்கின்றன என்பதை நாம் தொடர்ந்து பார்க்கிறோம். அதே சமயம் ஆதிக்கங்களுக்கு எதிராக, ஆதிக்கங்களுக்குத் தம்மை உட்படுத்திக்கொள்ளாமல், ஆதிக்கங்களின் எல்லைக்கு வெளியில் செல்வதற்கான செயல்களும் வரலாற்றில் தொடர்ந்து நிகழ்கின்றன.

அரசியல் ஆதிக்கம் இறுக்கமாகத் தம்மை நிறுவிக் கொள்கிறபோது, அதன் இறுக்கத்தைத் தகர்க்கும் நோக்கில் இயக்கங்கள் எழுகின்றன. மதம் நிறுவனப்படும்பொழுது அதற்கு எதிரான இயக்கங்கள் மத எல்லைக்குள் இருந்தும் கிளம்புகின்றன. ஆதிக்க பீடங்களிலிருந்து கடவுளைக் கீழே இறக்கிக் குடிசைகளுக்குள்ளும் தம் மனங்களுக்குள்ளும் கடவுளைக் காணும் முயற்சிகள் நடைபெறுகின்றன. இவையெல்லாம் அரண்மனைக்கு, மத பீடங்களுக்கு எதிரான இயக்கங்கள். இந்த இயக்கங்களின் மையத்தில் நாம் காண்பது என்ன? வாழ்க்கை எளிமையாக, அழகாக, அறத்தோடு பொருந்தியதாக எல்லோர்க்கும் ஆனதாக இருக்க வேண்டும் என்பதைத்தான் பார்க்கிறோம். கடவுள்களும் இத்தகைய

குணங்களோடுதான் இருக்க முடியும் என்று உண்மையான சமயவாதி நம்புகிறான்.

ஏகாதிபத்தியம் முதலிய ஆதிக்கங்களுக்கு எதிராக மார்க்சியம் கிளம்பியது உண்மை. ஆனால், எதிரிகளோடு போராடும்போது எதிரியின் ஆயுதங்களையும் ஆதிக்க உணர்வையும்கூட, நம்மையும் அறியாமல் உள்வாங்கிக் கொள்வதும் நேர்ந்துவிடுகிறது. கருத்துமுதல் வாதத்திற்கும், பொருள்முதல் வாதத்திற்கும் இடையிலான இத்தகைய மோதலின்போது, ஒன்றை மற்றது உள்வாங்கிக்கொள்கிற ஆபத்து பற்றி மார்க்ஸ் குறிப்பிட்டிருக்கிறார். இப்படி ஆதிக்கத்திற்கெதிரான போரில், மார்க்சியத்திற்கும் இந்த விபத்து நேர்ந்துவிடுகிறது. இந் நிலையில் மார்க்சியத்தை வசப்படுத்திக்கொள்கிற கட்சிகளிடமிருந்து மார்க்சியத்தை விடுவிப்பதும் தேவைப்படுகிறது. இந்த விடுதலைக்கான இயக்கத்தில் கவிதையின் பங்கு மிக முக்கியமானது.

ஊரகத் தொழில்கள் என்று சொல்லி இயற்கை அழகை நீரோடும் நிலத்தோடும் மனிதர்களுக்கான உறவை, உயிரினத் தன்மையை அழித்துவிடக் கூடாது என்ற கருத்தோடு கவிதை இயங்க முடியும். வாழ்வின் சுதந்திரத்தைப் பொருளியல் மற்றும் அரசியல் சக்திகள் அபகரித்துக்கொள்ளக் கூடாது என்று கவிதை பேச வேண்டும்.

மனிதர்களுக்கிடையில் இயல்பான நேசங்களைக் கட்சிகளோ அதிகாரமோ அபகரித்துக்கொள்ள முடியாது என்பதைக் கவிதை சொல்ல வேண்டும். அரசியல் வந்து மனிதனின் மனத்தை முற்றாக அடைத்துக்கொள்வது அடிமைத்தனம்தான். அவன் மனத்தினுள் காற்றும், வாழும் புதிய மனிதர்களும் சென்று தங்க, உறவாட இடம் வைத்திருக்க வேண்டும் என்பதைக் கவிதைதான் சொல்ல முடியும்.

இப்படிக் கவிதை பேசுவது பிரச்சாரமாக இருக்க முடியாது; கவிதைக்குக் கோபம் வரக்கூடாது என்றும், உரத்துப் பேசக்

கூடாது என்றும் யாரும் கட்டளை இட முடியாது. ஆபத்து நேரும்பொழுது கவிதை உரத்த குரலில் பேசத்தான் செய்யும். ஆபத்தை உணராதவன் அல்லது ஆபத்து இல்லாத இடத்தில் அமர்ந்திருப்பவன், கவிதை உரத்துப் பேசக் கூடாது என்று சொல்வதை நாம் புரிந்துகொள்ள முடியும். அரசியல் மேடை யேறிக் கட்சியின் தேவைக்காக முழங்கும்பொழுது, கவிதை தன்னைக் காயப்படுத்திக் கொள்கிறது. கவிதை மனிதனின் உள் ஆழங்களை நோக்கி இயங்க வேண்டும். ஆதிக்கத்தை உள்வாங்கிக் கொண்டவன், தன்னை எப்படியெல்லாம் அடிமைத்தனத்திற்கு உள்ளாக்கிக் கொண்டிருக்கிறான் என்பதைக் கவிதை சொல்ல முடியும். இப்படியெல்லாம் மலர்களின் அழகு என்றும், நீரோட்டங்களின் அழகு என்றும், மலைகளின் பெருமிதம் என்றும், எல்லையற்ற வானம் என்றும் சொல்லிச் சொல்லித்தான் மனிதருக்குள் நெகிழ்வை ஏற்படுத்தி, புல் தரையில் அவனை அமர வைத்து, புல்லின் அழகுபற்றிப் பார்க்கச் சொல்லி அனுபவிக்க விட வேண்டும். இப்படித்தான் அவனைத் தரைக்குக் கொண்டு வர முடியும். இதுதான் கவிதையின் முக்கியமான பணி.

திரும்பத் திரும்ப நாம் ஒன்றைச் சொல்ல வேண்டியுள்ளது. வாழ்க்கைதான் கவிதையின் பாடுபொருள். வாழ்க்கையிலிருந்து கிளம்பும் தத்துவமும் அரசியலும் வாழ்க்கையின் அழகுகளை, அறத்தை, சுதந்திரத்தை மேம்படுத்த வேண்டும். ஆதிகால மனிதன் பற்றிப் பேசும்பொழுது தத்துவம் என்றும், அரசியல் என்றும் நாம் பேசுவதில்லை. வாழ்க்கையில் ஏற்றத்தாழ்வு, நெருக்கடிகள் நேரும்பொழுதுதான், வாழ்க்கையைப் பற்றிய சரியான புரிதலுக்காகத் தத்துவங்கள் தேவைப்பட்டன. ஆனால் வாழ்க்கை எப்பொழுதுமே தன்னை முழுமையாகத் திறந்து கொள்வதில்லை. மெல்ல மெல்லத்தான் வாழ்க்கை தன்னைத் திறந்துகொள்கிறது. அதுபோல மனித வாழ்வின் எல்லைகள், ஆற்றல்கள், அழகுகள் முதலியனவும் மெல்ல மெல்லத்தான் விரிவு பெறுகின்றன. வாழ்வின் எல்லைகளை விரித்துப் போடுவதில் ஆதிக்க சக்திகளுக்கும் பங்குண்டு என்பதை நாம்

மறுக்க வேண்டுவதில்லை. வரலாறு என்பது எப்பொழுதுமே இரண்டு பக்கமாக உள்ளது. உயரச் செல்லும்போது காற்றின் அடர்த்தி குறைகிறது. கடலின் ஆழத்தில் செல்லும்போது, கடலின் பளுவை உடல் தாங்கிக்கொள்ள முடியாது; ஆனால் இத்தகைய பயணங்கள் முக்கியமானவை. ஆதிக்கமும் அடிமைத்தனமும் மனிதனுக்குள் கூர்மையாக இயங்கி, அவனை முன்நோக்கிச் செல்லத் தூண்டுகின்றன. ஜார் இல்லாமல் லெனின் தோன்ற முடியாது. சாக்ரடீஸ் நஞ்சை அருந்தியதன் மூலம், வாழ்க்கை தன்னை மேம்படுத்திக் கொண்டிருக்கிறது. முரண் இயக்கம் இப்படித்தான் செயல்படுகிறது. வரலாற்றில் இராமன் இல்லாமல் இராவணன் இல்லை; சூர்ப்பணகை இல்லாமல் சீதை இல்லை; கடவுள் இல்லாமல் பிசாசுகள் இல்லை; இவர்கள் ஓயாமல் போராடுகிறார்கள்; அழிவு ஆக்கமாகவும், ஆக்கமே அழிவாகவும் மாறுகிற காலங்களும் உண்டு. இவற்றிலிருந்துதான் காவியங்கள் எழுந்தன. கவிதையின் உச்சம் என்று காவியத்தை நாம் சொல்கிறோம். காவியப் பார்வை நமக்கு இன்று பெரிதும் குறைந்துவிட்டது என்பதை இங்குக் குறிப்பிட வேண்டும். தனிக் கவிதைக்குள் காவிய வீச்சுகளை இன்று கொண்டு வர வேண்டியுள்ளது.

பேரியக்கங்களோடு மனிதனை உறவுபடுத்த, காவியப் பார்வை தேவைப்படுகின்றது. கம்பரையும் இளங்கோவையும் சேக்ஸ்பியரையும் மில்டனையும் நம் இளைஞர்கள் படிக்க வேண்டும் என்று அவர்களைத் தூண்டுவது இதற்காகத்தான்.

இன்றைய ஒரு நாட்டின் வரலாறு என்பது, உலக வரலாற்றியக்கத்தின் ஒரு பகுதியாக உள்ளது. ஆக்கம் - அழிவு என்ற பல்வேறு சக்திகளின் பலநூறு முனைகள், இங்கு ஒரு புள்ளியில் குவிந்திருக்கின்றன. மலர் அழகு, வானம் அழகு என்று எளிய முறையில் ஓராயிரம் கவிதைகள் செய்வது இப்பொழுது இங்குப் பயன்படாது. இன்று மனிதன் தன்னை முழு அளவில் கிளறிக்கொள்ள வேண்டும். வரலாறு, பொருளியல், மானுடவியல், உளவியல், உயிரியல் என

நூற்றுக்கணக்கான அறிவியக்கங்களோடு இன்று நமக்கு உறவு தேவை. இன்றுபோல வாழ்க்கை இவ்வளவு பெரியதாக ஆற்றல்கள் நிறைந்ததாக, நெருக்கடி மிக்கதாக என்றைக்குமே இருந்ததில்லை. இதிலிருந்துதான் கவிதை தன்னை உயிர்ப்பித்துக் கொள்ள வேண்டும்.

தமிழகச் சூழலில் நாம் எங்கு இருக்கிறோம் என்பது பற்றி இப்பொழுது பார்த்துக் கொள்வோம். மார்க்சியமோ, பெரியாரியமோ நமக்குத் தேவையான வாழ்க்கையை, வாழ்க்கையின் அழகுகளை, ஆற்றல்களை எவ்வளவு தூரம் நமக்குள் கிளறிவிடுகின்றன என்ற அடிப்படையில்தான் நாம் அவற்றைப் பார்க்கிறோம் - பார்க்க வேண்டும். மார்க்சியத்திற்கோ, பெரியாரியத்திற்கோ வானம் இவ்வளவு பெரியதாக இருக்க வேண்டும் என்ற தேவை இல்லை. வியப்புக்குரிய ஒரு சூரிய கிரகணம் தோன்றும்பொழுது, நாய்கள் குரைப்பது பற்றி அவற்றுக்கு ஆர்வமில்லை; மலர்களின் ஆயிரக்கணக்கான வடிவங்களைப் பற்றி அவற்றுக்கு அக்கறை இல்லை; குழந்தைகளின் விளையாட்டுகள், கொண்டாட்டங்கள் குறித்து அவற்றுக்குப் பார்வை இல்லை; இயற்கை நமக்குள் நுழைந்து ஏற்படுத்தும் கிளர்ச்சிகள் பற்றி அவற்றுக்குக் கவலை இல்லை; காலைக் கதிரவனின் உதயமோ, மேற்கு வானத்தின் அழகோ மனிதனுக்குள் ஏற்படுத்தும் உணர்வுக் கிளர்ச்சிகள் குறித்து அவற்றுக்கு ஏதும் தெரியாது; வாழ்வியலின் வகை வகையான எத்தனையோ போக்குகளிலிருந்து அவை விலகி நிற்கின்றன. வாழ்வின் புதிர்கள் என்று எவ்வளவோ நாம் பார்க்கிறோம். இவற்றையெல்லாம் அவை பொருட்படுத்துவதில்லை.

'தமிழ்', நம்மைப் பொருத்தவரை ஒரு மந்திரச் சொல். மந்திரங்கள் ஓதி, சடங்குகள் செய்து, தலைவர் துதிபாடிக் கொண்டாடிக் கொண்டிருக்கிறோம்; இப்படிச் செய்வதனால் தமிழ் வாழ்வை அழித்துக்கொண்டும் இருக்கிறோம். இயக்கங்கள் என்று சொல்லி இளைஞர்களுக்குள் கூறுபோட்டு,

ஆத்திரங்களைக் கிளப்பி, குழுக்களில் அவர்களை அடைத்து, ஆற்றல்களைச் சுருக்கி, குட்டித் தலைவர்களுக்கு அடிமையாக்கி அவர்களை அழித்துக்கொண்டிருக்கிறோம். இப்படித் தமிழகத்தில் எத்தனையோ வகையான அழிவு வேலைகள். கடைத் தெருக்கள், பத்திரிகைகள், பொழுதுபோக்குகள் என்று எவ்வளவோ அழிவு வேலைகள். மார்க்சியமோ, பெரியாரியமோ இவற்றோடு சமரசம் செய்துகொண்டு, வாழ்ந்து கொண்டிருக்கின்றன; விடுதலைக்கான இயக்கங்கள் விடுதலையைத் தம் அளவில் முடக்கி வைத்திருக்கின்றன.

இந்தச் சூழலில்தான், வாழ்வின் அடிப்படைகளை நோக்கிக் கவிதை இயங்குவதன் தேவை நூறு மடங்கு அதிகரித்துள்ளது. வாழ்வின் உயிர்ச் சக்தியைக் கவிஞர்கள்தான் கண்டறிந்து சொல்வதோடன்றி, உயிர்ப்பிக்க வேண்டியிருக்கிறது. கூட்டங்களிலிருந்து விலகிக் கவிஞன் தனிமைக்குச் செல்கிறான். இரவில் நெடுநேரம் விழித்து என்ன செய்கிறான்? தனக்குள் என்ன தேடுகிறான்? வாழ்வை எங்கோ தொலைத்தோம் என்று தன்னைத்தானே கேட்டுக்கொள்கிறானா, இல்லையா?

தொடர்ந்து, கவிதை என்றால் என்ன? என்ற கேள்விதான் எனக்குள் சுழல்கிறது. தமிழகச் சூழலில் மார்க்சியரையும் பெரியாரியரையும்தான் நாம் கவனத்தில் கொள்கிறோம். இவர்களுக்குள் கவிதை ஏன் செத்துப் போகிறது? இவர்களுக் குள்ளிருந்து கவிதையை எப்படி உயிர்ப்பிப்பது?- என்பதும்தான் எனக்குள் எழுகிற கேள்வி. கவிதையைப் பற்றித் தமிழாசிரியர்களுக்கோ பேராசிரியர்களுக்கோ அக்கறை இருப்பதாகத் தெரியவில்லை. இவர்கள் சிலப்பதிகாரம் முதலிய வற்றைக்கூட அவை எப்படிப் பேரிலக்கியங்கள் என்ற நோக்கில் கற்பிப்பதாகத் தெரியவில்லை. மிகை உணர்ச்சியையும் கற்பனையையும் கவிதைகள் எனச் சொல்லிக் கொண்டிருக்கும் இவர்களுக்குத் தமிழ்க் கவிதையின் ஆழம் தெரியாது. வறுமை முதலிய கொடுமைகளைப் பாடுகிற எதார்த்தத்தைச் சொன்னால், அதைக் கவிதை என்று மார்க்சியர் கருதுகின்றனர்.

இப்படி இவர்களுக்குள் இருந்ததெல்லாம், கவிதையை எப்படி உயிர்ப்பிப்பது என்பது நம்மைப் பொருத்தவரை மிக முக்கியமான கேள்வி. கவியரங்குகளில் இளைஞர்களுக்குள் கவிஞர்கள் உணர்ச்சியை ஏற்றும்போது கைதட்டுகிறார்கள். கவிதையின் ஒருகணத் தெறிப்பு இவர்களுக்குள் இப்படி உணர்ச்சி ஏற்றுகிறது. ஓர் உண்மையை இங்கு நாம் மறுக்க வில்லை. எல்லோருக்குள்ளும் கவிதை இருக்கிறது. ஆயின், கவிதையின் மேல்தளத்தோடு மட்டுமே உறவு கொள்ளும் இவர்களுக்கு, அதுவே போதுமானதாக உள்ளது. கவிதையின் உள் ஆழங்கள், பன்முகப் பரிமாணங்கள் தேவை என்ற உணர்வு இவர்களுக்கு இல்லை. சிற்றிதழ்களில் எழுதும் இளைஞர்கள் பலருக்குள், கவித்துவம் இயங்குவதை நாம் பார்க்கிறோம். இந்தக் கவித்துவத்தின் அலைகளை எல்லோருக்குள்ளிருந்தும் நாம் எழுப்ப வேண்டும். இது குறித்து நாம் சிந்திப்பது நல்லது.

கவிதை குறித்துச் சிந்திக்கும்போது, சிலவற்றைத் தொடர்ந்து சொல்ல வேண்டியுள்ளது. வாழ்க்கையை அரசியலாகக் குறைக்க முடியாது; தத்துவம் என்ற முறையிலும் குறைத்துவிட முடியாது; என்னைப் பொறுத்தவரை எல்லாப் பரிமாணங்களையும் உள்ளடக்கியதாக மார்க்சியத்தை வளர்க்க முடியும் என நம்புகிறேன்.

தமிழில் புதுக் கவிதை நுழைந்த பிறகுதான், கவிதை-கவித்துவம் குறித்து நாம் கூடுதலாகச் சிந்தித்தோம். இப்பொழுதுதான் உள்ளுறை, படிமம், குறியீடு என்றெல்லாம் நம் சிந்தனை விரிவாகியிருக்கிறது.

பேச்சு நடைக்கு நிகராகக் கவிதையைக் கொண்டு வர வேண்டும். சிந்தனை, உணர்வு என்ற இரண்டையும் வேறுபடுத்தி அறியாத வகையில், ஒன்றிய உணர்வைக் கலை உணர்வு (Sensiblity) என்று கண்டோம்.

இப்பொழுது தமிழன்பன் குறித்து மீண்டும் பேசலாம். தமிழன்பனுக்குள் கவித்துவம் கொப்பளிக்கிறது. மனிதனின்

மகத்துவத்தைத் தேடுகிற அவர், எல்லாத் தளைகளிலிருந்தும் அவனை விடுவிக்க முனைகிறார்; இயற்கையோடு மனிதனை இணைக்க விரும்புகிறார்; வரலாற்றின் ஆழம் தேடி அலையும் இவர், பிரபஞ்சத்தின் அகண்ட பரிமாணங்களைத் தனக்குள் காண்கிறார். மார்க்சியமும் பெரியாரியமும் தமிழன்பன் என்ற கவிஞனின் இரு கரைகளாக இருக்கின்றன; இந்தக் கரைகளுக்கு இடையில் பாய்கிற வெள்ளம், தமிழன்பனின் கவிதைகள். வாழ்வின் ஆழத்திலிருந்து கவித்துவமாக வெடித்துப் பாய்கிற வெள்ளம் இது. ஆனால், கரைகளுக்குள் அடங்குகிற வெள்ளம் என்ன வெள்ளம்? கரைகளை உடைத்து அது கடலெனப் பரந்து செல்ல வேண்டும். கவித்துவம், படைப்புத் திறன் இவைதான் நம்மை வாழ்விக்க முடியும். தமிழன்பனுக்குள் இந்தக் கவித்துவமும் படைப்புத் திறனும் இயங்குகின்றன. ஆயினும், இந்தக் கவித்துவ வெள்ளத்தைத் தம் அளவில் சுருக்கி, தம் வீடுகளுக்கு மட்டும் பாய்ச்சிக்கொள்கிற செயலைத்தான் பெரும்பான்மையான பேராசிரியர்களும் அரசியல்வாதிகளும் செய்து கொண்டிருக்கிறார்கள். இவர்களால் தமிழின் நிலை, தமிழனின் நிலை மேம்படவில்லை.

தமிழன்பனின் கவிதைகளில் கவித்துவத்தையும் மனிதனையும் தேடுவது எனது நோக்கம். இந்த நோக்கத்தை நான் ஓரளவுக்கேனும் இந்த நூலில் தொட்டிருக்கிறேன் என்று நினைக்கிறேன்.

## 28

# மகாகவிக்கான அடையாளங்களோடு

பொதுவாக, கவிதைகள் பற்றிய ஆய்வில் முரணியக்கம் என்பது முதன்மையான கவனத்திற்கு உரியது. எதிர் நிலைகளுக்கு இடையிலானது இந்த முரணியக்கம். முரணியக்கம் என்பதனுள் இருவகையான எதிர் நிலைகள் என்பதோடு, அவற்றுக்கு இடையிலான ஊடாட்டத்திற்கும் அழுத்தம் உண்டு. அதாவது, ஒருவனை நல்லவன் அல்லது தீயவன் என்று பிரித்துவிட முடியாது. இரண்டும் கலந்தும், ஒன்று மற்றனுள் ஊடாடியும் இருக்கும் என்பது முக்கியம். சில சமயம் எதிர்நிலைகளைக் காட்டிலும் அவற்றுக்கு இடையிலான ஊடாட்டத்தில் நம் கவனம் பதிய வேண்டும். இந்த ஊடாட்டத்தை மூன்றாவது புள்ளி என்று நாம் வகைப்படுத்தவும் முடியும். இந்த ஊடாட்டம் ஓர் அற்புதம். இது நம்மை மயக்கும்; குழப்பவும் செய்யும். எதிர்நிலைகளுக்கிடையில் ஒரு புள்ளியில் மின்சாரம் பாய்வதுபோன்றது இந்த ஊடாட்டம்.

மார்க்சியர், பொருள் என்றும் கருத்து என்றும் இருவகைப் படுத்துவது எதிர்நிலைகள். ஆனால் பொருளின் ஊடுருவல் இல்லாத கருத்தே இல்லை என்பதைக் கவனிக்கத் தவறும்போது, மார்க்சியம் ஆற்றல் அழிகிறது. வேதியியலில் வேதிவினை என்பது முக்கியம். அதைப்போலத்தான் இங்கும் ஊடாட்டம் அழுத்தம் பெறுகிறது. கவிதையிலும் இந்த ஊடாட்டம் மிகவும் முக்கியம்.

வெளியில் உள்ள இயற்கை நமக்குள் வந்து நம்மை ஒரு கணம் தொட்டு, நமக்குள் இரசாயன மாற்றத்தை விளைவிப்பதோடு, நமக்குள் தங்கி விடுகிறது. முன்புபோல நாம் இப்போது இல்லை. மாறியிருக்கிறோம்; புத்தியல்பைப்

பெற்றிருக்கிறோம்; உலகத்தோடும் பிற மனிதர்களோடும் இப்படித்தான் நாம் உறவில் இருக்கிறோம்; இந்த உறவுதான் ஊடாட்டம். அகமும் புறமும் இந்த ஊடாட்டத்தில் இருக்கின்றன. கவிஞன் கணங்களில் இருக்க வேண்டும்; ஊடாட்டத்தில் இருக்க வேண்டும்.

தமிழன்பனின் கவிதைகளில், அதிக அழுத்தத்தோடு இன்று வரலாற்று வளர்ச்சிக்குத் தேவைப்படுகிற ஒரு புதிய மனிதன் பற்றிய படிமம்தான் எடுப்பாகத் தெரிகிறது. நிலத்தோடும் நீரோடும் வரலாற்றோடும் தன்னை வளர்த்துக்கொள்கிற அந்த மனிதன்தான், கவிதைகளுக்கு நாயகன். இன்று உலக அளவிலான வரலாற்றுச் சூழலிலிருந்து இந்த மனிதனைத்தான் நாம் எடுத்து நிறுத்த வேண்டியுள்ளது. அவன் மார்க்சின் மனிதன்; பெரியாரின் மனிதன்; தமிழ் இலக்கணத்தின் மனிதன்; எல்லாவற்றையும் புரட்டிப் பார்க்கிற, புதுமை படைக்கிற மனிதன்; நம் இலட்சிய மனிதன்; அவனை இன்னொரு மனிதனுக்கு எதிராக நாம் நிறுத்துகிறோம். வரலாற்றிலிருந்து, வரலாற்றைத் தின்று தீர்க்கிற, தனக்குத்தானே சுமையான இருளையே சுமக்கும் அழகற்ற மனிதன் அவன். இந்த இருவகை மனிதர்களும் நம் காலத்து எதிர்நிலைகள். நமக்குள்ளும் இவர்கள் தங்கியிருந்து நம்மை எதிரெதிர் திசைகளுக்கு இழுக்கிறார்கள். இறந்த காலமும் எதிர் காலமும் இவர்கள் வழியே நமக்குள் ஊடாடுகின்றன; அறமும் மறமும் இவர்கள் வழியே நமக்குள் போராடுகின்றன; இருளைத் தகர்க்கிறபோது நமக்குள் ஒளி வாய்க்கிறது; இப்படித்தான் அந்த எதிரியை நமக்குள் தகர்க்கிறபோது நமக்குள் அறம் தழைக்கிறது; இந்தப் போராட்டத்திலிருந்து யாரும் விடுபட முடியாது. எந்தக் கவிஞனுக்குள்ளும் இந்தப் போராட்டத்தைத்தான் நாம் காண்கிறோம். இருவகை மனிதர்களும் ஏதோ ஒரு விகிதத்தில் இந்தக் கவிஞர்களுக்குள்ளும் இருக்கிறார்கள். எல்லாச் சமயங்களிலும் நம்மால் எச்சரிக்கையோடு இருக்க முடியவில்லை. சில சமயத்தில் அறத்தை மறம் என்று கருதி

விடுகிறோம்; சாவை வாழ்வு என்று கருதுகிறோம்; அல்லது வாழ்வே சாவாக இருப்பதை நாம் புரிந்துகொள்வதில்லை; இன்பமே துன்பமாக மாறும்; துன்பம்கூட இன்பமாக மாறும்; இருவேறு இயற்கை உலகம். இந்த இரண்டு உலகங்களும் நமக்குள் எப்பொழுதும் போராடுகின்றன. இலட்சிய மனிதனை இலக்காக வைத்துத்தான் நாம் உயிர்த் துடிப்போடு இயங்குகிறோம். இலட்சிய மனிதன் என்று நம்மால் கருதப்படுபவனும், சில சமயம் நம்மைக் கைவிட்டு விடுவான். நாம் கவனமாகத்தான் இருக்க வேண்டும்.

தமிழன்பனின் கவிதைகள், மேற்சொன்ன இலட்சிய மனிதனையே குறியாக வைத்து இயங்குகின்றன. இதனால் இவரது கவிதைகள், ஒளியோடும் வீச்சோடும் திகழ்கின்றன. ஆழமாகத் தோண்டுபவன்தான் புதிய ஊற்றுகளைக் கண்டறிவான்; புதிய சக்திகளைப் பெறுவான்; தமிழன்பனும் தம்மை ஆழமாகத் தோண்டுகிறார். ஆகவே, இவரது கவிதைகள் புதிய வீச்சுகளை எப்பொழுதும் கொண்டிருக்கின்றன. தமிழன்பன் மேலும் மேலும் தன்னைத் தகர்த்துக் கொள்ளும்போது, கவிதைகள் மேலும் அழகு பெறும். இறுதியில் இலட்சியவாதியாகத் தொடங்கும் மனிதன் எல்லாவற்றையும் இழந்து எளியவனாகி இருப்பான். இலட்சியங்கள் அவனுக்கு இப்போது சுமையாக இல்லை. எல்லோருக்கும் உரியதாகிற வாழ்வு எளிமையான வாழ்வு. கவிதைக்கும் இந்த இளமைதான் பேரழகு.

தமிழன்பனின் கவிதை ஆக்க வரலாறு பற்றிக் கூடுதலான விவரங்களை நான் அறிந்துகொள்ள விரும்புகிறேன். நதி மூலம் அறிய முடியாது என்பதுபோலத்தான் கவிஞனது மூலமும். நெடுங்காலச் சூழலுக்குள்ளிருந்து கண்டறிந்து எடுக்க இயலாது. குடும்பம், ஊர், கல்வி, வாழ்வு என்னும் சூழல்களுக்குள்ளிருந்து கவிஞனைக் கண்டறிவது என்பதில்தான் தொடங்குகிறோம். இப்படித் தொடங்கி மொழி மற்றும் இலக்கியச் சூழல், வரலாற்றுச் சூழல் என்று நாம் செல்லுகின்றோம். எந்தக்

கவிஞனைச் சரியாக அறிய வேண்டும் என்று தொடங்கினோமோ, அந்தக் கவிஞனிடமிருந்தும் நம் பார்வை தானாகக் கழன்றுவிடுகிறது. கவிதை என்று தொடங்கி, உத்தி முதலியவற்றிலிருந்து விலகி கவித்துவத்துக்குள் செல்லுகிறோம்; பிறகு நாமே கவிஞனாகிறோம்; மீண்டும் திரும்ப நம் காலச் சூழலுக்கு வருகிறோம். கவித்துவத்திலிருந்து ஆற்றல் பெற்ற நாம், நம் காலத்து இறுகிய சூழலை, இருண்ட சூழலைத் தகர்க்க விரும்புகிறோம்.

இப்படித்தான் கவிதையோடு, கவித்துவத்தோடு முன்னும் பின்னுமாய்ப் பயணம் செய்கிறோம். தமிழ்க் கவிஞனுக்கு மிகத் தொன்மையான இலக்கியம் மற்றும் வரலாற்றுப் பாரம்பரியம் வாய்த்திருந்தது. இந்த மாபெரும் பாரம்பரியத்திலிருந்து இவன் தனக்குள்ளிருந்து அகண்டத்தைக் காண முடியும்; படைக்க முடியும். இப்படிப் படைக்க முடியாதவன், தமிழுக்கு உரிமை கொண்டாட முடியாது. தமிழ் உணர்வு என்பது இயற்கையை, பிரபஞ்சத்தை, அறத்தை அணைத்துக்கொள்கிற பண்பு. அறத்தைக் கைவிட்டவன் தமிழ்க் கவிஞனில்லை. இப்படியெல்லாம் பார்க்கும்பொழுது, தமிழன்பனின் கவிதை வீச்சு நமக்குப் புலப்படுகிறது. நம் காலத்து அரசியல் வாழ்க்கை எவரையும் இழித்துப் போடுகிறது; பின்னப்படுத்துகிறது; இந்தப் பின்னங்களுக்குள்ளிருந்து உலகை, பிரபஞ்சத்தை, வரலாற்றைப் பார்க்க வேண்டியிருக்கிறது. இதனால்தான் துண்டு துண்டாக, அன்றாடத் தேவைகளுக்காக, அடுத்தவனின் தேவைக்காகக் கவிதை எழுத வேண்டியிருக்கிறது.

சிறு கண்ணாடித் துண்டுக்குள்ளும் காட்சி தருவது கொஞ்சம் பிரபஞ்சம் என்ற வகையில்தான், இந்தத் தனித் தனிக் கவிதைகளையும் பார்க்க வேண்டியிருக்கிறது. ஒன்றன் கோணத்திலிருந்து வேறுபட்டுப் பல்வேறு கோணங்களில் தெரிகிற இந்தப் பிரபஞ்சத்தை, வரலாற்றை, வாழ்வியலை அறிவார்ந்த வாசகன் என்ற நிலையில், நமக்குள் ஒருங்கிணைத்துப் பார்ப்பது சிரமம் என்றபோதிலும், அவ்வப்

பொழுது கணநேரத்திற்கேனும் முழுமையைத் தரிசிக்க முடிகிறது; தமிழன்பன் கவிதைக்குள்ளிருந்தும் இத்தகைய தரிசனங்களை நாம் பெற முடியும்; நமக்குள்ளும் வலு இருந்தால் இப்படித் தரிசனங்களை நாம் அகப்படுத்திக்கொள்ள முடியும்.

மகாகவிகளுக்கான வாய்ப்பை நாம் இழந்துவிட முடியாது. மாபெரும் தரிசனங்கள் தேவைப்படுகிற காலம். மகாகவிகளைத் தோற்றுவிக்கும் மாபெரும் தரிசனங்களுக்குரிய காலத்தில்தான் நாம் வாழ்கிறோம். மகாகவிகள் நமக்குத் தேவை. நம் தேவைக்காகத் தமிழன்பனோ, சிற்பியோ தம்மை மகாகவிகளாகப் படைத்துக்கொள்ள முடியாது.

முன் எந்தக் காலத்தையும்விடக் காவியப் பரிமாணத்தில், மனித வாழ்வை வரலாற்றோடும், பிரபஞ்சத்தோடும் வைத்துப் பார்க்கிற பார்வை இன்று கூடுதலாக உள்ளது. இந்தப் பார்வை, தமிழ்க் கவிஞர்களுக்குள், குறிப்பாகத் தமிழன்பனுக்குள்ளும் சிற்பிக்குள்ளும் கூடுதலாகவே உள்ளது. பாரதியும் பாரதிதாசனும் மகாகவிகளென உயர்ந்திருப்பதற்கான இன்னொரு முக்கியமான காரணம், தங்கள் முழு வாழ்வையும் தேசத்தின், மொழியின், இலக்கியத்தின் வாழ்வோடு கரைத்துக் கொண்டிருந்தார்கள். எந்தத் துயரத்திற்கும் கொடுமைக்கும் அவர்கள் அஞ்சி ஒதுங்கி நிற்கவில்லை; வாழ்க்கை அவர்களுக்கு வசதியை வைக்கவில்லை; தம் வாழ்நிலையை மீறித்தான் அவர்கள் இயங்கினார்கள். பேராசிரியர்களுக்கு அந்த வாய்ப்பு இல்லை. வாழ்க்கை வசதிகள் ஒரு பக்கம் வாழ்வை அரிக்கத்தான் செய்கின்றன. இதை ஒரு முதன்மையான காரணமாகச் சொல்ல முடியாது என்பது உண்மைதான். தேசத்தின் வாழ்வில் தம்மை முழு அளவில் கரைத்துக் கொள்ளும் ஒருவன்தான் மகாகவியாக, பேரான்மாவாக இருக்க முடியும். வாழ்வின் அனைத்து முரண்பாடுகளும் மோதல்களும் தனக்குள் இடம்பெற, தன்னை விரித்துக்கொள்ள இந்தத் தகுதி சாத்தியப்படும். இமயத்திற்கும் கடல்களுக்கும் அவை

விரும்பினால், மாவோ பெயரை வைக்கலாம் என்ற தமிழன்பனின் கூற்றில் வெளிப்படுவது, காவியப் பரிமாணத்தில் ஒரு பார்வை. இப்படி அங்கங்கே மகாகவிக்கான அடையாளங்கள் தமிழன்பனின் கவிதைகளில் நிறைய உள்ளன. தனிப்பாடல்களில் பதிபவை இந்த அடையாளங்கள் மட்டுமே. காவியங்களில்தான் இந்த அடையாளங்கள் ஒன்றுகூடி விசுவரூபத்தை எழுப்ப முடியும். அங்கதம் என்ற தளத்தில் தமிழன்பன் இயங்குவதும் தெரிகிறது. அங்கதப் பார்வையைக் கொஞ்சம் அகற்றிப் பார்த்தால், இதைவிடப் பேருணர்வுகள் தமிழன்பனுக்குள் வாய்க்கலாம். காவியப் பார்வையிலான ஒருங்கிணைந்த கற்பனை தமிழன்பனுக்குள் செயல்படுகிறது. தமிழன்பன் தன்னை இன்னும் கடந்து சென்றால், இன்னும் பெரிய சாதனைகளைத் தமிழுக்குத் தர முடியும்.



29

# நடை மறந்த நதியும் திசை மாறிய ஓடையும்

1998இல் வெளிவந்த இந்தக் கவிதைத் தொகுப்பில் அரசியல் சார்ந்த கவிதைகள் எண்ணிக்கையில் கூடுதலாகவும், வாழ்வியல் மற்றும் அழகியல் சார்ந்த கவிதைகள் எண்ணிக்கையில் சற்றுக் குறை வாகவும் இருக்கின்றன. அரசியல் சார்ந்தவை என்பதனாலேயே கவிஞர் தமிழன்பனின் கவிதைகள் தீட்டுப்பட்டவை என்று நாம் கருத வேண்டிய தில்லை. ஒரு தேசத்தின் அரசியல் என்பது அனைத்து மக்களின் வாழ்வையும் பாதிக்கிறது என்பதால் அரசியல் பற்றிய பார்வை எந்த ஒரு கவிஞனுக்கும் இன்றியமையாத ஒரு பார்வை.

நேரிடையாக அரசியல் பற்றி உணர்ச்சிகரமாகச் சொல்லும்பொழுது, கவித்துவம் சற்றுக் குறையத்தான் செய்யும். அதன் காரணமாகவே கவிதை என்பதன் எல்லையிலிருந்து அவற்றை விலக்கி வைக்க வேண்டியதில்லை. இவ்வகைக் கவிதைகளிலும், கவிதையின் சில கூறுகள் இணைந்தே இருக்கின்றன. வாழ்வியல் பற்றிய கவிதைகளில் கவிதைத் தன்மை இன்னும் சற்று மேலோங்கித் தெரியும்.

கவிதை இன்னும் ஆழத்திற்குச் சென்று மனத்தின் குரலாக வெளிப்படும்பொழுது கவித்துவம் உச்சம்பெறும் என்பதில் ஐயமில்லை. வாழ்வியலுக்குள் அரசியல் மற்றும் பொருளியல் சார்ந்த நெருக்கடிகள் தீவிரப்படும்பொழுது தவிர்க்க இயலாமல் மனிதன் தனக்குள்ளே முரண்பட்டு, மனத்தின் ஆழத்திற்குள் சென்று தன்னை மீட்டுக்கொள்ள வேண்டியிருக்கிறது. இந்நிலையில் அழகியல் உணர்வில் அழுத்தம் பெற்ற கவிதைகள் வெளிப்படுகின்றன.

இந்தத் தொகுப்பினுள்ளும் இவ்வகைக் கவிதைகள் சிலவற்றைக் காணமுடியும். 1947இல் நமக்கு வந்து சேர்ந்ததாகச் சொல்லப்படுகிற விடுதலையை மேல்மட்டத்திலுள்ள ஆதிக்க வர்க்கத்தினர் தமக்குள்

அபகரித்துக் கொண்டனர். அடித்தள மக்களுக்கு விடுதலை போய்ச் சேரவில்லை. அனைவருக்கும் வாக்குரிமை, மக்கள் நாயகம், தேர்தல் நடைமுறை, நாடாளுமன்றம், அரசியல், சட்டம் என்பனவற்றின் மூலம் இந்தியத் தேசத்தின் அரசியல் அதிகாரத்திலும் பொருளியல் வளர்ச்சி யிலும் அடித்தள மக்களுக்குரிய பங்கு கிடைக்கவில்லை. அன்றியும் இத்தகைய நடைமுறைகளின் மூலம் ஆளும் வர்க்கத்தினர் மக்களை ஏமாற்றியதோடு தம்மை வலுப்படுத்திக் கொண்டனர்.

வெள்ளையன் ஆதிக்கம் போன நிலையில் கொள்ளையர்கள் ஆட்சிக்கு வந்தனர். சுதந்தர தேவி இவர்களின் பாராளுமன்றத்தில் இவர்கள் கொட்டிய குப்பைகளைச் சுத்தம் செய்து கொண்டிருந்தாள். திரௌபதியை அன்று துச்சாதனன் துகில் உரித்த மாதிரி இவர்களும் சுதந்தர தேவியை மானபங்கப்படுத்தினர். அரசியல்வாதிகளும் முதலாளி களும் கூட்டுச் சேர்ந்துகொண்டனர். அந்நியர்களின் ஆதிக்கத்தோடும் இவர்கள் ஒத்துழைத்தனர். நாளடைவில் எவ்வளவோ நடைபெற்றன.

உலகமயமாதல், தனியார்மயப்படுத்தல், தாராளமயமாக்கல் என்ற முறைகளில் மக்களிடமிருந்து தேசத்தையும் மக்கள் வாழ்வுக்கு ஆதார மான களங்களையும் அந்நியர்களுக்கு இவர்கள் விட்டுக் கொடுத்தனர். கட்சிகளின் தந்திரங்கள், ஊழல்கள் அதிகரித்தன. விடுதலை என்ற வடிவத்திலும் மக்களிடம் வந்திருக்க வேண்டிய தேசத்தையும் வளங் களையும் மக்கள் இழந்து வறுமைக்கும் நோய் நொடிகளுக்கும் ஆளா யினர். இளைஞர்களுக்கு வேலையில்லை. பத்திரிகைகள் கொலை, கொள்ளை, கற்பழித்தல் போன்ற செய்திகளை வெளியிடுவதன் மூலம் தம் வணிகத்தைப் பெருக்கிக் கொண்டதோடு மக்களின் வாழ்வை மலினப்படுத்தினார்கள்.

தொலைக்காட்சிகள் மக்களுக்குப் போதை வழங்கின. மக்கள் தம் துயரங்களுக்குக் காரணம் ஆனவர் யார் என்ற உண்மையை அறியாதவாறு செய்தி ஊடகங்கள் மாயத் திரைகளை இடையில் தொங்க விட்டன. 1947இல் குறைந்த அளவுக்கேனும் வந்ததாகச் சொல்லப்படும் விடுதலையை மக்கள் அறவே இழந்தனர். மக்கள் நாயகத்திற்கான சிற்சில உரிமைகளை வழங்கிய அரசியல் சட்டத்தை ஆதிக்க வர்க்கத் தினர் வழி மறித்தனர். மக்கள் தம்மை இழந்தனர். செல்லும் திசை

அறியாமல் தவிக்கின்றனர். இந்நிலையில் இவர்களுக்கு இன்னொரு சுதந்தரம் / விடுதலைக்கான போராட்டம் தேவைப்படுகிறது.

சுதந்தர தேவியை மக்கள் தமக்கென மீட்டுக்கொள்ளவேண்டி யிருக்கிறது. முதலாளிகளோடு, அரசியல்வாதிகளோடு ஐம்பதாண்டு களுக்கு மேலாகக் கொட்டமடித்துத் தம்மை இழந்துவிட்ட சுதந்தர தேவியை மக்கள் இப்பொழுது தம் சார்பில் மீட்டுக்கொள்ள வேண்டி யிருக்கிறது. சுதந்தரதேவிகூட மக்களின் குடிசைகளுக்கும் தெருக் களுக்கும் தயக்கத்தோடுதான் வந்து சேர்வாள்.

இப்படி ஒரு அரசியல் வரலாற்றைக் கவிஞர் தமிழன்பன் இத் தொகுப்பிலுள்ள பல்வேறு கவிதைகளில் உருக்கத்தோடும், உணர்ச்சி யோடும் சொல்லுகிறார். எல்லாவற்றையும் வெளிப்படையாகப் பேசுகிறார். உழைக்கும் வர்க்கத்தின் சார்பிலிருந்து ஆளும் வர்க்கத்தினரைக் கட்சிக்காரர்களைக் கடுமையாகச் சாடுகிறார்.

மார்க்சியர் முன்வைக்கிற வர்க்கப் பார்வைக்குள் மட்டுமே அகப் படுகிற உண்மைகளைக் கவிஞர் தமிழன்பனும் தயக்கமில்லாமல் வெளிப் படுத்துகிறார். இவ்வகைக் கவிதைகளில் ஊடகம் தேவையில்லை. நேரிடையாக இவர் மக்களோடு பேசுகிறார். கவியரங்குகளில் இவ் வகைக் கவிதைகளை வாசிக்கிறார். தன் சமகாலக் கவிஞர்களோடு, இலக்கியவாதிகளோடு, நடுத்தர மக்களோடு இவர் பேசுகிறார். சோவியத் யூனியனில் என்னதான் நடக்கிறது என்று கேட்கிறார். உழைக்கும் மக்களுக்கு விடுதலை வழங்கக்கூடிய இன்னொரு மே தினம் எப்பொழுது வரும் என்று கேட்கிறார். தமிழகத்துக்கும் தமிழ் மொழிக்கும் உண்மையான புத்தாண்டு என்று வரும் என்று மனம் கலங்குகிறார். கட்சி சார்ந்த மார்க்சியமும் இவரது விமர்சனத்திற்கு உள்ளாகாமல் இருக்க முடியாது. கவிஞர் தமிழன்பன் தான் சார்ந் திருப்பதாகச் சொல்லப்படும் கட்சியைப் பற்றியும் விமர்சனம் வைப்பதில் தவறவில்லை. அப்படியானால் அவரது மக்கட் சார்பு முன்நிற்கிறது என்பதில் ஐயமில்லை.

இந்தத் தொகுப்பில் இடம்பெறும் வாழ்வியல் சார்ந்த அவரது சில அழகிய கவிதைகள் குறித்து இங்குச் சுருக்கமாகப் பார்க்கலாம்.

இந்தக் கவிதைத் தொகுப்பின் தலைப்பாக இடம் பெற்றுள்ள ‘‘நடை மறந்த நதியும் திசை மாறிய ஓடையும்’’ கவிதை பற்றி முதலில் சொல்ல முடியும்.

தவறுகள் செய்வது தவறில்லை, சரியானதற்குச் சமமானது திருத்திக் கொள்ளத்தக்க தவறுகள். தாமதமாகும் வெற்றிக்குத் தோல்வி என்றா பெயர்? அ டி த் த ல், திருத்தல்கள், பிசிறுகள் மடியில் இராகங்கள் கிடைக்கலாம். கிறுக்கல்களிலிருந்து இரவிவர்மாக்கள் பிறக்கலாம். நடை மறந்த நதியைவிடத் திசை மாறிய ஓடையே தேவலாம்.

நடை மறந்த நதி என்பதும், திசை மாறிய ஓடை என்பதும் கவிதையில் இடம்பெறும் படிமங்கள். நதி நடையை மறப்பதென்பது மனிதனின் உணர்வு. ஓடை திசை மாறுவதென்பதும் இப்படி மனித உணர்வு. நதிக்கோ ஓடைக்கோ தன்னுணர்வு இல்லை. நதியையும் ஓடையையும் மனிதன் / கவிஞன் தனக்குள் உள்வாங்கிக் கொண்டு அவற்றின் வழியே கவிஞன் பேசுகிறான். கவிதைக்குள் மொழி என்பது இல்லாதுதான் செயல்படுகிறது. ஒரு வகையில் இது கவிதையின் இயக்கத்தில் சற்று உயரிய தளம். இத்தகைய கவிதை வரிகளைத் தமிழன்பனின் எல்லாக் கவிதைகளிலும் நாம் காணமுடியும்.

வெறும் கற்பனை என்று இவ்வகைக் கவிதைகளை நாம் கீழிறக்கி விடமுடியாது. கவிதையின் இயக்கம் / தளம் என்று புரிந்து கொள்பவர் களுக்கு இந்த உண்மையை நாம் விளக்க வேண்டியதில்லை.

வாழ்வியல் குறித்து, கவிஞர் ஓர் உண்மையை இந்தக் கவிதையில் தெளிவுபடுத்துகிறார் : தவறுகள் செய்வது குறித்துத் தயங்க வேண்டிய தில்லை. தோல்விகள் இல்லாமல் வெற்றிகள் இல்லை. தோல்விகள் மூலமே வெற்றி சாத்தியம். வெற்றியில் மட்டுமே நம் கவனம் குவிய வேண்டியதில்லை. பயணம் / அனுபவம் மிக முக்கியம். அனுபவத்தைப் புரிந்துகொள்கிற அளவு முக்கியம். தேடலே / இயக்கமே நமக்கு முக்கியம். நாம் எப்பொழுதும் நதியாக இருக்க முடியாது. ஓடையாகவேனும் இயங்க முடியும். திசை தவறினாலும் இயக்கத்தில் நாம் இருக்க வேண்டும். இமயம் நமக்கு வசப்படவில்லை என்பதனால் அதன் மீது கல் எறிய வேண்டியதில்லை.

இப்படி எல்லாம் கவிஞர் சொல்வதன் மூலம் வாழ்வியல் பற்றிய உண்மையை நமக்குப் புரிய வைக்கிறார். இந்த உண்மைகூட நாம் அறியாத உண்மை இல்லை. இதனைச் சொல்லும்பொழுது காவியமும் ஓவியங்களும் எப்படி எல்லாம் உற்பத்தியாகின்றன என்ற உண்மையையும் சேர்த்துச் சொல்லுகிறார். சற்று ஆழ்ந்து சிந்தித்தால் நமக்குள்ளிருந்து காந்தியை, மார்க்சை, வள்ளுவரை நமக்குள் படைத்துக்கொள்ள முடியும். விதைகள் நமக்குள் இருக்கின்றன. விளைச்சல்களுக்காக நாம் ஏங்க வேண்டியதில்லை. தேசம் நமக்குள் இன்னும் மிச்சமிருக்கிறது. தேசத்தை நம்மால் மீட்டுக்கொள்ள முடியும். தமிழ் நமக்குள் உயிராய், உயிர்த்துடிப்பாய் இருக்கிறது. தமிழின் உயிர் இயக்கத்தை நமக்குள்ளிருந்து மீட்டுக்கொள்ள இயலும். நமக்குள் ஒளி இருக்கிறது. அந்த ஒளியிலிருந்து நமக்குள் சூரியனை உற்பத்தி செய்துகொள்ள இயலும். கவிதை என்பது ஒரு படிமம். படிமம் என்பது ஒரு தரிசனம். இதற்குள்ளிருந்து வெளிப்படும் கருத்துகள்/உண்மைகள் ஒன்றல்ல, பல. இப்படிக் கவிதை வாசிக்கும்பொழுதே நம்மையும் வாழ்வையும் வரலாற்றையும் வாசித்துக் கொள்கிறோம். கவிதைக்குள் இப்படித்தான் இயங்குகிறது மெய்யியல். இங்கு அழகியலும் உண்மையும் ஒன்றாகின்றன. இதற்குத்தான் நமக்குக் கவிதை தேவை என்கிறோம்.

இத்தொகுப்பில் இன்னொரு கவிதை: கடலோடு ஒருமுறை தோற்றால் மறுமுறை மோது, ஓடைகளோடு சேர்ந்து அறிக்கை விடாதே. நீ உயர முடியவில்லை என்பதற்காக மலைமீது கற்களை விட்டெறியாதே. வாழ்க்கை உனக்கு அறைகூவல் விட்டால் நீயே சமாளி, சாவிடம் போய் யோசனை கேட்காதே.

முன்பு பார்த்த நதி – ஓடை என்ற கவிதை தன் தொடர்ச்சியில் இந்தக் கவிதையை நாம் வைத்துப் பார்க்கலாம். இயக்கத்திலிருந்து நாம் பின்வாங்குவது இயலாது. பின்வாங்குவதன் மூலமே நம்மை நாமே இழந்துவிடுகிறோம். தோல்வி கண்டு அஞ்ச வேண்டியதில்லை. மரணம் நமக்கு அறிவுரை கூற வேண்டியதில்லை. நாம் ஓடையாக இருந்தாலும் நமக்குள்ளிருந்து நதிகளைப் பிறப்பித்துக் கொள்ளமுடியும். பிறர்மீது கல் எறிந்து நம் வெற்றியைக் கொண்டாட முடியாது. சாவிடம் யோசனை கேட்டு வாழ்க்கையை மேம்படுத்திக் கொள்ள இயலாது. இங்கும்

இடம்பெறும் படிமங்கள் மூலம் நமக்குள் நாம் இன்னும் நம்மை விரித்துக் கொள்ள இயலும்.

மலை, கடல் முதலியவை யதார்த்த உலகில் இருப்பவை. இவை கவிதைக்குள் வரும்பொழுது கவிதை மொழியாகி யதார்த்தத்திலிருந்தும் விலகி, தமக்குள் புதிய அர்த்தத்தைப் பெறுகின்றன. இந்நிலையில் இவை யதார்த்தத்தில் நாம் காணுகிற மலையாகவோ, கடலாகவோ ஒற்றைப் பரிமாணத்தில் இல்லை. கவிதை இங்கு வாழ்வியலை உள்ளடக்கி அழகியல் ஆகிறது.

படிமங்களை நமக்குள்ளிருந்து நாம்தான் படைக்கிறோம் என்று சொல்லுவதைவிட நம் ஆழ்மனத்திலிருந்து மேல் எழும் படிமங்கள் நம்மையும் படைக்கின்றன என்று சரியாகச் சொல்ல முடியும். இப்பொழுது தமிழன்பனின் இன்னொரு கவிதையைப் பார்க்கலாம். கவிதையின் தலைப்பு "முள்களோடு பழகுவோம்."

இது வசந்த காலம் அல்ல; நம் வேதனைகளில் வெப்பம் தகிக்கும் கோடை இது. கவிஞர் மட்டுமல்லாமல் தற்காலச் சூழலில் நமக்குள்ளும் கோடைக் காலத்தை உணர்கிறோம். ஆட்சியாளர்கள், அதிகாரக் கொடுமைகள் பற்றிக் கவிஞர் தொடர்ந்து கூறுவதிலிருந்து இது கோடைக் காலம் என்பதை ஏற்கிறோம். கோடை என்ற உணர்வின்றி இதை வசந்த காலம் என்று சிலர் சொல்லக்கூடும். இவர்களுக்குத் தேசம் பற்றித் தெரியாது. வாழ்வில் தமக்குக் கிடைத்த சில வசதி களுக்குள் தம்மை முடக்கிக் கொண்டவர்கள் இவர்கள். இவர்கள் இலக்கிய உலகுக்குள்ளும் இன்றும் வாழ்கிறார்கள். இது கோடை என்று உணர்ந்த நிலையில் இதற்குள் வாழ்கின்ற மன உறுதியை நமக்குள்ளிருந்து எழுப்பிக் கொள்கிறோம். கோடைக் காலத்தில் காய்ந்த நிலத்தில் என்ன விளையும்? இங்கு உற்பத்தியானவை முள்கள். ஆகவே இலை முள்களோடு பழகுவோம் என்கிறார் கவிஞர். கோடையை, முள்களை உள்வாங்கிக்கொண்ட மனநிலையோடு கவிஞர் தொடர்கிறார். நாதசுரமும், தில்ரூபாவும் நாளைவரை ஒத்தி வைப்போம்; கபாலத்துள் நுழைந்து நமது மூளைகளில் கஞ்சாப் பயிரிடும் கலைகளில் திமிரில் மிக்கவன் துரியோதனனா? இராவணனா? – பட்டிமண்டபச் சிரிப்பு விபச்சாரத்தில் நாம் விரயமாகும் தருணம் அல்ல இது.

முள்களோடு பழக வேண்டிய சூழலில் கலைகளோடு நமக்கு உறவு தற்காலிகமாகத் தேவையில்லை என்கிறார் கவிஞர். கலைகளில் ஆழ்ந்து நமக்குள் கஞ்சாச் செடியை வளர்க்க வேண்டாம் என்கிறார். திரைப்படப் பாடல்களிலிருந்து இளைஞர்களை, இராக்கம்மாக்களை விடுவிக்க வேண்டும் என்கிறார் கவிஞர். கனகாபிசேகங்கள் நம் கண்களை மறைக்க வேண்டியதில்லை என்கிறார். நம் துக்கத்தின் அடை யாளமே நாம் தரிக்கிற கறுப்புச் சட்டையாக இருக்க வேண்டும் என்கிறார். நம்மை இனி நமக்குள் திரட்டிக் கொள்ள வேண்டும். கோடைக் காலத்தை முடிவுக்குக் கொண்டு வந்த பிறகு நமக்கு வசந்த காலங்கள் வாய்க்கும். அப்பொழுது நாதஸ்வரங்கள் நமக்குத் தேவைப் படலாம் என்கிறார் கவிஞர். கவிஞர் கலைகளுக்கு எதிராக, கவிதை களுக்கெதிராகத் தன் ஆத்திரத்தை ஏன் வெளிப்படுத்துகிறார் என்பதை நம்மால் புரிந்துகொள்ள முடியும். திரைப்படங்களும், தொலைக்காட்சிகளும் நம் மக்களை மதிமயங்கச் செய்கின்றன என்ற உண்மை கவிஞருக்குள் இந்த உணர்வை ஏற்படுத்துகிறது.

அரசியல்வாதிகள் முதலியவர்கள் செய்யும் ஆர்ப்பாட்டங்களைப் பார்க்கிறபோது, அவர்கள் நடத்தும் விழாக்கள், வாணவேடிக்கைகள் முதலியவற்றைப் பார்க்கிறபோது, மதவாதிகள் நடத்துகிற கனகாபிசேகங் களைப் பார்க்கிறபோது, இவ்வாறு அவர்கள் செய்வதன்மூலம், யாரிட மிருந்து பறித்த உழைப்பு / செல்வத்தை இவர்கள் இப்படிக் கரியாக்கு கிறார்கள் என்று சிந்திக்கிறபொழுது கவிஞர் ஆத்திரம் கொள்வதை நம்மால் ஏற்கமுடியும்.

உண்மையை மக்கள் அறிந்து கொள்ளக்கூடாது என்பதற்காகவும் இவர்கள் இப்படிச் செய்கிறார்கள். இராக்கம்மாக்களை இவர்கள் கை தட்ட வைக்கிறார்கள். தலைவர்களுக்காக இளைஞர்கள் கொடி தூக்கி அலைகிறார்கள். நூறு வயது கிழவனுக்குக் கனகாபிசேகம் என்ன வேண்டியிருக்கிறது?

கோடை என்பதால் கலைகளுக்கு எதிராகப் பேசுவது எந்த அளவுக்குச் சரி அல்லது சரி இல்லை என்பது குறித்து நமக்கும் சிந்தனை தேவை. இது பற்றிப் பிறகு பார்க்கலாம்.

"மெட்டுப் பிறப்புகள் என்பது இன்னொரு கவிதை" – சங்கீத சபாக்கள் இங்கில்லை இடமென்று எழுதி வைத்த பிறகு பாட்டும் பாமரனும் எங்கே போக முடியும், படக் கொட்டகை தவிர? செம்மங் குடிகள் பாட்டில் இசை இருக்கிறது, கொல்லங்குடிகள் பாட்டில் இதயம் அல்லவோ இருக்கிறது.

கற்றவனுக்குக் கம்பன் அமுதக் கிண்ணம், கல்லாதவனுக்கோ கண்ணதாசனும் பட்டுக்கோட்டையும் கஞ்சிக் கலயம்.

மக்களுக்குக் கவிதை வேண்டும், இசை வேண்டும், இயற்கை அழகு வேண்டும். கலை இல்லாமல் மக்களுக்கு வாழ்வில்லை. களத்து மேட்டில் மக்கள் உழைக்கிறார்கள், பாடுகிறார்கள். ஆடுமாடுகள் மேய்க்கும் இளைஞன் புல்லாங்குழல் ஊதுகிறான். பாட்டி கதை சொல்லுகிறாள். குழந்தைகள் ஆடிப்பாடுகிறார்கள். நாட்டுப் பாடல்களில் தமிழ் இசை களிநடனமாடுகிறது. மாவீரர்கள் மக்களிடமிருந்து தோன்று கிறார்கள். இப்படி மக்களின் வாழ்வை, வரலாற்றை, வாழ்வியலை, அழகுணர்வை, படைப்பாற்றலை நம்மால் புரிந்துகொள்ள இயலும். பாடறியேன், படிப்பறியேன் என்ற திரைப்பட இசைப்பாடலை நாமும் இரசிக்கிறோம். எந்தக் கர்னாடக இசையின் இயக்கம் இதற்குள் இருக்கிறது என்பதையும் புரிந்துகொள்கிறோம். இளையராஜா மக்களின் இசையையும் இசைக்கலையின் உன்னதங்களையும் தன் பாடல்களில் இணைக்கிறார். கொல்லங்குடிகளை, கண்ணதாசனை நாம் இரசிக் கிறோம், நம் மக்கள் இரசிக்கிறார்கள். இவர்களுக்குள் இருந்துதான் கம்பனும் தோன்றுகிறான் வள்ளுவரும் பிறப்பெடுக்கிறார்.

ஆனால் வரலாற்றில் என்ன நேர்ந்துவிட்டது? வர்க்கப் பிளவுகள், சாதி ஏற்றத் தாழ்வுகள் இறுக்கம்பெற்ற நிலையில் செம்மங்குடிகளுக்கு, தியாகையருக்கு, சபாக்களுக்குச் சிலர் மகத்துவம் கற்பிக்கிறார்கள்.

தமிழன்பன் இன்னொரு கவிதையில் கூறுவது போல டிசம்பர் மாதத்தில் நடைபெறும் சபாக்களில் என்ன நடைபெறுகிறது? மாமிகள் பட்டுப் புடைவைகளோடு வருகிறார்கள். உச்சிக் குடுமிகளும் தமக்கு உயர்ந்த கலை இரசனை உண்டு என்பதைப் பலருக்கும் அறிவித்து வருகிறார்கள். காற்றில் கர்னாடக இசை கலங்குகிறது. தியாகையரும்,

தீட்சிதரும் சபாக்களின் வாசலில் கிடைக்கிற தின்பண்டங்களைக் கொரித்துவிட்டுச் செல்கிறார்கள்.

இன்னொரு கவிதையில் தமிழன்பன் கூறுகிறபடி, திருமணத்தில் நடைபெறும் இசையரங்கில் அற்புதமான இசை ஒலிக்கிறது. ஆனால் திருமணத்திற்கு வந்தவர்கள் தமக்குள் அரட்டை அடிக்கிறார்கள். இசைக்கு இங்கு என்ன மரியாதை? சாதிவயப்பட்ட இசை இங்கும்தான் கேவலப்படுகிறது. ஆனால் சாதி உயர்வை இவர்களால் விட்டுவிட முடியவில்லை. இவர்களிடமிருந்தும் இசையை / கலைகளை மக்கள் மீட்கத் தான் வேண்டும். இசை மற்றும் கலைகளின் நுட்பங்கள் நமக்கு எட்டாதவையில்லை. இவற்றை நம்மாலும் கற்க முடியும். எளிய இசையி னுள்ளும் உயர்வகையான இராகங்கள் இருக்கத்தான் செய்கின்றன.

மெட்டுப் பிறப்புகள் என்ற இந்தக் கவிதையில் மெட்டுக்களுக் கேற்றவாறு திரைப்பாடல்களைத் தயாரிக்கும் கவிஞர்களைத் தமிழன்பன் சாடுகிறார். மெட்டுகளுக்குப் பாடல் தயாரிக்கலாம்; கவிதை எழுதுவது சாத்தியமில்லை. எனினும் மெட்டுக்களுக்கு ஏற்ற பாடல்களினுள்ளும் கவிதை இருக்க முடியும். கண்ணதாசனை, பட்டுக்கோட்டையை நாம் மறக்கவா முடியும்! கலங்கிய குட்டைக்குள்ளும் விண்மீன்கள் வந்து விழுகின்றன என்கிறார் கவிஞர்.

வாழ்வியலும் அழகியலும் எங்கெல்லாம், எப்படி எல்லாம் இணை கின்றன என்பதைக் கவிஞர் தமிழன்பனின் இந்தத் தொகுப்பின் வழியே பார்த்து வருகிறோம். இடையில் சில கவிதைகளை விட்டுவிட்டோம். இப்பொழுது தமிழின் அழகியல் பற்றிய ஒரு கவிதையைப் பார்க்கலாம். தமிழ் நம்மோடு இணைந்திருக்கிறது, வரலாற்றுக்குள் நாம் தமிழராய் வாழ்கிறோம். வள்ளுவரும் இளங்கோவும் நம் வாழ்வுக்கான தடத்தை வகுத்திருக்கிறார்கள். தமிழ் நிலத்தின் இயற்கையோடு, காற்றோடு, நதிகளோடு, பயிர்களோடு நாம் இணைந்திருக்கிறோம். தமிழ் மண்ணோடும் உழவர்களோடும் நாம் இணைந்திருக்கிறோம். இவர்கள் தான் நமக்கு உயிர்ப்பைத் தந்திருக்கிறார்கள். இவர்களிடமிருந்தே சமத்துவம் / சமதர்மம் என்ற உணர்வைப் பெற்றிருக்கிறோம். மனிதர் களின் நெடுங்கால வரலாறு நமக்குள் இயங்குகிறது. இடையில் எவரெவரோ வந்து நம் வரலாற்றுத் தடத்தை, வாழ்க்கைத் தடத்தை

அழிக்க முயன்றார்கள். அழிக்கவும் செய்தார்கள். நம்மால் அழிந்துவிட முடியவில்லை. இன்னும் நமக்குள் தமிழாய் உயிர்க்கிறோம். தமிழுக்குள் இந்த வாழ்வியலையும் அழகியலையும் நாம் கொண்டிருக்கிறோம்.

இவற்றோடு நாம் வாழும்வரை, உயிர்ப்பித்துக்கொள்ளும்வரை நாம் தமிழாய், தமிழராய் வாழமுடியும். கடந்த இரு நூற்றாண்டுகளுக்குள் வந்து நம்மை அழித்துக்கொண்டிருக்கும் ஆதிக்கங்களுக்கு இடம் கொடுத்து நாம் அழிந்துவிட மாட்டோம். இந்த ஆதிக்கங்களுக்கு எதிராக நம்மைத் திரட்டிக்கொள்ளத் தமிழ் நமக்குள் உயிர்ப்பைத் தரும். இத்தகைய உணர்வைத் தமிழன்பன் அருவிகளில், அலை கடல்களில் தேக்கி வைத்திருக்கிறார்கள். கவிதைக்குள் இப்பொழுது கொஞ்சம் பயணம் செய்வோம்.

எங்கள் இரத்தத்தின் இசை தமிழ்; உறங்காத உணர்வு நடனம் தமிழ்: சூரியன் மனப்பாடம் செய்து கொண்ட ஒளியின் மூலப்பிரதி தமிழ். நகல் குளிர்ச்சியை நாடெல்லாம் இறைக்கிறது நிலா. காலம் பூமியின் எந்தப் புள்ளியில் முதல் மனிதனைக் கண்டதோ அந்தப் புள்ளியைச் சந்தனக் காடாக்கியது தமிழ். எதைச் சொல்ல நாங்கள் எண்ணினாலும் அதைச் சொல்ல எங்களுக்கு முன் எண்ணும் தமிழ். விதைகளை நாங்கள் கையில் வைத்திருப்போம்; விளைச்சலை அது நிலத்தில் வைத்திருக்கும்.

தமிழின் இத்தகைய வரலாறும் வாழ்வியலும் நமக்குள் என்னதான் மங்கியிருந்தாலும் மறைந்து இருந்தாலும் நமக்குள் தமிழை உயிர்ப் பித்துக்கொள்ள முடியும்.

பாரதிதாசனை தமக்குள் வரித்துக் கொண்டவர் இந்த உண்மையை உணரமுடியும். இதை வெற்று ஆரவாரமாக, வீண் பெருமையாக நமக்குள் மாற்றிக்கொள்ள வேண்டியதில்லை. நாம் தமிழர்கள் என்பதை நம் வாழ்வின் மூலம்தான் மெய்ப்பிக்க முடியும். போலித் தமிழ்ப் பற்றாளர்கள் தமிழ்பற்றி, தமிழனைப் பற்றி ஆரவாரத்தோடு பேசித் தம்மை இழந்து விடுகிறார்கள். இப்படி நம்மை நாமே மலினப்படுத்திக் கொள்வதன் மூலம் நம் ஆற்றலை நாமே இழந்து விடுகிறோம். தமிழைப் பற்றி இத்தகைய ஆழ்ந்த உணர்வுதான் வரலாற்றில் நம்மை வாழவைக்கும்.

தமிழன்பனின் இன்னொரு கவிதை "மனிதனைத் தேட மார்க்கம் என்ன?" என்ற கவிதை. மதங்களின் வழியே மனிதனைத் தேடிக் கண்டு பிடிக்க முடியுமா? என்ற கேள்வியோடு கவிஞர் தொடர்கிறார்.

இறைவனைத் தேட மதங்களை மார்க்கங்கள் என்கிறார்கள். மனிதனைத் தேட எது மார்க்கமாக இருக்க முடியும் என்று கேட்கிறார் கவிஞர். தனது சாயலில் மனிதனை இறைவன் படைத்தார் என்கிறது மதம். ஆனால் மனிதனின் முகமோ இன்று விலங்கின் முகமாய் மாறியது எப்படி என்று ஆராய்கிறார் கவிஞர். கற்பூர நெடியில் மூர்ச்சித்து விழுந்தார் கடவுள், மசூதி வாங்கொலியால் புறாக்கள் வெளியேறுகின்றன.

மனிதனை மனிதனிடமிருந்து மறைக்கிறது மதம். மதங்களுக்குள் இறைவன் இல்லை. மனிதன் இறைவனுக்குக் குருதியில் திலகமிடுகிறான். எந்தக் கடவுள் இப்படிச் சொன்னார்?

இறைவன் நெற்றியில் இருந்த இரத்தக்கறை இன்னும் கழுவப்பட வில்லை. இறைவன் வந்து கதவைத் தட்டுகிறான். மூடிய கதவுக்குள் சாத்தானோடு மனிதன் விருந்து உண்ணுகிறான். கோவிலுக்குள்ளும் இறைவனுக்கு இடமில்லை. மனிதனுக்குள்ளும் இடமில்லை. தெருவில் திரிகிறான் இறைவன்.

இல்லை என்று இறைவனைச் சிலர் மறுத்தார்கள். தான் இல்லாமல் போயிருக்கலாம் என்று இறைவன் இப்பொழுது நினைக்கிறான்.

இராமன் இப்பொழுது இராவணனோடு கூட்டுச் சேர்ந்து கொண்டான். கீதை குருசேத்திரத்தில் கிழிபட்டுக் கிடக்கிறது. பூசாரிகள் கடவுளை வெளியேற்றிக் கோவிலைக் கைப்பற்றிக் கொண்டார்கள். மதம் மனிதர்களுக்குப் பாதையா? பயணங்களா? மதத்தை எந்த இறைவன் வளர்க்கச் சொன்னான்? மனிதம்தான் மனிதனுக்கு இயற்கை; மதம் என்பதோ செயற்கை. மனிதனைக் கொன்று மதத்தை வளர்க்க வேண்டாம். மனிதனுக்காகப் புத்தன் அரச போகத்தைத் துறந்தான். சிலுவையில் இயேசு மனிதனுக்காகக் காயங்களைச் சுமந்தார். மகமது மனிதனுக்காகக் கற்களால் காயம்பட்டார். ஆனால் இன்று புத்தனும்

இல்லை, போதி மரங்களும் இல்லை. கர்பலாக்கள் காயம்பட்டுக் கிடக் கின்றன. மனிதன் இன்று மதத்தினுள் இல்லை. கீதை மனிதனை எங்கிருந்து தேடும்?

மதங்களிடமிருந்து தன்னை விலக்கிக்கொள்ள விரும்புகிறான் இறைவன். மதங்களுக்குள் அடைபட்டுக் கிடப்பதை இறைவன் விரும்ப வில்லை. சாதிகளை, இனங்களை, ஏற்றத் தாழ்வுகளை இறைவன் படைக்கவில்லை. படைத்தவை மதங்கள். மனிதநேயம் மலர்வதற்கு மதங்கள் தடையாகிவிட்டன. மதங்ளைத் தகர்த்து மனித நேயத்தை மீட்போம்.

மனிதனுக்கும் மதத்திற்கும் இடையிலுள்ள உறவு பற்றியது தமிழன் பனின் இந்தக் கவிதை. இறைவனை மையத்தில் வைத்து மதங்கள் உருவாகி இருக்கின்றன என்பதும் பலரின் நம்பிக்கை. இறைவன் என்ற கருத்தைப் புத்தர் ஏற்கவில்லை. இயேசுவுக்கும், மகமது நபிக்கும் இறைவன் இல்லாமல் முடியாது. மதங்களைப் படைத்தவர் புரோகிதர். மதங்களுக்குள் கோவில்களுக்குள் இறைவனைப் புரோகிதர் சிறை வைத்துள்ளனர். கடவுளை வைத்துப் புரோகிதர் வாழ்கின்றனர். இயேசுவையும் மகமது நபியையும் புரோகிதர் என்று சொல்வதற்கில்லை. இயேசுவோ, நபியோ மதங்களைத் தோற்றுவிக்கவில்லை. அவர்கள் ஏற்படுத்தியவை மார்க்கங் கள். இயேசுவுக்குப் பின் வந்தவர்கள் இயேசுவை வைத்து மதத்தைப் படைத்தனர். இயேசுவும் மதத்திற்குள் சிறை வைக்கப்பட்டார். மனிதனும் இப்படித்தான் மதத்தினுள் சிறை வைக்கப்பட்டுள்ளான். மதத்திலிருந்து இறைவனையும் மனிதனைப் போல விடுவிக்க வேண்டும். மதத்திற்குள் மனிதநேயம் இல்லை. இப்படிச் செல்கிறது தமிழன்பனின் கவிதை. கவிதைக்கும் மதத்திற்கும் என்ன உறவு என்பது பற்றி நாம் சிந்திக்க வேண்டும். இறைவன் என்ற படைப்பை கவிஞனின் படைப்பென்று கூற முடியும். ஆனால் மதம் பற்றி இப்படிக் கூற முடியாது. இறைவன் என்பது ஒரு கருத்து. அன்பின் வடிவம் என்றோ, ஆற்றலின் வடிவம் என்றோ இறைவனை உருவகப்படுத்தலாம். இப்படி இறைவனை உருவகப்படுத்திய பிறகு உருவம், பெயர்கள். கோவில் முதலியவை உற்பத்தியாகிவிடும். இறைவனும்கூட இந்தக் கோவிலுக்குள் அடைக்கப்படுகிறான். தான் இல்லாமல் இருந்திருக்கலாம் என்றுகூட இந்த இறைவன் சிந்திப்பதாகத்

தமிழன்பன் எழுதுகிறார். இவை பற்றி எல்லாம் நாம் இன்னும் சிந்திக்க வேண்டும். மதம் என்பது பற்றிப் புரிந்துகொள்ள எதிர்மறைப் பார்வை மட்டுமே பயன்படும் என்று தோன்றவில்லை. மதத்திற்குள்ளும் ஆதிக்கம் இறுகிவிடுகிறது. தோன்றியபொழுது மனித விடுதலையை மையத்தில் கொண்ட சமயம் பிறகு ஆதிக்கத்தின் கையில் அகப்பட்டு மனிதனை அழுத்துகிறது. இப்படி எல்லாம் சிந்திப்பதற்கு இடம் இருக்கிறது. கவிதைக்கும் மதத்திற்கும் உள்ள உறவு இன்னும் நமக்குத் தெளிவுபடவில்லை.

## *நதிகளுக்குப் பதிலாக நாய்களைக் கட்டவிழ்த்து விட்டபோது*

இந்தத் தொகுப்பிலுள்ள ''நதிகளுக்குப் பதிலாக நாய்களைக் கட்ட விழ்த்து விட்டபோது'' என்ற தமிழன்பனின் கதைக் கவிதைபற்றி இப்பொழுது குறிப்பிடலாம். தமிழன்பனின் பெரும்பாலான கவிதைகளில் அங்கங்கே கதைகளைக் கண்டுபிடித்து நாம் வாசிக்க முடியும். கவிதை தன் இயக்கத்தின்போது இயல்பாகவே கதை வடிவத்தை மேற்கொள்கிறது. இங்கும் ஒரு கதையின்மூலம் கர்நாடகத்தில் காவிரிச் சிக்கல் எழுந்தபோது தமிழன்மீது செலுத்தப்பட்ட கொடுமையைச் சொல்லுகிறார். நீண்ட இந்தக் கவிதையில் காளியம்மாளின் கதை இடம் பெறுகிறது. சத்தியமங்கலத்திலிருந்து வாழ முடியாமல் வாழ்க்கையால் துரத்தப்பட்ட காளியம்மாள் தன் கணவனுடன் கொல்லேகால் போய்ச் சேருகிறாள். கட்டட வேலையில் ஈடுபட்டிருந்த அவள் கணவன் கட்டடத்தி லிருந்து விழுந்து இடுப்பு ஒடிந்து போனான். அவனை ஒரு குழந்தை போலக் காளியம்மாள் காப்பாற்றினாள். நடுவர் நீதிமன்றம் தமிழ்நாட்டுக்குக் காவிரியிலிருந்து தண்ணீர் கொடுக்க வேண்டும் என்று 1991இல் தீர்ப்புரைத்தபோது நதிநீர்க்குப் பதிலாகக் கர்நாடகத்து அரசியல்வாதிகள் நாய்களைக் கட்டவிழ்த்துவிட்டார்கள். கணவனைத் தன் இடுப்பில் வைத்துக் கொண்டு காளியம்மாள் அங்கிருந்து கிளம்பியபோது வெறியர்கள் அவளைச் சூழ்ந்துகொண்டார்கள். காளியம்மாளின் கணவன் தன் கைவாளினால் வெறியரை வெட்டிச் சாய்த்தான். வெறியன் ஒருவன் கடப்பாறையால் காளியம்மாளின் மண்டையில் அடித்தான். கணவனும் மனைவியும் அங்கு மயங்கிச் சாய்ந்து உயிர்விட்டனர். இப்படி ஒரு

சோகக் கதையைச் சொல்லியதன் மூலம் தமிழ்க் கவிதையில் காவிரிக் கதையைப் பதிந்து இருக்கிறார் தமிழன்பன். கவிதைக்கு இப்படியும் கடமைகள் உண்டு.

## *எண்ணங்கள்*

இந்தத் தொகுப்பிலுள்ள இன்னொரு நல்ல கவிதை "எண்ணங்கள்" என்ற கவிதை. தன் கவிதைகளில் அழகியலையும் வாழ்வியலையும் இணைத்துப் பேசுகிற கவிஞரின் எண்ணங்கள் என்ற கவிதை, இந்தத் தொகுப்பிலுள்ள மிகச் சிறந்த கவிதைகளில் ஒன்று. எட்டுப் பக்க அளவில் அடுக்கடுக்காய் நீள்கிறது இந்தக் கவிதை. வாழ்வியல் பற்றிய உண்மைகளை ஆத்திசூடிபோல அடுக்கி வைக்கிறது இந்தக் கவிதை. ஒரு வகையில் தமிழ்க் கவிதையில் இது ஒரு புது வடிவம். சீரிய சிந்தனையைத் தொடர்ச்சியாகச் சொல்வதற்கு இந்த வடிவம் அற்புத மாய்க் கை கொடுக்கிறது. இந்தத் கவிதையிலிருந்து சில அடுக்குகளை இங்குக் குறிப்பிடலாம்.

இருட்டின் தியானம் விடியலைப் பெறுவதல்ல. விடியல் ஆவது. பாட்டாக மாற முடியாதவன் பாடமுடியாது. பாடமாக இல்லாதவன் எப்படிப் பாடம் நடத்துவான்? வெளிச்சத்தின் புதல்வன் சிந்தித்து வெளிச்சமாகிவிடவேண்டும்.

இப்படியே கவிஞர் தொடர்ந்து எழுதுகிறார். கவிதை இயக்கத்தினுள் முரணியக்கம் செழுமை பெறுகிறது. வாழ்வின் உள் ஆழங்களுக்குள் கவிஞர் விரைவாகச் செல்லுகிறார். வாழ்வுக்குள்ளிருந்து பேரழகுகளைச் சேகரிக்கிறார்.

இத்தகைய ஐந்து ஆறு கவிதைகள் இந்தத் தொகுப்பில் இருக் கின்றன. இவற்றிற்காகவே கூட இந்தத் தொகுப்பை நாம் நினைவில் வைத்துக்கொள்ள முடியும்.

இந்தத் தொகுப்பில் இடம் பெறும் இன்னொரு கவிதை நம் நெஞ்சில் நிற்கிறது. மின் வெட்டுச் சமயத்தில் விளக்குகள் அணைந்து எங்கும் இருள் சூழ்கிறது. கவிஞர் தனக்குள்ளிருந்து ஒரு கவிதையைப்

பிறப்பிக்கிறார். இருளுக்கு இப்பொழுது சுதந்தரம் வாய்த்திருக்கிறது. விளக்குகளால் கிழிபட்ட இருளுக்கு வாய்த்திருக்கிற சுதந்தரம் அருமையானது. இப்பொழுது தொலைக்காட்சிகள் இல்லை. விஞ்ஞானத்திற்கு இது பெரும் மகிழ்ச்சியைத் தருகிறது. விஞ்ஞானத்தைக் கேவலப் படுத்தியது தொலைக்காட்சி. பாடநூல்களுக்கு இப்பொழுது விடுதலை. விளக்கு வெளிச்சத்தில் பாடங்களை உருப்போட்ட மாணவர்கள் இப்பொழுது பாடநூல்களை மூடி வைத்திருக்கிறார்கள். இனி இவர்கள் சுயமாகச் சிந்திக்க முடியும். இப்படி இருள்பற்றிக் கவிதை புனைகிறார் தமிழன்பன். இருளின் அழகை வாழ்வியலோடு சேர்த்துப் புனைகிறார்.

கடைசியாக ஒன்றைக் குறிப்பிடலாம். இந்தியாவில் நம்மிடமிருந்து வாழ்க்கையை, அதன் விரிவை, மேன்மையை, அழகை ஆதிக்கவாதிகள் பறித்துக் கொண்டனர். வாழ்வின் மேன்மையோ அழகோ அவர் களுக்குத் தேவையில்லை. அவர்களுக்கு வேண்டியது அதிகாரம், நுகர்வு, ஆரவாரம், வேடிக்கைகள் முதலியவை. இவை வாழ்வை அழகுபடுத்துவது இல்லை. அவர்களின் வாழ்வையும் இவை நாசப்படுத்துகின்றன. அதே சமயம் மக்களின் வாழ்வையும் இவை நாசப்படுத்துகின்றன. ஒட்டு மொத்தமான மனித வாழ்க்கை நாசமாகிறது. தன் அழகையும் அர்த்தங் களையும் இழக்கிறது.

மனித வாழ்க்கை இவற்றை எல்லாம் மீட்டுக்கொள்வதன் மூலமே தன்னை உயிர்ப்பித்துக்கொள்ள முடியும். மேன்மைப்படுத்திக்கொள்ள இயலும். இதற்காக இந்த மக்கள் தன் விடுதலைக்காக இன்னொரு விடுதலைப் போரில் ஈடுபடவேண்டும். உழைப்பின் மூலமே வாழ்க்கை அழகுபெறும், தேசம் அழகுபெறும். தொழிலாளர்கள் மற்றும் உழவர்களின் உழைப்பு ஒரு பேரழகு. இவர்கள்தான் உலகை, வாழ்வைப் புதியதாக, அழகியதாகப் படைக்கிறார்கள். இவர்களுக்குள்தான் பேராறுகள் ஓடுகின்றன. இயக்கங்கள் உருக்கொள்கின்றன. இவர்கள் மூலம்தான் காவியங்கள் உருவாகின்றன. வாழ்வியலும் அழகியலும் இவர்கள் மூலமே இணைகின்றன.

5.17

# 30

## பனி பெய்யும் பகல்

பனி பெய்யும் பகல் முன்னுரையில் கவிஞர் தமிழன்பன் குறிப் பிட்டுள்ளபடி, அவரது கவிதையாக்க முறை இந்தத் தொகுப்பில் வழக்க மான அவரது ஆடம்பரத்தனமான போக்கிலிருந்து நடப்பியல் நோக்கில் நகர்ந்திருக்கிறது. கவிதையை அழகுபடுத்துகிற, ஆழப்படுத்துகிற போக்கை ஆடம்பரமானது என்று புரிந்துகொள்வதில் தவறில்லை. இத்தகைய கவிதைகள் சிலவும் இந்தத் தொகுப்பில் இல்லாமல் இல்லை. நடப்பியல் நோக்கிய நகர்வு என்பதைக் கவிஞர் தமிழன்பன் அவர்கள் தன்னைப் பற்றியும் தன் குடும்பத்தினர் பற்றியும் உறவினர், நண்பர்கள் பற்றியும் கவிதையைப் படித்த உடனே எளிதாகப் புரிந்துகொள்ளும் முறையில் எழுதப்பட்டிருக்கிறது என்று புரிந்துகொள்ளலாம். தமிழன்பனின் குடும்பத்தினரைத் தெரிந்தவர்களுக்கு அவர் யாரைப் பற்றி எழுதுகிறார் என்பதைப் புரிந்துகொள்ள முடியும்.

அகத்திணை இலக்கியத்தைப் பொருத்தவரை ஒருவர் பெயரைச் சுட்டிச் சொல்லக்கூடாது என்பதே ஒரு விதி. பொதுவாகக் கவிதையைப் பொருத்தவரை இந்த விதியை மேலும் விரிவுபடுத்தி இலக்கியத்திற்கான பொதுவிதி என்று நாம் படைத்துக்கொள்ள முடியும்.

அதாவது கவிஞர் தமிழன்பன் தன் தந்தையைப் பற்றியோ, ஊத்துக்குளி மாமாவைப் பற்றியோ கவிதையில் சுட்டிச் சொன்னாலும் இத்தகைய மனிதர்கள் நம் சமூகத்திலும் நாம் காண, வாழ்ந்த, வாழ்கின்ற எத்தனையோ மனிதர்களில் இவர்களும் ஒரு சிலர் என்று நம்மால் புரிந்துகொள்ள இயலும். இதுவும் கவிதையாக்க முறைகளில் ஒன்று.

தமிழன்பன் கவிதையாக்க முறையைப் பொருத்தவரை இன்னும் ஒன்றை இங்குச் சுட்டிச் சொல்வது பொருத்தமாக இருக்கும். இதுவும் உயர் கவிதையாக்கத்திற்குரிய பொதுவிதி என்று கருதலாம். ஒரு எடுத்துக்காட்டுடன் இதை விளக்கலாம். அண்ணாசாமி ஆணி

அடிக்கிறார். கீழ் வீட்டில் நாம் குடியிருக்கிறோம். மேல் மாடியில் அண்ணா சாமி ஆணி அடிக்கிறார். நம்மைப் போல அவரும் வாடகை தந்து குடியிருப்பவர். அவர் ஆணி அடிப்பதை நாம் தடுக்க முடியாது. ஒன்று இரண்டு என்று அவர் ஆணி அடிப்பதை நாம் தவறென்று சொல்ல முடியாது. ஆனால் அவரோ ஒவ்வொரு நாளும் கால நேரம் என்று இல்லாமல் இரவிலும்கூட ஆணி அடிக்கிறார். நாம் பதறுகிறோம். குழந்தைகள் பாடம் படிக்கிறபோதும் ஆணி அடிக்கிற ஓசை. எந்த நேரத்தில் அவர் அடிப்பார் என்றில்லாமல் எல்லா நேரங்களிலும் பதற்றத் தோடு, அதே சிந்தனையாக நாம் இருக்க வேண்டியிருக்கிறது.

அவர் ஆணி அடிக்காத நேரத்திலும் அவரது ஆணிச் சத்தம் நமக்குள் ஏறுகிறது. அவரைப் பார்க்கிறபோதும் அவர் கையில் ஆணி இல்லாவிட்டாலும் பதற்றத்தோடுதான் நாம் அவரைப் பார்க்கிறோம். எதற்கு இத்தனை ஆணிகளை அவர் அடிக்கிறார்? ஆணிகளில் எவற்றை எல்லாம் தொங்கவிடுவார்? குழந்தைகளைக்கூட ஆணிகளில் மாட்டி வைப்பாரோ? தனக்கும் ஓர் ஆணி அடித்துக் கொள்வாரோ? இயேசுநாதர் நினைவு நமக்கு வருகிறது. நம்மீதும் அவர் ஆணி அடிக்கிறார்.

இப்படித்தான் அண்ணாசாமி தொடர்ந்து ஆணிகள் அடித்துக் கொண்டிருக்கிறார் என்பதுகூட உண்மையாக இருக்க வேண்டும் என்பது இல்லை. சிலமுறை அவர் ஆணியடிப்பதே போதும். பதற்றம் நமக்குள் பரவிவிடுகிறது. ஒரு மையப் புள்ளி, ஆணி அடித்த ஒரு மையப் புள்ளி பதற்றம் அங்கிருந்து நமக்குள் எந்நேரமும் பரவுகிறது. நமக்கு வேறு எந்த நினைவும் இல்லை. வீட்டிற்குள் இருக்கிற பொழு தெல்லாம் ஒரே ஒரு நினைவு. நாம் மன நோயாளி ஆகிவிட்டோமா? ஏன் இப்படி நமக்குள் ஓர் உணர்வு குத்திட்டு நிற்கிறது? அதிலிருந்து நாம் ஏன் விலகி நிற்க முடியவில்லை என்றும் நாம் சிந்திக்கலாம். உண்மையில் இது கவிதையாக்க முறை. மையத்தில் குவிந்த ஓர் உணர்விலிருந்து எல்லாவற்றையும் உள்ளடக்கிப் பார்ப்பது; அந்த ஓர் உணர்வின் மையத்திற்குள் உலகத்தையே உள்ளடக்கிப் பார்ப்பது; காதல் உணர்வின் முழு அளவில் வசப்பட்ட ஒருவன் பிரபஞ்சத்தில் எல்லாவகை உணர்வுகளையும் காதலின் கொந்தளிப்பு என்று பார்ப்பது

போன்றது இது. கவிதைக்கு மட்டுமல்ல, வாழ்வுக்கும் இது பொருந்தி வரும் உண்மை.

பக்தி உணர்வில் வசப்பட்ட ஒருவர் உலகின் அனைத்து நிகழ்வு களையும் இறைவனது அருளிச் செயல்களாகப் பார்ப்பதுபோன்றது இது.

இத்தகைய கவிதையாக்க முறையை மனத்தில் இருத்திக் கொண்டு, இந்தத் தொகுப்பில் கவிஞர் தமிழன்பனின் வாழ்வியல் அனுபவங்கள் சிலவற்றைக் காணலாம். இங்கு மறுபடியும் கவிஞர் தன் சொந்த வாழ்க்கையைத்தான் குறிப்பிட்டுச் சொல்கிறார் என்று நாம் தேட வேண்டியதில்லை. கவிஞர் தமிழன்பனோடு நாமும் இந்தச் சமூகத் தின் புதுச் சூழலில் வாழ்கிறோம். கவிஞருடைய பலவகை அனுபவங்கள் நமக்கும் உரியது. வெவ்வேறு சூழல்கள் என்றபோதிலும் சூழல் கடந்தும் சமூக இயக்கத்தின் பொதுத்தன்மைக்குள் நாம் இவர் கவிதை களின் வாழியாக உள் நுழைகிறோம். இனி கவிஞர் தமிழன்பன் அனுபவங்கள் என்று நாம் பிரித்துப் பேச வேண்டியதில்லை.

குடும்பத்தில் நாம் தலைவராக இருக்கிறோம். மனைவியோடு, மக்களோடு, பெற்றோரோடு நாம் வாழ்கிறோம். தெருவில் நாம் தனியாக இல்லை. அண்டைவீடுகள், எதிர்வீடுகளிலும் யார் யாரோ வாழ்கின்றனர். குடும்பத்தின் தலைவன் என்ற முறையில் குடும்பத்தில் உள்ள பலரோடும் அன்பாகத்தான் இருக்கவிரும்புகிறோம். அவரவர் தேவைகளை அறிந்து நிறைவேற்றுவது நம் கடமை எனவும் உணருகிறோம். எல்லாச் சமயங்களிலும் இப்படி அன்பாக – நிதானமாக இருக்க நம்மால் முடியவில்லை. எல்லோருக்கும் அவரவர்க்குரிய இடத்தை நாம் ஏற்றுக் கொண்டிருக்கிறோம் என்றபோதிலும், அவர்களும் எல்லாச் சமயங் களிலும் தமக்குரிய இடத்தில் இருப்பதில்லை.

நம்மைவிட இளையவர் எனினும், நம்மீதும் அவர்கள் ஆதிக்கம் செய்கின்றனர். நமக்குள் நிலைகுலைந்து போகிறோம். ஆத்திரப்படுகிறோம். நான் தலைவன், எனது ஆதிக்கம்தான் இங்கு நடைபெறவேண்டும். இதற்கு எதிராக யாரும் கை உயர்த்தக் கூடாது என்றும் நமக்குள் எண்ணுகிறோம். ஏன் இப்படி ஓர் ஆதிக்க உணர்வு என்றும்கூடக் கவலைப்பட்டுக் கொள்கிறோம்.

காகிதத்திற்குள் வராத கவிதை என்று ஒரு கவிதை. நான் கவிதை எழுத வேண்டும். காகிதம் எடுக்கிறேன். கவிதையை மனத்திற்குள்ளேயே வைத்துக்கொண்டிருக்க முடியாது. முற்றிய கருவைப் பிரசவிப்பது போலக் கவிதையை எழுதி வைத்திடவேண்டும். அப்பொழுதுதான் இன்னொரு கவிதை சுரப்பதற்கு மனத்தில் இடம் ஏற்படும். காகிதத்தைக் கையில் எடுக்கும்போது, உடனே பையன் வந்து தனக்குப் பட்டம் விடக் காகிதம் வேண்டும் என்கிறான். இப்படியே மனைவியும், மகளும், அப்பாவும் அவரவர் தேவையைச் சொல்லி என் கையில் இருக்கிற காகிதத்தைத் தரவேண்டும் என்கின்றனர். எதிர் வீட்டுக்காரரும் இப்போது உள்ளே வந்து கவிதை எழுதி என்ன பயன்? காது குடையக் காகிதம் வேண்டும் என்கிறார். என் கவிதைக்கு இவர்களிடம் மரியாதை இல்லை. நான் கவிஞன் என்பதை இவர்கள் பொருட்படுத்தவில்லை. குடும்பத் தலைவன் என்ற முறையில் அவரவர் தேவைகளை நான் நிறைவேற்ற வேண்டும். கவிதை எழுதாமல் என்னால் இருக்க முடியவில்லை என்பதை இவர்கள் ஏற்க வில்லை, புரிந்து கொள்ளவில்லை. எல்லோருக்கும் நான் இடம் கொடுத்து விட்டேன். இவர்களும் என்னை வாட்டுகிறார்கள். என்னிடமிருந்து என்னையே பிடுங்கிக் கொள்கிறார்கள். நான் எதுவும் இல்லாமல் ஆகிக் கொண்டிருக்கிறேன்.

இப்பொழுது நான் என்ன செய்ய முடியும்? அலுவலகத்திற்குக் கிளம்பிக் கொண்டிருக்கிறேன். என் மனைவி முன் வந்து, நிலம் வாங்க வேண்டும் என்று சொன்னீர்களே இன்றாவது செய்வீர்களா என்று கேட்கிறாள். எனக்குள் ஆத்திரம். என்னையும் உன்னையும் புதைக்கவா என்று கேட்டு வைக்கிறேன். அப்பா இப்பொழுது அவசரமாக வந்து மருந்துச் சீட்டை என்னிடம் தருகிறார். எனக்கு மேலும் ஆத்திரம். ஒன்றிரண்டு நாள் கழித்து வாங்கினால் என்ன என்று ஆத்திரப் படுகிறேன். மரணத்தை நோக்கி அவர் தடுமாறுகிறார்.

பள்ளிக்குப் புறப்படும் பையன் முன்வந்து அவன் தேவையைச் சொல்கிறான். நான் ஏதோ சொல்ல அவன் முகம் கறுத்துவிடுகிறது. மகளும் நொந்து போகிறாள். வீட்டை விட்டு அவசரமாகக் கிளம்பி னாலும் மனம் தவிக்கிறது. மனைவியை, மக்களை, அப்பாவை இப்படி நான் படுத்தி இருக்க வேண்டாம். அவர்களின் முகமலர்ச்சியை, மன

மகிழ்ச்சியை இப்படிப் பிடுங்கி எறிந்திருக்க வேண்டாம். எனக்குள் என்ன நேர்ந்தது? மனத்திற்குள் இருந்து ஒரு பதில் வாழ்க்கை என்னை இப்படிச் செய்துவிட்டது.

இத்தொகுப்பில் உள்ள பல கவிதைகளை இத்தகைய உணர்வோடு நாம் வாசிக்கிறோம். வாழ்க்கை நம்மை இப்படிச் செய்துவிட்டது. வாழ்க்கையின் கைகளில் அகப்பட்டு நமக்குள் சிறுத்துவிட்டோம். காயப்பட்டிருக்கிறோம். கோபிக்கிறோம், திட்டுகிறோம், மற்றவர்களின் மகிழ்ச்சியைக் கெடுக்கிறோம். வாழ்க்கை – இது சமூக வாழ்க்கை. சமூகத்தின் நெருக்கடிகளுக்கு இடையில் நாம் இருக்கிறோம். இந்த வாழ்க்கையைத்தான் நாம் வாழ்ந்தாகவேண்டும்.

நான் ஒரு வீடு கட்டிக்கொள்ள வேண்டும். சரளைக் கற்களையும் சிமெண்டையும் கொண்டு வந்து போட்டாயிற்று. வீடு எப்படி இருக்க வேண்டும் என்று சிந்திக்கிறேன். எனக்குள் நானாக ஒரு வீட்டைக் கட்டி வைத்திருக்கிறேன். இன்னும் கட்டி முடிக்கவில்லை. என் குடும்பத்து உறுப்பினர் ஒவ்வொருவராக உள்ளே வருகிறார்கள். என் அறையின் கூரை ஒழுகுகிறது என்கிறாள் மகள். எனக்குப் பிடிக்காத வண்ணத்தை என் அறைச் சுவருக்கு ஏன் அடித்தீர்கள் என்கிறான் மகன். பூஜை அறைக்குப் பக்கத்திலா கழிப்பறை என்கிறாள் மனைவி. சாத்திரப்படி வீடு அமையவில்லை என்கிறார் அப்பா. எனக்குள் பெரும் சலிப்பு.

இறந்துபோன என் அம்மாவைக் கேட்கிறேன். நன்றாகத்தானே கட்டியிருக்கிறாய் என் சமாதியை என்கிறாள் தாய். எனக்குள்ளும் ஒரு சமாதி எழுகிறது. அது எனக்கான சமாதி. இப்படிச் செல்கின்றன, கவிஞர் தமிழன்பனின் கவிதைகள். இதே தொனியில் இன்னும் எத்தனையோ கவிதைகளைக் குறிப்பிடலாம்.

குழந்தைகளுக்குக் கோடை விடுமுறைக் காலத்தில் பம்பளிமாஸ் பழத்தோடு ஊத்துக்குளி மாமா வந்து விடுவார். குழந்தைகளுக்கு ஒரே கொண்டாட்டம். ஆனால் வந்தவர் பத்து நாள்களுக்குமேல் தங்கிவிடுவார். அம்மா சமைத்து வைத்திருக்கிற அத்துணை சோறும் குழம்பும் அவருக்கே சரியாகிவிடும். இரவு எல்லாம் குறட்டை ஒலி. வீடு முழுவதும் சுருட்டுப் புகை வாசம். புறப்படும்போதும் அம்மா அவருக்குப் பணம் கொடுத்து

அனுப்பவேண்டும். இப்படி ஒரு மனிதர். ஏன் இவர் இப்படி ஆனார்? வாழ்க்கை இவரை எங்கே வைத்திருக்கிறது?

வீட்டில் ஏதாவது இழவு என்றால் ஏழுமலை மாமா நினைவு வரும். ஏழுமலை தவறாது வந்துவிடுவார். புறப்பட்டுச் செல்லும்போது, எங்கள் சட்டை, வேட்டிகளை எடுத்துச் செல்வார். என் கடிகாரத்தைக்கூட ஒரு முறை கட்டிக் கொண்டு போய்விட்டார். இவர் இழவுக்காக வருகிறாரா அல்லது ஏதாவது எடுத்துச் செல்ல வருகிறாரா? வாழ்க்கை இவரை எங்கே வைத்திருக்கிறது?

கெட்டிச் சாயத்தில் துணிகளைத் தோய்த்து எடுப்பதில் வல்லவர் பொன்னுசாமி. இவர் பயன்படுத்துவது எப்பொழுதும் கெட்டிச் சாயம். ஊரில் உள்ள எவர் மீதும் இவர் சாயம் பூசாமல் இருக்கமாட்டார். என்னிடமே வந்து உங்கள் மகன் நல்லவன்தான், ஆனால் இன்னாரோடு இவன் பழகுகிறான். பையனைக் கட்டுப்படுத்தி வையுங்கள் என்பார். என் மகனைப் பற்றியும் இதே தோரணையில் பேசுவார். ஊரின் பெரிய மனிதர், குருக்கள் மனைவியோடு தொடர்பு வைத்திருக்கிறார் என்று ஒரு நாள் கூறியவர் மறு நாள் என்னைப் பற்றியும் ஊரில் பேசிக் கொள்கிறார்கள் என்றார். சாயப் பட்டறைகள் மூடிவிட்ட நிலையிலும் பிறரைக் கெட்டிச் சாயத்தில் ஊற வைத்து எடுப்பதில் இவர் தவற வில்லை. பொன்னுசாமி ஏன் இப்படி ஆனார்? வாழ்க்கை இவரை எங்கே வைத்திருக்கிறது?

இதே தோரணையில் இன்னும் பல கவிதைகள். பிண்டச் சோற்றுக் காக வீட்டிற்கு எதிரில் உள்ள மரத்தில் கடூரமாய்க் கத்திக் கொண்டிருக்கிறது காக்கை. காக்கை எதனுடைய நிழல்? மரணத்தின் குறியீடு காக்கை. எனக்குள்ளும் அந்தக் காக்கை, மரணத்தின் நிழல்.

கூட்டுக்குத் திரும்புகிற தாய்ப் பறவை ஒரு மழைத் துளியைச் சூரிய ஒளியின் ஒரு துகளைத் தன் குஞ்சுகளுக்கு ஊட்டுகிறது. குஞ்சு கள் ஆரவாரித்தன. இன்னொரு நாள் தாய்ப் பறவை மனிதரின் சொல் ஒன்றைக் கொண்டு வந்தது. குஞ்சுகள் கத்தின–கதறின. குஞ்சுகளுக்கு மனித வாடை நஞ்சாகிறது.

வாழ்க்கை என்பது இப்பொழுதுமா இப்படி? இப்படி ஏன் வாழ்க்கை நமக்குத் தோன்ற வேண்டும்? என் மனத்தினுள்ள கசப்பை வாழ்க்கை மீது ஏற்றிப் பார்க்கிறேனா? வாழ்க்கை எப்பொழுதுமா இப்படி இருந்தது, இருக்கிறது? வாழ்க்கையில் இனிய நேரங்கள் இல்லையா? வாழ்க்கை அதன் சாரத்திலேயே நஞ்சாகிவிட்டதா? இப்படியும் நமக்குள் கேட்டுக் கொள்கிறோம். சிக்கல்கள், நெருக்கடிகள் நம்மைக் கடுமையாகப் பாதிக்கிறபொழுது நாம் உணர்வற்றுப் போகிறோம். நம் மனம் நம்மோடு இல்லை. என் மனத்தை நான் எங்கே தொலைத்தேன்? எப்படித் தொலைத்தேன்? தொலைத்த என் மனத்தை எப்படித் தேடிக் கண்டு பிடிப்பேன்? நானே எனக்கு எப்பொழுது சொந்தமாவேன்? இப்படியும் சில சிந்தனைகள்.

என் இளமைக் காலத்தை நினைத்துக் கொள்கிறேன். வெள்ளிக் கிழமை பிற்பகலில் எங்கள் ஊரில் கூடும் சந்தையை நினைத்துக் கொள்கிறேன். முன் இரவில் காடா விளக்கின் வெளிச்சத்தில் அந்தச் சந்தை எத்தனை அழகாக இருந்தது? சந்தையிலிருந்து வீடு வந்து சேரும் தாய்க்காக எத்தனை ஆசைகளோடு காத்திருப்போம்? தாயைக் கண்டவுடன் எதிரோடிச் சென்று அவர் கைகளைப் பற்றிக்கொண்டு அவர் வாங்கி வந்த தின்பண்டங்களுக்காக எத்தனை ஆர்வத்தோடு காத்திருந்தோம்? விடிந்ததும் விடியாததுமாக சந்தை கூடிச் சென்ற இடத்திற்குத் தேடிச் சென்று, அங்குள்ள மணலையும் தூசிகளையும் கிளறி அங்குக் கிடைக்கும் சில நாணயங்களை எத்தனை ஆர்வத் தோடு தேடி எடுத்தோம்? அப்பொழுதெல்லாம் வாழ்க்கை எத்தனை அழகாக இருந்தது!

குடை இல்லாமல் வெளியில் சென்றேன். திரும்பி வரும்போது கொட்டிய மழையில் நன்றாக நனைந்தேன். சின்ன வயதில் இப்படி எத்தனை முறை மழையில் நனைந்திருப்பேன்? வீட்டிற்கு வந்து சேர்ந்த போது மனைவி காய்கிறாள். துண்டு எடுத்துக்கொடுத்துத் துவட்டுங்கள் என்கிறாள். தேநீர் வைத்துத் தருகிறேன் என்கிறாள். தாழ்வாரத்தில் வடியும் தண்ணீரை என் மகள் கையில் பிடித்து விளையாடுகிறாள். நீர்த்தாரையில் என் மகன் கப்பல் விடுகிறான். எனக்குள்ளும் உற்சாகம்.

இன்னொரு மழையின்போதும் குடையில்லாமல் நான் சென்றுவர வேண்டும். மழை என்னை என்ன செய்கிறது? என் குழந்தைகளை என்ன செய்கிறது? மழையோடு என் மனம் எப்படி ஒன்றியது?

என் அண்ணன் எத்தனை முறை என் அப்பாவின் கையில் உள்ள குடையால் அடிபட்டிருப்பார்! இப்பொழுது அண்ணன் இல்லை. அப்பாவும் இல்லை. குடைக் கம்பி கழன்று கிழிந்து தனியே பரிதாபமாய்க் கிடக் கிறது. எனக்கு என் அண்ணனும் வேண்டும். அப்பாவும் வேண்டும். அப்பாவின் கைக் குடையும் வேண்டும். அப்பாவிடம் அடிபடுவதுகூட ஒரு சுகம்.

என் அம்மா என்னைப் பெற்றெடுத்த அன்றே இறந்து போனாள். எத்தனை ஆசைகளோடு என்னை வளர்க்க நினைத்திருப்பாள்? நட்சத் திரங்களை, நிலாவை, கோழி, குருவிகளை எனக்காக அவள் தன் மனத்தில் எத்தனை அழகாகக் கூட்டி வைத்திருப்பாள்? என் பிறந்த நாளை நான் எப்படிக் கொண்டாட முடியும்? என் பிறந்த தேதிதானே, என் தாய் இறந்த தேதி.

இரவு கடைந்தெடுத்த ஒரு வெண்ணெய்க் கட்டி போல விடி வெள்ளி வானத்தைப் பார்த்து, உலகத்தைப் பார்த்துக் காத்திருக்கிறது. காலையில் நடைபழகச் செல்பவர் கண்ணில் விடிவெள்ளி விழவில்லை. வேலைக்காக அ வ ச ர அவசரமாகச் செல்லும் உழைப்பாளிகளின் கண்களிலும் விடிவெள்ளி படவில்லை. எனினும் எனக்காக என் கவிதைக்காகக் காத்திருக்கிறது விடிவெள்ளி.

அற்புதமானவன் என் நண்பன். சென்னைக்குச் செல்லும்பொழுதெல் லாம் கிடைக்கிற கொஞ்ச நேரத்திலும் அவனை நான் பார்க்காமல் திரும்ப மாட்டேன். அதிகாலையில் இவனைப் பார்க்கச் சென்றால், பத்திரிகையைக் கையில் கொடுத்துப் படித்துக் கொண்டிரு என்று உள்ளே செல்ல மாட்டான். முகச் சவரம் செய்து கொண்டிருந்தாலும் ஓடோடி வந்து என்னோடு அமர்ந்து கொள்வான். இன்னும் வீடு கட்டலையா என்று கேட்டு அவனே செங்கல்லாய், சிமெண்டாய், கம்பி களாய் மாறிவிடுவான். வெளியில் யார் வருகிறார்கள் பார்த்து வா என்று சொல்லி மனைவியை அனுப்பிவிட்டுக் கையில் உள்ள பணத்தை என்

சட்டைப் பையில் அவசரமாகத் திணிப்பான். அடுத்தமுறை சென்னை வரும்போது இங்கு வராமல் இருந்துவிடாதே என்று சொல்லி என்னை அனுப்பி வைப்பான். இப்பொழுது சென்னை வந்தாலும் நான் எப்படி அவனைப் பார்ப்பேன்? நட்பு அற்புதமானது. வாழ்க்கையில் இன்னும் அன்பு இருக்கிறது. மழைக்காக செடி – கொடிகள் காத்திருக்கின்றன. முளைப்பதற்காக நம்பிக்கையோடு விதைகள் காத்திருக்கின்றன. வீணையின் நரம்புகளைத் தொடுவதற்காக இசை காத்திருக்கிறது. பாறைகளுக்குள்ளும் இசை அதிர்வுகள் உண்டு. மழை இன்னும் பெய்யும். பூமி நனையும். பசுமை தளிர்க்கும். மனிதர்கள் மனத்திரிபிலிருந்து மாறுவார்கள்.

கசப்பான வாழ்க்கை யாருக்கு இனிக்கும்? காக்கையும் அழகான பறவைதான். மரணத்தின் நிழலாக அது ஏன் மாறவேண்டும்? நெருக்கடிகள் என்னை இன்னும் எரித்துவிடவில்லை. என் அப்பாவை மீண்டும் முதியோர் இல்லத்திலிருந்து நான் அழைத்து வருவேன். என் குழந்தைகளுக்கு அவர் தேவை. எனக்கும் அவர் உதவி இல்லாமல் முடியாது. என் மனைவியும் அவரைப் புரிந்து கொள்வாள். ஊத்துக்குளி மாமாவை என்னால் இரசிக்க முடியும். பொன்னுசாமிக்குள் எத்தனை வகை வகையான கற்பனைகள். ஏழுமலைக்குச் சட்டைகள் வேண்டும், கைக்கடிகாரம் வேண்டும். இவை தனக்கு வேண்டும் என்பது ஒரு குற்றமாகிவிட முடியுமா?

எனக்கு என் மனைவி வேண்டும். மக்களும் வேண்டும். வாழ்க்கையும் வேண்டும். கவிதையும் வேண்டும். எனக்குள் கவிதை சாவதற்கு முன்பு நான் செத்துவிட வேண்டும். எனக்குப் பிறகும் என் கவிதை வாழும். மற்றவர் நெஞ்சில் விதையாய், இசையாய், மழையாய்த் தங்கும். பகலிலும் பனிபெய்து எல்லாவற்றையும் பனித்துளியில் உறையவைக்கிற வாழ்க்கை நமக்கு வேண்டாம். வாழ்க்கைக்குள் இன்னும் ஈரமிருக்கிறது. ஈரத்தை நமக்குள் இழந்துவிட்ட பிறகு கதிரவன் காய்கிறான். வானம் வற்றிவிடுகிறது. மண் பாறையாகிறது.

வாழ்க்கை என்னை இப்படி வைத்துள்ளது என்பது ஒரு வகையில் சமாதானம். நான் என்ன செய்யமுடியும்? நானும்தான் அன்பு செய்கிறேன். ஒரு சமயம் என் மனைவியை, குழந்தைகளைக் கோபித்துக்

கொண்டாலும் இன்னொரு சமயம் அன்பு செய்கிறேன். பிறர்மீது எனக்கு அன்பு இல்லாமல் போகவில்லை. நண்பர்களுக்கு உதவி செய்கிறேன். அடிபட்டவர்களுக்கும் என்னால் இயன்றவரை உதவி செய்கிறேன். அலுவலகத்தில் நான் அதிகாரம் செய்வதில்லை. இப்படி எல்லாம் ஒருவர் தன்னைத்தானே தேற்றிக்கொள்ள முடியும். நானும் இசை கேட்கிறேன். கொஞ்சம் கவிதை எழுதுகிறேன். இயற்கை அழகை இரசிக்கிறேன்.

இந்த வாழ்வைச் சகித்துக் கொள்வதற்குக் கலைகள் எனக்குப் பயன் பயன்படுகின்றன. வாழ்க்கை என்னை நெருக்கடிகளோடு வைத்திருந் தாலும் இதன் காரணமாக நான் சீர்குலைந்து விடவில்லை. மற்றவர் களை நான் தண்டிக்கவில்லை. மனைவியைச் சிலசமயம் அதிகாரம் செய்கிறேன். அப்புறம் இதை உணர்ந்து கொள்கிறேன். இப்படி எல்லாம் ஒருவர் தன்னைத்தானே சமாதானம் செய்துகொள்ள முடியும்.

“பனி பெய்யும் பகல்” கவிதைத் தொகுப்பில் இடம் பெறும் கவிதைகள், ஒரு குறிப்பிட்ட சூழலுக்குள் மாட்டிக் கொண்டிருக்கிற ஒரு மனிதனின் கதையைச் சொல்லுகின்றன. நெருக்கடிகளோடு இவன் வாழ்ந்தாலும் இவன் அழிந்துவிடவில்லை. இவனுக்குள் இன்னும் வாழ்க்கை இருக்கிறது என்ற கதையைக் கவிதைகள் சொல்லுகின்றன.

இந்த மனிதனுக்குத் தான் அகப்பட்டுள்ள சூழலுக்கு வெளியில் உள்ள உலகம் தெரியவில்லை. அலுவலகத்திற்குள், தன் கிராமத்திற்குள், தன் குடும்பத்திற்குள் அகப்பட்டுள்ள மனிதன் இவன். கொஞ்சம் மழையில் இவன் சென்று வருவான். கொஞ்சம் இசை கேட்பான். இதற்கு மேல் உலகம் இவனுக்குத் தெரியாது. உண்மையில் தன் வாழ்வுக்குள் இவன் உணரும் அதிர்வுகள் இவனது வாழ்க்கை என்ற குறுகிய எல்லைக்குள்ளிருந்து எழுந்தவை அல்ல. இவன் வாழும் உலகமே இப்பொழுது அதிர்ந்து கொண்டிருக்கிறது. ஒரு விரிந்த வரலாற்றுச் சூழலுக்குள், சமூகச் சூழலுக்குள் தான் இருப்பதை இவன் அறியமாட்டான். இவன் தனக்குள் உணரும் அதிர்வுகள் எங்கிருந்தோ புறப்பட்டவை.

தன் வாழ்க்கைக்குள்மட்டுமே முடங்கிவிட்ட இவனுக்கு அதிர்வுகள் எங்கிருந்து புறப்படுகின்றன? இவற்றுக்கான காரணங்கள் என்ன

என்றெல்லாம் தெரியாது. விதி என்று சில சமயம் இவன் நொந்து கொள்ளலாம். இவனுக்கு அரைகுறையாகத் தெரிந்த சமூக அறிவு வாழ்க்கை இவ்வாறு தன்னை வைத்திருக்கிறது. இதற்கு நான் மட்டுமே காரணம் அல்ல என்ற அரைகுறையான புரிதலைத் தந்திருக்கிறதே ஒழிய விரிவான, ஆழமான சரியான புரிதலைத் தரவில்லை. இந்த விரிவான அறிவை இவனுக்குக் கல்வி தரவில்லை: பள்ளி அல்லது கல்லூரிக்கு வெளியே இவன் எதையும் கற்கவில்லை.

தன்னையும் தன்னைச் சார்ந்துள்ள சமூகத்தையும் மாற்றியமைப்பதன் மூலம்தான் தன்னிடம் நிதானம் வலுப்பெறும்; பார்வை விரிவடையும். அவ்வப்பொழுது வரும் இன்பங்கள் அல்லது துன்பங்களிலேயே தன் வாழ்க்கை முடிவடைந்துவிடும் என்றெல்லாம் இவன் கருத வேண்டிய தில்லை. தன் வாழ்வின் எல்லைகளை இவனால் விரிவுபடுத்திக் கொள்ள இயலும். தன்னளவில் உலகம் முடிவடைந்துவிடவில்லை. தனக்கு நெருக்கடிகள் அல்லது தண்டனைகள் தருபவர்கள் வெளி உலகில் உள்ளனர். தன்னை மட்டும் அல்லாமல் கோடிக்கணக்கான மக்களையும் இவர்கள்தான் தம் ஆதிக்க வலைகளுக்குள் அகப்படுத்தி வைத்திருக்கின்றனர். இதுபற்றி உண்மை அறியாத நிலையில் நம் குறுகிய தேவைகளுக்காக நமக்குக் கீழ் உள்ளவர்கள்மீது அதிகாரம் செய்கிறோம். நம்மிடமிருந்து உணவையோ, உடையையோ எடுத்துக் கொள்பவனைக் குற்றம் சாட்டுகிறோம். குழந்தைகளின் மனத்தைக்கூட நாம் குறுக்கிவிடுகிறோம். நம் வாழ்க்கையே அழகற்றுப் போய்விட்டது என்று நம்மை நாமே நொந்து கொள்கிறோம். இரண்டொரு கவிதை களை எழுதியதற்காக நாம் பெருமைப்பட்டுக் கொள்கிறோம். வாழ்வையே ஒரு கவிதையாக, ஒரு காவியமாகப் படைத்துக்கொள்ள இயலும் என்பதை நாம் புரிந்துகொள்ளவில்லை.

இயேசுவோ, புத்தரோ நமக்கு அந்நியமானவர்கள் இல்லை. நமக் குள்ளிருந்து நம்மைத் தகர்த்துக் கொண்டு வெளிக்கிளம்பியவர்கள் இவர்கள். இவர்களுக்கு மரணமில்லை. இவர்களைப் போல நாமும் வாழமுடியும். பறவைகளோடு பறவைகளாக, கடல் அலைகளோடு அலைகளாக நாமும் இயங்கமுடியும். கவிதைகளோடு இறுதிவரை நாம் வாழமுடியும். எல்லா உயிர்களையும் நம்மால் நேசிக்க முடியும்.

காக்கைகளோடு நமக்கு என்ன வெறுப்பு? இருள் எங்கிருந்து நம்மை வந்து பற்றிக்கொள்ள இயலும்? இருளுக்குள் இருந்தும் ஒளியை நம்மால் உற்பத்தி செய்ய இயலும். நட்சத்திரங்கள் நம்மை ஏன் வேவு பார்க்க வேண்டும்? நட்சத்திரங்களோடு நாமும் உரையாட முடியும்.

வாழ்க்கை என்னை இப்படி வைத்திருக்கிறது என்பவன் தன் எல்லைக்குள் முடங்கிப் போனவன். இவனுக்குத் தெரிந்த சமூக அறிவு அரைகுறையான அறிவு. இந்த அறிவைக் கொண்டு தன்னைத்தானே இவன் ஏமாற்றிக் கொள்ள வேண்டியதில்லை. தனக்குள்ளும் வெளியிலும் இவன் தேடிச் செல்ல இயலுமானால் வரலாற்றினுள்ளும், பிரபஞ்ச இயக்கத்தினுள்ளும் தன்னை இவன் காணமுடியும். இவனுக்குள் காவியங்கள் இருக்கின்றன. கவிதை எனத் தொடங்கி, காவியங்களிலும் இவன் தன்னைக் காணமுடியும், தன்னைப் படைத்துக் கொள்ள இயலும்.

கவிதையை வாழ்க்கை பற்றிய திறனாய்வென்று மேத்யூ ஆர்னால்டும், கவிஞர்கள் உலகிற்கு நீதி வகுப்பவர்கள் என்று ஷெல்லியும் கூறியுள்ளதை இலக்கியத் திறனாய்வு பற்றிய நூல்களில் நாம் படித்திருக்கிறோம். தமிழ்க் கவிஞர்களும் அன்றும் சரி, இன்றும் சரி இந்தக் கடமையைத் தொடர்ந்து செய்து வருகிறார்கள். தமிழன்பனும் நம் கால வாழ்க்கை பற்றிய திறனாய்வுகளைக் கூர்மையாக முன் வைக்கிறார்.

## *விடி வெள்ளி*

“பனி பெய்யும் பகல்” தொகுப்பிலிருந்து இரண்டு கவிதைகளை இங்குக் குறிப்பிடலாம். “விடி வெள்ளி” என்பது ஒரு கவிதை. தமிழன்பனின் கவித்துவச் செறிவு மிக்க கவிதைகளில் இதுவும் ஒன்று. விடிகாலைப்பொழுதில் கிழக்கு வானில் தோன்றுகிற விடிவெள்ளியை, விடிவெள்ளியின் அழகை யாரும் காணவில்லை என்கிறார் கவிஞர். உறக்கத்தில் இருந்து விழித்துக்கொள்ளாத காமுகர்கள் காணமாட்டார்கள். இன்னும் யார் யாரோ வானத்தின் அழகை, காலைக் கதிரவனின் அழகைக் காணமாட்டார்கள் என்பதெல்லாம் உண்மைதான். காலையில் அவசர அவசரமாக நடைபழகும் வயது முதிர்ந்தவர்கள் காணமாட்டார்கள். அவசர அவசரமாக வேலைக்கு விரைந்து செல்லும் உழைப்பாளிகள்

காணமாட்டார்கள். விடிவெள்ளி இவர்களை எல்லாம் பார்த்துக் கொண்டிருக்கிறது. விடிவெள்ளிக்குள்ளும் ஒரு ஏக்கம் இருக்கலாம். தன்னைப் பார்க்காமல் தன் ஒளியின் அழகில் ஒரு கணம் தன் மனத்தைப் பறிகொடுக்காமல் இவர்கள் இருக்கிறார்களே என்றுகூட விடிவெள்ளி கவலைப்படலாம். தனியே இருந்து தவிக்கிறது விடிவெள்ளி. இத்தகைய உணர்வைக் கவிஞர் நமக்குள் ஏற்றுகிறார்.

இத்தகைய சித்திரிப்பின் மூலம் கவிஞர் என்ன சொல்ல விரும்பு கிறார்? இவர்கள் நகரத்து மக்கள். நகர வாழ்வில் தம்மை இழந்தவாகள். இவர்களுக்கு இயற்கை இரசனை இல்லை. ஒருவேளை விடிவெள்ளியை அடிக்கடி பார்த்ததனால்கூட இவர்கள் இரசனை மந்தப்பட்டிருக்கலாம். விடிவெள்ளி மட்டுமல்லாமல் வானம்கூட இவர்களுக்கு மிகை. நட்சத் திரங்கள் இவர்களுக்குத் தேவையில்லை. இத்தனை பெரிய கடல் எதற்குத் தேவை என்று இவர்கள் கேட்கலாம். இதேபோல இவர்கள் தமக்குள் எத்தனையோ கேள்விகளோடு இருக்கக்கூடும். உயிர்வாழ்க்கை தவிர வேறு வகை வாழ்க்கையை இவர்கள் அறியாதவர்கள். இவர்கள் தமக்குள் காய்ந்து போனவர்கள்.

இதைச் சொல்வதற்குத் தமிழன்பன் கவிதையில் அங்கத உணர்வு பயன்பட்டிருக்கிறது. இந்த மக்களின் வாழ்க்கை பற்றிய திறனாய்வைக் கவிஞர் தமிழன்பன் கூர்மையாகவே வெளிப்படுத்தி இருக்கிறார்.

ஆனால் நமக்கு இது போதவில்லை. நமக்குள் ஏதோ நெருடுகிறது. விடிவெள்ளியை ஆயிரம் முறை பார்த்தாலும் இலட்சம் முறை பார்த்தாலும் அதன் அழகு குறைவதாய்த் தோன்றவில்லை. மனிதர்கள் என்னதான் நகரத்தில் வாழ்க்கைச் சூழலுக்குள் சிக்கிக் கொண்டாலும் அழகிய மலர்களைப் பார்க்கும்போது, சிறு குழந்தையைப் பார்க்கும்போது, கடற் கரையில் அலைகளைப் பார்க்கும்போது, முழுநிலாவைப் பார்க்கும்போது, தென்றல் தம்மைத் தழுவும்போது, விண்மீன்களைப் பார்க்க நேரும்போது, கார்த்திகை அகல் விளக்கைப் பார்க்கும்போது ஒரு கணமேனும் தம்மை மறந்து, தம்மை இழந்து அவற்றோடு ஒன்றுகிறார்கள். இந்த ஒன்றிப்பு ஒரு கணம்தான் என்றபோதிலும் அவர்கள் உள்ளத்தை இந்த உணர்வு தொட்டு விடுகிறது.

இத்தகைய உணர்வை இவர்கள் ஒவ்வொரு நாளும் பல்வேறு சந்தர்ப்பங்களில் தமக்குள் கொள்ளாமல் இல்லை. இதே போலத்தான் ஒரு செயலை ஒழுங்காகச் செய்யும்பொழுது, நேர்மையாக நடந்து கொள்ளும்பொழுது இப்படி எத்தனையோ சந்தர்ப்பங்களில் அழகியல் உணர்வைப் பெறுகிறார்கள். அதன் பிறகு கொஞ்சம் இசை, அழகிய காட்சி என்றெல்லாம் தேடுகிறார்கள்.

இப்படிச் சொல்வதன் நோக்கம் என்ன என்பது குறித்தும் சிந்திக்க வேண்டுகிறோம். எத்தகைய நெருக்கடிச் சூழலிலும் மனிதர் தம்மை முற்றாக இழந்துவிடவில்லை. அவர்களுக்குள் மனித உணர்வுகள் இருக் கின்றன. அன்பு இருக்கிறது. அழகியல் உணர்வு இருக்கிறது. அற உணர்வு இருக்கிறது. இதை நாம் சுட்டிக் காட்ட வேண்டும். எதிர்மறை உணர்வோடு கவிதை எழுதும்போது மனிதனுக்குள் இன்னும் இருக் கிறது இந்த உணர்வு என்பதை நாம் ஒதுக்கிவிடுகிறோம். எதிர்மறை உணர்வு மேலோங்கித் தெரியுமாறு கவிதைகளை எழுதிக் குவிக்கும் எந்த ஒரு கவிஞரும், அவ்வப்பொழுது இந்த எதிர்மறை உணர்விலிருந்து விலகி இவன் இன்னும் மனிதனாகத்தான் இருக்கிறான், தன்னை இவன் இழந்துவிட விரும்பவில்லை என்பதைக் காணமுடியும்.

இன்னும் தம் மக்களிடம், தம் மனைவியிடம் தாய் தந்தையிடம் அன்பாகத்தான் இருக்கிறான். இந்த அன்பை இன்னும் தனக்குள் இறுக்கமாகப் பற்றிக் கொள்கிறான். இன்னும் பறவைகளை, வானத்தை நேசிக்கிறான் என்றெல்லாம் கவிதை படைக்கவும் இவர்கள் தவற வில்லை. இந்த உணர்வை இன்னும் விரிவுபடுத்தி, மனிதனின் உள்ளாழங்களில் இந்த உணர்வுதான் இன்னும் பெருமழையாய்க் கொட்டு கிறது என்பதைக் கவிஞர்கள் சொல்லவேண்டும்.

கவிஞர் தமிழன்பன் அவர்களிடம் இந்தப் பேருணர்வுக்குக் குறைவே இல்லை. எதிர்மறை உணர்விலேயே ஒருவர் ஆழ்ந்துவிட முடியாதே. ஒரு நிலையிலிருந்து அதன் எதிர் நிலைக்கும் பயணம் செய்தாக வேண்டும். வாழ்வுக்கும் எதிர்எதிர் துருவங்கள் உண்டு.

தமிழன்பன் கடவுளைப் பற்றி எழுதிய கவிதைகளை யாராவது ஒருசேரத் தொகுத்து ஆராயவேண்டும். கடவுளைப் பற்றி எழுதும் போது பெரும்பாலான சமயங்களில் எதிர்நிலைப் பார்வையையே இவர்

வெளிப்படுத்துகிறார். இவரிடம் பெரியாரின் நாத்திக வாதம் அழுத்தம் பெற்றிருக்கிறது என்பதை நம்மால் புரிந்துகொள்ள முடிகிறது.

நாத்திக வாதம் கடவுளை மறுக்கத்தான் செய்யும். ஆனால் கடவுளை, கடவுள் என்ற கருத்தாக்கத்தை நாத்திகவாதம் தம் ஆய்வுக்கு எடுத்துக் கொள்வதில்லை. ஒரு நாடகத்தில் இராவணனாக நடிப் பவனைக் கொடியவன் என்று நாம் வெறுப்பதில்லை. மனித வாழ்வினுள் எப்பொழுதோ க ட வு ள் வந்துவிட்டார். எத்தனையோ வடிவங்களில், எத்தனையோ பெயர்களில் எத்தனையோ கதைகளோடு கடவுள் வந்து விட்டார்.

கடவுளைப் பற்றிய இந்தக் கதைகளில், காவியங்களில், புராணங் களில் கடவுளும் ஒரு பாத்திரம். மனிதன் படைத்த பாத்திரம் தன்னுடைய குணங்களோடு, தன்னுடைய குறைகளோடு, தன் ஆசைகள் ஆர்வங்கள் முதலியவற்றோடு, தனது தேவைகள் பற்றிய உணர்வோடு மனிதன் படைத்திருக்கிற தன்னைப் போன்ற அல்லது தன்னிலிருந்தும் வேறுபட்ட இன்னொரு பாத்திரம், கடவுள். எந்த ஒரு தமிழ் இலக்கிய மாணவனும், தமிழ் இலக்கியத்திற்குள் வந்துவிட்ட கடவுளை ஒதுக்க முடியாது, வெறுக்கவும் முடியாது. வள்ளுவரையோ, இளங்கோ அடிகளையோ, கடவுள் தன் ஆதிக்கத்தினுள் கொண்டுவரவில்லை. கடவுளைக் கண்டு இவர்கள் அஞ்சவில்லை. கடவுளோடு இவர்கள் உரையாடினார்கள். கடவுளைத் திறனாய்வும் செய்தனர்.

திருமூலர் மற்றும் எத்தனையோ சித்தர்களும் கடவுளை மனித னுக்குள் வைத்துப் புரிந்துகொள்ளவே செய்தார்கள். கடவுளை வைத்து மனிதர்களை இவர்கள் மிரட்டவில்லை. கடவுள் அன்புமயமானவர். உயிர்களிடம் அன்பு செய்வதே இறைவனுக்குச் செய்யும் பணி.

சமூகத்தில் எப்பொழுதெல்லாம் உடைமைவாதிகளின் ஆதிக்கங்கள் மேலோங்குகின்றனவோ, அப்பொழுதெல்லாம் கடவுளை இவர்கள் கைப் பற்றிக் கொள்கிறார்கள். கடவுளை வைத்து மக்களை மிரட்டுகிறார்கள். மக்களுக்கு அறிவைத் தருவதற்குப் பதிலாக மக்களிடம் மூடநம்பிக்கை களை விதைக்கிறார்கள்.

ஆதிக்கங்கள் வலுத்து வருகின்றன என்பதை இத்தகைய மூட நம்பிக்கைகள், வழிபாடுகள், சடங்குகள் முதலியவை பெருகி வருவதைக்

கொண்டு நாம் புரிந்துகொள்ள முடியும். கடவுளை இவர்கள் வசப்படுத்திக் கொள்கிறார்கள் என்பதனாலேயே கடவுளை நாமும் வெறுக்க வேண்டிய தில்லை. இந்தக் கடவுளுக்கும் வரலாறுண்டு, வாழ்க்கை உண்டு. இந்தக் கடவுளுக்குள் அன்பு உண்டு. இந்தக் கடவுளுக்குள் உயிர்ப்பு உண்டு. இயற்கையின் பேரழகு உண்டு. இயற்கையின் விரிவு உண்டு. இந்தக் கடவுளை மதவாதிகளிடமிருந்து ஆதிக்கவாதிகளிடமிருந்து நம்மால் மீட்க முடியும்; இவரை மக்கள்மயப்படுத்த முடியும்.

பாரதிதாசன் சிலப்பதிகாரக் கதையைப் பகுத்தறிவு நோக்கில் மாற்றி எழுதி இருக்கிறார். இறுதிப் பகுதியில் கண்ணகியின் சிலையைச் சிற்பி செதுக்குகிறான். கலை உணர்வில் தோய்ந்தவன் அந்தச் சிற்பி. மக்களுக்கு அருள் வழங்கும் வடிவத்தில் கண்ணகி சிலையைப் படைக் கிறான். கண்ணகி தன் வலக்கையை உயர்த்தி மக்களுக்கு அருள் வழங்கு கிறாள். ஒரு பகுத்தறிவு வாதியாகவே பாரதிதாசன் தனக்குள்ளும் இருந்திருப்பார் என்றால் இத்தகைய ஒரு கண்ணகியை அவரால் படைத்திருக்க இயலாது. பாரதிதாசன் கடவுளை வெறுத்தாரா? சொல்ல முடியவில்லை. தமிழ் இலக்கியங்களைப் பெரியாரைப் போல அவரால் வசைபாட முடியாது.

குமரகுருபரர் கவிதையை அவர் பெரிதும் நேசித்தார். கம்பர் காவியத்தை பாரதிதாசன் எரிக்கமாட்டார். இந்தத் தொகுப்பில் உள்ள கடவுள் பற்றிய கவிதையை இப்பொழுது பார்க்கலாம்.

கடவுள் மண்ணுலகத்திற்கு வருகிறார். மேலுலகம் அவருக்கு எப்படியோ வெறுத்துவிட்டது. நல்லவர்களை எவ்வளவு காலம்தான் அவர் பார்த்துக் கொண்டிருப்பார். மண்ணுலகுக்கு வந்த கடவுள் ஒரு திரையரங்குக்குள் நுழைகிறார். அவருக்கு அடுத்த இருக்கையில் அமர்ந்திருப்பவன் சாத்தான். மண்ணுலகமும் மனிதர்களும் அவனுக்கு அத்துப்படி.

திரைப்படம் தொடங்குகிறது. கடவுளுக்குப் புரியவில்லை. சாத்தான் எல்லாவற்றையும் விளக்கிச் சொல்லுகிறான். திரையில் காமத்தைத் தூண்டும் நடனங்கள். என்னென்னவோ காட்சிகள். மெல்ல மெல்ல கடவுள் திரைப்படத்திற்கு வசப்படுகிறார். கடைசியில் சாத்தானிடம் சொல்லுகிறார். நாம் இருவரும் இடம் மாற்றிக் கொள்ளலாம் என்கிறார்.

மேலுலகத்திற்குச் சாத்தான் போய்விடலாம். இந்த மண்ணுலகில் கடவுள் இருந்துவிடுவார். இந்த மாற்றத்தை இருவரும் சேர்ந்து மது அருந்திக் கொண்டாடுகிறார்கள்.

முற்றிலும் எதிர்மறையான திறனாய்வு நோக்கில் எழுதப்பட்ட கவிதை இது. திரைப்படத்தைக் கவிஞர் விமர்சனம் செய்கிறார். காமக் காட்சி களே முன்னுக்கு வருகின்றன. இன்னும் எத்தனையோ விமர்சனங்கள். கடவுளும் தன்னை இழக்கிறார். அந்த அளவுக்குக் கடவுள் ஒரு ஏமாளி. சாத்தான் கெட்டிக்காரன். விவிலியக் கதை சொல்வதுபோல, சாத்தான் இனி தானாக மேலுலகத்தையும் ஆட்சி செய்யலாம். கவிதை நல்லதேனும் கருத்து நமக்கு உடன்பாடில்லை. இலக்கியம், சமயம், வரலாறு இவற்றுக்குள் வந்துவிட்ட கடவுளை, கடவுள் என்ற கருத்தாக்கத்தை, மனிதனை அவனுக்குள்ளிருந்து புரட்டிப் போடுவதற்கு ஒரு நெறியாகக் கடவுளை நாம் பயன்படுத்தலாம். கவிஞர்கள் இதைச் செய்யமுடியும்.

31

# மின்மினிக்காடு

கவிஞர் தமிழன்பனின் இன்னொரு குறுங்கவிதைத் தொகுப்பு ‘மின்மினிக்காடு.’ இந்த மின்மினிக் கவிதைகளைத் தச்சன் மரப் பலகையை இழைப்பு உளியில் செதுக்கும்பொழுது தெறித்து விழும் அழகிய சிராய்களைப் போன்றவை என்று விளக்குகிறார். சிராய்கள் சுருள் சுருளான வடிவில், தெறித்து விழும் அழகு அற்புதமானது. இளம் வயதில் நாம் இவற்றைக் கைந்நிறைய எடுத்து, கனம் தெரியாத அவற்றை உணர்வுக் கிளுகிளுப்போடு நாம் இரசித்து இருக்கிறோம். மரப்பலகையை இழைப்பதுதான் தச்சனுக்கு நோக்கம். தற்செயலாய்த் தெறிக்கின்றன சிராய்கள். சிராய்கள் தம்மளவில் அழகானவை. அவற்றுக்கு நாம் அழகு சேர்க்க வேண்டியதில்லை. இதைப்போலத்தான் கவிதைக்குத் தன் நெஞ்சைப் பறிகொடுத்த கவிஞனிடமிருந்து இப்படி மின்மினிக் கவிதைகள்

தெறிக்கின்றன. எப்பொழுதும் மின்மினி வடிவில்தான் கவிதைகள் நெஞ்சிலிருந்து வெளிப்படுகின்றன. அந்த மின்மினியை அடுப்பில் வைத்து ஊதி ஊதி நாம் நெருப்பாய், கனலாய் மாற்றவும் முடியும். இப்படி மாற்றுவதும் அவசியமில்லை. குறுந்தொகைக் கவிதைகள் தன்னளவில் வடிவ நேர்த்தி உடையவை. இவற்றை ஊதிப் பெருக்கினால் நற்றிணையாய், அகநானூறாய் விரிவடையும்வரை அழகிலும் விரிவு பெறுகின்றன. இதற்குமேல் ஊதினால் அப்புறம் ஒரே நடைத்தன்மை சேர்ந்து பத்துப்பாட்டுக்களாய் வடிவம் பெறலாம். இந்த வடிவில் கவித்துவம் சிறுத்துப்போகிறது. நெஞ்சில் தோன்றும் உணர்வின் முதல் விழிப்பைக் கவிதையில் எழுதுவதே நல்லது.

தமிழன்பனின் குறுங்கவிதைகள், அவற்றின் எளிய வடிவத்தில் நம்மைப் பெரிதும் கவர்கின்றன. 'மின்மினிக்காடு' என்ற இத்தொகுப்பில் 250 கவிதைகள் உள்ளன. கவிதை படிக்க வரும் மாணவர்களுக்கு இந்தத் தொகுப்பிலிருந்து அங்கங்கே சில கவிதைகளை எடுத்து, அவற்றை எழுதவைத்து, ஒவ்வொரு கவிதை குறித்தும் அவர்கள் தம் நெஞ்சில் என்னவெல்லாம் உணர்வலைகள் ஏற்படுகின்றன என்பதைச் சொல்ல வைப்பதன் மூலம் அவர்களுக்குள் கவிதை உணர்வை நாம் கிளறமுடியும்.

இவற்றிலிருந்து மிகத் தரமான இருபது கவிதைகளை இங்குத் தொகுத்துக் கொள்கிறேன். ஜென் சிந்தனைகளோடு சில கவிதைகள் இந்தத் தொகுப்பிலும் உள்ளன. ஒவ்வொரு கவிதையையும் இப்பொழுது நான் விளக்க வேண்டியதில்லை. எனக்குப் பிடித்த ஒரு தொகுப்பை மட்டும் இங்கு தருகிறேன்.

**வேர்களுக்கு**
**ஐயம் ஏற்படுமாறு**
**நடப்பது நல்லதில்லை**
**வெளியே வந்து**
**அவை**
**விசாரித்தால்**
**என்னாகும்? – 5**

**பறவைகள் உலகத்தில்**
**பணப் புழக்கம் வந்துவிட்டது**

கிளி,
கோவைப் பழம் வாங்கக்
கடைக்குப் போனது

குருவி,
நெல்மணி வாங்கச்
சந்தைக்குப் போனது
கடை கடையாய் ஏறி இறங்கியது
புறாக்கள், மைனாக்கள் எல்லாம்
பல்பொருள் அங்காடிகளில்
பேரம் பேசின;

குயில்
கூட்டுக்குத் திரும்பிப்
பணத்தைக்
கோபத்தோடு தூக்கி எறிந்தது
எங்குமே
பாட்டுக் கிடைக்கவில்லையாம். – 11

பணம் கொடுத்தாலும் குயிலுக்கான பாட்டு கிடைக்கவில்லை. கிளிக்குக் கோவைப் பழம் கிடைக்கவில்லை. குருவிக்கு நெல்மணி கிடைக்கவில்லை. புறாக்களுக்கும், மைனாக்களுக்கும் காசு கொடுத்துப் பொருள் வாங்க முடியவில்லை. இந்நிலையில் பறவைகளுக்குப் பணத்தால் எவற்றை வாங்க முடியும்? பணத்தால் கவிதை வாங்க முடியாது, பாடல் வாங்க முடியாது, குரலை வாங்க முடியாது. மனிதர்க்குப் பணம் பயன்படலாம்; பறவைகளுக்குப் பயன் இல்லை.

மனத்தை
எங்கிருந்து பூட்டுவது?
உள்ளே இருந்தா?
வெளியே இருந்தா?
என்று
கேட்டான் மாணவன்

**ஆசான் சொன்னார்**
**பூட்டுவது**
**நீ என்று நினைத்துக் கொண்டு**
**எங்கிருந்து**
**பூட்டினாலும் பயனில்லை. – 14**

மனத்தைத் திறந்து வைத்திருந்தால் போதும். மனத்தை அடக்க, பூட்ட நினைத்தால் அந்த நினைப்பே முன்வரும். பூட்டுவது அல்லது திறப்பது என்ற சிந்தனை நான் என்ற உணர்வோடு தொடர்புடையது. நான் என்ற முனைப்பு மனத்தைப் பூட்டவோ, திறக்கவோ தடையாகிவிடும். இது ஒரு 'ஜென்' வகைக் கவிதை. ஜென் மெய்யியல்தானே கவிதையாகும்.

**காம்புக்கு**
**வேறென்ன கவுரவம் வேண்டும்**
**தாங்கிக் கொண்டிருக்க**
**ஒரு**
**ரோஜாப்பூ இருந்தால் போதாதா? – 22**

ரோஜாப்பூவைத் தாங்கிக் கொண்டு இருப்பதே காம்புக்குப் போதும். தனக்குத் தனி கவுரவம் தேவை இல்லை. பரிசோ, விருதோ ஒரு கவிஞனுக்குத் தேவை இல்லை. கவிதையை அவன் தாங்கி இருப்பதே அவனுக்குப் பரிசு, கவுரவம். தாங்குவது ஒரு கனம் அல்ல. தாய்க்குத் தன் கர்ப்பம் ஒரு கவுரவம்.

**ஒரு**
**சிறகைத் தலையில் சூடி**
**அரசரானார்கள் நம் முன்னோர்கள்**
**நாமோ**
**தங்கத்தை மகுடமாய்ச் சூடி**
**அதற்கு அடிமையானோம்.**

தலையில் சூட்டப்படும் ஒரு சிறகு, பழங்காலத்தில் தலைவனுக்கு அடையாளம்; அதுவே பெருமை. அந்தத் தலைவனுக்குச் சொத்தில்லை, பிறரிடமிருந்து அபகரிக்கும் குணமில்லை. தங்கத்தில் கிரீடம் அணிபவன் தன் அதிகாரத்திற்காகப் பிறரிடமிருந்து பறிப்பவன். தங்கம் தனிச்

சொத்தின், சுரண்டலின் குறியீடு. சிறகின் அழகு தங்கத்திற்கு இல்லை. சிறகு பகட்டிக் கொள்ளாது. தங்கம் பகட்டும்.

**பாதை போடுவதும் இல்லை**
**பாதையை அழிப்பதும் இல்லை**
**பறவைகள் சொன்ன பாடம் – 50**

சுதந்தரமாய் வானத்தில் எங்கும் உலாவி வருவது பறவை. தனக்கென ஒரு பாதை போட்டுக்கொண்டு விதி வகுத்துக்கொண்டு அதிலேயே கட்டுண்டு கிடப்பதில்லை பறவை. பறவை அனுபவிக்கும் சுதந்தரம் மனிதனுக்கு இல்லை.

**ஒரு பறவைக் குஞ்சுக்குச்**
**சிறகு முளைக்கும் போது**
**பிரபஞ்சம்**
**இன்னும் கொஞ்சம்**
**விரிவடைகிறது. – 55**

பிரபஞ்சம் தொடர்ந்து விரிவடைகிறது என்பது ஒரு அறிவியல் உண்மை. ஒரு பறவைக்குச் சிறகு முளைக்கும்போது அந்தப் பறவையின் பறத்தலுக்காக இன்னும் தன்னை விரித்துக் கொள்கிறது பிரபஞ்சம். பிரபஞ்சத்திற்கு ஒரு பூரிப்பு. ஒரு தாய்போல ஒரு குஞ்சுக்காகத் தன்னை விரித்துக் கொள்கிறது பிரபஞ்சம்.

**பூமியின்**
**ஆழம் தெரியுமா என்று**
**வேரிடம் கேட்டேன்**
**தெரியாமலா**
**ஆகாயம் அருகில் என்று**
**சொன்னதே அதுதானே?**

மரத்தின் வேர்கள் பூமிக்குள் எந்த அளவு ஆழம் தேடிச் செல்கிறதோ அந்த அளவு வானத்தில் கிளைகள் உயர்ந்தும் விரிந்தும் செல்லும் (கிளைகளும் வேர்களும் தாயும் சேய்களும் போல). ஆகாயத்தைக் கிளைகளின்மூலம் உணர்வது வேர் ஆழத்துக்குச் செல்பவன் உயரவும்

செய்வான். பூமிக்கடியிலிருந்தாலும் ஆகாயத்தைத் தழுவும் சுகத்தை வேர்கள் அனுபவிக்க முடியும்.

**வேர்களிடம்**
**தெரிவிக்காமல்**
**பூக்களிலிருந்து**
**கவிதை**
**புறப்பட்டு வராது – 81**

கவிதைகளைப் பூக்கள் என்று நாம் சொல்லிவிடுகிறாம். ஆனால் வேர்கள் இல்லாமல் பூக்கள் இல்லை. வேர்கள்தான் பூக்களைப் படைக்கின்றன. பூக்களின் பொலிவுக்கு வேர்கள் காரணம். வேர்களும் அழகியவை. நடுத்தர வர்க்கத்தவனுக்குப் பூக்களின் அழகு மட்டும் தெரியும். உழைக்கும் வர்க்கத்தவனுக்கு வேர்களின் அழகு தெரியும். பூக்களைக் கொண்டாடுபவர்கள் அரைகுறைக் கவிஞர். பூக்களோடு வேர்களையும் நாம் கொண்டாடுவோம்.

**நீ ஏன்**
**காவியங்கள் எழுதாமல்**
**துண்டு துண்டாய்**
**எழுதிக் கொண்டிருக்கிறாய்**
**என்று கேட்கின்றனர் என்னை?**
**நான்**
**துண்டு துண்டாய்**
**எழுதிக் கொண்டிருப்பதே**
**காவியங்களைத்தான் என்று**
**ஏன் அவர்களால்**
**கண்டுகொள்ள முடியவில்லை? – 99**

மலரை மட்டும் இரசிப்பதோடு நாம் நின்றுவிட முடியாது. கிளைகள் இல்லாமல், வேரில்லாமல், மண்ணில்லாமல், நீரும் உரமும் இல்லாமல், அப்புறம் காற்றில்லாமல், வானமில்லாமல், கதிரவனில்லாமல் இந்தப் பூவுக்கு வாழ்வில்லை. எந்த ஒரு துண்டிற்குள்ளும் ஆழ்ந்து செல்லும்

பொழுது வானமும் வசப்படும். இப்படித்தான் ஒரு துளிக்குள் கடலைப் பார்க்க முடியும். இப்படித்தான் காவிய தரிசனம்.

**கடைசியாகக்**
**கண்ணகி வருந்தினாள்**
**ஒருவனைத் திருத்த முடியாமல்**
**ஊரையே எரித்து விட்டேனே? – 109**

கண்ணகி கதையை இன்னும் இன்னும் எத்தனையோ அர்த்தங்களில் தொடர்ந்து மறுவாசிப்புச் செய்கிறோம். இந்தக் கவிதையில் கண்ணகி தன் ஊரை எரித்ததற்காகத் தன்னைத்தானே நொந்து கொள்கிற கண்ணகி. இவள் நம் காலத்துப் பெண். கணவனைத்தான் திருத்தி யிருக்க வேண்டும் என்று கருதுபவள். ஊரை எரித்துத் தனக்கான ஒரு காவியத்தைப் படைத்துக் கொள்ள விரும்பவில்லை இவள்.

**பாடம்**
**புரியவில்லை என்றால்**
**புத்தகத்தை மூடிவை;**
**விளக்கை**
**அணைத்து விடாதே! – 120**

விளக்கிலிருந்து பரவுவது வெளிச்சம். பாடம் புரியவில்லை. அந்த அளவுக்குத் தனக்குள் இருள் படித்ததைப் பற்றிக் கொஞ்சம் சிந்தனை செய். உன்னை மூடிக்கொள்ளாதே. உன்னைத் திறந்து வைத்துக்கொள். பாடம் புரியும். வெளிச்சம் உனக்குள் விரியும். உனக்குள்ளே வெளிச்சம் இருக்கிறது. அதை உன்னால் கண்டு கொள்ள முடியும்.

**நூறு நூறு**
**பூக்களைத் திறந்த**
**சூரியன்,**
**ஒரு குழந்தை**
**கண்களைத் திறந்ததும்**
**சொக்கிப் போனான் – 125**

பூக்களைக் காட்டிலும் அழகியது குழந்தை. குழந்தையின் கண்கள் இன்னும் அழகியவை. நூறு நூறு பூக்களைக் காண்பதை விடக் குழந்தை தன் கண்ணை விரிப்பது பேரழகு. குழந்தையின் கண்களைத் திறக்கும் சூரியன் அந்த அழகில் சொக்கிப்போகிறான்.

பூமி
தனது
அர்த்தத்தை
முளைக்கும் விதைக்குள்
வைத்திருக்கிறது – 133

பூமி தன்னை முளைக்கும் விதையின் மூலம் வெளிப்படுத்திக் கொள்கிறது. பூமி தன்னைக் கொடுத்து, தன்னை இழந்து விதைக்குள் உயிர்ப்பாய் வெளிப்படுகிறது. பூமிக்கு வேறு என்ன வாழ்வு வேண்டும்? ஒரு தாய், தன் குழந்தையின் மூலமே தன்னை உயிர்ப்பித்துக் கொள் கிறாள். பூமி இப்படித்தான் தனக்குள் நிறைவு காண்கிறது. வித்துக்களை முளைப்பிக்காத பூமிக்கு ஏது மரியாதை?

மகளிர் கூந்தலுக்கு
மணம் உண்டு
ஒப்புக் கொண்டான்
நக்கீரன்
ஞானபீடப் பரிசைச்
சிவன் எடுத்துக் கொண்டு
சாகித்திய அகாதமிப் பரிசை
நக்கீரனுக்கு
ஏற்பாடு செய்துவிட்டான். – 138

நக்கீரன் சொன்னது ஒரு பொய்; இதை அங்கீகரித்தவன் உயர்ந்த இடத்திலுள்ள சிவபெருமான். பொய்யனுக்குச் சாகித்திய அகாதமிப் பரிசு. பொய்யை அங்கீகரித்தவனுக்கு ஞானபீடப் பரிசு. ஏழைக்கு ஒரு சிறிய பரிசு. பெரிய மனிதனுக்குப் பெரிய பரிசு. எல்லோரும் கள்ளர்கள். கூட்டுச் சேர்ந்து கொள்ளையடிக்கின்றனர். பரிசுகள் பற்றி விமர்சனம்.

**வேர்களிடம்**
**பூமி**
**என்ன சொல்லிக் கொண்டிருக்கிறது**
**என்பது**
**பூக்களைக் கேட்டால் தெரியும்! – 151**

வேர்கள் பூமிக்குள் ஆழச்செல்கின்றன. பூமியோடு ஒன்றி இருக்கின்றன. வேர்களோடு பூமி பேசுகின்றது. இந்தப் பேச்சுகள்தான் பூக்களாய் வெளிப்படுகின்றன. பூமியின் அழகும், வேர்களில் வெளிப்படுவது பூக்களின் மூலம். மண்ணின் சாரம் பூக்களுக்குள்.

**பாறை**
**சிலையாவது**
**எந்தத் தருணத்தில் என் ஆசானே?**
**நீ**
**சிலையாகும் தருணத்தில்தான்! – 162**

பாறையை ஒரு சிற்பி உளி கொண்டு செதுக்குகிறான். சிலை ஒன்றை வடிக்க விரும்புகிறான். ஒரே கவனத்தில், மனத்தை வேறு எங்கும் சிதறவிடாமல் தனக்குள்ளும் தானே சிலையாகிச் சிலையை வடிக்கிறான். தானும் சிலையும் வேறு வேறு அல்ல. தனக்குள் இருக்கும் சிலை புறத்தில் வெளிப்படுகிறது. ஆசான் மாணவனுக்கு இதைக் கற்பிக்கிறார். ஜென் கவிதை.

**அரும்புகள்**
**திறக்கப்படுவது**
**உள்ளே இருந்தா?**
**வெளியே இருந்தா?**
**எங்கிருந்தும் இல்லை**
**அவை**
**தாமே திறந்து கொள்கின்றன – 188**

மீண்டும் ஒரு ஜென் கவிதை. அரும்புகளை வெளியிலிருந்தோ உள்ளிருந்தோ நம் விரலால் கருவியால் திறக்க நினைத்தால் அது

அரும்பாக இருக்காது. சிதைந்து விடும். அரும்பைத் திறக்க முயற்சி செய்யாதே. மனத்தைத் திறந்து கொண்டு பார்த்துக் கொண்டு இரு. அது தானே மலரும். நீயும் சேர்ந்து மலர்வாய்.

**கோவலனின்**
**ஒவ்வொரு நினைவு நாளின்போதும்**
**துறவியான மாதவி**
**மனத்திற்குள் தனது**
**வீணையைத் துடைத்து வைத்தாள் – 192**

மாதவி துறவிதான் என்ற போதிலும் அவளால் கோவலனை எப்படி மறக்க முடியும்? அவன் பிறந்த நாள் அன்றைக்குத் தனக்குள் அவள் தன் துறவைக் களைந்து கொள்கிறாள். மீண்டும் வீணையைத் தன் கைகளில் எடுத்துக் கொள்கிறாள். அவனோடு சேர்ந்து பாட விரும்புகிறாள். இறுதிவரை மாதவி இப்படித்தான். தனக்குள் மாதவி செத்தும் பிழைத்தும் இருப்பாள். இளங்கோ கற்பனை செய்யாத மாதவி இவள். நம் காலத்தில் வைத்து மாதவியை இப்படியும் வாசிக்கிறோம்.

**கயிறு**
**அறுந்த போதுதான்**
**பட்டத்திற்குத் தெரிந்தது**
**உயரம்**
**தன்னுடையதன்று**
**என்று – 194**

நாமும் உயரப் பறக்கிறோம்; உயர்வில் இருக்கிறோம். என்னை நானேதான் உயர்த்திக் கொண்டதாக நினைக்கிறேன். என்னை உயர்த்தியவர் யார் யாரோ! எத்தனை பேரோ! என்னை நான்தான் உயர்த்திக் கொண்டேன் என்று நினைக்கின்றபோதே கயிறு அறுந்து வீழ்ந்து விடுகிறேன். என்னை உயர்த்த எத்தனை காலம், எத்தனை பேர் பாடுபட்டு இருக்கின்றனர்.

**எல்லாவற்றையும்**
**எடுத்தெறி;**
**எல்லாவற்றையும்**

எங்கிருந்து
எடுத்தெறிந்தாயோ
அதையும்
எடுத்தெறி – 199

இது ஒரு அசலான ஜென் கவிதை. எனக்குள் முற்றான விடுதலை வேண்டும். என்னை நானே வெளியில் எடுத்தெறிந்து கொள்ளவேண்டும். எனக்குள் எதையும் வைத்துக் கொள்ள வேண்டியதில்லை. நான் என்பது அறவே அற்ற நிலையில்தான் முற்றாக விடுதலை. எடுத்தெறிவது நானாக இருக்கும்வரை விடுதலை முழுமை அடையாது. நான் என்பது அற்ற நிலையில் முற்றிலும் விடுதலை.

பட்டாம் பூச்சிகளோடு
பேசவேண்டுமானால்
நம்மிடமும் கொஞ்சமாவது
நல்ல நிறங்கள்
இருக்க வேண்டும் – 211

எனக்குள் கவிதை இல்லையென்றால் இன்னொருவரின் கவிதையை எப்படி என்னால் இரசிக்க முடியும்? எனக்குள் இசையில்லையென்றால் வீணையில் எப்படி என்னால் இசைக்க முடியும்? எனக்குள் அன்பு இல்லையென்றால் உலகை எவ்வாறு நேசிக்க முடியும்? பட்டாம் பூச்சியை இரசிக்க எனக்குள்ளும் வண்ணங்கள் இருக்க வேண்டும். பறவையை இரசிக்க நானும் உடன் பறக்க வேண்டும்.

என்
கவிதைக்கு
என்ன அர்த்தம்
என்று
கேட்கிறார்கள்
கவிதையாய்
இருப்பதுதான் அதற்கு அர்த்தம்
சூரியனுக்கு அர்த்தம் என்ன
அது
சூரியனாய் இருப்பது தவிர? – 214

கவிதைக்கு என்ன அர்த்தம் என்று கேட்க அதைக் கவிஞன் சொல்ல எனக்குள் புரிந்து கொள்ள முடியாது. எனக்குள்ளும் கவிதை இருக்க வேண்டும். சூரியனைப் புரிந்து கொள்ள எனக்குள் ஒளி வேண்டும். கவிதைக்கு அர்த்தம் கவிதையாக இருப்பதுதான். ஒரு தாயைப் புரிந்து கொள்ளத் தாயாய் இருக்க வேண்டும்.

திசைகளைக்
குலுக்கிப் போட்டு, நான்கு
ஞானிகள், ஆளுக்கொன்றாய்
எடுத்துக் கொண்டனர்.
ஆனால்
எதன் வடக்கு இது?
எதன் தெற்கு இது?
எதன் மேற்கு இது?
எதன் கிழக்கு இது?
புரியவில்லை.
ஐந்தாவதாக ஒரு ஞானி
வந்தான்
திசைகளெல்லாம்
தீர்ந்துவிட்டன – உனக் கொன்றும்
இல்லையே
என்றனர் நான்கு ஞானிகளும்
'பரவாயில்லை
திசைகளுக்கு வெளியே நான்
இருக்கிறேன்' என்றான் அவன் – 221

நான்கு ஞானிகள் ஒவ்வொரு திசையைப் பிற திசைகளிலிருந்து பிரித்து எடுத்துக் கொண்ட நிலையில் தன் கையில் இருப்பது எந்தத் திசை என்று அவருக்கே தெரியாமல் குழப்பம் வந்தால், இவர்கள் ஞானிகள் அல்லர். திசைகளுக்குள் இருப்பவனும் ஞானி ஆகமாட்டான். இருப்புக்கு, எல்லைகளுக்கு அப்பால் இருப்பவனே ஞானி. இதுவும் ஜென் கவிதை.

வரலாறு
தூங்குகிற நேரம் பார்த்து

அதன் பக்கங்களை
அரசர்கள் கைப்பற்றி விடுகிறார்கள்
மக்கள்
தூங்குகிற நேரத்தில் அது
பாடமாக வைக்கப்பட்டது - 250

மக்களிடமிருந்து வரலாற்றை மன்னர்கள் கைப்பற்றிக் கொண்டார்கள். வரலாற்றுக்குத் தன்னையே அதிபதி ஆக்கிக்கொண்டார்கள். வரலாற்றின் இயக்கத்திற்கு மக்கள்தான் காரணமாகின்றனர். பாடம் என்று கற்பிக்கப்படும் வரலாறு இதை மாணவர்களுக்கு உணர்த்துவது இல்லை. இப்படித்தான் வரலாற்றை வெறும் சுமையாக – பாடமாக நாம் மாற்றி விடுகிறோம். வரலாறு பற்றிச் சிறப்பான பார்வை.

## 32

## *வணக்கம், வள்ளுவ !*

'வணக்கம் வள்ளுவ' என்ற இந்தத் தொகுப்பிலுள்ள 22 கவிதைகளில், வள்ளுவரை நம் காலத்திற்கு ஒத்த முறையில் கவிஞர் தமிழன்பன் விளக்குவதோடு, விமர்சனமும் செய்கிறார். பரிமேலழகர், நச்சர், பரிதி, மணக்குடவர் முதலியவர்கள் அவரவர் காலத்திற்கு ஒத்த முறையிலும், தம் கருத்தியலுக்கு ஒத்த முறையிலும் வள்ளுவர் நூலுக்கு உரை எழுதினர். இவர்களுக்குப் பின்னரும் நம் காலத்தில் நவீன காலத்திற்கு ஒத்த முறையில் வள்ளுவருக்குப் பகுத்தறிவு மற்றும் மார்க்சிய நோக்கிலும் விளக்கம் தருகின்றனர். இவற்றையும் கடந்து அண்மைக் காலத்தில் பெண்ணிய நோக்கிலும் தலித்திய நோக்கிலும்கூட வள்ளுவர் பார்க்கப்படுகிறார்.

இலக்கியம் பற்றிய நம் காலத்துப் புதிய அணுகுமுறைகளுக்கு ஒத்த முறையில் வள்ளுவர் இப்படிக் காலந்தோறும் மாறுபட்ட முறையில் விளக்கம் தருவதை இன்று நம்மால் புரிந்துகொள்ள இயலும். ஆயிரம் சாவிகளைக் கொண்டு திறக்கக்கூடிய அதிசயப் பூட்டு உன் கவிதை என்று வள்ளுவரை நோக்கிக் கவிஞர் தமிழன்பனும் வியந்துரைக்கிறார்.

தமிழன்பனும்கூட வள்ளுவருக்குச் சில கூறுகளில் விளக்கம் தருவதோடு விமர்சனமும் செய்கிறார். இவைப் பற்றிப் பிறகு பார்ப்போம்.

பேராசிரியர் சிவத்தம்பி அவர்கள் தம் முன்னுரையில் மரபுக் கவிதை முறையிலிருந்து தமிழ்க் கவிதை எவ்வாறு வேறுபட்டது என்பதையும் புதுக்கவிதை முறையில் தமிழன்பனின் ஈடுபாட்டையும் சிறப்பித்துச் சொல்லுகிறார். புதுக் கவிதையில் பெரும்பாலும் மேலோங்கித் தெரிவது அங்கதப் பார்வை. "நடை மறந்த நதியும் திசை மாறிய ஓடையும்" என்ற தொகுப்பில் தமிழுக்கு இன்று நேர்ந்திருக்கிற கேடுபற்றிக் குறிப்பிடுகிற தமிழன்பன் "தொல்காப்பியர் தமிழகத்திற்கு வந்தார் ஆங்கிலப் பள்ளியில் ஐந்தாம் வகுப்பில் தோல்வியடைந்தார்" என்று எழுதிவிட்டு "வள்ளுவரும் ஆங்கிலப் பள்ளியில் அரைகுறையாகக் கற்ற பிறகு தறிக் குழிக்குப் போய்ச் சேர்ந்தார்" என்று எழுதுகிறார். வள்ளுவர் நெசவுத் தொழிலில் ஈடுபட்டிருந்தார் என்பது ஒரு பழங்கதை. இந்தக் கதையை ஐம்பதாண்டுகளுக்கு முன்பே நாம் ஒதுக்கிவிட்டோம். எனினும் தமிழன்பன் கவிதையில் இந்தக் கதை நல்ல பொருளில் பயன்படுத்தப் படுகிறது. தமிழன்பன் மட்டுமல்லாமல், புதுக்கவிஞர்களில் பெரும்பாலானோர் பழைய இலக்கியக் கதைகளைத் தொன்மம் என்ற முறையில் அங்கத உணர்வோடு புதுக் கவிதை ஆக்கியுள்ளனர்.

கவிஞர் தமிழன்பனைப் பொருத்தவரை இந்தத் தொகுப்பில் எந்த ஓர் இடத்திலும் வள்ளுவரைத் தன் அங்கத உணர்வுக்குப் பலி கொடுக்க வில்லை. மாறாக வள்ளுவரோடு தான் மாறுபடும் இடங்களில் உன்னை நான் எப்படிக் கேள்வி கேட்பேன் என்று கூறுவதோடு, விலை மகளிர் பற்றிய தனது ஆணியப் பார்வைக்காக வள்ளுவர் வருத்தப்படுவதாகவும் குறிப்பிடுகிறார். யாசிப்பவரின் முகம் நோக்கி அவரது வறுமையை அவர் உரைப்பதற்கு முன்பு தானே கொடுக்கும் செல்வரிடம் இரப்பதும் கூட ஓர் அழகு என்று குறிப்பிடும் வள்ளுவரோடு தமிழன்பன் முரண் படுகிறார். அத்துடன் வள்ளுவரது நல்லெண்ணத்தையும் புரிந்து கொண்டு பாராட்டுகிறார். பின் எந்த வகையில் தமிழன்பனின் கவிதை புதுக்கவிதையாகிறது என்ற கேள்விக்கு, நம் காலத்துக்கு ஒத்த முறையில் வள்ளுவருக்குப் புதுக் கவிதை நோக்கில் தமிழன்பன் விளக்கம் தருகிறார் என்ற விடையை ஒரு பதிலாக நாம் முன் வைக்கலாம்.

இன்னொரு வகையிலும் ஒரு விளக்கம் தரலாம் என்று தோன்று கிறது. வள்ளுவரின் வாழ்க்கை குறித்துக் கடந்த இரண்டு நூற்றாண்டு களில் என்னென்னவோ கதைகள் சொல்லப்பட்டன. இந்தக் கதைகளில் ஒன்றைக்கூடத் தமிழன்பன் எடுத்துக் கொள்ளவில்லை. வள்ளுவரின் மனைவி என்று சொல்லப்படுகிற வாசுகி என்ற பெயரை மட்டும் ஓரிடத்தில் குறிப்பிடுகிறார். வள்ளுவரும் ஒரு குடும்பத்தில் பிறந்து வாழ்ந்திருப்பார். அவருக்குத் தாயும் மனைவியும் குழந்தைகளும் இருந்திருக்கக்கூடும். தாய் இறந்த இரண்டாம் ஆண்டின்போது வள்ளுவரின் நினைவு என்ற முறையில் ஒரு கவிதை செய்திருக்கிறார். வள்ளுவரின் குழந்தைகள் பற்றிக் கற்பனை செய்கிறார். இன்னும் சில தமிழன்பனின் கற்பனையிலிருந்து உருவாகின்றன.

வள்ளுவரின் குறள் வெண்பா முதலடியில் நான்கு சீர்களையும், இரண்டாவது அடியில் மூன்று சீர்களைக் கொண்டு வெண்பா இலக்கணத் துக்கு ஒத்த முறையில் கச்சிதமாக முடிவு பெறுகிறது. முதலடிக்கு ஒத்த முறையில் இரண்டாவது அடியிலும் நான்கு சீர் இருந்தால் என்ன என்று யாரும் கேள்வி கேட்பதில்லை. எட்டாவது சீருக்கு வள்ளுவர் இடம் தரவில்லை என்பதோடு கவிதைக்குள் வராத எட்டாவது சீரின் துயரம் பற்றிக் கவிஞர் விரித்துரைக்கிறார். வள்ளுவர் தம் மனத்தில் சிந்தித்ததை எழுத்தாணி வெண்பாவாய் எழுதியது. வள்ளுவரோடு பழகிப் பழகி எழுத்தாணிக்கும் படைப்புத்திறன் வந்திருக்க வேண்டும். அந்த எழுத்தாணி இப்பொழுது தனக்குக் கிடைத்தால் வள்ளுவரின் நெஞ்சில் தொடரும் சிந்தனைகளை இன்று தன்னால் எழுத முடியும் என்று கவிஞர் உணர்வதோடு, அந்த எழுத்தாணி எங்கே போயிருக்க முடியும் என்றும் தனக்குள் கேட்டுக் கொள்கிறார். வள்ளுவர் எழுதி முடித்த முப்பாலுக்குள் சென்று எழுத்தாணி தன்னைக் கரைத்துக் கொண்டிருக்க வேண்டும் என்று சொல்லி முடிக்கிறார்.

வள்ளுவரின் முதற் குறளில், அகரம் எழுத்துகளுக்கெல்லாம் முதல் என்பதைப் போல இந்த உலகத்திற்கும், உயிர்களுக்கெல்லாம் ஆதியாய் அமைபவன் பகவன் / இறைவன் என்று கூறுகிறார். இடையில் உவம உருபு இல்லை. அகரத்திற்கு எத்தனை பெருமையை வள்ளுவர் தந்திருக்கிறார் என்று கவிஞர் வியக்கிறார். ஆதி பகவனுக்கு வேறு எதை உவமையாய்ச் சொல்லமுடியும்?

மேலும் ஒன்று: இறைவன் உயிர்களினுள்ளும் ஊடுருவி இருப்பதைப் போல அகரம் என்ற ஒலி தமிழின் எல்லா எழுத்துகளினுள்ளும் ஊடுருவி இருக்கிறது என்று இலக்கணக்காரர் சொன்னதை வைத்துத் தமிழன்பன் வியந்து கூறுகிறார். கவிஞர் தமிழன்பனுக்கு இறை நம்பிக்கை இல்லை. அத்துடன் எல்லா எழுத்துகளினுள்ளும் அகரம் இருக்கிறது என்பதை ஓர் உண்மை என நாம் ஏற்க வேண்டியதும் இல்லை. கவிதைக்கெனத் தோன்றிய கற்பனை இங்கு நம்மைத் தவிக்கவிடுகிறது.

இன்னும் ஒன்றை இங்குச் சொல்லலாம். வள்ளுவர் வீடு தேடி விலை மகளிர் இருவர் வருகின்றனர். திண்ணையில் உட்காரலாமா? திண்ணை தீட்டுப்படுமா? என்று அவர்கள் கேட்டுவிட்டு வள்ளுவர் அனுமதியோடு திண்ணையில் உட்காருகின்றனர். ஆடவர்களின் காமம் காரணமாகத் தங்கள் இனத்தவர் காயம் பட்டதைச் சொல்லுகின்றனர். வரைவின் மகளிரைக் காயும் வள்ளுவர் இவர்களைத் தேடிச் செல்லும் ஆண்களை ஏன் காயவில்லை என்று அவர்கள் கேட்கின்றனர். இப்படித் தொழில் செய்து நாங்கள் என்ன செல்வத்தைச் சேர்த்துக் கொண்டோம்? எந்தக் குபேரன் வீட்டிற்கு எங்கள் பெண்களைக் கட்டிக் கொடுத் தோம் என்றெல்லாம் கேட்கின்றனர். தாங்கள் மாயமகளிர் அல்லர். மாயும் மகளிர் என்று நீங்கள் எழுதியிருக்க வேண்டும். தளையும் தட்டுப்படாது என்ற அற உணர்வோடும், இலக்கண உணர்வோடும் பேசிவிட்டு அவர்கள் விடைபெற்றுச் செல்கின்றனர்.

இப்படித் தமிழன்பன் மகளிருக்கான நம் காலத்தின் நியாயத்தை முன்வைக்கிறார். வள்ளுவருக்குப் புது விளக்கம் தருவதென்பதை உரை நடையிலும் செய்ய முடியும். வள்ளுவரை விமர்சனம் செய்வதையும் உரை நடையில் செய்திருக்க முடியும். தானும் ஒரு கவிஞர் என்ற முறையில் வள்ளுவருக்குள் அவர் தனக்குள் தூண்டிய கவிதை உணர்வோடு தமிழன்பன் செய்யும் பயணம் என்ன என்ற கேள்வி நமக்குள் எழுகிறது. இந்தக் கேள்வியோடு தமிழன்பன் கவிதைக்குள் நாம் கொஞ்சம் செல்ல முடியும்.

தமிழன்பனின் ஒரு சில கவிதைகளை இங்குக் குறிப்பிடலாம். ''ஈத்துவக்கும் இன்பம்'' என்ற தலைப்பில் ஒரு கவிதை. கவிதையிலிருந்து சில வரிகள். ''வான மழையின் வயிற்றில் பிறந்தவன் தானம்

5.19.

கொடுப்பதில்லை, தன்னையே கொடுக்கிறான்." "கடலின் மூத்த சகோதரன் அவன், வாழ்க்கையின் கரைகளில் அதிரும் கவலைக் குரல்களைக் கண்ணீரோடு கேட்கிறான்." "காற்றுக்குத் தெரியாமல் காடுகள் அழுதால் கூடக் கண்டுபிடித்து விடுகிறான்." "அலைகளுக்குத் தெரியாமல் நதிகள் புலம்பினாலும் நான் இல்லையா? என்று கேட்டு அருகில் ஓடுகிறான்." "சுயநலத்தால் சூரியன் அலைகளை அலமாரிக்குள் வைத்துப் பூட்டுவதில்லை, உயிர்களின் மீது ஓயாமல் தன்னை இறைத்துக் கொள்கிறான்." "நட்சத்திரத்தின் உள்ளமும் சின்ன மின்மினியின் உள்ளமும் ஒரே பரிமாணம்." "வண்ணங்களை ஒளித்து வைக்கத் தெரியாத பட்டாம் பூச்சிகளையும், வார்த்தைகளின் வாயடக்கி வைத்து விட்டு முகம் திருப்பிக் கொள்ளாத பூக்களையும் பார்த்த பிறகும் கடுகுக்குள் புகுந்து கதவை மூடுபவன் மனிதனா என்ன?"

இப்படி இந்தக் கவிதை இயங்குகிறது. வரையாது தன்னைக் கொடுக்கும் மேகம் மழை பற்றி எத்தனையோ கவிஞர்கள் ஓயாமல் சொல்லியிருக்கின்றனர். மாரியும் உண்டு என்று கபிலர் கூறியதை நம்மால் உணரமுடியும். இங்குத் தமிழன்பன் மேகத்தை மட்டுமா குறிப்பிடு கிறார்! கதிரவன், நிலா, விண்மீன் மட்டுமல்லாமல் இயற்கையிலுள்ள செடிகொடிகள் முதற்கொண்டு எல்லா உயிர்களும் தம்மை முழுமையாக வழங்குகின்றன என்று கவிஞர் சொல்லுகிறார். இயற்கையோடு மனிதனை ஒப்பிட்டு நம் கால மனிதனைக் காய்கிறார். இயற்கையின் மாபெரும் கருணையைக் கவிஞர் தனக்குள் உள்வாங்கிக் கொண்டு ஒரு கணத்தில் இயற்கையின் மயமாகிப் பேசுகிறார். கவிதைக்குள் இயற்கைக்குள் பயணம் செய்வதில் உள்ள பேறு இது என்று நம்மால் சொல்ல முடியும். இன்னொரு கவிதையில் தமிழன்பன் கூறுகிறபடி, வள்ளுவர் இயற்கையை மொழி பெயர்க்கிறார். இயற்கைக்குள்ளிருந்து பேசுகிறார். இப்படிப் பேசுபவன், இயற்கையையும் தன்னையும் தாய் என உணரமுடியும். தாய் இறந்த இரண்டாம் ஆண்டு நினைவு பற்றிய கவிதையிலும் வள்ளுவர் தனக்குத் தாய் தந்த உணர்வைத்தான், கவிதையைத்தான் உலகத்திற்கு வழங்கினார் என்று கூறுகிறார். இந்தத் தாய்மையில் இருந்துதான் வள்ளுவருக்குள் இருந்து ஒப்புரவு சமதர்மம் தோன்றுகிறது. இந்தத் தாய்மைதான் மக்களின் கைகளில் செங் கோலைத் தருகிறது. இந்தத் தாய்மைக்குள்ளிருந்துதான் பேருணர்வாய்

அறம் விளைகிறது. வள்ளுவருக்குள், தனக்குள் பயணம் செய்யும் கவிஞர் தன் ஆழ்மனத்தில், தன் உள்ளியக்கத்தில் வள்ளுவரோடு, பேரற உணர்வோடு கலந்துவிடுகிறார் – கரைந்து விடுகிறார். இங்குத் தான் வாழ்வியலும் அழகியலும் நிறைவுபெறுகின்றன. இந்த எல்லையைத் தொட்டவனுக்குள் தான் இல்லை. இவனுக்குள் இருந்து தான் தெய்வம் என்பதையும் நாம் பேசமுடியும். இதே கவிதையில் பாரியைப் பற்றியும், அதியனைப் பற்றியும் தமிழன்பன் வியந்துரைக்கிறார். பழங்கதையைக்– கவிதையைத் தனக்குள் வியக்கத்தக்க முறையில் விரிவு செய்கிறார். பழங்கவிதைக்கு அர்த்தம் கூடுகிறது. இங்கும் கவிஞரின் தேவையை உணர்கிறோம்.

"தேரில் அன்று பயணம் போனபோது அடைந்ததைவிட அதிக இன்பத்தை, அதை முல்லைக் கொடிக்கு நிறுத்திவிட்டு நடந்தபோது பெற்றான் பாரி." அன்று நின்றுவிட்ட தேர் கால காலமாய்க் கவிதைக் குள்ளும், நமக்குள்ளும் ஓடிக் கொண்டிருக்கிறது. சங்கப்பாட்டின் மாரிக் கால நாள்களுக்குள் நான் நெருங்கும் போதெல்லாம் போர்வையோடு பேகன் வருகிறான் என்முன். "ஈர இழைகளால் நெய்யப்பட்டிருந்தும் அந்தப் போர்வை இந்த நாள்வரை இற்றுப் போகவில்லை, ஆடும் மயில்கள் அத்தனையும் அதற்கு உத்திரவாதம்."

"மரண விலக்கு மாத்திரை அருநெல்லி என அறிந்திருந்தும் தமிழ் ஔவைக்கு அதனைத் தந்தான் தான் உண்ணாமல் அதியன்"–"ஔவையும் வாழ்கிறாள், அதியனும் வாழ்கிறான். இடையில் இருந்து அந்த ஈகையும் இன்னும் வாழ்கிறது."

இதே தரத்தில் இயங்கும் இன்னொரு கவிதையை இங்குக் குறிப்பிடலாம். வள்ளுவர் தன் நூலில் பயன்படுத்திய வார்த்தைகள் எங்கிருந்து வந்திருக்க முடியும்? என்ற கேள்வியோடு கவிஞர் தொடங்குகிறார்.

"விளக்கிற்கு வருமுன் வெளிச்சம் இருந்த இடத்திலிருந்து வந்திருக்குமா? வீணைக்கு வரும்முன் இசை இருந்த இடத்தில் இருந்தா வந்திருக்க முடியும்?" என்று கவிஞர் விளக்குகிறார். கவிஞர் தொடர்கிறார். "மரங்களாக முடியாத கிளைகள் உன் ஆதரவில் வனங்களாகி இருக்குமே" என்கிறார். "ஓடையாக முடியாத அலைகள்

உன் கருணையில் கடல்களாகி இருக்குமே" என்கிறார். உன் வாசலுக்கு வந்த வார்த்தைகளை அறமும் பொருளும் இன்பமும் வரவேற்றன.

இப்படித் தொடர்கிறது கவிதை. வார்த்தைகள் வள்ளுவருக்கு உள்ளிருந்து, தமிழ் மொழிக்கு உள்ளிருந்துதான் வந்திருக்க வேண்டும். ஆனால் வள்ளுவருக்குள் வந்த வார்த்தைகளுக்குள் இசையும், நெருப்பும் குளிர்ச்சியும் எப்படி இணைந்தன? வள்ளுவரின் கவிதைக்குள், அவருக்குள் வந்த வார்த்தைகள் வழியே வனமும் கடலும் எப்படி இணைந்தன என்று நமக்குள் அர்த்தப்படுத்துகிறோம். அவை வள்ளுவருக்குள் இருந்து வந்தவை. இவற்றால் வார்த்தைகள் அழகு பெற்றன, ஆற்றல் பெற்றன.

இந்தக் கவிதையின் இறுதியில் கவிதையை இவ்வாறு முடிக்கிறார் கவிஞர்.

"உன் வாசலுக்கு வந்தவற்றுள் நீ பயன்படுத்தியது போக எஞ்சிய வார்த்தைகளை என்ன செய்தாய்?" "எங்கள் இறந்த நதிகள் பிழைக்கட்டும் கொஞ்சம் அள்ளிப்போடு" "எங்கள் தரிசுகள், பயிர்ப் பரிசுகள் பெறட்டும், கொஞ்சம் அள்ளிப் போடு" "எங்கள் உள்ளங்கை ரேகைகளிலும் மின்னல் உற்பத்தியாகட்டும், கொஞ்சம் அள்ளிப்போடு."

மொழிதான் நம்மைப் படைக்கிறது என்று மொழி என்பதை முன் வைத்து நவீனத் திறனாய்வாளர்கள் பேசுகிறார்கள். தமிழ் மொழிக்குள் நீண்டகால வரலாறும் வளமான மாபெரும் பண்பாடும் இணைந்திருக் கின்றன. இவைதான் தமிழை ஒரு வனமாக, கடலாக மாற்றி இருக்கின்றன. இதன் ஆழங்களில் குளித்து எழுந்தவர் வள்ளுவர். அதனால்தான் வள்ளுவருக்குள் இவை இணைந்திருக்கின்றன. தமிழ் இப்படித்தான் வாழ்விக்கிறது.

வள்ளுவருக்கு நம் காலத்திற்கு ஒத்த முறையில் தமிழன்பன் பொருள் கூறுகிறார் என்று முன்னால் கூறினேன். இத்தொகுப்பில் இடம்பெறும் இரண்டு கவிதைகளிலிருந்து தமிழன்பனின் விளக்கங்களை இங்குத் தொகுத்துக் கொள்ளலாம்.

வள்ளுவரின் கருத்துகளுக்கு இடையில் காலம் அறுபடவில்லை. மானுட ஆன்மிகத்தை வள்ளுவர் முன்மொழிந்தார். சமய ஆன்மிகம் வள்ளுவருக்குள் வரவில்லை.

மனிதர்களின் மாசுகளை வள்ளுவர் துடைத்தார். கடவுளர்களுக்கு இங்குத் தேவையில்லாமல் போயிற்று.

இல்லறத்திலிருந்து முதிர்ச்சி பெற்ற துறவிகள் ஊரின் நலத்திற் காக வேள்வி செய்தனர். புத்தனும் வள்ளுவருக்குள் வந்து தன்னை வளர்த்துக் கொண்டான். சமதர்மம் வள்ளுவரின் கருவாக அமைந்தது. இன்பத்துப் பாலில் தமிழ்த் தாயின் கன்னிப் பருவத்துக் கனவுகள் இடம் பெற்றன.

தொல்காப்பியருக்குள் இருந்த கைக்கிளையும் பெருந்திணையும் வள்ளுவரின் இன்பத்துப் பாலில் இல்லை. பரத்தையருக்கு வள்ளுவர் இடம் தரவில்லை என்றபோதிலும், வரைவின் மகளிர் பற்றியும் பெண் வழிச்சேரல் பற்றியும் வள்ளுவர் பேசி இருக்க வேண்டியதில்லை.

எது வள்ளுவம்? – என்ற கவிதையைப் பின்வருமாறு தொடங்குகிறார்:

''விடியும்போது வானம் வள்ளுவம், பொழியும்போது மழை வள்ளுவம். எரிக்க வேண்டியதை எரிக்கத் தவணை கேட்காத நெருப்பும், அற்ப ஆயுளில் முடிந்து போகாதபடி அறத்தின் சுவாசப் பைக்கு அவசியமாகும் காற்றும் வள்ளுவம். கர்ப்பம் தரிக்கும்போது பூமி வள்ளுவம்.''

இப்படி வள்ளுவத்திற்குள் வானத்தையும், பூமியையும், காற்றையும், கடலையும் காண்கிறார் கவிஞர். வள்ளுவத்திற்குள் நம் வாழ்வின் விரிவையும் ஆழத்தையும் கவிஞர் காண்கிறார் என்பதை இப்படி நாம் புரிந்து கொள்ளலாம். வாழ்வுக்கு இத்தனை விரிவுண்டு, ஆழம் உண்டு. நாம்தான் நம்மை நாமே சுருக்கிக் கொண்டோம். ஆகவே ஆற்றல் இழந்து, அழகற்றுப் போனோம் என்பதைத்தான் கவிஞர் நமக்கு உணர்த்துகிறார். ''அடங்கி நிற்பவன் உயரத்தை அளந்து சொல்ல மலைகளின் கைகளில் அளவு கோல்கள் கொடுக்கிறது வள்ளுவம்.'' ''வள்ளுவம் இலைகளில் பசுமையையும் மலர்களில் வண்ணங்களையும் எழுதிய கையோடு மனித இதயங்களில் அன்பை எழுதி வைக்கிறது.'' கவிஞர் மேலும் தொடர்கிறார். ''ஆள்பவன் மக்களால் ஆளப்படுபவன்'', ''பசித்தவன் கையில் பாதகம் செய்பவன் முகவரியைக் கொடுத்து அவனைத் தாக்கு என்று சொல்வது வள்ளுவம்.'' ''இசைபட வாழ்பவனுக்கு

மரணம் இல்லை என்கிறது வள்ளுவம்." கவிதை இவ்வாறு முடிவு பெறுகிறது. "வள்ளுவம் எமது நெறி என்று மனிதர் சொல்லும் முன் இயற்கை சொல்லுகிறது வள்ளுவம் எமது நெறி என்று."

வள்ளுவர் நூலில் அறம் என்றும், பொருள் என்றும், இன்பம் என்றும் எவ்வளவோ சொல்லுகிறார். இறைவன் என்றும், மெய்ப்பொருள் என்றும், தவம் என்றும், ஊழ் என்றும் பேசுகிறார். பொருட்பாலிலும் கல்வியென்றும், அறிவென்றும் குடிமை என்றும், உழவு என்றும் மருந்தென்றும் பலவற்றைச் சொல்லுகிறார். பாயிரத்தில் மழை பற்றியும், நீத்தார் பற்றியும் பேசுகிறார். அரசனோடு அமைச்சர் பற்றியும் அதிகாரிகள் பற்றியும் சொல்லுகிறார். இவை பற்றி எல்லாம் இந்தக் கவிதைத் தொகுப்பில் தமிழன்பன் சொல்லவேண்டும் என்று நாம் எதிர்பார்க்கவில்லை. அங்கங்கே சிலவற்றைச் சொல்லுகிறார். வள்ளுவரின் உள்ளம் எதுவாக இருக்க முடியும் என்று தேடுகிறார். வள்ளுவரும் ஒரு கவிஞர். தனக்குள் வானத்தையும் பூமியையும் அர்த்தப்படுத்தியவர். சமயத்திற்குத் தன்னை விட்டுக் கொடுக்காதவர் வள்ளுவர். எல்லாவற்றையும் ஆராய்ந்து மெய்ப்பொருள் காண நம்மைத் தூண்டியவர் வள்ளுவர். பள்ளிகளில் மாணவர்கள் வள்ளுவரை மனப்பாடம் செய்வதன் மூலம் வள்ளுவர் நெஞ்சை அறிந்து கொள்ள முடியாது. வள்ளுவருக்கு உரைகள் எழுதுவதன் மூலம் வள்ளுவரை நமக்குள் வரவழைத்துக்கொள்ள இயலாது. வாழ்க்கைதான் நமக்கும் வள்ளுவத்தைக் கற்றுத் தர முடியும். எவருடைய வாழ்வுக்குள்ளாவது வள்ளுவர் முழுமையாகத் தட்டுப்படுவாரா என்றும் உறுதியாய்ச் சொல்ல முடியாது.

வள்ளுவரை நமக்குள் வைத்து வளர்க்க வேண்டும். நமக்குள்ளும் ஈர நெஞ்சு வேண்டும். எல்லாவற்றையும் பலரோடு பகிர்ந்து கொள்ளும் மனம் வேண்டும். இயற்கையோடு நாம் இணைந்திருக்க வேண்டும். அதிகாரத்திற்கு நம்மை இழந்துவிடக் கூடாது. சமதர்மம் இல்லாமல் நமக்கு வாழ்வு இல்லை என்ற உணர்வு நமக்கு வேண்டும். அன்பை நமக்குள் தேக்கி வைத்துக் கொள்ள வேண்டும்.

இப்படி எல்லாம் இருப்பதன் மூலம் வள்ளுவத்தை நமக்குள் வளர்த்தெடுக்க முடியும். இத்தகைய உணர்வை இந்தத் தொகுப்பிலுள்ள கவிதைகள் நமக்குத் தருகின்றன. தமிழ் இலக்கியத்தை மறுவாசிப்பு

என்ற முறையில், மறுபடைப்புச் செய்பவர்களையும் நாம் கண்டு வருகிறோம். சங்கக் கவிதைகள், கவிதை என்ற முறையில் செறிவானவை. தமிழ் நடை என்ற முறை நம் காலத்துக்குத் தொலைவில் நிற்பவை. நம் காலத்துக்குக்குரிய முறையில் அவற்றை மறுபடைப்புச் செய்வதன் மூலம் அவற்றை நமக்கு நெருக்கமாகக் கொண்டுவர இயலும். ஆனால் வள்ளுவர் கவிதையை இப்படி மறுபடைப்புச் செய்வதற்குத் தேவை இல்லை. தமிழன்பன் செய்திருப்பதையும் மறு படைப்பென்று கூறுவதற்கில்லை. சிலப்பதிகாரத்தை பாரதிதாசன் நம் கால நோக்கில், நம் காலத்திற்குரிய நடையில் மறு படைப்புச் செய்தார். வள்ளுவத்தை நம் காலத்துக்குரிய பொருளில் தமிழன்பன் மறு படைப்புச் செய்வதை நம்மால் வரவேற்க முடியும்.

ஆனால் அதே சமயம் ஒரு கவிதையிலிருந்து இன்னொரு கவிதை செய்வது கடினம். சில கூறுகளில் தமிழன்பன் இத்தொகுப்பில் சில முயற்சிகளைச் செய்திருக்கிறார். தமிழன்பனின் வள்ளுவர் குறித்த ஆழ்ந்த ஈடுபாட்டையும், வள்ளுவரோடு இணைந்து தனக்குள் விரியும் கவித்துவ வீச்சையும் இந்தத் தொகுப்பிலிருந்து நாம் அறிந்து கொள்கிறோம்.

வள்ளுவரை மட்டுமல்லாமல், இளங்கோ, சாத்தனார், கொங்குவேளிர், திருத்தக்கதேவர் முதலியவர்களையும் உள்வாங்கிக் கொண்டு இயன்ற வரை நம் காலத்து நோக்கில் மறுபடைப்புச் செய்வதன் தேவையை, கவிஞர் தமிழன்பனின் இத்தொகுப்பு நமக்கு உணர்த்துகிறது.

வள்ளுவரின் தாய் இறந்த நாள் என்பது இந்தத் தொகுப்பிலுள்ள இன்னொரு நல்ல கவிதை. வள்ளுவர் பற்றிக் கடந்த இரண்டு நூற்றாண்டுகளில் எவ்வளவோ கதைகள் சொல்லப்பட்டன. இந்தக் கதைகளை எல்லாம் ஐம்பதாண்டுகளுக்கு முன்பே நாம் கூட்டிப் பெருக்கி வெளியில் தள்ளிவிட்டோம். வள்ளுவர் என்பதுகூட அவரது இயற்பெயர் இல்லை. வள்ளுவர் என்பது ஓர் இனத்தின் – குலத்தின் பெயர். வள்ளுவர் என்ற குலத்தைச் சேர்ந்தவர்கள் சங்க காலத்தில் கணியர் களாய், மருத்துவர்களாய், மெய்யியல் அறிஞர்களாய் விளங்கினார்கள் என்பது இன்று நாம் காணும் உண்மை. அரசனது ஆணைகளை, யானை மீது அமர்ந்து பறை அறைந்து ஊருக்குச் சொல்பவர் வள்ளுவர் என்றும் சிலர் கூறினார்கள். அரசனது அவைக் களத்தில் அரசனுக்கு நெருக்கமாய் இருந்தவர் வள்ளுவர் என்றும் சிலர் கூறினார்கள்.

வள்ளுவர் அறம் பற்றிச் சொல்லுகிறார்; பொருள் பற்றிச் சொல்லுகிறார்; இன்பம் பற்றியும் சொல்லுகிறார். எத்தனையோ சமயக் கணக்கரோடு வள்ளுவர் உறவு கொண்டும் இருந்திருக்கிறார். வேத மூலரின் கொள்கைகளை வள்ளுவர் ஏற்கவில்லை. கடவுளை வள்ளுவர் கேள்விக் குட்படுத்துகிறார். வேந்தனையும் மக்கள் நலத்திற்குள் வைத்துப் பேசுகிறார். வள்ளுவர் பேரறிவாளர் என்பதில் ஐயமில்லை.

வள்ளுவருக்கும் ஒரு குடும்பம் இருந்திருக்கக்கூடும். வாழ்க்கைத் துணை என்று மனைவியை மதித்துப் பேசுகிறார் வள்ளுவர். குழலைக் காட்டிலும், யாழைக் காட்டிலும் இனியது குழந்தையின் மழலை மொழி என்று பாராட்டுகிறார். சான்றோன் எனக் கேட்டுத் தாய் மகிழ்வதைச் சொல்கிறார். இன்னும் இவருக்கு எத்தனையோ உறவுகள் வாய்த்திருந்த போதிலும், கவிஞர் இந்தக் கவிதையில் தாய் இறந்த இரண்டாம் ஆண்டின் நினைவைச் சொல்கிறார்.

வள்ளுவர் நூலில் வெளிப்பட்டிருக்கும் பேரன்பும் அற உணர்வும் அவருக்கு, அவரது தாயைத் தவிர வேறு யார் தந்திருக்க முடியும்? வள்ளுவரின் தாய் அவருக்குப் பாலோடு சேர்த்து அன்பையும் அல்லவா புகட்டி இருப்பார்! சிறுவராய் வள்ளுவர் விளையாடித் திரிந்தபோது, குயில், மயில் என்றும், மான் என்றும் நரி என்றும் ஆயிரம் கதைகள் சொல்லியிருப்பார். இவற்றை எல்லாம் வள்ளுவர் தன் நூலில் எத்தனையோ கதைகளோடு பதிவு செய்திருக்கிறார். வள்ளுவரின் தாய் தன் இளமைக் காலத்துக் காதல் அனுபவங்களைத் தன் மகனுக்குச் சொல்லியிருக்க முடியாது என்ற போதிலும் வள்ளுவருக்கும் இத்தகைய அனுபவங்கள் இருந்திருக்க வேண்டும். இவற்றை எல்லாம் வள்ளுவர் தனக்குள் நினைத்துப் பார்க்கிறார். தாய் இறந்து இரண்டு ஆண்டுகள் நிறைவு பெறுகின்றன. வள்ளுவர் கண்ணீர் பெருக்குகிறார். இந்தக் கண்ணீருக்குள் தாய் மீண்டும் பிறப்பெடுக்கிறார். அந்தத் தாய் இல்லாமல் தான் இல்லை. இந்தத் தாய் மூலம்தான் வள்ளுவர் இயற்கையை அறிந்தார். உயிர்களின் பேரன்பைத் தனக்குள் உணர்ந்து கொண்டார். தாய் இவருக்கு வானம், பூமி, காற்று, கடல். இந்தத் தாய்மையில் இருந்துதான் எல்லாமே உருவாகின்றன. இந்தத் தாய்க்கு மரணம் இருக்க முடியாது.

வள்ளுவர் நினைத்துக் கொள்கிறார். உறங்குபவன் விழித்து எழுகிறான். இதே போலத்தான் இறந்தவன் மீண்டும் பிறக்கிறான். என்றாலும் வள்ளுவருக்கு இன்னும் கண்ணீர் பெருக்கெடுக்கிறது. தனக்குள் வந்த தாய் தன் மகனைத் தேற்றுகிறாள்.

உப்பும் சர்க்கரையும் ஒரே நிறம். உதயமும் சூரிய மறைவும் ஒரே நிறம். பிறப்பும் இறப்பும் ஒரே இரத்தம். உண்மைதான். வள்ளுவருக்கும் மரணம் இல்லை. அவர் நமக்குள் என்றும் வாழ்கிறார். வள்ளுவரைத் தோற்றுவித்த தாய்க்கும் தாய்மைக்கும் இயற்கைக்கும் மரணமில்லை. இவை என்றும் நம்மை வாழ்விக்கும்.

தன்மைகளும் உண்மைகளும் ஒன்றாக இருக்க வேண்டும் என்பது இல்லை. தன்மை ஒன்றாகவும் உண்மை வேறாகவும் இருக்க முடியும். தோற்றமும் உண்மையும் எப்பொழுதும் பெரும்பாலும் வேறுபடு கின்றன. தோற்றங்கள் பல, உண்மை ஒன்று என இருக்க முடியும். தோற்றம் ஒன்று, உண்மைகள் பல எனவும் இருக்க முடியும். தோற்றமும் உண்மையும் என்றாவது ஒன்றாக இருக்க முடியுமா? இப்படி இருந்த காலம் என ஒன்று இருந்ததா? இனியேனும் வருமா?

உண்மை எது என்று தேடுபவர்க்குள் ஓயாமல் எழுவது இந்தச் சிக்கல். இடையில் யார் யாரோ, என்னென்னவோ சொல்கிறார்கள். ஒருவர் பெரியவர் என்பதால் அவர் சொல்வதையே உண்மை என ஏற்றுக் கொள்ளலாமா? ஒருவர் எளியவர் என்பதால் அவரை மறுத்துவிடலாமா? பெரியவர், சிறியவர் என்பதைக் கொண்டு உண்மை எது என்பதைத் தீர்மானிக்க முடியுமா? பரிமேலழகர் ஒன்றைச் சொல்லுகிறார். மணக் குடவர் வேறு ஒன்று சொல்கிறார். வள்ளுவர் உள்ளத்தைச் சரியாக யார்தான் கண்டார்கள்? இவர்கள் மூலம் வள்ளுவரை நாமும் தேடுகிறோம். வள்ளுவர் நமக்கு அகப்படுவாரா? எவ்வளவு தேடினாலும் வள்ளுவர் நமக்கு அகப்படமாட்டார் என்றால் வள்ளுவரை நாம் ஏன் தேடவேண்டும்? உண்மை என்று சொல்லிப் பொய்யை நிலைநிறுத்திவிட முடியும். பொய் என்று சொல்லி உண்மையை மறைத்துவிட முடியும்.

காலந்தோறும் சமயங்கள் இறுதி உண்மை எது என்று தேடி எவ்வளவோ "உண்மைகளைச்" சுட்டிக் காட்டினார்கள். உண்மை நமக்கு அகப்பட்டதா?

இத்தகைய ஐயங்களோடு வள்ளுவரை நாம் கேட்கிறோம். எது உண்மை என்பதற்கு நீங்கள் என்ன அளவுகோல் வைத்திருக்கிறீர்கள்? வள்ளுவர் நமக்குச் சொல்லுகிறார், நீயேதான் தேடவேண்டும். யார் எதைச் சொன்னாலும் நீ ஏற்கவேண்டாம். உனக்குள் நீ தேடு. மெய்ப்பொருளை நீதான் கண்டறிய வேண்டும். வள்ளுவர் நமக்குத் தரும் கைவிளக்கு இதுதான். இப்படிச் சொல்லும் வள்ளுவரை அப்படியே ஏற்றுக் கொள்ளலாமா என்றால், வள்ளுவரும் ஒப்புக் கொள்ளமாட்டார். உனக்கு உள்ளும் வெளியிலும் தேடு; காலமெல்லாம் தேடு; பலரோடு பேசு; நூல்களைப் பலமுறை படி. அறியுந்தோறும் நமக்குள் எதிர்ப்படுவது அறியாமை; என்றாவது இதைக் கடந்து செல்லமுடியும்.

உண்மைக்குள் இருப்பது ஒரு முகம்தானா? உண்மைக்கு ஏன் பல முகங்கள் இருக்கக்கூடாது? தோற்றத்திற்குள்ளும் உண்மை இல்லா மலா இருக்கும்? பொய்க்கு இங்கு என்ன வேலை? பிரமைகள் ஏன் ஏற்படவேண்டும்? கனவுகளுக்கும் கற்பனைகளுக்கும் அர்த்தம் இல்லையா? இப்படியும் நமக்குள் எத்தனையோ கேள்விகள். வள்ளுவருக்குள் மேலும் மேலும் தேடிச் செல்லுகிறோம். வள்ளுவரும் நம்மைப் போலத்தானே தேடி இருக்க முடியும்? வள்ளுவருக்குள் மனிதன் அகப்படவில்லையா? உண்மை அகப்படவில்லையா?

ஆயிரம் சாவிகளால் திறக்கப்படக்கூடிய அற்புதப் பூட்டா உனது நூல் என்று இன்னொரு கவிதையில் தமிழன்பன் கேட்கிறார். பரிமேலழகர் கையில் ஒரு சாவி. பரிதியிடமும் காளிங்கரிடமும் வேறு சாவிகள். மணக்குடவரும் தன் சாவி கொண்டு வள்ளுவரைத் திறக் கிறார். அன்று முதல் இன்று வரை எத்தனையோ பேர் வள்ளுவருக்குப் பொருள் சொல்லுகிறார்கள். தான் கண்டதே உண்மை எனவும் சாதிக்கிறார்கள். இப்படி ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு விதமாய் வள்ளுவர் தோற்றம் தருவது உண்மையாய் இருக்க முடியுமா? அவரவர் கண்டதை உண்மை இல்லை என்று நம்மால் எப்படி மறுக்க முடியும்?

கவிஞர் கேட்கிறார். ஒவ்வொரு பூவுக்கும் ஒவ்வொரு வண்டும் ஒவ்வொரு விதமாய்ப் பொழிப்புரை தரமுடியுமா? ஒவ்வொரு பறவைக்கும் வானம் ஒவ்வொரு விதமாய்த் தோற்றம் தருமா? ஒவ்வொரு மீனுக்கும் தனித்தனிக் கடலா? எப்படி இவ்வாறு காட்சி தர முடியும்?

இப்படி ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு வகையாய்த் தோற்றம் தருவதாகிய உண்மை வள்ளுவரிடம் எந்த வடிவத்தில் எந்த ஆழத்தில் புரிந்திருக்க முடியும்? உன் மூல ஊற்று எங்கிருக்கிறது? அந்த இடத்தில் எத்தனை சூரியர்கள் எழுகிறார்கள்? ஒவ்வொருவரும் தான் கண்ட பொருளே சரியானதென்று வழக்காடுகிற நாடகத்தை நீயே கண்டு சிரிக்கிறாயா? வார்த்தைகளுக்குள் வராமல் வெளியே நின்று அர்த்தங்கள் வேடிக்கை காட்டுவது எதற்காக? தொடர்ந்து இப்படித் தனக்குள்ளும் வள்ளுவரை நோக்கியும் கேள்வி எழுப்பும் கவிஞர் தமிழன்பன் இப்படி முடிவுக்கு வருகிறார். சிலருக்கு அறிவில் அகப்படுகிறார் வள்ளுவர்; சிலரது அனுபவத்துக்குள் வருகிறார் வள்ளுவர்; அறிவைக் கொண்டு ஆராய்வதைக் காட்டிலும் அனுபவத்தைக் கொண்டு வள்ளுவரை அறிவதே சரியானதாய் இருக்க முடியும். இன்றில்லாவிட்டாலும், என்றாவது ஒருவரின் அனுபவத்திற்குள் வ ள் ளு வ ர் வசப்படாமலா போய்விடுவார்? இப்படி முடிவுக்கு வருகிறார் கவிஞர்.

இந்தக் கவிதையின் இடையிலேயே புதுக் கவிதைக்குப் பன்முகப் பொருள் உண்டு என்று இன்று பலர் சொல்வதைப் போல வள்ளுவருக்குள்ளும் பன்முகப் பொருளுக்கு வாய்ப்பு உண்டா என்று கேள்வி எழுப்புகிறார். உண்மைதான். எந்த இலக்கியமும் காலத்திற்கேற்றபடி பொருள் மாறுபட்டபோதிலும், எல்லாக் காலங்களையும் உள்ளடக்கியதாகிய ஓர் உண்மையை இலக்கியம் கொண்டிருக்கிறது. கால வேறுபாடுகள் இந்த உண்மையை அழிப்பதில்லை. வள்ளுவருக்குள்ளும் இப்படி ஓர் உண்மை இ ரு க் கி ற து. அறம்தான் இந்த உண்மை. மனிதனுக்குள் மட்டுமல்லாமல் இயற்கைக்குள்ளும் இயங்கும் அறத்தை வள்ளுவர் தேடுகிறார். அந்த அறத்திற்கு இன்னொரு பெயர் அன்பு. இயற்கை அன்னை எல்லா உயிர்களுக்கும் தன்னை வழங்குவதன் மூலம் வெளிப்படுகிறது அந்த அன்பு. அந்த அன்பே, அறம்.

இந்தத் தொகுப்பிலுள்ள அற்புதமான கவிதைகளில் ஒன்று, "வள்ளுவர் வழங்கும் விடுதலை." வள்ளுவர் தனக்குள் மனிதனைத் தேடினார். அண்ணன் தம்பி, மாமன் மருமகன் என்ற உறவுகளுக்குள் அடைப்பட்டுக் கிடப்பவன் மனிதனாக இல்லை. அதே போல முதலாளியாகவும், தொழிலாளியாகவும், ஆள்பவனாகவும், ஆளப்படுபவனாகவும்,

அரசனாகவும், அமைச்சனாகவும் தன்னை ஆக்கிக் கொண்டவனிடம் மனிதன் இல்லை. தனது சாதி, தனது மனம், தனது ஊர், தனது தேசம், தனது இனம், தனது மொழி என்ற குறுகிய எல்லைக்குள் தன்னைச் சுருக்கிக் கொண்டவன் மனிதனாக இல்லை. இப்படித் தன்னை அண்ணன் என்றோ, தம்பி என்றோ, முதலாளி என்றோ, தொழிலாளி என்றோ, இந்தியன் என்றோ, தமிழன் என்றோ தனக்குள் இறுக்கம் கொண்டவன் மனிதனாக இல்லை. இப்படி மனிதன் தன்னைப் பிளவுபடுத்திக் கொண்டவனாக, தன்னைப் பிரித்துக் கொண்டவனாக அசலான மனிதன் இருக்கமுடியாது. இவனுக்குள் எல்லைகள் இல்லை. எல்லைகளைக் கடந்து செல்பவன் மனிதன். வரலாற்றோடும், பிரஞ்சத் தோடும் தன்னை விரித்துக்கொண்டவன் மனிதன். இத்தகையவனைத் தான் மனிதன் என்று வள்ளுவர் காண்கிறார். குறுகிய எல்லைக்குள் அடைபட்டுக் கிடப்பவனை விடுதலை செய்வதற்குத்தான் வள்ளுவர் எழுதினார்.

திருக்குறளில் எந்த ஒரு தேசத்தையோ, எந்த ஒரு இனத்தையோ, எந்த ஒரு மொழியையோ வள்ளுவர் குறிப்பிடவில்லை. வள்ளுவர் அறம் கூறுவதை நோக்கமாகக் கொண்டவர் என்றபோதிலும், அறத்துப்பால் மட்டுமல்லாமல், பொருட்பால், இன்பத்துப் பால் ஆகியவற்றிலும் மனிதனை விடுவிப்பதற்கான அறம் பற்றியே பேசுகிறார். ஆள்பவனை வள்ளுவர் பாராட்டவில்லை. பரத்தையரையோ, காமத்தில் உழலும் தலைவனையோ வள்ளுவர் பாராட்டவில்லை. இல்லறத்தையும், துறவறத்தையும்கூட வள்ளுவர் பிளவுபடுத்திச் சொல்லவில்லை. விதியையும் மனிதனால் வெல்ல முடியும். எல்லாவற்றினுள்ளும் மெய்ப்பொருள் காண்பதே அறிவு. மனிதனுக்குள்ளும் தெய்வம் உண்டு. பண்புடையவர் வாழ்வதனாலேயே உலகம் இன்னும் அழியாமல் இருக்கிறது. இவ்வாறெல்லாம் பேசுகிற வள்ளுவரிடத்தில் நாம் என்ன காண்கிறோம்?

மனிதனை, அவனது குறுகிய உறவுகளிலிருந்து விடுவிப்பதைத் தவிர வேறு நோக்கம் வள்ளுவரிடத்தில் இல்லை. உண்மையில் வள்ளு வத்தின் மையம் என்ன என்பதைத் தமிழன்பன் சரியாகவே கண்டு சொல்கிறார். அசலான கவிஞனின் உள்ளியக்கம் என்னவாக இருக்க முடியும் என்பதை இங்கும் நாம் காண்கிறோம்.

கவிதை இன்னும் தொடர்கிறது. விடுதலை என்றால் என்ன என்பதைத் தனக்குள் உணராத மனிதன் மற்றவர்களைத் தனக்கு அடிமைப் படுத்துகிறான். இத்தகைய மனிதன்தான் கடவுளைக் கோவில்களில், உலோகங்களில் சிறைப்படுத்துகிறான். இவன் தனக்கு மட்டுமல்லாமல், கடவுளுக்கும்கூட விடுதலை தராதவன். ஆனால் வள்ளுவர் மனிதனுக்கு மட்டுமல்லாமல், கடவுளுக்கும் விடுதலை தந்தார். கடவுளுக்கு வள்ளுவர் பெயர் சொல்லவில்லை; உருவம் கற்பிக்கவில்லை; மந்திரங்கள் சொல்லவில்லை. இதற்கு என்ன காரணம்? உருவம் இல்லாதவரை உருவத்தில் அடைக்க வேண்டாம். பெயரில்லாதவரைப் பெயருக்குள் அடைக்க வேண்டாம்.

மனிதன் ஏன் இப்படித் தனக்குள் தன்னையே புதைத்துக்கொண்டான்? வானம் இவனை இப்படிப் புதைத்ததா? பூமி இவனைப் புதைத்ததா? இவனுக்குள் உயரங்கள் ஏன் சிறைப்பட்டுக் கிடக்க வேண்டும்? விதைகள் ஏன் இவனுக்குள்ளிருந்து முளைக்கவில்லை? ஏன் இப்படித் தன்னை அழித்துக் கொள்கிறான்? பகல் இப்படித் தன்னை இரவுக்குள் முடக்கிக் கொள்ள வேண்டுமா? இவனுக்குள் தோண்டினால் வானம் தட்டுப்படும். ஒளி வந்து குவியும். இவனுக்குள் ஏன் இப்படி அடர்த்தியாய் இறுக வேண்டும்? இரவெல்லாம் உறங்காமல் வள்ளுவர் சிந்திக்கிறார். எப்படி இந்த மனிதனுக்கு அவனை உணர்த்துவது?

காலம் இவனை இப்படிச் செய்திருக்குமா? காரணங்கள் என்றும், காரியங்கள் என்றும் தர்க்கம் செய்து கொண்டு இந்தச் சுழலுக்குள் ஏன் இவன் மாட்டிக்கொள்ள வேண்டும்? மனிதன் தனக்கு ஏற்பட்ட விபத்துக்கு என்னென்னவோ காரணங்கள் சொல்லிக் கொள்கிறான். தனக்குள் உள்ள வானத்தைப் பற்றி – ஒளியைப் பற்றி இவன் சிந்திக்க மறுக்கிறான். இலையுதிர் காலம் தனக்குத் தெரியாதென்று எந்த மரமும் சொல்வதில்லை. வசந்தம் வருவது எனக்குத் தெரியாது என்று எந்தக் குயிலும் சொல்வதில்லை. கோடைக்காலம் பற்றித் தனக்குத் தெரியாது என்று பங்குனியோ, மாரிக்காலம் பற்றித் தனக்குத் தெரியாது என்று குளமோ சொல்வதில்லை. ஆனால் மனிதனைப் பொருத்தவரை இப்படித் தனக்குள் ஈரத்தையோ, வெப்பத்தையோ, பிரபஞ்சத்தையோ, விரிந்த வாழ்வையோ ஏன் உணராமல் இருக்கிறான்?

இந்த மனிதனை யார் வந்து விடுதலை செய்ய முடியும்? அரசனோ, தலைவனோ வந்து இவனை விடுதலை செய்ய முடியுமா? விடுதலை செய்வதற்கா அரசு இவனை அழைக்கிறது? யாரை நம்பி இவன் தன்னை ஒப்படைத்துக் கொள்ள இயலும்? விடுதலைக்கான ஆயுதம் தன்னிடமே இருப்பதை இவன் கண்டு கொள்ளவில்லை. கிண்ணமான பின்பும் கிண்ணத்தைவிட்டுச் செல்லாத வெள்ளியைப் போல இவனிடம் இந்த ஆயுதம் இருக்கிறது. இந்த ஆயுதத்திற்குப் பெயர்தான் அன்பு என்கிறார் வள்ளுவர். அன்புடையார் எல்லாம் உடையார் அன்பிலார் என்னுடையரேனும் இலர் என்பது வள்ளுவம். வள்ளுவருக்குள் இப்படி ஒரு அரிய கண்டுபிடிப்பை இந்தக் கவிதையில் தமிழன்பன் செய்திருக்கிறார்.

இந்தத் தொகுப்பிலுள்ள இன்னும் சில கவிதைகளை இங்குத் தொகுத்துப் பார்க்கலாம். வள்ளுவர் ஒரு நாள் நம் தெருவில் செல்வ தாகக் கவிஞர் கற்பனை செய்கிறார். வள்ளுவரின் குறட்பாக்களைச் சாத்திய கதவுக்குள்ளே குழந்தைகள் நெட்டுருச் செய்கிறார்கள். வள்ளுவர் சொன்ன கருத்துரைகளோடு அவர்கள் உள்ளமும் உதடும் ஒட்டவில்லை. பள்ளிகளிலும் இதே நிலை. வள்ளுவரை இவர்கள் உள்ளே அனுமதிக்கவில்லை. அறத்தோடு இவர்கள் இல்லை. பொருளுக்குள் போய்ப் பதுங்கிக் கொள்கிறார்கள். இன்பம் என்று சொல்லி காமக் களியாட்டங்கள் நிகழ்த்துகின்றனர். அகம் புறம் என்பதை மறந்துவிட்டு இகம் பரம் என்று இவர்கள் பேசுகிறார்கள். வள்ளுவருக்கும், வடநூல் சொல்லும் முறைகளுக்கும் உறவில்லை. உறவிருப்பதாக இவர்கள் சொல்லுகிறார்கள். வள்ளுவரை இவர்களால் எப்படிப் புரிந்து கொள்ள முடியும்? நிலவின் குளிர்ச்சியும் கதிரவன் வெட்பமும் குறளுக்குள் பதிந் திருக்கின்றன. நிலவே, கதிரவனே குறளுக்குள் வந்து அன்பாய், அறமாய் வாழ்ந்து கொண்டிருக்கின்றன. வானத்தோடும், மலையோடும், மண்ணோடும் உறவற்ற இவர்களால் வள்ளுவரை எவ்வாறு புரிந்து கொள்ள முடியும்? வீட்டுக் கதவை மட்டுமல்லாமல் தங்கள் மனத் தையும் இவர்கள் மூடி வைத்துள்ளார்கள். இப்படிச் சில கவிதைகள் இயங்குகின்றன.

வள்ளுவர் ஒரு கவிதையில் தன் தாய் பற்றிக் கூறியதைப்போலவே இன்னொரு கவிதையில் தன் மனைவி பற்றியும் குழந்தைகள் பற்றியும்

கூறுகிறார். குழந்தைகள் எழுசீர்க் கவிதைக்குள் அங்கும் இங்குமாக ஓடுகிறார்கள். எட்டாவது சீர் இல்லை. ஓடியாடும் குழந்தைகள் தவறி விழுந்துவிடக்கூடும். குழந்தைகளைத் தடுத்து நிறுத்தவா முடியும்? இந்த எழுசீர்களும்கூடக் குழந்தைகள்தான். தளைகள் இவர்களைத் தடுக்கவில்லை. செப்பலோசையில் இவர்கள் துள்ளி மகிழ்கிறார்கள்.

இன்னும் ஒரு கவிதை. ஆயிரத்து முன்னூற்று முப்பது குறள்களையும் பாடி முடித்த நிலையில் வள்ளுவர் தனக்குள் என்ன உணர்வு கொண்டிருப்பார்? இன்னும் என்னவெல்லாம் அவர் எழுத நினைத் திருப்பார்? ஒருவேளை எழுத்தாணிக்கு அவரோடு பழகிப் பழகித் தொடர்ந்து அவர் உள்ளத்தை எழுதும் திறன் இருந்திருக்கக்கூடும். எழுத்தாணி இப்பொழுது இல்லை. குறளுக்குள் அதுவும் கலந்து கரைந்துவிட்டது.

ஞானத்தின் வடிவாய் மாறிய இந்த எழுத்தாணி, குறளைவிட்டு எவ்வாறு வெளியே வந்து இன்னொருவர் கையில் வாழமுடியும்? வள்ளுவர்தான் நமக்கு முகவரியைத் தந்தார். வள்ளுவர் பெயரில் உலகம் நம்மை அறிந்து கொண்டிருக்கிறது. வள்ளுவரை நமக்குள் வாழ வைக்க வேண்டும். வள்ளுவரை இழந்த பிறகு நமக்கு என்ன வாழ்விருக்கக்கூடும்?

‘வணக்கம் வள்ளுவ’ என்ற இந்தக் கவிதைத் தொகுதியில் உள்ள இறுதி இரண்டு கவிதைகளும் நேரிடையாக வள்ளுவரைக் குறித்தவை அல்ல என்ற போதிலும், வள்ளுவத்தின் நீட்சி என்று இந்தக் கவிதை களைக் குறிப்பிடலாம். சங்க காலத்தில் அகமும் புறமும் பெற்றிருந்த சிறப்போடு நம் காலத்தில் அவை எவ்வாறு இருக்கின்றன என்பது பற்றி ஒரு கவிதையில் தமிழன்பன் பேசுகிறார்.

சங்க காலத்தில் குறுந்தொகையும், அகநானூறும் காதலர்க்கு ஆரத்தி எடுத்தன. இயற்கையில் மரங்கள் பூத்தது போலவே, இளைஞர் மற்றும் கன்னியர் நெஞ்சில் காதல் மலர்ந்தது. காதலுக்கு அங்குச் சாதித் தடைகள் இல்லை. சாதகம் பார்க்க வேண்டிய தேவை இல்லை. மதங்கள் இவர்களுக்கு இடையில் குறுக்கே வரவில்லை. அன்பையும் அறத்தையும் இவர்கள் நெஞ்சிலும் நிலத்திலும் வளர்த்தார்கள்.

ஆனால் காதலில் ஆணுக்கு இருந்த சுதந்தரம் பெண்ணுக்கு இல்லை. கைக்கிளையும் பெருந்திணையும் ஆடவர்களுக்குரியவை. இவை சங்க காலத்தில் கடிந்துரைக்கப்படவில்லை. அடியவர்களுக்கும், வினை வலர்க்கும் ஐந்திணை உரிமை இல்லை. அக வாழ்வு இப்படி இருக்கப் புறவாழ்வில் ஆண்களின் வீரம் போற்றப்பட்டது என்பது உண்மைதான். இமயத்தின் உச்சியில் தமிழ்க் கொடி பறந்தது. ஆனால் போர் என்ற பெயரில் தமிழனே தமிழனை அழித்துக் கொண்டிருந்தான். பாரியை மூவேந்தர் கொன்றனர். இந்த நிலை இன்று பல மடங்கு அதிகரித்திருக்கிறது. மன்னர்கள் இன்று இல்லை. ஆனால் கட்சிகள் இன்று மக்கள் மத்தியில் பூசலைக் கிளப்புகின்றன. திரைப் படங்களும், தொலைக்காட்சிகளும் மக்கள் நெஞ்சில் காமத்தைத் தூண்டுகின்றன. அறம் இன்று மதிக்கப்படுவதில்லை. வாழ்க்கை நெறிகள் மாறிவருகின்றன. திசைகள் தடுமாறுகின்றன. சங்க காலத்துத் தமிழன் இன்று எங்கு இருக்கிறான்? எப்படி இருக்கிறான் என்று வள்ளுவரை முன்வைத்துத் தேடவேண்டி இருக்கிறது.

சங்க காலத்தை அடுத்த வரலாற்றில் வள்ளுவரைக் காண்கிறோம். ஆனால் சங்க காலத்திலேயே இன்னொரு வள்ளுவரும் இருந்தார். அவர் பெயர் கணியன் பூங்குன்றன். அவருக்கும் சாதியோ மதமோ உடன்பாடில்லை. சமத்துவம் / சமதர்மம்தான் அவரது நெறி. இந்த உலகத்தில் எல்லா ஊர்களும் நம் ஊர்கள். எல்லோரும் நம் கேளிர். நன்மைகளையோ, தீமைகளையோ நமக்குள்ளிருந்தே எழுப்பிக் கொள் கிறோம். நமக்குள் ஏற்றத் தாழ்வுகள் இல்லை. எல்லோரும் மரியாதைக் குரியவர்கள். இவர்களில் சிலரைப் பெரியவர் என்றோ, இன்னும் சிலரைச் சிறியவர் என்றோ வேற்றுமைப்படுத்துவதில் உண்மை இல்லை. வியத் தலும், இகழ்தலும்கூட மனத்தின் திரிபுகள். “ஒன்றே குலம், ஒருவனே தேவன்” என்ற திருமூலர் பூங்குன்றனின், வள்ளுவரின் மறுபிறப்பு. “எல்லாரும் ஓர் நிறை. எல்லாரும் இந்நாட்டு மன்னர்” என்ற பாரதியும் வள்ளுவரின் வாரிசு. தமிழனுக்கு உலகமே தன் தாய் வீடு. பாப்லோ நெருடாவும், வால்ட்விட்மனும் வள்ளுவரின் வாரிசுகள். இன்னும் மனிதர் நெஞ்சில் வள்ளுவம் வாழ்கிறது. வள்ளுவத்தின் ஒளியை யாரும் அணைக்க முடியாது. வள்ளுவத்தின் மூலமே மனித விடுதலை சாத்தியம்.

மனித விடுதலையைக் கருவாக, இலக்காகக் கொண்டு தமிழன்பனின் கவிதைகள் இயங்குகின்றன.

வள்ளுவம் பற்றித் தமிழன்பனின் கவிதைகளில் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ள வேண்டிய கவிதைகள் இன்னும் சில உள்ளன எனினும், தமிழன்பனின் கவிதைகள் மூலம் வள்ளுவத்திற்குள் நெடுந் தொலைவு நாமும் பயணம் செய்கிறோம். வள்ளுவரை நம் நெஞ்சில் வரித்துக் கொண்டால் / விதைத்துக் கொண்டால் நம் நெஞ்சினுள்ளும் ஆழத்திலிருந்து எத்தகைய கவிதைகள் பொங்கும் என்பதற்குத் தமிழன்பனின் கவிதைகள் சான்றாகின்றன. வள்ளுவரை நாம் புரிந்து கொள்கிறபோதே, மாபெரும் இயற்கையைப் பிரபஞ்ச இயக்கத்தை, உயிர்களுக்குள் ஓடும் உணர்வை, தாய்மையை, பேரன்பை, அறத்தை நமக்குள் எழுப்பிக் கொள்கிறோம்.

வள்ளுவரின் கவிதைகள் இந்த ஆழத்திலிருந்து, விரிவிலிருந்தே பிறக்கின்றன. இந்த ஆழத்தைத் தொடுவதன் மூலமே அசலான கவிதைகள் பிறப்பெடுக்க இயலும். ஒருவரை அசலான கவிஞர் என்று சான்று சொல்வதற்கும் இவ்வகைக் கவிதைகளே ஆதாரம் ஆகின்றன.

சங்ககாலக் கவிஞன் மரபின் தொடர்ச்சியாக வள்ளுவரைக் காண் கிறோம். மனித நாகரிகத்தின் வகைவகையான மேன்மைகளோடு சில குறைகளும் சங்க கால மனிதனைப் பற்றி இருந்தன. சங்ககாலச் சான்றோர்களின் வளமான மரபிலிருந்து தோன்றிய வள்ளுவர், சங்க கால மனிதனிடத்து இருந்த சில குறைகளைத் தம் கால மனிதனுக் குள்ளும் கண்டு கடிந்துரைத்தார். கள்ளுண்ணலையும், சூதாட்டத்தையும் கண்டித்தார். பரத்தமையைக் கண்டித்தார். கைக்கிளை பெருந்திணைகளை வள்ளுவர் பாராட்டவில்லை. போலித்துறவிகளை வள்ளுவர் கண்டிக்கத் தவறவில்லை. கடவுளை வள்ளுவர் கேள்விக்கு உட்படுத்தினார். சாதி, மதம், இனம், மொழி, தேசம் என்ற சார்பில் வைத்து வள்ளுவர் மனிதனைப் பார்க்கவில்லை.

வரலாற்றுக்குள் வந்துவிட்ட இத்தகைய கட்டுக்களிலிருந்து தன்னை விடுதலை செய்து கொள்ளும் மனிதனைத்தான் வள்ளுவர் தனக்குள் கண்டார். இந்த மனிதனைத்தான் நாம் நமக்குள்ளும் வரித்துக் கொண்டுள்ளோம்.

5. 20.

வள்ளுவம்தான் தமிழனுக்கு முகவரியைத் தந்திருக்கிறது என்பது உண்மைதான். எனினும் வள்ளுவரிடத்தும் சில குறைகள் உண்டு என்பதைத் தமிழன்பன் பார்க்கத் தவறவில்லை. வறியவர்களின் துயரம் தீர்க்கிற வள்ளண்மையை வள்ளுவர் பாராட்டுகிறபொழுதே, செல்வர் களின் இருப்பை வள்ளுவர் ஏற்கிறார். ஆழமான அற உணர்வோடு இது முரண்படுகிறது. ஏற்றத் தாழ்வை எந்த வடிவத்திலும் எந்த நோக்கத்தோடும் இன்று நாம் ஒப்புக் கொள்வதில்லை. பரத்தையர் குறித்து வள்ளுவருக்கு அனுதாபம் இல்லை. பெண்ணின் காமத்திற்கு ஆண் முற்றாக உடன்படுவதை வள்ளுவர் ஏற்கவில்லை. இப்படிச் சில குறைகளை வள்ளுவரிடத்துத் தமிழன்பன் காண்கிறார். மனித விடுதலையை இவையும் தடுக்கும் என்பதில் ஐயமில்லை.

வள்ளுவருக்குப் பரிமேலழகர் முதற்கொண்டு இன்றுவரை எத்தனையோ அறிஞர்கள் பொருள் காண்கின்றனர். அவரவர் தம்கால சூழலுக்குக் கட்டுப்பட்டே உரை காண முடியும் என்பது ஒரு பொது உண்மை. சூழலை மீறியும் மனிதன் இயங்க வேண்டும் என்பது இன்றி யமையாத ஒரு தேவை. இன்றுவரையிலுள்ள உரையாசிரியர்களை இந்த விதி கொண்டும் நாம் ஆராய முடியும். கவிஞர் தமிழன்பனையும் இத்தகைய உரையாசிரியர்களில் ஒருவராக நாம் காணமுடியும்.

கவிஞர் தமிழன்பனை உரைகாரர் என்று எப்படிச் சொல்லலாம் என்ற கேள்வி எழலாம்? பாம்பின் கால் பாம்பறியும் என்பதைப்போல ஒரு கவிஞனை இன்னொரு கவிஞனே சரியாக அறிய முடியும். அதுவும் ஒரு அசலான கவிஞனை இன்னொரு அசலான கவிஞன் சரியாகக் கண்டு அறிவதோடு தன் காலத்திற்கு ஒத்த முறையில் அந்த அசலான கவிஞனைத் தனக்குள்ளும் வைத்து வளர்க்க முடியும். இந்தக் கவிதைத் தொகுப்பின் மூலம் கவிஞர் தமிழன்பனின் அரிய சாதனை என்று இதை உறுதியாகச் சொல்ல முடியும். தமிழ்க் கவிதை யினுள் நெடுங்காலமாகத் தொடரும் இந்த ஊற்று தமிழன்பனுக்குள்ளும் பொங்கி வழிவதைக் கண்டுணர்ந்து நாம் போற்ற முடியும்.

33

# ஒரு வண்டி சென்ரியு

ஜப்பானிய ஹைகூ கவிதை போல சென்ரியு என்பது இன்னொரு வகைக் குறுங்கவிதை ஹைகூ. இயற்கையிலிருந்து எடுக்கப்பட்ட காட்சிப் படிமங்களை மெய்யியல் உணர்வோடு வெளிப்படுத்தும் குறுங் கவிதைகள் என்று சொல்லலாம். சென்ரியு சமூகம், அரசியல் ஆகியவை குறித்து நகைச்சுவை உணர்வோடு, அங்கத உணர்வோடு வெளிப் படுத்தும் குறுங்கவிதைகள். நாளடைவில் இவ்விருவகைக் கவிதைக்கு இடையில் வேறுபாடுகள் மங்கிவிட்டன. ஹைகூவைக் காட்டிலும் சென்ரியுவில் செறிவு குறைவென்பதை வாசகர் உணரமுடியும். சென்ரியு என்ற பெயருடைய கவிஞர் எழுதியதால் இவ்வகைக் கவிதைக்கும் சென்ரியு என்ற பெயர் நிலைத்தது என்று ஆய்வாளர்கள் குறிப்பிடு கின்றனர். தேநீர் விடுதிகளிலும், மதுபானக் கடைகளிலும் ஒருவரோடு ஒருவர் போட்டி போட்டுக்கொண்டு இவ்வகைக் கவிதைகளைச் சொல்லும் மரபு ஜப்பானில் இயல்பாக இருந்திருக்கிறது. முக்கியமான ஒரு கவிஞர் அறைகூவலாகக் கவிதை வடிவில் ஒரு கேள்வியை முன்வைக்க, அதற்குப் பதில் சொல்லும் முறையில் பின் கவிதைகளைச் சொல்லுவார்கள். பின்னர் கவிதைகளைத் தொகுக்கும்பொழுது அறைகூவல் கவிதையைத் தொகுப்பில் சேர்ப்பதில்லை. இப்படி இன்னும் பல விவரங்களை நூலில் முன்னுரையாகக் கவிஞர் தமிழன்பன் குறிப்பிடுகிறார். ஜப்பானிய சென்ரியு கவிதைகளைப் படித்து அவற்றின் நயத்தில் தன் மனத்தைப் பறி கொடுத்த கவிஞர் தமிழன்பன், தொடர்ச்சியாக எழுதிய நூற்றுக்கு மேற்பட்ட கவிதைகளை இந்த நூலில் தொகுத்துத் தருகிறார். இங்கு ஒன்றை நான் குறிப்பிடவேண்டும். நூல் வெளியீடு குறித்த கால வரிசையில் ஒரு வண்டி சென்ரியு என்ற தொகுப்பிற்குப் பிறகு வெளியிடப்பட்டது சென்னிமலைக் கிளியோப்பாத்ராக்கள் என்ற 'லிமரைக்கூக்' கவிதைகள். ஆனால்

சென்னிமலைக் கிளியோப்பாத்ராக்கள் தொகுப்பைப் படித்த பிறகு ஒரு வண்டி சென்ரியு கவிதைகளை நான் படிக்க நேர்ந்தது. கவிஞர் தமிழன்பன் தன் எல்லாக் கவிதைத் தொகுப்புகளிலும் கடவுளைப்பற்றியும், அரசியல் விதிகளைப் பற்றியும் குழந்தைகள் பற்றியும் இயற்கை பற்றியும் விமர்சன முறையில் கவிதை தருகிறார். கடவுளைக் காட்டிலும் குருமார் சாதுரியம் படைத்தவர். கட்சித் தலைவர்க்கும் தொண்டர்களுக்குமுள்ள உறவுமுறை குழந்தைக்கும் பொம்மைக்கும் இடையிலான உறவு. இப்படிப்பட்ட கவிதைகளைத் தமிழன்பன் தொடர்ந்து எழுதுகிறார். சென்னிமலைக் கிளியோப்பாத்ராக்கள் தொகுப்பிலும் இவ்வகைக் கவிதைகள் நிறையவே இடம் பெறுகின்றன. நான் இங்கு விளக்கிச் சொல்லவேண்டியதில்லை. கூடியவரை இதே வகையிலான கவிதை இந்தத் தொடர்கவிதையிலும் இடம் பெறுகின்றன. கவிதைகளைத் தொடர்ந்து எழுதுவதைக் கைவிட முடியாத நிலையில் கூடியவரை ஒரே மாதிரியான கவிதைகளை எழுதுவது தவிர்க்க இயலாததுதான். ஒரே மாதிரி கவிதைகள்தானா என்று அழுத்திச் சொல்வதற்கு இடம் இல்லாத வகையில் அங்கங்கே மாறுதல்களும் இடம் பெறுகின்றன.

இன்னும் ஒன்றைக் குறிப்பிட வேண்டும். ஹைகூவிலும் லிமரைக்கூ விலும் நாம் கண்ட செறிவு; தமிழன்பனின் சென்ரியு கவிதைகளில் பெரும் பாலும் இல்லை. கவிதைகள் எளிமையாக உள்ளன. சற்று செறிவுமிக்க கவிதைகளும்கூட இரண்டாவது முறை வாசிப்பின்போது தம்மைத் திறந்து கொள்கின்றன. கவிதை வடிவத்திலும் நேர்த்தி சற்றுக் குறை வாகவே இருக்கிறது. கவிஞர்கூட இவற்றை இன்னும் நேர்த்தியாக– செறிவாக அமைத்து இருக்கலாம் என்று தோன்றுகிறது. ஒரு முறை படித்ததுடன், தன்னைப் புலப்படுத்திக் கொள்கிற கவிதைகளை இங்கு நான் மேற்கோள் காட்டி எழுதுவதைத் தவிர்த்துக் கொள்கிறேன். மாறாகக் கவித்துவமும் கூடியவரை அர்த்தச் செறிவும் உள்ள கவிதை களில் சுமார் 10/12 கவிதைகளை மட்டும் இங்குக் குறிப்பிட்டு எழுத விரும்புகிறேன். தேநீர்க் கடைகளிலும், மதுபானக் கடைகளிலும் எளிய மனிதர்கள் தமக்குத்தாமே களிப்பூட்டிக் கொள்ளும் முறையில் சொல்லுகிற அங்கதக் கவிதைகளில் அர்த்தச் செறிவும் கவித்துவமும் இருக்க முடியுமென்று வாசகர் எதிர்பார்ப்பதற்கில்லை என்று ஒருவர் பதில் கூறலாம். இத்தகையவர்கள் கருத்தை நான் புறக்கணிக்கவில்லை. ஒரு

வண்டி கவிதைகள் என்று தமிழன்பன் குறிப்பிடுகிறார். தொகுப்பி லுள்ளவை 192 கவிதைகள். ஆகவே ஒரு வண்டி என்ற தலைப்பின் பொருத்தப்பாட்டை நாம் புரிந்துகொள்ளலாம். இனிக் கவிதைகளுக்குள் செல்லலாம். முன்கூட்டியே ஒன்றைச் சொல்லி விடுகிறேன் இந்தக் தொகுப்பினுள்ளும் அற்புதங்கள் என்று சொல்லத்தக்க கவிதைகளும் இருக்கவே செய்கின்றன.

**ஊர்க்காசு தரும் அத்தை**
**ஊருக்குப்**
**புறப்படவே மாட்டாளா?**

மூன்று வரிகளில் அமைந்த இந்தக் கவிதையில் ஊருக்கு என்ற இரண்டாவது வரியைப் பிரித்துச் சொல்வதன் மூலம் அழுத்தம் கூடு கிறது. புறப்பட**வே** என்பதில் (வே) அழுத்தம் கூடுகிறது. கிராமத்து வாழ்வில் உறவுக்காக வந்த அத்தை ஊருக்குப் புறப்படும்பொழுது தவறாமல் குழந்தைகளுக்குக் காசு தந்து செல்வாள். குழந்தைகள்/சிறு வர்கள் காசை எதிர்பார்த்துக் காத்திருப்பார்கள். இரண்டொரு நாளில் அத்தை புறப்பட்டால் காசு கைக்கு வந்து சேரும். அத்தையை அவளது அன்புக்காக மட்டுமல்லாமல் காசுக்காகவும் குழந்தைகள் விரும்பு கிறார்கள். காசு கிடைத்தால் கடையில் ஏதாவது தின்பண்டம் வாங்கித் தின்னலாம். எளிமையான குடும்பம்; குழந்தைகளுக்கு ஏக்கங்களும் அதிகம். கிராமத்து வாழ்வில் இஃதோர் அற்புதமான அனுபவம். மூன்று வரிகளில் இது ஓர் அழகான காட்சி உணர்வு மிக்க கவிதை.

**சாத்தான் கட்சி**
**முதல் உறுப்பினர்**
**கடவுள்.**

கவிதையில் மூன்று வரிகள். மூன்றாகப் பிரித்து எழுதுவதன் பொருத்தம் இரசனைக்குரியது. இரண்டு வரியில் எழுதிப் பார்த்தால் கவிதையில் சுவை இல்லை என்று புரிந்துகொள்ளலாம். சாத்தான் தனக்காக ஒரு கட்சி கட்டுகிறான். இன்று கட்சி கட்டுபவர்கள் சாத்தான்களாகத்தான் இருக்கின்றனர். சாத்தான் கட்சியின் முதல்

உறுப்பினராகக் கடவுளே தன்னைப் பதிவு செய்து கொள்கிறார். கடவுள் இங்குக் கடவுளாக இல்லை. கடவுளுக்கும் சாத்தானுக்கும் வேறுபாடு இல்லை. மக்களை ஏமாற்றுவதில் இருவர் செய்வதும் ஒரே மாதிரி செயல்கள்தான். கடவுளை இணைத்துக் கொண்டால்தான் சாத்தான் கட்சிக்கும் மரியாதை கிடைக்கும். கடவுளும் சாத்தானும் தமக்குள் முரண்பட்டு நிற்பதாக மக்களுக்குக் காட்டிக் கொள்வதன் மூலம் மக்களைத் திறமையாக ஏமாற்ற முடியும்.

**வயதுகள்**
**என்ன செய்யும்? கேட்கிறான்**
**கிழவனாய்ப் பிறந்தவன்.**

இன்றைய சமூகச் சூழலில் இளைஞர்கள் என்று எவரும் இல்லை. இளமைக்கான துடிப்பு, உற்சாகம், ஆர்வம் என்ற குணங்களை இவர் களிடம் பார்க்கமுடியவில்லை. எல்லோர்க்குள்ளும் சோர்வு மண்டிக் கிடக் கிறது. நம்மால் என்ன செய்யமுடியும் என்ற மலட்டுத்தனம், கிழட்டுத் தனம் எல்லோரையுமே கிடத்தி இருக்கிறது. ஆகவே, பிறக்கும்பொழுதே இவர்கள் கிழவராகப் பிறக்கின்றனர். ஆனால் இவர்கள் பேசும் பெருமைக்கு அளவே இல்லை. 'எனக்கு வயதாகிவிட்டாலும் வயதுகள் என்னை எதுவும் செய்ய முடியாது. நான் ஆண்மையோடுதான் இருக் கிறேன். என்னால் எதுவும் செய்யமுடியும்' என்று வீராப்புப் பேசுவதில் இவர்கள் குறை வைத்துக்கொள்வதில்லை. வெட்டி, வீராப்புப் பேச்சில் தம்மை மறைத்துக் கொள்கிறார்கள். தம்முடைய வெறுமையை இவர்கள் காண மறுக்கிறார்கள். தமக்குள் ஆழ வேரோடி இருக்கும் வெறுமையை இவர்களால் காண முடியுமானால், இவர்கள் எப்படியாவது தன்னை என்றேனும் உயிர்ப்பித்துக்கொள்ள முடியும். நான் சங்கத்தமிழன், பெரியாருக்குப் பிறந்தவன் என்ற வீராப்புகள் இத்தகையன. இவன் பிணம். இவனை யாரும் உயிர்ப்பிக்க முடியாது. இன்றைய தமிழனைப் பற்றி அருமையான ஒவியம்.

**யார் சொல்லிக் கொடுத்தவன்?**
அடி பிள்ளைக்கு
வலி வாத்தியாருக்கு.

பையன் தமிழைத் தவறாக எழுதுகிறான். சரியாகக் கணக்குப் போடத் தெரியவில்லை. மகனை அப்பா திட்டுகிறார். யார் சொல்லிக் கொடுத்தவன் என்று திட்டிக் கொண்டே மகனை அடிக்கிறார். சொல்லிக் கொடுத்த ஆசிரியர் சரியாகச் சொல்லிக் கொடுத்திருக்க வேண்டும். 'எனக்கு நேரமில்லை, வகுப்பறையில் ஐம்பது மாணவர்கள், பொங்கல் போனஸ் இந்த ஆண்டு இல்லை' என்று ஆசிரியர் ஏதாவது காரணம் சொல்லலாம். காரணம் எப்படி இருந்தாலும் பையனுக்குச் சரியாக, தனிக்கவனம் செலுத்தி, ஒருமுறைக்குப் பலமுறை ஆசிரியர் கற்றுக் கொடுத்திருக்க வேண்டும். அப்பாவிடம் பையன் அடி படுகிறான். உண்மையில் பையன் வாங்கிய அடி ஆசிரியருக்குத்தான் உரியது. உண்மையான ஆசிரியர் இப்படித்தான் உணரவேண்டும். அப்பா, ஆசிரியரை அடிக்க முடியாது. ஆனால் பையனை அடிப்பதன் மூலம் ஆசிரியரைத்தான் அப்பா அடிக்கிறார் என்று ஆசிரியர் புரிந்து கொள்ள முடியும். அப்புறம் தன்னைத் திருத்திக்கொள்ள வேண்டும்.

**குருக்களாகிவிட்ட கடவுள்**
**மறுபடியும் கடவுளாகவில்லை**
**தட்டு நிறையக் காணிக்கை.**

குருக்களின் சாதுரியம், திறமை முதலியவற்றைக் கண்டு கடவுளே குருக்களாகிவிட்டார். கடவுளைவிடக் குருக்கள்தான் பெரியவர். குருக் களால்தான் கடவுள் கடவுளாக இருக்கிறார். குருக்களின் சாதுரியம் இல்லாவிட்டால் இவர் கல்லாகத்தான் இருப்பார். ஆகவேதான் கடவுள் தானே குருக்களாகிவிட்டார். மீண்டும் கடவுளாக மாறு என்றால் இவர் மாறவே மாட்டார். குருக்களான நிலையில்தான் தட்டு நிறையக் காணிக்கை கிடைக்கிறது. கடவுள் பெயரில் காணிக்கை கிடைக்கிறது. கடவுள் எடுத்துக் கொள்ள முடியாது. குருக்கள்தான் எடுத்துக் கொள்கிறார். கடவுள் ஏமாந்து போகிறார். தன்னைப் பெயர் சொல்லி, தனக்கு வந்த காணிக்கையைக் குருக்கள் கடத்தி விடுகிறார்.

**புத்தர் உதட்டில்**
**பூச்சி பக்கத்திலேயே**
**பல்லியும் தருணமும்.**

'புத்தர் உதட்டிலே பூச்சி' என்ற முதல் அடியும், 'பக்கத்திலே' என்ற இரண்டாவது அடியும், அப்புறம் மூன்றாவது அடியும் அமைந்திருக்கலாம். புத்தர் இன்னா செய்யாதவர். உயிர்க் கொலை செய்யாதவர். படத்தில் புத்தர் இருக்கிறார். சிலையாகப் புத்தர் இருக்கிறார். புத்தரின் உதட்டில் பூச்சி இருக்கிறது. தக்க தருணம் பார்த்துப் பல்லி பாய்ந்து பூச்சியைக் கவ்வுகிறது. புத்தர் பார்த்துக்கொண்டிருக்கிறார். புத்தர் முன்னிலையிலேயே உயிர்க்கொலை நடைபெறுகிறது. புத்தரால் பார்த்துக்கொண்டுதான் இருக்க முடியும். உயிர்க் கொலையைத் தடுக்க இயலாது. புத்தரை இப்படித்தான் மதவாதிகள் வைத்திருக்கிறார்கள். அவர் கண்ணை மூடிக்கொண்டால் நல்லது. உயிர்க்கொலைக்குக்கூடப் புத்தர் சாட்சி சொல்ல வந்துவிடக் கூடாது. மரியாதை வேண்டுமென்றால், புத்தர் அவருக்கு விதிக்கப்பட்ட இடத்திலேயே உட்கார்ந்திருக்கட்டும். பல்லியின் பசிக்குப் புத்தரால் வேறு எதைத் தரமுடியும்? புத்தரின் போதனையைப் பல்லிகள் ஏற்கும். நாமும்தான் ஏற்போம்.

**படிகளை**
**உடை**
**உச்சியின் உத்தரவு.**

குறுங்கவிதை – வடிவில் இன்னும் குறுகிவிட்ட கவிதை எனினும் கவித்துவச் செறிவு மிக்க கவிதை. இரண்டு வரிகளிலே கூட எழுதப் பட்டிருக்கலாம். குறை நேர்ந்துவிடாது. உச்சிக்கு ஏறிவிட்டவன் தன்னை ஏற்றிவிட்டவர்களைப் பார்த்துப் படிகளை உடையுங்கள் என்கிறான். படிகளிலிருந்து தனக்குப் போட்டியாக இன்னொருவன் ஏறிவந்து விடுவான். அப்புறம் தான் உச்சத்தில் இருக்கமுடியாது. உச்சத்தில் தான் மட்டும் இருக்க வேண்டும். தானேகூட இனி உச்சத்தை விட்டு இறங்க முடியாது. இப்படித்தான் அரசியலில், அதிகாரத்தில், கட்சிகளில் நடைபெறுகின்றன. தொண்டர்கள் தேவைதான், தலைவனைத் தூக்கி விடுவதற்கு. தலைவன் ஆனபிறகு தானே தலைவனாக என்றும் இருக்க வேண்டும். இனி தொண்டர்களும்கூடத் தேவையில்லை. ஒரு வேளை தன்னைப் பார்த்துத் தொண்டர்களில் எவருக்கேனும் பதவி ஆசை வந்து, படிக்கட்டுகளில் ஏறி வந்துவிடலாம். அதற்கு இடம் தரக்கூடாது. ஆகவே படிக்கட்டுகள் இனி தேவை இல்லை; உடைத்து விடலாம்.

**மலையிலிருந்து**
**இறங்கியவர்கள் கையில்**
**உயரங்கள்.**

சிரமத்தோடு ஏறி மலையின் உச்சிக்குச்சென்றார்கள். சிரமப்பட்டதன் விளைவாக அவர்களுக்குள்ளும் உச்சங்கள் வந்துவிட்டன. உச்சிகளில் தொடர்ந்து இருக்க வேண்டியதில்லை. கீழே இறங்கி வருகிறார்கள். மலையில் சிரமப்பட்டு ஏறி, இடையில் எத்தனையோ காட்சிகளைக் கண்டு தமக்குள் அனுபவங்களை நிறைத்துக் கொண்டு இவர்கள் உச்சிக்குச் சென்றவர்கள் – சிரமப்பட்டதன் காரணமாகவே இவர்கள் உச்சிக்குப் போனார்கள். இவர்களை யாரும் தூக்கிவிடவில்லை. யாருடைய தோளிலும் இவர்கள் ஏறிச் செல்லவில்லை. கால்வலிக்க ஏறிச்சென்றார்கள். இதன் காரணமாக இவர்கள் கீழே இறங்கி வந்த நிலையிலும் இவர்களுக்குள்ளும் உச்சங்கள், உயரங்கள் இருக்கின்றன. பெற்ற அனுபவங்கள், பார்வைகள், வெளிச்சங்கள் இவர்களுக்குள் தங்கி இருக்கின்றன. இவர்கள் இனி தரையில் நடந்தாலும் இவர்கள் உச்சங்களோடு உறவு கொள்பவர்கள். குன்று ஏறி யானைப் போர் கண்டவர்கள் இவர்கள். அந்தக் காட்சி இவர்களுக்குள் என்றும் தங்கி இருக்கும். இப்படித்தான் சான்றோர்கள் பெரிய மனிதர்கள் உருவாகிறார்கள், நம்மோடு உலாவுகிறார்கள்.

**அம்பு கூர்மையாய்**
**இருந்தென்ன**
**பார்வை?**

கவிதை சரியான வடிவம் பெறவில்லை. எனினும் அர்த்தச் செறிவுள்ள கவிதை. நம் கையிலுள்ள அம்பு கூர்மையாகத்தான் இருக்கிறது. அம்பு மட்டுமே கூர்மையாக இருந்து என்ன பயன்? அம்பைச் செலுத்துகின்றவனுடைய பார்வை கூர்மையாக இருக்க வேண்டும். இவனுடைய பார்வை சரியான இலக்கில் கூர்மையாகப் பதியவில்லை என்றால், அம்பு எங்குச் சென்று எதில் தைக்கும்? அல்லது எதனை வீழ்த்தும்? நமக்கும் தான் எந்த ஒரு செயலில் ஈடுபடும்பொழுதும் அதற்குரிய பார்வை

தேவை, இலக்குத் தேவை. இலக்கு இல்லாமல் அங்குமிங்குமாக ஓயாமல் அலைந்து என்ன பயன்?

**இறுக மூடிக்கொண்டன**
**பாட நூல்கள்**
**மாணவாபிமானம்.**

வாசிப்பவர் மாணவர்கள். தமக்குரிய பாடநூல்களை அக்கறை யோடு வாசிக்கவேண்டும். அதுதான் தங்களுக்கும் மரியாதை, பாட நூல்களுக்கும் மரியாதை. மாணவர்களுக்கு மரியாதை இல்லை. ஆகவே திறந்து பார்ப்பதைப் பாட நூல்கள் விரும்பவில்லை. அவற்றுக்குத் தன்மானம் உண்டு, மாணவாபிமானம் உண்டு. ஆகவே அவை தம்மை இறுக்கமாக மூடிக்கொள்கின்றன. அக்கறை இல்லாதவர், அ ந் நி ய ர் தன்னைத் திறந்து பார்ப்பதை மரியாதையுள்ள ஒரு பெண் விரும்பமாட்டாள். அவள் மானாபிமானம் உ ள் ள வ ள். இவளைப் போலத்தான் பாடநூல்களும். அக்கறை இல்லாமல் தன்னைத் திறந்து அழகு, வேடிக்கை பார்க்கிற ஒரு மாணவனைப் பாடநூல் விரும்ப முடியாது. பாடநூலுக்கும் மரியாதை, கற்பு உண்டு.

**உறுமீன் ஓட**
**ஓடும் மீன் பார்த்திருக்கும்**
**மக்கு.**

ஓடும் மீன் ஓட, உறுமீன் பார்த்திருக்கும் கொக்கு என்பது ஒரு பழங்கவிதை அல்லது பழமொழி. கொக்கு நீர்நிலையில் அசைவில்லாமல் கண்களை மூடிக்கொண்டிருப்பதைப்போலப் பார்த்துக் கொண்டிருக்கும். நீரில் மீன்கள் அங்குமிங்குமாக ஓடிக்கொண்டிருக்கின்றன. கொக்கின் அ ரு கி ல் சென்றுவிடக்கூடாது என்ற எச்சரிக்கை உணர்வோடு ஓடிக்கொண்டிருக்கின்றன. கொக்கு அசையவில்லை. எதையும் கொத்த வில்லை. எனவே இது கொக்கு அல்ல என்று நம்பி அருகில் வருகிற மீனை உடனே கொத்துகிறது கொக்கு. இந்தப் பழங்கவிதையின் வடிவத்தைக் கவிஞர் தமிழன்பன் மாற்றி அமைக்கிறார். அருகில் வரும் மீனைக் கொக்கு கொத்தவில்லை. ஓட விடுகிறது. ஓடுகிற மீனை

வெறுமெனப் பார்த்துக் கொண்டு இருக்கிறது மக்கு–முட்டாள் கொக்கு. பழங்கவிதையைப் புது வடிவத்திற்கு மாற்றுவதன் மூலம் வெளிப்படுவது அங்கதச் சுவை. இந்தத் தொகுப்பில் இது ஒரு வித்தியாசமான கவிதை.

**பான்சாய் மரங்கள்**
**துறட்டியோடு பழம் பறிக்கும்**
**மனிதன்.**

பான்சாய் மரங்கள் பற்றி நமக்குத் தெரியும். வளரும் செடி அல்லது மரத்திற்குக் குறைந்த அளவிற்கே உரம் இட்டுத் தண்ணீர் விட்டு, இலைகள், கிளைகள் முதலியவற்றைத் தொடர்ந்து வெட்டிவிட்டு வளரவிடாமல் வளர்த்து ஒரு அடி, அரை அடி உயரத்துக்குமேல் வளர்ச்சியைத் தடுத்து வைத்திருப்பது பான்சாய் மரம். ஜப்பானியத் தொழில் நுட்பத்தோடு வளர்க்கிற ஒரு கலைநுட்பம். குரூரமானது எனினும் வியக்கத் தக்க ஒரு கலை. ஒரு பெரிய ஆலமரத்தை ஒரு அடி அளவு குறுகிய அளவு பார்க்கிற ஒரு வியப்பு. இந்த மரத்திலும் பழுத்த பழத்தைத் பறிக்கிற ஒரு மனிதன் கையில் துறட்டியோடு காட்சியளிக்கிறான். பான்சாய் மரத்தைப் போல ஒரு மனிதனையும் குறைந்த அளவுக்குக் குறைந்த நீரும் கொடுத்து அரை அடி மட்டுமே வளர்த்திருந்தால் எப்படி இருக்கும்? மரத்தை வளர்க்கும்போது குரூரம் தெரியவில்லை என்றே வைத்துக்கொண்டால் மனிதன் இப்படி வளர்ந்தால் எப்படி இருக்கும்? குரூரம் கலையாவது உண்மைதானா? இப்படியும் ஒரு அழகியலை வியக்கவா முடியும்?

**தண்டனைகளை வைத்துக்கொண்டு**
**ஆளைத்தேடும்**
**விசாரணை.**

இன்றைய நம் சமூகத்தில் சட்டங்கள் என்பவை எவ்வளவு போலித்தனமாக, கேவலமாகச் செயல்படுகின்றன என்பதை வெளிப்படுத்து கின்ற ஒரு சிறப்பான கவிதை. தண்டனைகள் தீர்மானிக்கப்பட்டு விட்டன. யார் மீது இந்தத் தண்டனைகளை விதிப்பது? இந்தத் தண்டனைக்குரிய மனிதர்கள் யார் என்பதுபற்றிக்கூட ஆராய

வேண்டியதில்லை. இதற்கான விசாரணையும் இல்லை. எனினும் யாரை யாவது பிடித்துப் போலித்தனமான முறையில் விசாரணை செய்து தண்டனைகளை விதித்தாக வேண்டும். தண்டனைகளுக்காக யாராவது ஆட்களைக் கொண்டுவந்து நிறுத்தவேண்டும். விசாரணை செய்வது போல ஒரு நாடகத்தை நடத்த வேண்டும். தண்டித்து உள்ளே அனுப்ப வேண்டும். நீதிபதிகளுக்கு அக்கறை இல்லை. ஆட்களை உள்ளே தள்ள அவர்களும் துடிக்கிறார்கள். இப்படிச் சட்டங்கள் இங்கே செயல்படுகின்றன. கொடுங்கோன்மை அதன் எல்லைக்குப் போய்விட்டது. இப்படிச் சொல்கிறது இந்தக் கவிதை.

34

# *வார்த்தைகள் கேட்ட வரம்*

கவியரங்கக் கவிதைகளிலும் தனக்கெனத் தனிமுத்திரை பதித்தவர் கவிஞர் தமிழன்பன். அவரது கவியரங்கக் கவிதைத் தொகுப்பு நூல் களில் இதுவும் ஒன்று. தமிழ்க் கவிதைகளின் மறுக்கமுடியாத ஒரு பகுதியாகத் தமிழகத்தில் கவியரங்கக் கவிதைகள் இடம் பிடித்துவிட்டன. கவியரங்கக் கவிதைகளின் கவிதைத்தரம் குறித்து நமக்குள் மாறுபட்ட கருத்துகள் இருந்த போதிலும் இவற்றில் குறைந்த அளவுக்கேனும் கவிதைத் தன்மை இருப்பதை யாரும் மறுப்பதற்கில்லை.

கவிதை என்பது நெடுங்காலமாகவே தமிழ் மக்களின் உணர்வு ஓட்டங்களில் இன்றியமையாத ஒரு கூறாக இருந்திருக்கிறது. தாலாட்டு, ஒப்பாரி, வயல்வெளிப் பாடல்கள் முதலியவை பற்றி நானிங்குக் குறிப்பிட வேண்டியதில்லை. கவிதை உணர்வு என்பது மனிதர்களுக்கான இயல் பான ஒரு உணர்வு. தமிழ் மக்களுக்கு இந்த உணர்வு கூடுதலாக இருந்திருக்கவும் கூடும். காரணம், நாகரிக வரலாற்றில் தமிழர்களின்

தொன்மையான வரலாறு இப்படிச் சொல்வதற்குக் காரணமாக அமையக் கூடும். ஐந்து வகையான நிலச்சூழலில் வாழ்ந்தவர் தமிழர் என்பதும் இன்னொரு காரணம். சில வரலாற்று நிலவரங்கள், நெருக்கடி காரண மாகவும் தமிழ் மக்களின் உள் உணர்வில் கவிதைத் தன்மை கூடி இருக்கவும் இடமுண்டு. இவை பற்றியெல்லாம் நுணுக்கமான ஆய்வுகள் மேற்கொள்வதற்கு வாய்ப்புகள் இருக்கின்றன

'கவியரங்கம்' என்பது பெரும்பாலும் இருபதாம் நூற்றாண்டில் தமிழகச் சூழலில் தோன்றியதாக இருக்கக்கூடும். பட்டிமன்றம் என்ற அமைப்புக் குறித்தும் இங்கு நினைவு கூரலாம். சங்கத்தை அடுத்த காலத்தில் சமய வாதங்கள் பட்டிமன்றங்களில் நடைபெற்றன.

காவியம் முதலிய கவிதை நூல்கள் புலவர் பலர் கூடிய அரங்கு களில் படிக்கப்பட்டுச் சாதகமாகவும், பாதகமாகவும் கேள்விகளும் விடை களும் தரப்பட்டு இறுதியில் அந்த நூல்கள் புலவர்களால் ஏற்கப்பட்டன பற்றிய நூல் அரங்கேற்றம் குறித்த செய்திகளையும் நாம் அறிகிறோம். கவியரங்கம் என்பது இதிலிருந்து மாறுபட்டது எனினும், ஒரு வகையில் அம்முறையின் தொடர்ச்சி என்று கூறுவதற்கும் வாய்ப்பு உண்டு. இராமாயணம், பாரதம் முதலிய இதிகாசங்கள் கோவில், திருவிழாக்கள் முதலிய சந்தர்ப்பங்களில் கதாகலாட்சேபம் என்ற வடிவத்தில் நடைபெற்றது குறித்தும் அறிகிறோம். இங்கும் கவிதை குறித்து விளக்கங்கள் தரப்பட்டன. கவியரங்கம் என்பது இதிலிருந்தும் ஒரு மாறுபட்ட வடிவம் என்பதில் ஐயமில்லை.

இருபதாம் நூற்றாண்டில் மக்கள் மத்தியில் தமிழ் உணர்வு மேம்பட்டதற்கான காரணங்கள் பற்றி இங்குச் சொல்லவேண்டியதில்லை. பத்தொன்பது – இருபதாம் நூற்றாண்டுச் சூழலில்தான் தமிழை, தமிழின் மேன்மையைத் தமிழர்களின் வரலாறு, இலக்கியம் பற்றிய மேன்மையை மீண்டும் நாம் கண்டு கொண்டோம். தமிழுக்கு ஒரு மறுமலர்ச்சி, புத்தெழுச்சி ஏற்பட்டது. அரசியல் அரங்குகளில் மட்டுமல்லாமல் கோவில், கல்லூரி முதலிய இடங்களிலும் தமிழை, தமிழ் உணர்வை, தமிழ்க் காவியங்கள் குறித்த நம் உணர்வுகளைத் தமிழ் மக்களுக்குச் சொல்ல, அவர்களது உணர்வை மேம்படுத்த, அவர்களைத் திரட்டக் கவியரங்குகள் தோன்றி வீறுடன் செயல்பட்டன. தமிழ்ச் சமூகம் தவிர தமிழகத்திற்கு

வெளியே எங்கெல்லாம் இப்படி நடைபெற்று இருக்கக்கூடும் என்ற கேள்விக்கு நமக்குள் உறுதியான பதில் இல்லை. எனினும் தமிழுக்கும் தமிழ் மக்களுக்கும் உள்ள ஆழமான உணர்வோட்டம் காரணமாகத் தமிழ்ச் சமூகத்தில் கவியரங்கின் சிறப்பான இடம் குறித்து நாம் உறுதியாகச் சொல்ல முடியும்.

இத்தகைய தமிழகச் சூழலில் கவிஞர் தமிழன்பனும் கவியரங்கு ஏறியது குறித்து நாம் புரிந்துகொள்ள முடியும். கவியரங்கில் சிலநூறு மற்றும் ஆயிரக்கணக்கில் திரண்டுள்ள மாணவர்கள் மற்றும் மக்கள் மத்தியில் கவிதை பாடுவது குறுகிய வடிவில் இருப்பதற்கு வாய்ப்பு இல்லை. மக்களின் உணர்வுகளைக் கிளர்ச்சியுறச் செய்யவேண்டும். இதற்கு ஏற்றவாறு கதைக்கூறுகள், கற்பனை வளம் மிகை உணர்ச்சி முதலிய வற்றைக் கலந்துகொள்ள வேண்டும். கவியரங்கக் கவிதைகளின் இலக்கண வரையறைகள் என்று தொகுக்க இயலுமானால் இந்தக் கூறுகளை அடையாளம் காணத்தான் வேண்டும். இதன் காரணமாகவும் கவியரங்கக் கவிதைகள் நீள் வடிவம் பெறுகின்றன. எப்பொழுதெல்லாம் கவியரங்குகள் கூட்டப்படுகின்றன நடைபெறுகின்றன என்பது பற்றியும் நாம் சில சொல்லலாம். கல்லூரிகளில், தமிழ் இலக்கிய மன்றங்களில் தவிர்க்க இயலாமல் கவியரங்குகள் நடைபெறுகின்றன. தமிழ்ச் சமூகத்தில் இன்றைக்குப் பலருக்குத் தேவையான உணர்வுகளை மேம்படுத்தும் நோக்கிலும் இலக்கிய விழாக்களில் கவியரங்குகள் நடைபெறுகின்றன. வானொலி மற்றும் தொலைக்காட்சிகளில் பொங்கல் விழாவின்போது, தமிழ்ப் புத்தாண்டுத் தொடக்கத்தின்போது கவியரங்குகள் கூட்டப் படுகின்றன.

தமிழ்ப் புத்தாண்டின் தொடக்கம், பொங்கல் விழா என்றால் இயல்பாகவே நமக்குள் உணர்வுகள், கிளர்ச்சிகள் கொள்கின்றன. சென்ற காலத்துத் துயரங்கள் நீங்கி எதிர்காலத்திலேனும் நமக்கு இன்பங்கள் வாய்க்க வேண்டும் என்று நாம் விரும்புகிறோம். இத்தகைய உணர்வு எழுச்சிக்குக் கவிதைகள் வாய்க்கால் ஆகின்றன. தமிழகச் சூழலில் பாரதியார், பாரதிதாசன், வள்ளுவர், இளங்கோ முதலியவர்கள் குறித்து நாம் பெருமிதம் கொள்வதற்கு இன்னும் தேவைகள் உள்ளன. நமக்கெல்லாம் வள்ளுவன் முதலியவர்கள் பெரும் கவிதைகளாக,

காவியங்களாக நமக்குள் விளைந்துள்ளார்கள். தமிழ்ச் சமூகத்தின் வாழ்வியல் மேன்மை குறித்துச் சிந்திக்கிறபோது பெரியார், அம்பேத்கர், மார்க்ஸ் முதலியவர்களை நமக்குள், நம் உணர்வுகளுக்குள் தாங்கி மேம்படுத்திக் கொள்வதில் ஆர்வம் கொள்கிறோம். இவர்கள் எல்லோருமே தொன்மையான இருளில் இருந்து தமிழ்ச் சமூகத்தை விடுவிக்கவேண்டு மென்ற பேருணர்வோடு செயல்பட்ட புதிய வெளிச்சங்கள். இவர்களைப் பற்றி நினைக்கும்போதெல்லாம் நமக்குள்ளும் கவிதை பொங்குகிறது.

கவியரங்கில் கூடுவதற்கு முன்னரே பெரும் எதிர்பார்ப்புகள் நமக்குள் எழுகின்றன. மேடையில் கவிதை சொல்லும் கவிஞர்களின் உணர்வுகளோடு நாம் ஒத்து இயங்குகிறோம். கவிதை என்றவுடன் இயற்கை என்றும், வானம் என்றும், கதிரவன், நிலவு, விண்மீன்கள் என்றும், பறவைகள், மலர்கள் என்றும், ஆறுகள், கடல்கள், ஓசைகள், இயக்கங்கள் நமக்குள் எழுகின்றன. அதைப்போலவே குழந்தைகள், பெண்கள், காதல், வீரம், வெற்றி, தோல்வி, பெருமிதம் போன்ற வாழ்வியல் அனுபவத்தோடுகூடிய உணர்வுகளும் நமக்குள் கிளர்ச்சி கொள்கின்றன. நமக்குள்ளும் கவிதை பொங்க இடம் கொடுக்கிறோம். மேடையில் கவிதை சொல்லும் கவிஞர்கள் இயல்பாகவே நம்மை வசப்படுத்திக் கொள்ளவும் இடம் தருகிறோம். கவியரங்குகளில் ஆய்வு களுக்கு இடமில்லை என்றும் கூறுவதற்கில்லை. புதிய ஆய்வுகளை அதே வடிவில் சொல்வது உரைநடைக்கே தகும். ஆனால் புதிய ஆய்வுகளை உணர்வுமுட்டி, புதிய வெளிச்சங்கள் தரும்போது அவை கவிதைகள் ஆகின்றன. தமிழ்க் கவிஞர்களின் ஆய்வுத்திறன் மேம்படு வதற்கு ஒத்த முறையில் கவிதைத் திறனும் மேம்படுகிறது. மக்களும் இந்தப் புதிய வகை வெளிச்சங்களை ஏற்பதன் மூலம் தமக்குள்ளும் விரிவும் ஆழமும் அழகுணர்வும் பெறுகின்றனர்.

கவிதைகள் எப்பொழுதுமே சில நல்ல கூறுகளைக் இயல்பாகக் கொண்டு இருக்கின்றன. ஓசை, உணர்வு, எழுச்சி முதலியவை உடனடியாக நம் உணர்வைப் பாதிக்கின்ற கூறுகள். கவிதையில் மொழி நடை என்பது இன்னொரு முக்கியக் கூறு. சிலரது மொழி நடையை வெள்ளம் என்று பிரவாகம் என்று கூறமுடியும். தமிழைப் பொருத்தவரை மொழி நடையில் எத்தனையோ உச்சங்களை நாம் கண்டிருக்கிறோம்.

இன்றும் காணுகிறோம். இவை தவிரக் கவிதையிலிருந்து இயற்கையின் பேரழகை, அதைப்போலவே அற உணர்வைப் பிரித்துப் பேசவே முடியாது. இன்றைய சமூகச் சூழலிலும் அற உணர்வின் விளைச்சலை எத்தனையோ வடிவங்களில் நாம் காணுகிறோம்.

பாரதி என்றவுடன் சமதர்மம், மதச்சார்பின்மை, பெண்ணியம் முதலிய உணர்வுகள் நமக்குள் கொந்தளிக்கின்றன. பாரதிதாசன் என்றவுடன் தமிழ் உயிர்ச்சக்தி, அழகியல் மயக்கம், தமிழனின் வீறு முதலிய உணர்வுகள் நமக்குள் எழுச்சி கொள்கின்றன. இவர்களைப் போலத்தான் அமபேத்கர், பெரியார் என்னும் பெயர்களே பேரலைகள் எழுப்புகின்றன. நமக்குள் சாதி வேண்டாம், மதம் வேண்டாம், நாடு வேண்டும், விடுதலை வேண்டும் என்று எத்தனையோ உணர்வுகள். இவையெல்லாம் கவிதை என்ற உணர்வோடு பொங்கி வருகின்றன. அற உணர்வின் கூறுகளாகவே நாட்டின்மீதும் மொழியின்மீதும் நம் மக்கள்மீதும் நாம் கொண்டிருக்கிற பக்தி உணர்வுபற்றிச் சொல்லமுடியும். கடவுள், மதம் முதலியவற்றில் நமக்கு நம்பிக்கை இருக்கிறதோ இல்லையோ நாம் அனைவரும் தமிழ் என்ற தாயிடம், தமிழ்நாடு என்ற நம் தந்தையிடம் நாம் பற்றுக் கொண்டிருக்கிறோம். இவை பற்று என்பதைவிடப் பக்தி என்று சொல்வது பொருந்தும். அந்தளவுக்கு இவ்வகை உணர்வுகளுக்கு நாம் வசப்பட்டு இருக்கிறோம். சமத்துவம், சமதர்மம் என்ற உணர்வுகள் நெடுங்காலமாக நமக்குள் நீரோட்டங்களாக இருக்கின்றன. இந்த உணர்வுகளிலிருந்து நம்மைப் பிரித்துப் பார்க்க முடியாது.

தொகுத்து இப்படிச் சொல்லலாம் : தமிழோடும், கவிதையோடும், தமிழ்க் கவிஞர்களோடும், தமிழ் மக்களோடும், தமிழ் வரலாற்றோடும் நாம் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். இதன் காரணமாகக் கவியரங்கக் கவிதைகளில் இருந்தும் நாம் அந்நியப்படுவதற்கில்லை. எத்தனையோ வடிவங்களில் இயங்கும் தமிழ்க் கவிதையில் கவியரங்கக் கவிதை ஒரு வடிவம். கவியரங்கக் கவிதைகளிலும் எத்தனையோ சாதனையாளர்கள். இவர்களில் ஒருவர் என்று மட்டும் கவிஞர் தமிழன்பனைக் கூறுவதற்கில்லை.

சாதனை செய்துவரும் தமிழ்க் கவிஞர்களில் முன்வரிசையில், முதலில் இருப்பவர் தமிழன்பன். இவருடைய இந்தத் தொகுப்பிலுள்ள

எல்லாக் கவிதைகள் குறித்தும் இந்தக் கட்டுரையில் நான் எழுத வேண்டியதில்லை. பாரதியார், பெரியார் என்றவுடன் அதைப்போலவே புத்தாண்டு, பொங்கல் என்றவுடன் நமக்குள்ளும் எத்தனையோ விவரங்கள் நினைவில் எழுகின்றன. இவற்றை எல்லாம் தவிர்த்துவிட்டு ஒருவர் கவிதை சொல்லமுடியாது. தமிழன்பன் கவிதைகளிலிருந்து இந்த விவரங்களை மீண்டும் நான் தொகுப்பது தேவை இல்லை. வாசகர்கள் தமிழன்பன் கவிதைகளைத் தாமே வாசிக்கும்போது இவற்றை நினைவு கூர்வார்கள். இந்த விவரங்கள் வழியே தமிழன்பன் கவிதைகளில் வெளிப்படுகின்ற வேறுவகையான, உயர்வகையான சில பேருணர்வுகள் பற்றித்தான் இ ந் த க் கட்டுரையில் எழுத விரும்புகிறேன். இதன் காரணமாகவே இத்தொகுப்பில் உள்ள இ ரு ப து க் கு ம் மேற்பட்ட கவிதைகளிலிருந்து ஒருசிலவற்றை மட்டுமே நான் இங்குச் சொல்கிறேன்.

## *திருவள்ளுவர் திரும்பி வருகிறார்*

திருவள்ளுவரைக் குறித்து நாம் எவ்வளவோ பேசுகிறோம்; பெருமைப் பட்டுக் கொள்கிறோம். வள்ளுவரின் அறமும், பொருளும், இன்பமும் எத்தனை அற்புதமானவை என்றெல்லாம் மேடையில் முழங்குகிறோம். வகுப்பறைகளில் பாராட்டுகிறோம். இ ப் ப டி நாம் பெருமைப்படுத்திப் பேசும் வள்ளுவர் இன்றைய தமிழகச் சூழலில் திரும்பி வந்தால் அவர் என்ன செய்வார் என்ற கேள்வியோடு கவிஞர் தொடங்குகிறார்.

வேத நெறிக்கு எதிராக மனித நெறியை வள்ளுவர் நிறுத்தினார். விதியைக் காட்டிலும் மனித முயற்சி மேம்பட்டது என்றார். மலரினும் மெல்லிது காமம் என்று பாலுணர்வின் அற்புதம் குறித்து வள்ளுவர் பேசினார். நீதிமன்றங்களில் மட்டுமல்லாமல் எல்லார் வாழ்விலும் நேர்மை நடுநிலைமை தேவை என்றார். இப்படியெல்லாம் மனிதனை, தமிழனை மேம்படுத்த விரும்பி வள்ளுவர் எழுதினார். ஆழமான அர்த்தங்களை உள்வைத்துச் செறிவோடு குறள் வடிவில் பாக்களை இயற்றினார். எந்தப் பொருளை யார் சொன்னாலும் அதைப் பற்றிச் சுயமாகச் சிந்தித்து மெய்ப்பொருள் காணவேண்டும் என்று சிந்தனைக்குச் சுதந்தரம் தந்தார் வள்ளுவர்.

5.21.

இத்தகைய திருவள்ளுவர் இன்று திரும்பி வந்தால் தமிழகச் சூழலில் அவர் என்ன காண்பார்? இங்கு மதவெறி தலைவிரித்தாடுகிறது. விதி வலிமையுடையது என்று பலர் நம்புகிறார்கள். சிந்தனைக்கு எத்தனையோ தடைகள். திருக்குறள் கற்க வகுப்பறையில் மாணவர்கள் இல்லை. காமத்துப் பால் ஒன்று போதாது; நீதியை நிதி கொடுத்து வாங்கிவிடலாம். திரைப்பட நடிகர்களும் நடிகைகளும் தமிழ் மக்களின் நெஞ்சங்களில் நீங்காத இடத்தைப் பெற்றுவிட்டார்கள்.

இத்தகைய சூழலில் வாழ நேர்ந்தால் வள்ளுவர் என்ன ஆவார் என்று கவிஞர் சிந்திக்கிறார்.

வாசுகி என்ற நாட்டுப் பெண்ணை மணக்க விரும்புவாரா? மீண்டும் தறிக்குழியில் போய் அமர்வாரா? உள்படு கருமத் தலைவராய் அவர் பணிபுரிவாரா? இப்படி எல்லாம் வள்ளுவர் செய்யமாட்டார். காமத்துப்பால் ஒன்றல்ல; பலவற்றை எழுதுவார். எத்தனையோ பெரிய மனிதர்கள் புடைசூழச் செல்வச் சிங்காரியைத் திருமணம் செய்து கொள்வார். இன்னும் எவ்வளவோ செய்வார். இப்படிச் செய்பவர் வள்ளுவராக இருக்க முடியாது. திருக்குறள் தந்தவர் இப்படிச் செய்வார் என்று நாம் சிந்திக்க முடியாது. அப்படியானால் அவர் என்ன ஆவார்? கடற்கரையில் வள்ளுவர் சிலையைக் கட்டிக்கொண்டு அழுவார். இன்னொருவர் கிடைக்காததால் சிலையைக் கட்டிக் கொண்டு அழுவார் – அப்புறம் காணாமல் போய்விடுவார். இப்படிக் கவிதையை முடிக்கிறார்.

ஒருவேளை வள்ளுவர் திரும்பி வந்தால் நாம் அவரை எப்படி எதிர் கொள்வோம் என்று கவிஞர் சிந்திக்கிறார். சாக்கரடீஸ் திரும்பி வந்தால் அவரை வரவேற்க நஞ்சு கொடுப்போம்; இளங்கோ அடிகள் திரும்பி வந்தால் நம்மோடு சேர்ந்து அவர் என்ன செய்வார்? செங்குட்டுவன் ஆட்சி சரியில்லை என்று அதைக் கலைக்க முனைவார்; கம்பன் திரும்பி வந்தால் தன் காவியத்தை விற்று அம்பிகாபதிக்குச் செல்வம் சேர்த்து வைப்பார்; பாரதிக்கும் பாரதிதாசனுக்கும்கூட வேறு என்ன வரவேற்புக் கிடைக்கும்? வள்ளுவருக்கும் இங்கு வேறு என்ன மரியாதை கிடைக்கும்? இப்படிச் சிந்திக்கிறார் கவிஞர். கவிஞரின் கற்பனைத் திறம் நம்மில் சிலருக்குச் சுவை தரலாம். கவிஞர் அங்கதச் சுவையோடு அற்புத மாய் எழுதி இருக்கிறார் என்றும்கூட அவரைச் சிலர் பாராட்டலாம்.

அங்கதம் சிந்தனைக்கு ஓர் அழகு என்றும்கூட இவர்கள் இலக்கணம் செய்யலாம். ஆனால் நமக்கு இவ்வகைச் சிந்தனை உடன்பாடு இல்லை. பொன்னுக்கும் பொருளுக்கும் அதிகாரத்திற்கும் இன்பத்திற்கும் நாம் இடங்கொடுத்து நம்மை நாமே இழந்து விடுகிறோம். இழிவுபடுத்திக் கொள்கிறோம். நாம் இப்படிப்பட்டவர் என்பதால் வள்ளுவர் முதலியவர் களையும் நம் தரத்திற்கு இழுக்கத்தான் வேண்டுமா? வள்ளுவர் வள்ளுவராகவே இருக்கட்டும். ஒருவேளை அவர் இன்று திரும்பி வந்தால் நம்மைக் காயட்டும். நம் தவறுகளைக் குறை சொல்லட்டும். அரைகுறையாக அழிந்து கொண்டிருக்கும் தமிழ் மக்களின் நெஞ்சில் இன்னுமுள்ள உயிர்த்துடிப்பை அவர் தூண்டட்டும், திரட்டட்டும். வள்ளு வரைப் போலத்தான் இன்றும் நமக்கு இளங்கோவடிகளும், கம்பரும் தேவை. இவர்களோடு பாரதியும், பாரதிதாசனும் நமக்குத் தேவை. இவர்கள் அனைவரும் தாம் வாழும் காலத்தில் ஆதிக்கங்களுக்கு எதிராக நிமிர்ந்து நின்றவர்கள். மக்களோடு இணைந்து நின்று நீதி நெறியை நிலைநாட்ட முயன்றவர்கள். இவர்கள் எந்த அளவுக்கு வெற்றிபெற்றார்கள் என்பதும் முக்கியமில்லை. இவர்கள்தான் வரலாற்றில் மனித நீதியை நிலைநிறுத்தியவர்கள். இவர்கள்தான் வரலாற்றில் ஒளியாய், கலையாய் இன்றும் விளங்குகிறார்கள். இவர்கள் போட்ட தடத்தில் நாம் இன்றும் நடக்கிறோம். இவர்கள் நம் நெஞ்சில் இன்னும் உயிர்த் துடிப்போடு இருந்து நம்மை முன்செலுத்துகிறார்கள். எனினும் கவிஞரை ஒதுக்கிவிடலாமா? அற உணர்வில் செறிவு பெற்றிருந்த வள்ளுவரையும் இன்றைய சூழல் தடம் மாற்றிவிடும் என்ற கருத்தில் கவிஞர் எழுதுகிறார். இயலுமானால் நாம் சுவைக்கலாம். வள்ளுவர் மீது கவிஞர் தனக்குள்ள மரியாதையோடு கவிதை எழுதி இருக்கிறார். நாம் மறுக்கவில்லை.

## *வள்ளலார்*

வள்ளலாரைப் பற்றி ஒரு அற்புதமான கவிதையைத் தந்திருக்கிறார் தமிழன்பன். இதற்கு நிகரான இன்னொரு கவிதையை வள்ளலாரின் அன்பர்களில் எவரும் படைத்திருக்க முடியாது. வள்ளலாரைக் குறித்து விவரங்கள் பலவற்றை நாம் அறிவோம். இந்த விவரங்கள் இந்தக் கவிதையிலும் இடம்பெறுகின்றன. விவரங்கள் கவிதையாவதோடு,

உள்ளார்ந்த புதிய அர்த்தங்களும் வெளிப்படுகின்றன. இந்தப் புதிய அர்த்தங்களைத் தொகுப்பதற்காகவே விவரங்களையும் கட்டுரையில் சேர்க்கவேண்டியிருக்கிறது. வள்ளலாரை வடலூர் பெரியார் என்றும், பெரியாரை ஈரோட்டு வள்ளலார் என்றும் எடுத்த எடுப்பிலேயே கவிஞர் கூறுகிறார். இருவர்க்கிடையில் கால, இட வேறுபாடுகள் மறைய ஒரு உள்ளார்ந்த அர்த்தத்தில் இருவரும் கவிஞர் பார்வையில் இணைகிறார்கள். வள்ளலார் எங்கிருந்து, எப்படித் தோன்றினார், வளர்ந்தார் என்பதைக் கவிஞர் இவ்வாறு காண்கிறார்.

**வானமும் பூமியும்**
**பெற்றெடுத்த வள்ளலார். . .**
**காற்றும் கனலும் தாலாட்டி**
**வளர்த்த வள்ளலார். . .**

(வள்ளலார் உள்ளம் திறந்த பிரபஞ்சம். . . அதில் அருளுக்கென்ன பஞ்சம்) கவிஞர் கூறுவது முற்றிலும் உண்மை. வள்ளலார் தம் அருள் நெஞ்சத்தை எங்கிருந்து பெற்றார்? வானத்தையும் பூமியையும் சரியாக அர்த்தப்படுத்தும்போது அவற்றில் இருந்து அருள் என்னும் அர்த்தத்தை ஒருவர் பெறமுடியும். வள்ளலார் பெற்றார். அதைப் போலக் காற்றையும் கனலையும் கூட இப்படி அர்த்தப்படுத்த முடியும். பிரபஞ்சம் என்ற பெரு வெளியை – பேரியக்கத்தை உள்ளத்தில் வாங்கி நிறைத்துக் கொள்ள இயலுமென்றால் ஒருவர் வள்ளலார் ஆகமுடியும். இப்படித்தான் வள்ளலார் தோன்றினார், வளர்ந்தார். வள்ளலார் ஏழுகிணறு என்னும் ஊரில் தோன்றி எட்டாவது கிணறாய், அதற்கும் அப்பால் கடலாய் தனக்குள் விரிவு கண்டார். கருங்குழியில் தோன்றினாலும் தூய்மையானவராய் வாழ்ந்தார். இப்படிக் கவிஞர் பேசுகிறார்.

வள்ளலார் முடிசூடவில்லை. முக்காடு இட்டார் எனினும் ஆதரவற்றவர்களுக்கு அவர் சக்கரவர்த்தி. நதி தண்ணீரில் கலக்கவேண்டியது இல்லை. நதியே தண்ணீராகி ஓடுகிறது. அதைப்போல வள்ளலாரும் ஜோதியில் கலக்கவில்லை. அவரே ஜோதியாக இருந்தவர். வள்ளலாரை அவரது மாணவர்கள் அவரது இறுதிக் காலத்தில் ஜோதியில் கலந்தார் என்று சொல்வதைக் கவிஞர் ஏற்கவில்லை. ஜோதியாகவே இருந்தவர் வள்ளலார். அவரைப் பற்றி ஏன் புனைந்துரை செய்யவேண்டும் என்று கேட்காமல் கேட்கிறார் கவிஞர். பசிச் சிலுவையில் அறையப்பட்ட

வறியவர்களை மீட்க வந்தவர் வள்ளலார் என்று கவிஞர் குறிப்பிடும் பொழுது, கவிஞரின் பார்வையில் வள்ளலார் ஏசுவாகத் தென்படுகிறார். மகம்மது நபியைக் கல்லெறிந்து காயப்படுத்தினார்கள். ஆனால் அந்தக் கற்கள் சித்தி வளாகத்தில் கட்டிடமாய் மாறியது என்கிறார் கவிஞர். கவிஞர் பார்வையில் அருள் உள்ளம் காரணமாக நபியோடு ஒத்தவர் வள்ளலார். யாகத்தில் பலியிடப்படாமல் ஆட்டைத் தன் தோளில் தாங்கிக் காத்தவர் புத்தர் பெருமான். அந்த ஆடுகள் இப்பொழுது அச்சமில்லாமல் வள்ளலார் எழுப்பிய வடலூர் வளாகத்தில் ஆடித்திரிய முடியும். கடவுளுக்கு விலங்குகளைப் பலியிட்டனர் சமயவாதிகள். இவ்வகையில் சமயவாதிகள் கொடியவர்கள், பொல்லாதவர்கள். தனக்கு விலங்குகளைப் பலியிடுவதை எந்தக் கடவுள் ஏற்க முடியும்? சமயவாதிகள் போலிகள். சமயவாதிகள் சதிகாரர்கள். அவர்களைக் கண்டு கடவுளும் அஞ்சுகிறான். தூக்கிலிடும் தொழில் செய்பவனோடு அவனது மனைவி அருகில் படுத்து எப்படி அஞ்சாமல் உறங்க முடியும்? இப்படித்தான் கடவுளும் அஞ்சுகிறான். ஆகவே கடவுளை வள்ளலார் காப்பாற்றிக் கரையேற்றவேண்டி இருந்தது.

சமயவாதிகள் வாழ்க்கையிலிருந்து பி ண ங் க ளை உற்பத்தி செய்கிறார்கள். ஆகவே மதம் நாறத்தான் செய்யும். கடவுளைக் கொன்ற சமயம் நாறாமல் எப்படி இருக்க முடியும்? வள்ளலார் தனித்திரு என்றார், பசித்திரு என்றார், விழித்திரு என்றார். யார் இவற்றைக் கடைபிடிப்பார் கள்? ஆகவே வள்ளலார் கடையை மூடினார். ஒவ்வொருவர் மனத்திலும் ஒரு விளக்கை ஏற்றிவைக்கக்கூட இடமில்லை. மரணமில்லாப் பெரு வாழ்வை வள்ளலார் வேண்டினார். ஆனால் வாழ்வு இல்லாமலே மரண மாகிற மனிதர்களைக் கண்டு வருந்தினார். ஆகவே அவருக்கு மட்டும் மரணமில்லாப் பெருவாழ்வு எப்படித் தித்திக்க முடியும்? ஆலயங்கள் கட்டிப் பயன் இல்லை. அடியவர்களின் வயிற்றுப் பசி தணியவேண்டும். வயிற்றுப் பசியைத் தீர்க்காத சமயம் கோயில் கட்டுவதில் என்ன பயன்? அங்குக் கடவுளைக் குடியேற்றுவதில் என்ன நன்மை?

ஏழையின் சிரிப்பில் இறைவன் பிறக்கிறான். ஏழையின் கண்ணீரில் இறைவன் இறக்கிறான். ஏற்றும் தீப வெளிச்சத்தில் தெரிவது இறைவன் திருமுகம் மட்டுமா? வயிற்றுப் பசியால் துன்புறும் மனிதனின் முகம் தெரியவேண்டாமா? கருணை இல்லா ஆட்சி கடுகி ஒழிக என்று கூறும்

வள்ளலார் ஒரு புரட்சிக்காரர். அவர் கையில் பிடித்திருப்பது கலகக் கொடி. சாதி, மதம் முதலிய பேதங்களைச் சாடுகிற வள்ளலாரின் வரிகளில் பெரியார் தெரிகிறார்.

கவிஞர் இந்தக் கவிதையை இப்படி நிறைவு செய்கிறார்:

**தமிழனுக்கு இரண்டு கண்கள்**
**ஒன்று சைவம் வடலூரார்**
**மற்றொன்று அசைவம் ஈரோட்டார்**
**இரு கண்களும் உள்ள**
**தமிழனுக்கு இதயம்**
**வள்ளுவம்.**

வள்ளலாரை ஒரு தனிச் சமய வாதியென மாற்றி இருக்கின்றனர் வள்ளலாரின் தொண்டர்கள். வடலூரில் அணையா விளக்கை ஏற்றி வைத்திருக்கின்றனர்.

அருட்பெருஞ் சோதி என்று சோதியை வழிபாடு செய்கின்றனர். வறியவர்களுக்கு உணவு இடுகின்றனர். சமரசம் என்றும் சன்மார்க்கம் என்றும் ஓயாது பேசுகின்றனர். இவர்கள் ஒரு தனிக் குழுவினர். இதற்குமேல் இவர்கள் எதையும் சொல்வதில்லை. உலக அளவில் வறுமை ஒழிய வேண்டும். சாதி வெறி, மத வெறி ஒழியவேண்டும். இவர்கள் சொல்லும் சன்மார்க்கம் என்பது சமதர்மமன்றி வேறில்லை. ம. பொ. சி. அவர்களுக்கு சன்மார்க்கம் என்பது சமதர்மம். ஆனால் வள்ளலார் பக்தர்களும் வள்ளலாரை ஒரு சமயவாதியாக மாற்றி இருக்கின்றனர். உண்மையில் பெரியாருக்குத்தான் வள்ளலார் நெருக்க மானார். பெரியாரியச் சார்புடைய கவிஞர் தமிழன்பனுக்குத்தான் சரியான வெளிச்சத்தில் வள்ளலார் தெரிகிறார். விளக்கில் ஏற்றி வைப்பது மட்டும் சோதியா? பிரபஞ்சம் என்னும் பேரியக்கத்தில் நாம் காண்பது சோதி அன்றி வேறு என்ன? அந்தச் சோதிக்குள்தானே நாமும் கலந்து இருக்கிறோம். சமயம் என்பதற்குள் இந்த வெளிச்சம் அகப்படாதா? இப்படியெல்லாம் கவிஞரோடு சேர்ந்து நாமும் தேடலாம். பெரியார் ஒரு சமயவாதி அல்லர். ஆனால் வள்ளலாரைப் பெரியார் எப்படி மறுப்பார்? வள்ளலார் ஓரிடத்தில் நின்றுவிட அவர் நெறியை மேலும் தொடர்பவர்

பெரியார். அருட்பா X மருட்பா என்ற சர்ச்சையிலிருந்து வள்ளலாரையும் நாம் மீட்கத்தான் வேண்டும். கவிஞரின் இக்கவிதையை வள்ளலாரின் தொண்டர்கள் படித்து வள்ளலாரை மேலும் புரிந்து கொள்ளவேண்டும். பக்திப் பெருக்கில் வள்ளலாரைக் கரைத்துவிட வேண்டாம். வரலாற்றின் தடத்தில் சமூக நெறியின் சார்பில் வள்ளலாரை நிறுத்தவேண்டும். வள்ளலாரும் அங்கே நின்றுகொண்டிருக்க மாட்டார்.

## *பட்டுக்கோட்டைக்கு ஒரு பாட்டு*

பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் தமிழ்த் திரைக் கவிதைகளில் செய்த புரட்சியைப் போலவே தமிழ்க் கவிதைக்குப் புதுப் பொழிலும் பார்வையும் தந்தான். ஏற்கெனவே தமிழ்க் கவிதை பாரதி, பாரதிதாசன் மூலம் தமிழ் மக்களுக்கு நெருக்கமாக வந்திருந்தது எனினும், இவற்றின் தமிழ் இலக்கியத் தமிழ். நெடுங்காலத் தமிழ்க் கவிதை மரபில் ஊறி வந்த இவர்கள் இலக்கியத் தமிழைத் தம் தரத்திற்கு ஒத்தமுறையில் மக்களுக்கு நெருக்கமாகக் கொண்டுவந்ததன் மூலம் தமிழுக்கும், தமிழ் இலக்கியத்திற்கும் புத்துயிர் தந்தனர். இவர்களோடு தமிழ் இலக்கிய வாதிகளால் ஒத்த மதிப்பும் மரியாதையும் பெற்ற கல்யாணசுந்தரம் பாமர மக்களின் மொழியிலிருந்து தமிழ்க் கவிதையைப் வடித்தார். இதன் மூலம் பாமரமக்களின் நெஞ்சில் குடியேறினார். ஒருவகையில் பாரதிக்கும் பாரதிதாசனுக்கும் தமிழ் மக்கள் மத்தியில் கிட்டாத மரியாதையைக் கல்யாணசுந்தரம் பெற்றார். இன்னொரு வகையிலும் இதைச் சொல்ல லாம். மக்களை நெருங்கிச் செல்வதில் சாதனை புரிந்தவர்கள் பாரதியும் பாரதிதாசனும் ஒரு வகையில் நடுத்தர வர்க்கத்தினர். ஆனால் கல்யாண சுந்தரமோ மக்களின் அடித்தளத்திலிருந்து விளைந்தவன். மக்களின் தமிழில் ஊறியவன்.

கவிஞர் தமிழன்பன் இந்தக் கவியரங்கக் கவிதையின் தொடக்கத் திலேயே பட்டுக்கோட்டையாரைப் இப்படித்தான் நமக்கு அறிமுகப்படுத்து கிறார்:

**பாரதி**
**பாரதிதாசனிடம்**
**இலக்கிய வழக்குத் தமிழ்**

மக்களை நோக்கி
மலையருவிகளாய்ப்
பொழிந்தது
பாமரன் தமிழ்
பட்டுக்கோட்டை
பாட்டில் ஒரு
கடலாக முழக்கம் செய்தது

இந்தக் கவியரங்கக் கவிதையில் கல்யாணசுந்தரத்தின் திரைப் பாடல்கள் பலவற்றை எடுத்துரைப்பதோடு, தமிழ்ச் சமூகம் பற்றிய விமர் சனங்களையும் கூர்மையாக வெளிப்படுத்துகிறார். திரைப்படங்களில் உணர்வைத்தூண்டும் பாடல்கள் பவனிவந்த நிலையில் கல்யாணசுந்தரமும் காதலைப் பாடினார். எனினும் அவர் பாடல்களில் இரட்டை அர்த்தங்கள் இல்லை. ஆபாச உணர்வுகள் இல்லை. பொதுவுடைமைக் கட்சியோடு உறவு கொண்டவர் கல்யாணசுந்தரம். கிராமப்புரத்து ஏழை உழவர்களின் வாழ்க்கையில் எப்பொழுது மாற்றம் வரும் என்று ஏங்கியவர். ‘‘காடு விளைஞ்சென்ன மச்சான், நமக்குக் கையுங் காலுந்தானே மிச்சம்’’ என்று பாடிய வரிகளில் உழவர்களின் துயரம் மிகத் துல்லியமாக வெளிப்பட்டது. தமிழ் மக்கள் நெடுங்கால உறக்கத்தில் ஆழ்ந்து கிடப்பதைச் சொல்லவந்த பட்டுக்கோட்டையார் ‘‘தூங்காதே தம்பி தூங்காதே’’ போன்ற பாடல்களைப் பாடினார். மூடநம்பிக்கைகளில் ஆழ்ந்திருந்த மக்களுக்கு விழிப்புணர்வு ஊட்டும் முறையில், ‘‘வேப்ப மரத்து உச்சியிலே ஆடும் பேய்களைப் பற்றிய கதைகளை நம்பி நம் குழந்தைகள் அஞ்சி இருந்துவிடக் கூடாது’’ என்று பாடினார். வளர்ச்சி என்றால், ‘‘ஆளும் வளரணும் அறிவும் வளரணும்’’ என்று பாடினார்.

பட்டுக்கோட்டையின் பாடலோடு நாம் இன்றும் வாழ்ந்துகொண் டிருக்கிறோம். ஏராளமான பாடல்கள் இன்றும் நம் நெஞ்சில் ஒலிக்கின்றன. இவையனைத்தும் கிராமத்து மண்ணின் மனத்தோடு கிராமத்து மக்களின் வாழ்வியல் எளிமையோடு நமக்குள் உணர்வு அலைகளை எழுப்புகின்றன.

இதற்கு என்ன பொருள்? கிராமத்திலிருந்து, கிராமத்து மக்களிட மிருந்து நாம் நெடுந்தொலைவு வந்துவிட்டோம். கிராமத்தைச் சுரண்டி,

கிராமத்து உழவர்களைத் துயரங்களுக்கு உள்ளாக்கி, அவர்களிடமிருந்து பிரிந்து நாம் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். பட்டுக்கோட்டையார் பாடல் களை அவற்றின் எளிமைகளுக்காக– உணர்வுகளுக்காக இரசிக்கிறோம், பழகி இருக்கிறோம். கவிதை மற்றும் இசை இரசனை இல்லாமல் நமக்கும் வாழத்தான் முடியாது. பட்டுக்கோட்டையார் நம்மிடமிருந்து இந்த இரசனை யையா, பாராட்டையா எதிர்பார்த்திருப்பார்? நாம் சிந்திக்க வேண்டும். நாட்டுப்புற இயல் பற்றிக் கடந்த இருபது ஆண்டுகளுக்கு மேலாக நாம் படித்து வருகிறோம். நாட்டுப்புறக் கலைகளை நகரச் சூழலில் வைத்து நாமும் பெருமைப்படுத்திப் பேசத்தான் செய்கிறோம். கிராமத்து மண்ணில் முளைத்த கிழங்கை அதன் வேரொடு இலைகளோடு பறித்து நகரச் சூழலில் காட்சிக்கு வைக்கிறோம். கிராமத்துக் கலைஞர்களை நகரத்து மேடைகளில் ஆடவும் பாடவும் வைத்து இரசிக்கிறோம். அவர் களுக்கு ஏதோ ஆதரவு தந்துவிட்டதாகவும் நமக்குள் மன நிறைவு கொள்கிறோம். பட்டுக்கோட்டையார் பாடல்கள் நம்மைப் பார்த்து என்ன கேட்கின்றன? நீங்கள் எந்த வர்க்கத்தினர்? யார்மேல் அமர்ந்து இருக் கிறீர்கள்? உங்கள் இரசனைக்கு வாழ்வில் என்ன ஆதாரம்? உங்கள் இரசனையின் மூலம் யாரைப் பெருமைப்படுத்துகிறீர்கள்? அல்லது இழிவு படுத்துகிறீர்கள்? பட்டுக்கோட்டையாரை இத்தகைய இரசனையின் மூலம் பெருமைப்படுத்துகிறோமா அல்லது இழிவுபடுத்துகிறோமா?

கவிஞர் தமிழன்பனின் இந்தக் கவிதையிலிருந்து பொதுவாக அழகியல் அல்லது தமிழ்க் கவிதையின் அழகியல் பற்றி ஒரு நுட்பமான உண்மையை நாம் அறிந்து கொள்கிறோம். தமிழன்பன் கேட்கிறார், பட்டுக்கோட்டையார் பாடலுக்குள் கவிதையும் அழகும் வந்து சேர்வதற்குமுன் அவை எங்கிருந்தன?

**அவன் கவிதைகள்**
**கம்மாக்கரையில்**
**பூத்திருந்தன**
**கஞ்சிக் கலயத்தில்**
**வேர்த்திருந்தன**
**சோளக்காட்டுக்**
**கதிர்களில்**

சொல் சொல்லாய்
உட்கார்ந்திருந்தன;

கண்ணீரில்
செந்நீரில்
அவன் சொந்தம்
இருந்தது;

கதிரெடுத்துப் போகவந்த
சிட்டுக் குருவிகளின்
சிறகுகளில் அவன்
சந்தம் இருந்தது.

இப்படித் தொடரும் கவிதையில் கல்யாணசுந்தரம் பாடிய தமிழ்த் தாய் யார் என்பதைக் கவிஞர் தமிழன்பன் எடுத்துரைக்கிறார். அவர் பாடிய தமிழ்த்தாய் நகரத்து மாதர் சங்கத்தில் உதட்டுச் சாயம் பூசி உலாவரவில்லை.

சும்மாட்டில்
குடம் சுமந்து
தெம்மாங்கு பாடிக்கொண்டே
சிற்றூரில் ஒற்றையடிப் பாதையில்
நடந்தவள்.

தமிழன்பன் தொடர்ந்து கூறுகிறார். கம்பரையும் திருத்தக்க தேவரைக் காட்டிலும் கிராமத்துப் பெண்ணின் நலுங்குப் பாடல்கள் அவருக்கு மிகவும் பிடிக்கும் என்கிறார். பட்டுக்கோட்டையின் பாடல்கள், சந்தங்கள் அவர் கவிதைக்குள் வருவதற்கு முன்பே வயல் காடுகளில், கம்மாங்கரையில், சோளக்கதிர்களில், சிட்டுக் குருவிகளில், நலுங்குப் பாடல்களில் இருந்தன என்று கவிஞர் தமிழன்பன் கூறுவதில் உள்ள உண்மை நமக்குத் தெரிய வேண்டும்

கவிதைகள் கவிஞர்களின் நெஞ்சிலிருந்து அவர்கள் கற்ற இலக்கியங்களிலிருந்து வருபவைதாமா? கவிஞர்களின் நெஞ்சுக்குள் வரும் கவிதைகளுக்கு மூலங்கள் எவை? தமிழன்பன் சரியாகத்தான் சொல்கிறார்.

கிராமத்து மண்ணும் வயல்வெளிகளும் கம்மாக்கரைகளும் சோளக்காடும் இயல்பாகவே கவிதைகளாகவே இருக்கின்றன. அங்கு உழைக்கும் பெண்கள், கவிதை வடிவங்கள், கவிதை இயக்கங்கள். வாழ்க்கையில் இருந்து கவிதைகள் பிறக்கின்றன என்பது பொய்யல்ல. இயற்கை நமக்குள், உழைப்பு நமக்குள், உறவுகள் நமக்குள் கவிதையைக், கற்பனையை, அழகியல் உணர்வைத் தருகின்றன. கவிதையிலிருந்து இன்னொரு கவிதையைப் படி எடுப்பவருக்கு இந்த உண்மை உடனடியாகத் தெரியாது. வானத்தோடும், பூமியோடும், காற்றோடும், பறவைகளோடும், கிராமத்து மக்களோடும் உறவுகொள்ளும்போது நமக்குள் கவிதைகள் இயல்பாய் விளைகின்றன. இயற்கையோடு கலந்தும், கரைந்தும் இருக்கிறவர் நெஞ்சில் கவிதை பூப்பதில் வியப்பில்லை. பட்டுக்கோட்டையும் இப்படித்தான் கவிதைகளைக் கண்டெடுத்தார் என்று தமிழன்பன் நமக்குச் சொல்கிறார். நாமும் புரிந்து கொள்கிறோம். ஆகவே நாம் என்ன செய்யவேண்டும்? கவிதைகளைத் தேடி இயற்கைக்குள் செல்ல வேண்டும். வாழ்வுக்குள் செல்லவேண்டும். இதிலிருந்து நமக்கு இன்னொரு உண்மை தெளிவாகிறது. திருக்குறள், சிலப்பதிகாரம் முதலிய இலக்கியங்களைக் கற்பதற்கு, பொருள்படுத்துவதற்கு அவற்றை நமக்குள் செரித்துக்கொள்வதற்கு மக்களை நோக்கி – வாழ்வியலை நோக்கிச் செல்லவேண்டும். வகுப்பறைகளை விட்டும் செல்லவேண்டும்.

## *ஜீவா*

ஜீவா பற்றிக் கவியரங்கக் கவிதையைத் தொடங்கும்போதே ஓர் அழகான உத்தியைக் கையாள்கிறார். இந்தக் கவியரங்கிற்குத் தலைமை தாங்க வேண்டியவர் வராததால் நான் தலைமை தாங்குகிறேன் என்று பேசுகிறார். உண்மையில் இந்தக் கவியரங்கத்திற்குத் தமிழன்பன்தான் தலைவர். ஆனால் ஜீவாவைப் பற்றிப் பாடுவதற்குப் பட்டுக்கோட்டையார் வந்திருக்கவேண்டும். அவர் இப்போது உயிரோடு இல்லை. ஆகவே நான் வந்திருக்கிறேன். இப்படித் தமிழன்பன் சொல்வதன் மூலம் பட்டுக்கோட்டையாரைச் சரியாகவே பெருமைப்படுத்துகிறார். அன்றியும் ஜீவா என்ற தோழரைப், பொதுவுடைமைவாதியை மானுடனைப் பாடுவதற்கு எல்லாவகைகளிலும் தன்னைவிட ஏற்றவர் பட்டுக்கோட்டையார். இப்படிச்

சொல்வதன் மூலமும் ஜீவாவையும் நமக்குச் சரியாகவே அடையாளப் படுத்துகிறார் தமிழன்பன்.

ஜீவாவின் பெருமைகளை, சாதனைகளை, உயர் பண்புகளை நாமும் அறிவோம். ஜீவா இலட்சியங்களுக்காக வாழவில்லை. இலட்சிய மாகவே வாழ்ந்தார் என்கிறார் தமிழன்பன். கம்பன் கவிதைகளுக்குள் ஜீவா செல்லும்போது செங்கோடியோடு செல்வார். கங்கைக் கரையில் கம்பனோடு கைகோத்துக் கொள்வார் – கம்பனுக்குள்ளும் பொது உடைமையைக் கண்டுரைப்பார். இப்படித்தான் பாரதியோடு தோழமை கொண்டார் ஜீவா. தமிழோடு ஜீவா வாழ்ந்தார். இப்படி எல்லாம் எடுத்துரைக்கும் தமிழன்பன் ஜீவாபற்றி முத்தாய்ப்பாய் ஒரு உண்மையைச் சொல்கிறார். ஜீவா அரசியல்வாதியா? இல்லை. அவர் ஒரு மானுடன். ஜீவா இலக்கியவாதியா? இல்லை. அவர் ஒரு மானுடன். மானுடனாக இருந்த ஜீவா அரசியல்வாதியாக இலக்கியவாதியாக இருந்தார். இப்படிக் கவிதையை முடிக்கிறார். தன்னை மானுடனாக உணர்ந்தவர் அரசியலில் ஈடுபடாமல் இருக்கமுடியாது. இலக்கியவாதியாக இல்லாமலும் இருக்கமுடியாது. கம்பனை ஒரு மானுடன் என்று பாரதி கண்டறிந்தார். இராமனுக்குள் மானுடம் வளர்ந்தது என்று கம்பர் கூறினார். மானுடன் என்ற சொல் ஆழமான பொருளில் இவர்களால் பயன்படுத்தப்பட்டது. வரலாற்றில், மக்கள் வாழ்க்கையோடு தன்னைக் கரைத்துக் கொண்டவன் மானுடன். தேசமென்றும், மொழி என்றும், விடுதலை என்றும் அலைபவன் மானுடன். அறம் இவன் வாழ்வின் உயிர்க்குணம். ஆகவே இவன் அரசியல்வாதி மற்றும் இலக்கியவாதி. இவனுக்குள் ஆறும் கடல்களும் கரைபுரண்டு ஓடும். வானமும் நிலவும் இவனுக்குள் வந்துபோகும். உயிர்கள் இவனுக்குள் தழைக்கும். இவன்தான் சரியான அரசியல்வாதி, இலக்கியவாதி. இவனுக்குள் அரசியலும் இலக்கியமும்கூட ஒற்றை முகத்தோடு இணைந்து இருக்கும். தமிழன்பன் ஜீவாவை சரியாகவே நமக்கு இனம் காட்டுகிறார்.

ஜீவாவை ஒரு மானுடன் என்று இனங்காட்டும் கவிஞர் தமிழன்பன் ஜீவாவையே ஒரு கவிதையென, காவியமென விவரிக்கிறார். ஜீவாவைப் பாடும்பொழுது உயிர் எழுத்துகளும் மெய் எழுத்துகளும் உண்மைபாகவே உயிராய் மெய்யாய்ச் சிலிர்த்து எழுகின்றன என்கிறார். தேமா, புளிமா

முதலிய சீர்வகைகள் ஆமாம் ஆமாம் என்று தாளம் போடுகின்றன. ஜீவாவைப் பற்றிய கவிதைக்குள் வீசுவது மானுட வாசம். ஜீவாவை, அவரது எளிமை கருதி ஓடை என்று சொன்னால் ஆறு வந்து சீறும் என்கிறார் கவிஞர். அவரது ஆழம் கருதி கடல் என்று சொன்னால் அவரது விரிவுக்கு நானல்லவா சரியான உவமையாவேன் என்று வானம் வந்து கோபிக்கும் என்கிறார் கவிஞர். அவரது நெஞ்சை நினைத்து நிலா என்று சொன்னால் அவருக்குள் எரியும் நெருப்புக்கு நானல்லவா உவமை என்று சூரியன் வந்து சொல்வான் என்கிறார். ஆகவே ஜீவா வுக்கு உவமை சொல்ல முடியாது. ஜீவாவுக்கு ஜீவாவே உவமை என்கிறார் கவிஞர்.

ஜீவாவுக்குள் இலக்கியம் இருந்தது . இசை இருந்தது. ஆறு இருந்தது. கடல் இருந்தது. வானம் இருந்தது. நிலவு இருந்தது. சூரியனும் இருந்தது. இவ்வகையில் எல்லாவற்றையும் உள்ளடக்கிய கவிதையாக ஜீவா இருந்தார். கவிதை என்பதைச் சொற்களின் ஓசையில் உவமைகளில் மட்டும் இனங் காண்பது எப்படிக் கவிதையாகும்? வானமும் நிலவும், ஓடையும் ஆளும் கவிதையின் பல்வேறு வடிவங்கள் என்பதும் உண்மை தான். இவற்றை மனிதனுக்கு வெளியில் வைத்து மட்டுமா காண்கிறோம். மனிதனுக்குள் இவை ஓடுகின்றன, பாய்கின்றன. ஒரு மனிதன் இந்த அளவுக்குத் தன்னை விரித்துக் கொள்ளவும், ஆழப்படுத்திக் கொள்ளவும், அழகையும், ஆற்றலையும் பெற இயலுமானால் அவனையும் கவிதை என்றும், காவியம் என்றும் சொல்வதில் என்ன தவறு? இந்த நெடும் கவிதையில் இன்னொரு பகுதி இவ்வாறு இயங்குகிறது.

“வானவில்லை ஜீவா இரசிப்பார் – ஆனால் வளைந்த கலப்பையை வரவேற்று வாழ்த்துவார்.” “வான மழையைப் போற்றுவார் – ஆனால் வேர்வையையே நேசிப்பார்.” மலைகளின் அழகு அவர் மனம் கவரும்... ஆனால் சேறு தெறித்த உழவன் தோளையே முத்தமிடுவார். மிருதுவான மலர்களை விரும்பாமலா இருப்பார்? விரும்புவார். – ஆனால் சொரசொரப் பான பாட்டாளியின் கைகளையே கண்களில் ஒற்றிக் கொள்வார்.

“தொல்காப்பியனும் திருத்தக்கதேவரும் சேக்கிழாரும் ஜீவா வீடு தேடி வருவார்கள்... ஆனால் ஜீவா... போராட்டத்தில் சிறைப்பட்ட

பாட்டாளிகளைப் பார்க்கப் போயிருப்பார்;" "மூல இலக்கியம் மனிதன் என்று அறிந்ததால் முதல் மரியாதையை மனிதனுக்கே தந்தார் ஜீவா;" "பூ மலரவில்லையே என்றல்ல... மனிதன் புன்னகைக்கவில்லையே என்றுதான் கொந்தளித்தார்..." தேயும் பிறைகண்டு ஜீவா தேம்பவா நேரம் இருந்தது? காய்ந்த வயிறு கண்டு கவலைப்படவே நேரம் போத வில்லை. கவிதை கண் திறந்தது கண்டு களிப்படைந்ததைவிட மனிதன் கண்ணை மூடியதைக் கண்டு அவர் கலங்கியதே அதிகம். சந்தனம் கமழவில்லையே இலக்கியத்தில் என்று சிலர் சங்கடப்பட்டனா. ஜீவா, 'சமுதாயம் இப்படி நாறுகிறதே' என்று வேதனைப்பட்டார். எட்டுச் சுவையும் இலக்கியத்தில் பெய்து வைக்க வேண்டும் சிலருக்கு... ஜீவாவுக்கு என்ன விருப்பம்? கஞ்சிக் கலயத்தில் – ஓர் உப்புக் கல்லாகவேனும் இப்போதைக்கு இலக்கியம் வந்து விழாதா என்பதுதான்.

இப்படிச் செல்கிறது தமிழன்பனின் கவிதை. கவிதைக்கு / இலக்கியத் திற்கு மூலம் எது என்று தேடினால் மனிதனைத்தான் சொல்ல முடியும். மனிதனின் வாழ்க்கையை ஒதுக்கிவிட்டு இலக்கியம் என்று எதைப் பற்றியும் பேசமுடியாது. மனிதன் தன் உழைப்பினால்தான் உலகத்தைப் படைக்கிறான். வாழ்வைப் படைக்கிறான். வாழ்வின் அர்த்தங்களை– அழகைப் படைக்கிறான். இவன்தான் எல்லாவற்றிக்கும் பொருள் சொல் கிறான். ஆகவே இவன்தான் இலக்கியத்திற்கு மூலம். இவன்தான் அசலான இலக்கியம். இவன் உழைப்பாளி, போராளி.

எல்லோருக்குமான உலகத்தை இவன்தான் படைக்கிறான். இவன் தான் தன் உயிரைக் கொடுத்தும் மக்களை வாழ்விக்கிறான். இவன்தான் வானவில்லில் அழகு காண்பவன். இவன்தான் கடல் அலைகளை இரசிப் பவன். இவன் உழைப்பாளி. இவனால் சோம்பி இருக்கமுடியாது. இவனது உழைப்பு அழகு, இவனது வேர்வை இனியது. உலகம் அழிவதை இவன் ஏற்கமாட்டான். உலகை ஒரு சிலர் அகப்படுத்திக் கொள்வதை இவன் தாங்கமாட்டான். இவனுக்கு எளிய வாழ்க்கை போதும். காடு கரைகளில் இவன் உழைப்பவன். இவனுக்குக் கூழும் நீரும் இனியவை. உயிர்களோடு உறவாடித் தன்னில் அன்பை விளைவித்துக் கொள்பவன். சுருக்கமாகச் சொன்னால் இவன் மானுடன். கம்பர் இந்த மானுடனைத்தான் காவிய மாக்கினார். இளங்கோவும் கண்ணகியின் வடிவத்தில் இவனைத்தான்

படைத்தார். வள்ளுவரின் சான்றோன் இந்த மானுடந்தான். தமிழ் இலக்கியத்தில் இந்த மானுடனை இனம் கண்டு சொன்னவர் ஜீவா. இவரால் தான் தமிழ் இலக்கியம் உயிர்பெற்றது. அழகு பெற்றது. பொதுவுடைமை பேசியது. ஜீவாவை நாம் என்றும் மறப்பதற்கில்லை.

## கி. ஆ. பெ. என்னும் விந்தைத் தமிழன்

19ஆம் நூற்றாண்டின் இறுதியில் பிறந்து 20ஆம் நூற்றாண்டின் இறுதிவரை வாழ்ந்த அசலான தமிழன் கி. ஆ. பெ. விசுவநாதன். திருச்சி என்றால் மலைக்கோட்டை நினைவுக்கு வருவதைப்போலவே தமிழனின் நினைவுக்கு கி. ஆ. பெ.வும் வருவார். எதையும் எண்ணி, எண்ணிக்கை இட்டுப் பேசுபவர். வள்ளுவரின் சிந்தனைகளைக் கணக்கிட்டு ஓயாமல் சொல்லும் அவரது நா, எப்பொழுதும் வெள்ளையுடையில், நீண்ட நெடிய தோற்றந்தோடு காட்சி தருபவர். குறித்த நேரம் தவறாமல் எதையும், எங்கும் எப்பொழுதும் செய்பவர். தமிழைக் குறித்தும், தமிழனைக் குறித்தும் ஓயாமல் சிந்தித்தவர்.

இத்தகைய அரியதொரு அசலான தமிழரைப்பற்றித் தமிழன்பன் கவிதை பாடுகிறார். அவரது பிறந்த நாளைக் கொண்டாடும் முறையில் எழுதப்பட்டது இந்தக் கவிதை. ஒரு அசலான தமிழனை இனம் காட்ட 21ஆம் நூற்றாண்டிலும் அவர் இருக்கவேண்டுமென்று கவிஞர் வாழ்த்து கிறார். திருச்சியில் தனது சமாதியை அவரே வடிவமைத்து வைத்திருந் தார். அந்தச் சமாதி அப்படியே இன்னும் நெடுங்காலம் இருக்கட்டும் என்கிறார் கவிஞர்.

கவிதையில் கி. ஆ. பெ. அவர்களைப் பற்றிப் புகழ்ந்துரைக்கும் கவிஞர், தமிழனின் இன்றைய அவல நிலை குறித்தும் உருக்கமாகச் சொல்கிறார். "தமிழுக்கு உன் பெயர் தெரியும், ஆனால் இன்றைய தமிழனுக்கு உன்பெயர் தெரியாது" என்று தொடங்குகிறார் கவிஞர். கலையுலகத் தேவதைகளை நெஞ்சில் நினைத்திருக்கும் தமிழனுக்கு கி. ஆ. பெ.வின் பெயர் தெரியாததில் வியப்பில்லை. தேவாரத்தை நினைக்கும்போது "பொன்னார் மேனியன் கி. ஆ. பெ.;" "அருட்பாவை நினைக்கும்போது "கோடையில் இளைப்பாற்றிக் கொள்ளும் குளிர்தரு

நிழல் "கி. ஆ. பெ." இந்த அளவுக்குத் தமிழோடு தமிழுக்குள் வாழ்பவர் இவர்.

இலக்கியத்தில் எழுத்தாய்க் கிடந்த சங்கத்தமிழன் எழுந்து வந்தான் இவர் வடிவில். அரசனுக்கு அறம் உரைத்த கோவூர்கிழார் கி. ஆ. பெ. வாசுகிக்குத் தெரியாமல் வள்ளுவர் பெற்றெடுத்த அருமைக் குழந்தை இவர். அழகிய ரோஜாவுக்கு அரிதாரம் தேவை இல்லை. அதைப்போல ஒப்பனை இல்லாதது எனினும் எளியது, அழகியது இவரது பேச்சு. வைகறைகூடத் தனக்கான நேரத்தை இவர் எழுச்சி கண்டு திருத்திக் கொள்ளும்.

20ஆம் நூற்றாண்டில் தமிழன் எப்படித் தனக்குள்ளே சிதைந்து அழிந்துகொண்டிருந்தான் என்பதைக் கி. ஆ. பெ. நன்கு அறிவார். "தமிழைக் காப்பாற்றக் கட்சிகள் அமைத்தோம்; பிறகு கட்சிகளைக் காப்பாற்றத் தமிழை இழந்தோம்" "தமிழனைக் காப்பாற்ற அரசுகள் கண்டோம். அதன்பின் அரசுகளைக் காப்பாற்றத் தமிழனை இழந்தோம்." தமிழனைக் கிழித்துப்போட்ட சாதிகளைத் தமிழைக் கொண்டு ஒட்டி வைக்க முயன்றோம். வெளியார் நட்டுவைத்த பார்த்தினியங்கள் எங்கெங்கும். தமிழனைப் பிடித்த கிரகணம் எப்போது நீங்கும்? தமிழ் நாட்டில் தமிழுக்கு இடம் எப்பொழுது கிட்டும்? வாக்குப் பெட்டிகளில், கோவில் உண்டிகளில் தன்னைத்தானே புதைத்துக் கொள்கிறான் தமிழன். தமிழன் சவப் பெட்டியில் கிடக்கிறான். இவனுக்கு உணர்வில்லை. தமிழன் இன்னொரு தமிழனின் விலா எலும்பை வெட்டி எடுத்துத் தனக்கு நாற்காலி செய்து கொள்கிறான். கங்கையைப்போல், கவிதையுடைய தமிழன் இன்று கூவத்தைப் பிறப்பிக்கிறான். இவனது தோள்கள் யார் யாருக்கோ பல்லக்கைச் சுமக்கின்றன.

இது தமிழனின் இன்றைய நிலை. கி. ஆ. பெ.வுக்குப் பிறந்த நாள் கொண்டாடுகிறோம். இது அவருக்குக் கொண்டாடும் பிறந்த நாள் அல்ல. தமிழன் தன்னை, தன் முன்னைய உயர்நிலையைத் தனது இன்றைய தாழ்நிலையை நினைத்துக் கொள்வதற்கான பிறந்த நாள். இது தமிழனுக்கான பிறந்த நாள். தமிழுக்கான பிறந்த நாள். கி. ஆ. பெ. வின் வடிவில் தமிழனை நினைத்துக்கொள்கிறோம். தமிழைக் கொண்டாடுகிறோம். அவர் நெடுங்காலம் வாழட்டும். இப்படி முடிவு

பெறுகிறது இந்தக் கவிதை. தமிழை ஒருவர் காப்பாற்ற முடியாது என்பது உண்மைதான். ஆனால் கி. ஆ. பெ. வி.ன் முன்னிலையில் தமிழன் தலைகுனிந்து நிற்கமாட்டான். கட்சி அரசியலுக்குத் தன்னைப் பலியிடமாட்டான். சாதிமதப் பேய்களுக்குத் தன்னில் இடங்கொடுக்க மாட்டான். சங்கத் தமிழனை அவனால் மறக்க இயலாது. வள்ளுவரை அவனால் ஏமாற்ற முடியாது. கி. ஆ. பெ. வி.ன் முன்னிலையில் தமிழன் தன்னைத் திறந்து கொள்வான். தன் குற்றங்குறைகளை எண்ணிப் பார்ப்பான். தனது புதைகுழியைத் தானே தோண்டிக்கொள்ள மாட்டான். தலைநிமிர்ந்து கொஞ்ச நேரமாவது இவன் நிற்பான். கி. ஆ. பெ. வி. இந்தளவுக்குத் தமிழனைப் பாதித்தவராய் வாழ்ந்தார். இவர் ஒரு அசலான தமிழர் என்பதில் ஐயமில்லை.

கி. ஆ. பெ. வி. வாழ்ந்த காலத்தில் தமிழன்பன் இந்தக் கவிதையை எழுதினார். இன்று கி. ஆ. பெ. வி. இல்லை. இந்த 21ஆம் நூற்றாண்டில் யாரை முன்னிறுத்தித் தமிழன் தன்னை, தன் வாழ்வை உறுதிப்படுத்திக் கொள்ள இயலும்? இந்தக் கேள்விக்குத் தமிழன்பன் என்ன சொல்வார்? இந்தக் கவிதையில் தமிழன்பன் கட்சிகளைச் சாடுகிறார். சாதி, மதங் களைச் சாடுகிறார். வாக்குப் பெட்டிகளை, கோவில் உண்டிகளைச் சாடு கிறார். கூடவே அவருக்குள் ஒரு நம்பிக்கை; தமிழை வைத்துத் தமிழனை மீட்க முடியுமா? சாதிக்குள், மதங்களுக்குள் தமிழ் அகப்படவில்லை; கோவிலுக்குள் கட்சி அகப்படவில்லை; தமிழுக்கு இப்படி ஒரு தனி ஆற்றல் உண்டு. நாம் என்ன செய்யப் போகிறோம்?

## *எத்தனை கோடி இன்பம்!*

சென்னை மீனாட்சிக் கல்லூரியில் பாரதி விழா கொண்டாடியபோது, மாணவிகள் முன்னிலையில் கவிஞர் தமிழன்பன் இந்தக் கவிதையைப் பாடி இருக்கிறார். 'எத்தனை கோடி இன்பம் வைத்தாய் இறைவா?' என்பது பாரதியின் ஒரு கவிதை. பாரதியைப்போலக் கல்லூரி மாணவியர்களும் இந்த உலகில் இன்பங்காண வேண்டும் என்ற கருத்தோடு இந்தத் தலைப்பு அவருக்குக் கொடுத்திருக்கலாம்.

இந்தத் தொகுப்பில் உள்ள கவிதைகளில் உணர்ச்சி மிக்கது இந்தக் கவிதை. பாரதி என்றவுடன் உணர்ச்சி வெள்ளம் கவிஞரை

B.22.

அடித்துக் கொண்டு செல்கிறது. தமிழைத் தொழுது படிப்பவருக்கும் சொல்லில் தமிழ்ச் சொல்லே இனிது என்பவருக்கும் தெருவெல்லாம் தமிழ் முழக்கம் செழிக்கச் செய்பவர்களுக்கும் மட்டுமே என் வணக்கம். மற்றவருக்கு இல்லை என்று ஆவேசத்தோடு கவிஞர் தொடங்குகிறார். பாரதி விழாக் கொண்டாடும் பாரதி புத்திரிகளைக் கண்டு அற்புதமாய் அவர்களோடு பேசுகிறார்.

பாரதியின் பேத்திகளே என்று கல்லூரி மாணவிகளை விளித்துக் கவிஞர் பேசுகிறார். பாரதியின் உணர்வோட்டம் கல்லூரி மாணவியர் களுக்குள்ளும் இயல்பாகப் பொங்கும் என்ற உணர்வோடு கவிஞர் கூறுகிறார். ‘‘நீங்கள் நலிந்த நாளாயினி கனவுகளோ, சிதைந்த சீதைச் சித்திரங்களோ அல்ல. கண்ணீரின் கர்ப்பத்தில் பிறந்த கண்ணகி சோகங்களாகவும் நீங்கள் இருக்க முடியாது. எந்தப் பழைய கவிதையின் புதுப் பதிப்பாகவும் நீங்கள் இல்லை. பாரதி கூறியபடி இன்று புதிதாய்ப் பிறந்தவர்கள் நீங்கள். இனி வரும் எல்லாப் புதுமைகளுக்கும் நீங்கள் மூலங்கள். பழைமையின் இருளோ, தூசு தும்புகளோ உங்களிடம் படிந் திருக்கமுடியாது. அவற்றையெல்லாம் விரட்டிய நிலையில் இன்று புதிதாய்ப் பிறந்திருக்கிறீர்கள்.

பாரதி பேத்திகளே நீங்கள் இனி கண்களில் மைதீட்டிக் கொண் டிருக்க முடியாது. பட்டொளி வீசும் பகல்கொடியைப் பாரதி உங்களிடம் கொடுத்திருக்கிறான். அதைக் கையில் தாங்கி இருக்கிற நீங்கள் இருளிடம் எப்படிச் சரணாகதி அடைய முடியும்? ஆகவே பழைமைக்கு நீங்கள் அடிமையாக முடியாது. விடுதலைச் சிறகுகள் உங்களுக்கு வாய்த்திருக்கின்றன. இன்று தமிழ் தந்துள்ள கவிதைகளை, பாரதியின் கவிதைகளை என் படகில் ஏற்றி வந்திருக்கிறேன். கரையில் நீங்கள் இறக்கிக்கொள்ளுங்கள். இவை உங்களுக்கான கவிதைகள். பாரதியிடம் காதுக்கு ஜிமிக்கி கேட்காதீர்கள். கைகளில் ஏந்த அவனிடம் ஆயுதம் கேளுங்கள். வாள்கள் தயாரிக்கும் பட்டறை பாரதியின் கவிதைகள். அங்கு வளையல்கள் தயாரிக்கப்படுவதில்லை. அவனிடம் கனவுகளைக் கேட்காதீர்கள். விழிப்பைக் கேளுங்கள். அவன் கிழக்கை உங்களுக்காகத் திறந்துவைப்பான். எவ்வளவு வேண்டுமோ எடுத்துக் கொள்ளுங்கள். நீங்கள் புயலின் புதல்விகள். ஒளியைப் புரிந்துகொள்ள பாரதியிடம்

செல்லுங்கள். மூர்க்கத்தனம் மிகுந்தது இன்றையச் சமூகம். நீங்கள் ரோஜாக்களாக இருந்தால் போதாது. முள்ளாகவும் இருக்கப் பழகிக் கொள்ளுங்கள். இடிகளின் கைகளில் இன்று அதிகாரம் இருக்கிறது. தம்புராவின் தங்கைகளாக நீங்கள் இருக்கமுடியாது. சீறும் கடலின் அலைகளிலிருந்து முழக்கங்களையும் சேகரியுங்கள். பாரதி உங்களிடம் இவற்றை எதிர்பார்க்கிறான். நளினங்களோடு நீங்கள் வாழமுடியாது. பாரதியின் பேத்திகளுக்குப் புதிய வாழ்க்கை வேண்டும். பாரதி வேண்டியபடி இன்று நீங்கள் புதிதாய்ப் பிறந்திருக்கிறீர்கள். பழைமைக்கு உங்களிடம் வேலை இல்லை. அதிகாரம் உங்களிடம் இனி ஆதிக்கம் செய்யமுடியாது.

இப்படி, கவிஞர் தமிழன்பன் கல்லூரி மாணவிகளிடம் பாரதியின் புத்திரிகள் பிறப்பெடுக்க வேண்டுமென்று உணர்ச்சிகரமாகத் தூண்டு கிறார். காலத்தில் எதிர் நீச்சல் போடக் கற்றுக் கொள்பவர்களுக்குத்தான் இந்த உலகில் கோடி இன்பங்கள் உண்டு. அந்தக் கோடி இன்பங்கள் எவை என்பதையும் கவிஞர் தன் கவிதையில் சுட்டுகிறார். பழைமையில் இருந்து – ஆதிக்கங்களிலிருந்து – இருளிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்வது பேரின்பம். சிட்டுக் குருவியோடு ஒட்டிப் பறக்க முடிந்தால் உண்மை தெரியும். வானம் இனியது. காற்றும் இனியது. பறத்தல் இனியது. வீட்டில் பொந்துகளில் அடைபட்டுக் கிடப்பதில் இருந்து விடுதலை பெற்று நீங்கள் வீதிக்கு வந்தீர்கள். நிமிர்ந்த நடையோடு நேர்கொண்ட பார்வையோடு, திமிர்ந்த ஞானச் செருக்கோடு நடையிட்டு நீங்கள் மேற்செல்ல வேண்டும். பங்கீட்டுக் கடைகளில், வாக்குப் பெட்டிகளில் நீங்கள் உங்களை இழந்துவிட முடியாது. புலன்களின் போதையில் உங்களை மூழ்கடித்துக் கொள்ள முடியாது. நீங்கள் விடுதலை பெற்ற வர்கள். உங்களிடம் மணம் இருந்தால், காற்று அதைத்தானே பரப்பும். நீங்கள் விளக்குகளாக இருங்கள். இருளை அந்த விளக்கின் ஒளி தானே விரட்டும். உடைந்து நொறுங்கும் விலங்குகள் உங்கள் துணிச்சலைத்தானே வெளிப்படுத்தும். வீர விளையாட்டாய் உங்கள் வாழ்க்கை விளங்கட்டும். இன்பம் ஒரு கடலாக உங்கள் முன் கொட்டிக் கிடக்கிறது. நீங்கள் அலையாக மாறினால் அந்தக் கடலை அனுபவிக்க முடியும். மலை குனியட்டும் என்று நீங்கள் காத்திருக்க வேண்டிய தில்லை. உச்சியில் உங்களால் கொடி ஏற்ற முடியும். நீங்களே கடலாக

இருக்கிறீர்கள். வானமாக இருக்கிறீர்கள். உங்களுக்கு வந்துசேரும் இன்பத்திற்கு அளவு இல்லை.

மழையின் அர்த்தம் மேகங்களில் கரையும்போது உங்களுக்குப் புரியும். காற்று இனியது. கொடியின் அரும்புகளைத் திறந்து அதன் நறுமணத்தைக் கொண்டு வரும்போது காற்று இனியது. சிட்டுக் குருவி களுக்கு வாய்த்திருக்கிற ஞானம் நமக்கு வாய்க்க வேண்டும். சிட்டுக் குருவிகளுக்கு யாரும் பள்ளிகள் வைக்கவில்லை. பாடம் புகட்டவில்லை. சிட்டுக்குருவிகளுக்கு வானமே சொந்தம். இசையைக் கேட்பதைக் காட்டிலும், இசையாகவும் நம்மால் இயங்க முடியும். இரவு முழுவதும் மெழுகுவர்த்தி உருகி ஒளி தருகிறது. நாமும் பாடிக்கொண்டே இருப்போம், இரவு விடியும்வரை. பாடும் குயில்கள், ஓடும் நதிகள், ஆடும் மயில்கள் யாரிடமும் பாடம் கற்றுக் கொள்ளவில்லை. அவை தாமே ஆடுகின்றன; ஓடுகின்றன; பாடுகின்றன. நாமும் குயிலாய், மயிலாய் இருந்து பாடுவோம்; ஆடுவோம். கட்டுக்களிலிருந்து விடுபட்டு நாமும் சிட்டுக்குருவிகளாகிச் சிறகு விரிப்போம். பாரதியின் பேத்திகளுக்கு வானம் வழிவிடும். தடைகளைத் தகர்த்துக் கொண்டு உங்களால் பறக்க முடியும்.

இப்படிக் கவிதையை முடிக்கிறார் தமிழன்பன். இவையெல்லாம் உண்மைதானா என்ற கேள்வியும் நமக்குள் எழுகிறது. நாம் கனவு காண்கிறோமா என்ற ஐயம் நமக்குள் எழுகிறது. வாழ்க்கை என்றால் என்ன என்ற கேள்வியில் தொடங்கினால் அப்புறம் வானம் அளவுக்கு நமக்குள் விரிவு கூடும். காற்றிலிருந்து, ஒலியிலிருந்து கற்றுக் கொள் வோம். அதிகாரங்கள் நம் வாழ்க்கையை அழிக்கின்றன. அர்த்தம் இழக்கச் செய்கின்றன. அதிகாரத்திற்கு இடம் கொடுத்தால் அழிந்து போவோம். நமக்கு வாழ்க்கை தேவை. இசை தேவை. நம்மால் பறக்க முடியும், பாட முடியும்; இந்த உண்மையைத்தான் பாரதி நமக்குக் கற்றுத் தருகிறான். பாரதியின் வாழ்க்கைக்குள் எத்தனை துயரங்கள், தடைகள்? எந்த இடத்திலாவது பாரதி தங்கினானா? தடைகளைக் கண்டு பாரதி அஞ்சினானா? கிடைத்த இன்பங்கள் போதுமென்று மதிமயங்கி மற்றவர் காலடியில் விழுந்து கிடந்தானா? பாரதிக்கு வாய்த்த ஞானம் பாரதி வழியாகவேனும் நமக்கு வாய்க்காதா என்ன?

சிட்டுக் குருவி பாரதிக்குக் கற்றுக் கொடுத்ததை அவர் மூலமாவது நாம் கற்றுக்கொள்ள மாட்டோமா? இப்படி கற்றுக்கொள்ளத் தொடங்கினால் எத்தனை கோடி இன்பம் என்று நம்மாலும் பாடமுடியும். பாரதியை நாம் இழந்துவிட முடியாது. பெண்களுக்கு மட்டும்தான் இந்த ஞானத்தைக் கற்றுக் கொடுத்தான் என்பதில்லை. பாரதியின் வழியாக நாம் அனைவரும் கற்றுக் கொள்கிறோம். தமிழன்பனும் நமக்குப் பாரதியைக் கற்றுத் தருகிறார். புதிய உலகம் நமக்குத் தேவை. இருளைத் தகர்த்துக் கொண்டு அதற்குள் முடங்கிக் கிடக்கிற உலகைப் புதியதாய் நம்மால் மீட்கமுடியும்.

## *ஊருக்கு நல்லது சொல்வேன்*

பாரதியார் 10 ஆண்டுகள் வாழ்ந்த ஊர்; பாரதிதாசன் பிறந்து வளர்ந்த ஊர். இந்த ஊரில் கவிஞர்களுக்குப் பஞ்சமில்லை. இந்தக் கவிதை ஊரில் கவிஞர் தமிழன்பன் இந்தக் கவிதையைப் பாடி இருக்கிறார். ஊருக்கு நல்லது சொல்வேன் என்ற பாரதியின் ஒரு கவிதைத் தலைப்பில் தன் சிந்தனைகளைச் சொல்லுகிறார் கவிஞர். சிந்தனைகள் அடுக்கடுக்காய்த் தொடர்கின்றன. ஒன்றைச் சொல்லிவிட்டு அதைவிட இன்னொன்று என்று கவிதையை வடிவமைக்கிறார். பெரியது அரியது என்பதைச் செய்வதைக் காட்டிலும் இந்தச் சிறியதை உடனே செய்க என்ற முறையில் கவிதை சொல்கிறார். ஊருக்குச் சொன்னால் போதாது தனக்கும் சொல்லிக் கொள்ளவேண்டும் என்றும் இடையில் சொல்லு கிறார். நீளத் தொடரும் இந்தக் கவிதையிலிருந்து தலைப்போடு ஒட்டிய ஒரு பகுதியை மட்டும் இங்கு நாம் எடுத்துக் கொள்கிறோம். நம் தேசத்தின், நம் சமூகத்தின் இன்றைய நிலவரம் கருதி இதையேனும் செய்தால் போதும் என்ற உணர்வோடு கவிஞர் சொல்லுகிறார்.

இனி இந்தக் கவிதையிலிருந்து சில அடுக்குகளைச் சொல்லலாம்: “கல்வியைப் பரப்புவது நல்லது; அதைவிடக் கடையில் கல்லில்லா அரிசி கிடைப்பது நல்லது.”

“ஆலைகள், சாலைகள் வைப்பது நல்லது; அதைவிட அவற்றில் ஊழல்கள் உற்பத்தி ஆகாமல் விளக்கெண்ணெய் கண்ணில் விட்டுக் கவனிப்பது நல்லது”

''கடமையும் ஒழுக்கமும் நல்லது, தடைபடாமல் குழாயில் தண்ணீர் வருவது மிகமிக நல்லது.'' ''பணிவும் கனிவும் உலகுக்கு நல்லது. அதைவிடத் துணிவிலை குறைந்தால் யாருக்கும் நல்லது.'' ''குட்டுப் படாமல் குனியாமல் வாழ்வது நல்லது. அதைப் போல் வெட்டுப் படாமல் மின்சார விநியோகமும் நல்லது.'' ''அபத்தப் பழக்கங்கள் அசட்டு வழக்கங்கள் அகற்றப்படுவது நல்லது. அதற்குமுன் விபத்துகள் இல்லாமல் விடிந்து ஒரு நாள் முடிந்தால் எவ்வளவு நல்லது.'' ''சொர்க்கத்தில் நாற்காலி எல்லோருக்கும் போட்டு வைத்தால் நல்லது. அதைவிடக் கற்பதற்குப் பள்ளிப் பலகையில் கட்டாயம் பையனுக்கும் பெண்ணுக்கும் இடம் போட்டு வைத்தால் எல்லாவற்றிலும் நல்லது.'' ''அணுவின் இரகசியங்களை அறிவதும் நல்லதுதான்; அதுபோல் அண்டை வீட்டான் உள்ளத்தை அறிவதும் நல்லது.'' ''தேச ஒற்றுமை மிகவும் நல்லது; அதைத் தெருவில் தொடங்குவது மிகமிக நல்லது.'' மலையைப் புரட்டித் தள்ளுவேன் என்று இன்று கட்சிக்காரர் சிலர் சொல்லுகின்றனர். இவர்கள் எதையும் செய்வதற்குப் பதிலாக இப்படிச் சொல்லி மக்களை ஏமாற்றுகின்றனர். இவர்களைப் பார்த்துத்தான் கவிஞர் சொல்லுகிறார். மலைகளைப் புரட்டுவது கிடக்கட்டும் வழியில் கிடக்கும் இந்தக் கல்லைக் கொஞ்சம் தள்ளிவிடக் கூடாதா? இப்படியெல்லாம் சொல்வது கட்சிக் காரார்களை நோக்கியதாக மட்டும் நாம் கொள்ளவேண்டியதில்லை. நம்மை நோக்கியும் கவிஞர் தன்னை நோக்கியும் சொல்லிக் கொள்வதாகவும் நாம் கருதலாம். தமிழ் மக்கள் ஏன் இப்படி சிறுத்துப் போய்விட்டார்கள் என்ற சிந்தனையோடு கவிஞர் ஒன்றைச் சொல்லுகிறார். ''ஆதாம் ஏவாள் அன்று தின்றது சொத்தை ஆப்பிளா? பின் ஏன் இப்படி வீபரீத விதைகள்.'' ''ஆட்டிவைக்கும் மாவுகூட அடுத்த நாள்தான் புளிக்கிறது! வாழ்க்கை மனிதனிடம் வந்த தருணத்திலேயே புளித்துப் போகிறது.''

## *அறிவியல் செய்வோம் அன்னைத் தமிழில்*

தமிழில் மருத்துவம் பற்றிய மருத்துவர் மாநாட்டில் கவிஞர் தமிழன்பன் கவிதை படிக்கிறார். தமிழில் மருத்துவம் கற்பிக்கப்பட வேண்டும், தமிழுக்கு இந்தத் தகுதி உண்டு என்ற நம்பிக்கையோடு கவிதை தருகிறார். தமிழில் முடியுமா என்று கேள்வி கேட்போரைச்

சற்றுக் கடிந்துரைக்கிறார். கம்பனையும் வள்ளுவனையும் இளங்கோ வையும் படைத்த தமிழுக்கு இந்தத் தகுதி இல்லையா? என்ற உணர்வோடு கவிஞர் பேசுகிறார். இந்த நீண்ட கவிதையிலிருந்து நடுப்பகுதியை மட்டும் இங்கு எடுத்துக் கொள்கிறோம். சூரியனிடம் வெளிச்சம் இல்லை என்று விண்வெளி வேறு வெளிச்சம் தேடுவதில்லை. விரிய இடம் இல்லையென்று திசைகள் யாரிடமும் விண்ணப்பம் வைப்பதில்லை. இவைபோலத் தமிழில் முடியுமா என்று தமிழ்த்தாயைச் சந்தேகிக்கும் விசித்திரம் இந்தத் தமிழ்நாட்டில்தான் நடைபெறுகிறது. தமிழ் ஒரு சூரியன். தமிழ் விண்வெளி, திசைகள் விரிந்து கொடுக்க இடம் தருவது தமிழ். இத்தகைய தமிழை எப்படி இவர்கள் சந்தேகிக்கிறார்கள் என்ற வியப்போடும் வேதனையோடும் கவிஞர் தொடங்குகிறார். கலப்பையைத் தொலைத்தவன் பூமி விளைய வில்லை என்று பூமியைக் குற்றம் சொல்வதா? விஞ்ஞானப் பிறப்பு எனக்கு வேண்டாமென்று தன் கருப்பையைத் தமிழ்த்தாய் கழற்றியா எறிந்து விட்டாள்? தமிழன் சொரணை உள்ளவனாக இருந்தால் இப்படி ஒரு கேள்வி எழுந்திருக்க முடியுமா? தமிழில் மருத்துவம் என்பதற்குக் கருத்தரங்கம் நடத்துவார்களா? இப்படியெல்லாம் கேள்விகளை அடுக்கு கிறார் கவிஞர்.

இப்படிக் கேள்வி எழுப்பும் தமிழனை இன்று இளங்கோவும், கம்பனும் இருந்திருந்தால் என்ன செய்திருப்பார்கள் என்று சிந்திக்கிறார் கவிஞர். இளங்கோ இன்றிருந்தால் கண்ணகி கண்ணீர் பற்றியா பாடுவார்? வீரியமிக்க தன் வார்த்தைகளை ஏ. எஸ். எல். வி.யில் பொருத்தி விண் வெளியை வலம் வரச் செய்திருப்பார். இளங்கோவின் வார்த்தைகளுக்கு இயல்பாக இருக்கிறது இந்த வீரியம். கம்பன் இன்றிருந்தால் அரக்கர் களையா சினந்து கொண்டிருப்பார்? அணு ஆயுதங்களைத் தயாரிப்பவர் களை நோக்கி அல்லவா கொதித்துச் சினப்பார். மருத்துவத்தைத் தன் கவிதையில் எடுத்துச் சொன்னவர் திருவள்ளுவர். தமிழனுக்கு மருத்துவம் கற்பிக்கத் தகுந்த நூல் செய்து தருவார்கள் என்றால் மருத்துவர் களுக்குத் தமிழ்த்தாய் தன் பாதச் சிலம்பைப் பரிசாகத் தருவாள் என்கிறார் கவிஞர். மேற்கிலுள்ள அறிவியல் கலைகளை அறிவியல் அறிஞர்கள் தமிழில் தருவார்கள் என்றால் தமிழ்த்தாய் தன் மேகலையைப் பரிசாகத் தருவாள். வாசலில் தமிழ்த் தாயை நிறுத்திவிட்டு வகுப்பு அறைக்குள் அவளுக்கு இடம் இல்லையென்று சொல்லிவிடக்கூடாது

என்று மருத்துவர்களைக் கவிஞர் கேட்டுக் கொள்கிறார். இப்படித் தன் கவிதையைத் தொடர்கிறார் கவிஞர் தமிழன்பன். வரவிருக்கும் மருத்துவம் பற்றி நிறையப் பேசுகிறார். ஒரு நல்ல மருத்துவரின் உள்ளத்தைப் பங்கிட்டால், நான்கு தாயுள்ளங்களை நாம் பெற முடியும் என்கிறார். ஆதிக்குயவன் அன்று வனைந்த பாத்திரத்தில் ஏதேனும் கோளாறு ஏற்பட்டதன் காரணமாகத்தான் மனிதர்களுக்கு நோய் வருகிறது என்றும் கவிஞர் கேட்கிறார். இப்படித் தமிழில் மருத்துவம் பற்றித் தமிழில் சொல்கிறார் கவிஞர் தமிழன்பன்.

## *அண்ணல் அம்பேத்கர்*

நூற்றாண்டு விழாக் கொண்டாடியபோதுதான் அம்பேத்கரை நாம் அறியத் தொடங்கினோம். அதுவும் மத்திய அரசில் மண்டல் குழு அறிக்கையை ஏற்றுக் கொண்ட வி. பி. சிங் அவர்களின் ஆட்சியின் போதுதான் அம்பேத்கருக்கு இந்தப் பெருமை வாய்த்தது. அதுவரையில் சுமார் நாற்பது ஆண்டுகளுக்கும் மேலாக இருட்டடிப்பில் இருந்தார் அம்பேத்கர். நேருவின் காலத்தில் சட்ட அமைச்சராயும் அதற்கு முன்பு இந்தியாவின் அரசியல் சட்டத்தை வடிவமைத்தவர் என்ற முறையிலும் அம்பேத்கருக்கு உரிய பெருமை கிடைத்தது. வட்டமேசை மாநாட்டின் போது காந்தியோடு அவர் கடுமையாக முரண்பட்டார். இந்தியாவி லிருந்த உயர்சாதியினரின் வெறுப்புக்கு உள்ளாக நேர்ந்திருக்கலாம். எனினும் எல்லாக் காலத்திலும் இந்தியாவில் நெடுங்காலம் அடிமைப் பட்ட தலித் மக்களின் முன்னேற்றம் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு அம்பேத்கார் இறுதிவரை வாழ்ந்தார் என்பது பற்றிய உண்மை அனேகமாக அரசியல் உணர்வுடைய எல்லோருக்கும் இன்று தெரியவந்திருக்கிறது. ஒரு மாமேதை என்ற சொல்லுக்கு முழு அளவில் தகுதியுடையவர் டாக்டர் அம்பேத்கர். கவிஞர் தமிழன்பன் கூறுகிறபடி 'இரண்டாவது புத்தர்' என்று நாம் தயக்கமில்லாமல் சொல்ல முடியும். இவரைப் பற்றிய கவியரங்கக் கவிதை பற்றி இப்போது பார்க்கலாம்.

அம்பேத்கரின் அற்புதமான வாழ்க்கையைப் பற்றிக் கவிதை நெடுகிலும் உணர்ச்சிகரமாகச் சொல்லிச் செல்கிறார் கவிஞர் தமிழன்பன். இன்றைய திரைப்பட நடிகர் யாரென்று கேட்டால் பட்டியலிடும் இந்தியனுக்கு அம்பேத்கர் பெயர் தெரியாது என்கிறார்.

எந்தப் பழம் எந்த ஊருக்குச் சிறப்புத்தரும் முறையில் விளைந்து இருக்கிறது என்ற விவரம் தெரிந்தவருக்கு, அம்பேத்கர் எந்த மாநிலத்தில் எந்த ஊரில் பிறந்தார் என்ற விவரம் தெரியது என்று அங்கத உணர்வோடு சொல்லுகிறார் கவிஞர். மகாராட்டிரத்தில் மகௌவில் இந்தியாவின் இரண்டாவது புத்தர் பிறந்தார் என்ற விவரம் தெரியாதவனை மரம் என்று சொன்னால் வனங்கள் கோபித்துக் கொள்ளும். வேரொடு இருளை வெட்டி எறிய வந்த இந்தச் சூரியனை அறியாதவனை விலங்கு என்று சொன்னால் விலங்குகள் நம்மீது வழக்குப்போடும் என்கிறார் கவிஞர்.

இப்படியே கவிதை உணர்ச்சிகரமாகத் தொடர்கிறது. 'சாதாரண மனிதராகத்தான் எல்லோரையும் போல் அம்பேத்கர் பிறந்தார்' என்று சொல்லுங் கவிஞர், "அம்பேத்கர் பிறந்த அன்றைக்கு நிலா சதுர வடிவத்தில் இல்லை. உப்பின் சுவை மாறிவிடவில்லை. தேவதைகள் வந்து வாழ்த்தவில்லை. ஆயிரக்கணக்கான சேரிகளில் ஒன்றில் அழுதவாறே அம்பேத்கார் பிறந்தார்." மகான்களின் பிறப்புக் குறித்துச் சொல்லப்படும் எத்தனையோ கதைகளை இப்படிக் கேலி செய்தபடி அம்பேத்கர் பிறப்பைப்பற்றிக் கவிஞர் சொல்லுகிறார். அம்பேத்கரின் கல்விப் பயிற்சி குறித்து இவ்வாறு கவிஞர் எழுதுகிறார். தாட்போலியில் கல்வி கற்கப் புத்தகப்பையோடு அம்பேத்கர் சென்றபோது ஆதிக்கச் சாதிக்குப் பேதி கண்டது என்கிறார் கவிஞர். நெற்றியில் ஒரு சாதி, நெஞ்சில் இன்னொரு சாதி, தொடையில் ஒரு சாதி, பாதத்தில் ஒரு சாதி என்று படைத்த பிரம்மனை அந்தச் சிறுவன் விசாரிக்கப் புறப்பட்டபோது, அந்தப் பிரம்மன் தர்ப்பைப் புல்லோடு தலைதெறிக்க ஓடினான் என்கிறார் கவிஞர். புத்தர் முதல் எத்தனையோ பேர், இறுதியாக அம்பேத்கர் வரை வந்து போனார் எனினும் இங்குச் சாதி ஒழியவில்லை. வெண்மணிகள் ஓயவில்லை. விழுப்புரங்களும், மண்டைக்காடுகளும் இன்றும் தொடர்கின்றன. ஏன் என்ற கேள்வியை உரக்கக் கேட்டுவிட்டுக் கவிஞர் தொடர்கிறார். சாதிமட்டுமா, மதமும்தான் இன்னமும் அழியவில்லை. கோவிலைக் கட்டியவன் கோவில் வாசலைக்கூட மிதிக்கக்கூடாது; தெய்வச் சிலையைச் செதுக்கியவன் அதைத் தொடுவதற்கு உரிமை இல்லை. குளத்தைத் தோண்டியவன் அதில் இறங்கக் கூடாது; வீதி சமைத்தவன் தெருவில்

நடமாடுவதற்குத் தடை; இப்படி இந்த விவரங்களை வெறும் செய்திகளாக அடுக்காமல் உணர்ச்சிகரமாகக் கவிதை வீச்சோடு சொல்லிச் செல்கிறார் கவிஞர்.

காலகாலமாய்ச் சபிக்கப்பட்டுக் கிடந்த அகலிகை வடிவில் இருந்த மானுடம் பெரியார் வருகையால், அம்பேத்கர் வருகையால் உயிர்பெற்று எழுந்தது. தேதி பார்த்து வருவதில்லை சூரியன். அதைப்போலச் சாதி பார்த்து வருவதில்லை கல்வி என்று கவிஞர் அம்பேத்கரின் கல்வி வளர்ச்சியைக் குறிப்பிடுகிறார். கல்விப் பயிற்சி அம்பேத்கரின் கண்களை மட்டுமல்ல, அதுவரை தாழ்வுற்றுக்கிடந்த தலித் மக்களின் கண்களையும் திறந்தது. கவிஞர் அழகுபடக் கூறுகிறார். காட்டு மூங்கிலின் கண்களைத் திறந்து வைத்தால் இசை எங்கிருந்து வருகிறது என்று அது தெரிந்து கொள்ளாதா என்ன? பனித்துளிக்கும் ஒரு சந்தர்ப்பம் வாய்த்தால் இந்து மகா சமுத்திரமும் அதன் இடுப்பில் ஒரு குழந்தை என்கிறார் கவிஞர். தோட்டி மகன் நாட்டை ஆள முடியும். அவன் விமானத்தை ஓட்டினால் வானம் இடிந்துவிழாது. ஊர்க்குருவிகளுக்கும் இப்பொழுது உயரப் பறக்கும் முறையில் சிறகுகள் வாய்த்துவிட்டன. அம்பேத்கரின் அறிவொளிபட்டு விட்டில்களும் வீரம் பெற்றன என்கிறார் கவிஞர். இந்திய விடுதலை இன விடுதலையைச் சாதிக்கும் என்று சொன்னவர்களை அம்பேத்கர் நம்பவில்லை. அம்பேத்கருக்குப் பெரிய பதவி தந்து அவரை முடக்கப் பார்த்தனர் மேட்டுக்குடியினர். தாழ்த்தப்பட்ட மக்களுக்குத் தன் பதவியால் உயர்வு வராது என்று கண்ட அம்பேத்கர் பதவிகளை உதறி எறிந்தார். கொள்கைக்காக வாழ்ந்தார் அம்பேத்கர். கொள்கைகளைக் கைவிட்டு வெள்ளைக்காரனிடம் விசுவாசமாய் அம்பேத்கர் இருக்கவில்லை. அப்படி இருந்திருந்தால் அவருக்குப் பட்டம் பதவிகளோடு சுவிஸ் வங்கியில் பணம்போட வாய்ப்பும் கிடைத்திருக்கும். இப்படி வாழாதவர் அம்பேத்கர்.

இப்படி அம்பேத்கரைப்பற்றிச் சொல்லிவரும் கவிஞர் தன் கவிதையை இவ்வாறு முடிக்கிறார்: ''போராட்டங்களுக்கு ஒரு புனைபெயர் அம்பேத்கர்; சுயமரியாதை எழுதிய ஒரு கவிதை அம்பேத்கர்; யுக இருட்டு கருவுற்றுப் பெற்றெடுத்த ஒரு விளக்குத்தான் அம்பேத்கர்; நெருப்புகள் செய்து கொண்ட ஒரு ஒப்பந்தம் அம்பேத்கர். காலம் தயாரித்துக் கொடுத்த ஒரு கருவி அம்பேத்கர்!''

கவிதை என்பது உணர்ச்சியோடு இயங்கும் உவமை, உருவகங்கள் முதலியவற்றைத் தன்னோடு கூட்டி வரும். அங்கதத் தொனியோடு பலரைச் சாடி இயங்கும். வாழ்க்கைக்குள் நுழைந்து, அதன் உள்ளுறையை, உண்மையைத் தோண்டி எடுத்து நம்முன் கொட்டும். வாழ்க்கை விவரங்களை அழகுபட அடுக்குவதோடு கவிதை நின்றுவிடுவதில்லை. தனிதமனித விவரங்களை அடுக்கி வரும்பொழுது வரலாற்றுக்குள் தனக்கு என்ன இடம் என்று தேடிச்செல்வதும் கவிதை. யாரையாவது சாடுவதற்கு மட்டுமே கவிதை தன்னை ஈடுபடுத்திக் கொள்ளுமா? சாடுவதையும் கடந்து கவிதை இயங்கும். அம்பேத்கர் பற்றிய கவிதை முடிவு பெறும்போது முத்தாய்ப்பாய்க் கவிஞர் சொல்லும் அந்தச் சில வரிகள், அம்பேத்கரையும் ஒரு கவிதை என்றும், காவியம் என்றும் நமக்கு அடையாளம் காட்டுகிறது. எடுத்த எடுப்பிலேயே இந்தியாவின் இரண்டாவது புத்தர் என்றும் இடையில் அகலிகை மானுடத்துக்கு உயிர் கொடுத்தவர் இவர் என்று சொல்லும்பொழுது அம்பேத்கருக்குள் இயங்கிய வாழ்க்கையும், வரலாறும் காவியமாய் நமக்குள் தரிசனம் தருகின்றன. கவிதைக்குள் நாம் தேடுவது இத்தகைய தரிசனம். இத்தகைய பார்வை. உரைநடையை இப்பண்பு காரணமாகவே கவிதை வெல்லுகிறது. உரைநடைக்குக் குஞ்சம் கட்டுவதன் மூலம் கவிதை நடக்கத் தொடங்குவது உண்மைதான். நடந்து, பிறகு ஓடி அப்புறம் தரையைவிட்டு விண்ணில் பாய்வதன் மூலம் கவிதை தரிசனம் ஆகிறது. கவிஞர் தமிழன்பனை நாம் இதற்காகத்தான் வெகுவாகப் பாராட்டுகிறோம்.

## *இவர்கள் பார்வையில் உலகம்*

மதுரை நகரில் பாத்திமா கல்லூரியில் இந்தக் கவிதையைப் பாடுகிறார் தமிழன்பன். மதுரை என்றால் நகரையும் தமிழையும் பாடத்தான் வேண்டும். கவிஞர் பாடுகிறார். பாத்திமா கல்லூரியில் கல்வி பயிலும் பெண்களைப் பற்றியும் கவிதை சொல்லவேண்டும். சொல்கிறார் கவிஞர். இந்த நீண்ட கவிதையில் தொடர்ச்சியான ஒரு கருப்பொருள் இல்லை என்றால் கவித்துவத்தோடு இடைஇடையே மலரும் சில கவிதை மலர்களை நாம் இங்குக் கொய்து கொள்ளலாம்.

கவிதையில் இடம்பெறும் குழந்தை பற்றி அப்புறம் அதன் தொடர்ச்சி யாகத் தமிழைப் பற்றிக் கவிஞர் சொல்லும் பகுதியைப் பார்க்கலாம். தனக்கு உற்சாகம் தேவைப்படும்போது ஒரு குழந்தையின் கையிலுள்ள கிலுகிலுப் பையை நினைத்துக் கொள்வதாகக் கவிஞர் சொல்கிறார். ஒரு குழந்தை யின் வடிவத்தைவிட உலகம் சற்று சிறிது என்கிறார் (வியப்பாகத்தான் இருக்கிறது). குழந்தைகள் உண்மையில் செல்வங்கள்தான்; ஆனால் இந்தச் செல்வங்களை அதிகம் பெற்றுக்கொண்டால் நாம் ஏழையாகிவிடுவோம் என்கிறார் (செல்வம் மிகும்போது மனமும் சேர்ந்து ஏழையாகிவிடுகிறது). விஞ்ஞானி வீட்டுக் குழந்தைக்கு உலகம் உருண்டையாக இராது. பாமரன் வீட்டுக் குழந்தைக்கும் உலகம் தட்டையாக இருக்க முடியாது (பாமரனுக்கு எல்லாமே தட்டையாகி விடுகிறது). இரண்டு குழந்தைகளுக்கு உலகின் வடிவம் தாயாகத்தான் இருக்கமுடியும் (உலகமே நம் எல்லோருக் குமே தாய்தான்). நாம் பேசும் மொழிக்குப் பெயர் வைத்ததுகூடக் குழந்தை யாகத்தான் இருக்கமுடியும். தாயின் மூலம்தான் குழந்தை உலகத்தை அறிந்து கொள்கிறது. ஆகவே அதன் மொழியும் தாய்மொழி ஆகிறது.

குழந்தையைக் கொண்டு இப்பொழுது நம் வாழ்க்கையை ஆராய, விமர்சனம் செய்யத் தொடங்குகிறார் கவிஞர். இப்பொழுதெல்லாம் குழந்தைகள் அழுவது கேட்டது கிடைக்கவில்லை என்பதற்காக அல்ல என்று சொல்லுங் கவிஞர், பெற்றோரைத் திருத்த முடியவில்லையே என்பதற்காகத்தான் குழந்தைகள் அழுகின்றன என்கிறார். பெற்றோர்கள் வயதில் குறைந்தவர்களாக இருந்திருந்தால் ஒருவேளை குழந்தைகள் அவர்களைத் திருத்தி இருக்க முடியும் (ஆனால் இப்படி இல்லை). வாழ்க்கையில் பாதி பதப்படுவது பெற்றோர்களால், மீதி பதப்படுவது குழந்தைகளால் என்கிறார் (குழந்தைகளைச் சரியாகப் பதப்படுத்துவதற்கு முன்பு பெற்றோர் மூத்துவிடுகின்றனர். அவர்கள் குழந்தைகளையும் பதப்படுத்தத்தான் முடியாது. இனி குழந்தைகள்தான் பெற்றோரைப் பதப்படுத்த வேண்டும்). பெற்றோர்கள் கற்பிக்கத் தவறினால், பெற்றோர்களுக்குக் குழந்தைகள்தான் கற்பிக்கிறார்கள். கவிதையில் இனி விஞ்ஞானம் பற்றிப் பேசுகிறார். விஞ்ஞானம் நம்மை என்ன செய்திருக்கிறது என்பது பற்றிச் சொல்கிறார்.

விஞ்ஞானம் எத்தனையோ கண்டுபிடித்தது. ஆனால் மனிதனைத் தான் கண்டுபிடிக்கவில்லை என்கிறார். மனிதன் மனிதனாக இருக்குபோது

கடவுள் மனிதனுக்கு மிக நெருக்கமாக வருகிறார். ஆனால் மனிதன் ஆன்மிகம் என்று பேசும்பொழுது கடவுள் மனிதனைவிட்டு விலகிச் செல்கிறார் (மனிதனைப் புரிந்து கொள்ளும் கடவுளால் அவனது ஆன்மிகத்தைப் புரிந்துகொள்ள முடியவில்லை. கடவுளையும் ஆன்மிகத்தையும், கடவுளையும் மதத்தையும் எப்பொழுதுமே எதிர்த் திசையில் வைத்துப் பார்க்கிறார் கவிஞர். மனிதன் மனிதனாக இருந்தால்போதும்: இவன் கடவுள் ஆகவேண்டாம் என்பது கவிஞரின் கருத்து). விஞ்ஞானமே இன்று மனிதனின் முகவரி; கடவுள்கள் கையில் இன்று இருப்பது கணினியும் கணிப்பொறிகளும். படைப்புக் கடவுள் களிமண்ணைக் கீழே போட்டுவிட்டான். சோதனைக் குழாயில் மனிதன் பிரம்மாக்களைப் படைக்கிறான். எமன்கூடத் தன் வேலைக்கு ரோபோக்களை வைத்து இருக்கிறான். இப்படிக் கடவுளும் விஞ்ஞானமும் கைகோத்துக் கொண்ட நிலையில் மனிதனைக் காப்பாற்ற ஆள் இல்லை என்கிறார் கவிஞர். விஞ்ஞானத்தின் மோனலிசா புன்னகை அற்புதமாகத்தான் இருக்கிறது. ஆனால் அதன் டிராகுலா பற்கள் அச்சம் தருகின்றன. விஞ்ஞானத்திடமிருந்து மனிதனை மீட்கும்முன் கடவுளை மதத்திடமிருந்து மீட்கவேண்டும். மனிதனையும்தான். கடவுளிடம் நாம் இப்படி இனிச் சொல்ல வேண்டும். நாங்கள் எங்கள் வேலையைப் பார்த்துக் கொள்கிறோம்; உன் வேலையை நீயே பார்த்துக்கொள். சுவர்க்கமும் நரகமும் கடவுளே வைத்துக்கொள்ளட்டும். பூமியை மனிதனிடம் விட்டுவிடட்டும். கவிஞரின் பார்வை வித்தியாசமாகத்தான் இருக்கிறது. நவீன விஞ்ஞானம் பற்றிச் சரியான விமர்சனத்தை முன் வைக்கிறார். விஞ்ஞானம் மோனலிசா புன்னகை பூக்கிறது. எதிரும் புதிருமான இரண்டு அர்த்தங்களுடன் மனிதனைக் காப்பதுபோல விஞ்ஞானம் தனக்கு இரையாக்கி அழிக்கிறது. விஞ்ஞானம் ஒருபுறம் மக்களை அழிக்க மதமும் மனிதனை அழிக்கிறது. மதமில்லாமல் மனிதன் இந்த உலகில் வாழ்ந்துவிட முடியும். சொர்க்கமும் நரகமும் மனிதனுக்குத் தேவை இல்லை. இந்த உலகம் அவனுக்குப் போதும். இந்த உலகு என்ன செய்வது என்பதை அவனால் தீர்மானித்துக் கொள்ள முடியும். இடையில் கடவுளுக்கு வேலை இல்லை. கடவுள் இல்லாமலே உலகை மனிதன் திருத்திக்கொள்ள இயலும். இப்படிச் செல்கிறது கவிஞரின் சிந்தனை.

## பெண்மை வாழ்கவென்று. . .

பெண்ணியம் குறித்து விரிவாகப் பேசுகின்ற காலமிது. புராண இதிகாசப் பெண்களை இன்று முன்னுதாரணங்கள் ஆக்கிக் கொள்ள முடியவில்லை. கண்ணகியின் செயலைக்கூட இன்று கேள்விக்குள்ளாக்க வேண்டியிருக்கிறது. இப்படிக் காலம் மாறி வருகிறது. மாறிவரும் இக் காலத்தில் பெண் விடுதலை என்று இன்று பேசத்தொடங்கியிருக்கும் பெண்ணைச் சரிவர அடையாளம் காண முடியவில்லை. இவள் கியூரியின் பேத்தியா? ஜோன் ஆப் ஆர்க்கின் தொடர்ச்சியா? யார் இ வ ள்? தொலைக்காட்சிகளில் இடம் பெறுகிற இவளா விடுதலை வேண்டுகிற பெண்? திரைப் படங்களில் இயக்குநராலும் படப்பிடிப்பாளராலும் வசீகரப்படுத்தப்படுகின்ற இந்தப் பெண்ணுக்கா விடுதலை தேவை? பெண்ணியம் பேசும் இ ந் த ப் பெண் யார்? இப்படி விடாப்பிடியான கேள்விகளை அடுக்கிக்கொண்டே செல்கிறார் கவிஞர்.

கவிஞர் தமிழன்பன் தனது இந்தக் கவிதை எங்கிருந்து புறப்படு கிறது? எந்தப் பெண்மையை மூலமாகக்கொண்டு இருக்கிறது? எவரிட மிருந்து இந்தக் கவிதை வருகிறது என்று கேட்டுக்கொண்டு பதில் சொல்கிறார். தன் கவிதைக்குச் சீதை மூலம் இல்லை. திரௌபதி, நளாயினி முதலியவர்களும் இல்லை. கண்ணகியும் இல்லை. மாதவி மதிக்கத்தக்கவள் எனினும் அவளிடமிருந்தும் இல்லை. மக்களின் வறுமை தீர்க்க உணவை அமுதசுரபியிலிருந்து அள்ளிக் கொடுத்த மணிமேகலையும்கூடத் தன் கவிதைக்கு மூலம் இல்லை. பின் யார்தான் மூலம் என்ற கேள்விக்குக் கவிஞரே பதில் சொல்கிறார். அவினாசிக்கு அருகில் புதுப்பாளையத்தில் பூமி கொளுத்தி வைத்த நெருப்புப் போல விளங்கிய ராஜாத்தியிடமிருந்து எழுகிறது இந்தக் கவிதை என்கிறார் கவிஞர். ஆறுபேர்களைத் தன் அறிவாளால் அவள் வெட்டிக் கொன்றாள். குடிகாரக் கணவனிடம் மட்டுமல்லாமல் தன் மகனிடமும் கேவலப்பட்டவள் ராஜாத்தி. அவள் உடம்பு அவளுக்குச் சொந்தமில்லை. எத்தனை நாள் தன் பிணத்தைத் தானே பார்த்துக்கொண்டிருக்க முடியும்? கடைசியாக வைகறை விடிவதற்கு முன்பு குடிகாரக் கணவனையும் தன் மகனையும் இவர்களோடு சேர்த்துத் தன் மாமனார், மாமியார் முதலியவர்களையும் ஆத்திரம் தீர வெட்டிச் சாய்த்தாள். இவள் யாரென்ற கேள்வியைத் தனக்குள்ளே கேட்டுக் கொண்டு கவிஞர் சொல்கிறார். இவள் பெரியாரின்

புத்திரி. அதிகாலையில் உதிக்கிற சூரியன் சொல்லிக் கொண்டான். இன்று பூமி என்னைப் பொசுக்கப் போகிறது. இரவை விடுதலை செய்யும் என்னைவிட ஒளியை விடுதலை செய்யும் இவள் மேலானவள்–இப்படிச் சூரியன் கூறினான். இத்தனைக்கும் பிறகு இவள் தற்கொலை செய்து கொண்டாளா? இல்லை. தற்கொலை செய்துகொள்ள மாட்டாள். உண்மையை உலகிற்குச் சொல்வாள். புதிய யுகம் ஒன்றைத் தன்மூலம் அறிவிப்பாள். பெண் விடுதலைக்கு இவள்தான் மூலம் ஆவாள். இனி உலகின் மீது அதிகாரம் ஆண்களுக்கு இல்லை என்பாள்.

நவீனப் பெண்ணியம் பேசும் பெண்கள் இவளைக் கண்டு நாணுவார்கள். சீதையும், திரௌபதியும், கண்ணகியும் இவளிடமிருந்து கற்றுக் கொள்ளும் வாய்ப்பை இழந்துவிட்டார்கள். இவள்தான் நம்காலத்து மேரிக்கியூரி மற்றும் ஜோன் ஆப் ஆர்க். தமிழ்க் கவிதையில் இக் கவிதையோர் சாதனை. தமிழன்பன் நம் பாராட்டுக்குரியவர்.

35

# சென்னிமலைக் கிளியோப்பாத்ராக்கள்

தமிழ்க் கவிதை மரபில் நூற்றுக்கு மேற்பட்ட செய்யுள் வகைகள் இருக்கின்றன. சில வகைப் பொருளை இன்ன யாப்பில்தான் பாடவேண்டும் என்ற மரபும் இருக்கிறது. தமிழுக்கு மட்டுமே உள்ள யாப்பு மரபு குறித்தும் பெருமைப்பட்டுக் கொள்ள நமக்கு வாய்ப்புகள் உண்டு. இன்றைய நிலையில் சிக்கலான சில யாப்பு வகைகளை நாம் கைவிட்டு வருகிறோம். யாப்பின் கட்டுப்பாடுகள் நமக்கு இன்று உவப்பாக இல்லை. சிந்தனை வேகத்தை யாப்பு முறைகள் தடைப்படுத்துகின்றன என்று நாம் சொல்லிக் கொள்கிறோம். அதே சமயம் மரபு முறையிலான யாப்பு களில் நமக்குப் பயிற்சி இல்லை என்பதும் உண்மை. யாப்பு முறையில் தோய்வு பெற்ற புலமை நெறிக்கு நாம் விடை கொடுத்து வருகிறோம். காலம் மாறிவிட்டது என்பது உண்மைதான். புதுக்கவிதை முறைக்கு நாம் மாறி வந்து விட்டோம். யாப்பு மரபை இழந்து வருவதற்காக நாம்

வருந்திப் பயனில்லை. யாப்பு மரபை நாம் இழந்து வருகின்ற இன்றைய கால நிலையிலும் கவிதையை நாம் இழக்கவில்லை. இழக்கவும் முடியாது. கவிதையை இழந்தபிறகு மனிதனாகவும் இருப்பதற்கில்லை. மனிதன் என்பவனை அடையாளப்படுத்துகிற ஒரு குறியீடாகவும் கவிதை இருக்கிறது. ஆகவே கவிதையை மரபு யாப்பில் நாம் எழுதுகிறோமா? இல்லை.

முன்னே யாப்பு மரபை நாம் இழந்து வருகிற அதே சமயத்தில் வேற்று மொழிகளோடு உறவு கொண்ட நிலையில் அந்த மொழிகளிலிருந்து சில வகையான கவிதை முறைகளை நாம் கடைப்பிடிக்க விரும்புகிறோம். புதியதன்மேல் நமக்குள்ள மோகம் என்பது ஒரு காரணம். கவிதையை இன்னும் கூர்மையாக வெளிப்படுத்தவேண்டும் என்பதும் ஒரு காரணம். இவை தவிரப் புதிய வடிவத்தின்மீது நாம் விருப்பம் கொள்வது தவிர்க்க இயலாத ஒன்று. ஷேக்ஸ்பியரிடமிருந்து 'சானட்' என்ற கவிதை முறையைப் பரிதிமாற்கலைஞர் போன்றவர் பின்பற்ற முயற்சி செய்தனர். இந்தக் கவிதை முறை தமிழோடு ஏனோ ஒட்டவில்லை. ஜப்பானிலிருந்து வந்த ஹைகூ என்ற கவிதை வடிவம் எப்படியோ நம்மைப் பற்றிக்கொண்டது. ஜப்பான் கவிதையிலிருந்த செறிவு, மெய்யியல் நம் கவிதைகளில் இல்லை எனினும் எளிய – ஆனால் அழகிய கவிதை வடிவம் என்கிற ஹைகூவை நம் கவிஞர்கள் விரிவாகவே பயன்படுத்துகின்றனர். ஹைகூ போலவே ஜப்பானிலிருந்து 'சென்ரியு' முதலிய கவிதை வடிவங்களும் நமக்குச் சேர்ந்து கொண்டு இருக்கின்றன. இவ்வகைச் சோதனைகளில் தொடர்ந்து ஈடுபட்டிருக்கும் கவிஞர்களில் தமிழன்பன் மிக முக்கியமானவர்.

ஆங்கிலத்தில் 'லிமரிக்' என்பது ஒரு கவிதை வடிவம். ஐந்து வரிகளில் அமையும் இந்தக் கவிதை வடிவம் முக்கியமாக வேடிக்கை, வினோதம், நகைச்சுவை முதலிய உணர்வுகளோடு இயங்கக்கூடியது. அரசியல், சமூகம் குறித்த விமர்சனங்களும் நகைச்சுவையோடு இந்தக் கவிதை வடிவத்தில் இடம் பெறுகின்றன. லிமரிக் என்ற கவிதை வடிவத்தின் நீண்டகால வரலாறு, இந்த வடிவத்தில் ஏற்பட்ட மாற்றங்கள், இதற்கென வகுக்கப்பட்ட இலக்கண நெறி பற்றியெல்லாம் இந்த நூலின் முன்னுரையில் கவிஞர் தமிழன்பன் விரிவாக ஆராய்கிறார். இலங்கையில் மகாகவி, தமிழகத்தில் கோவேந்தன் போன்ற கவிஞர்கள் குறும்பா என்ற வடிவத்தில் லிமரிக் கவிதை வடிவத்தைச் சிறப்பாக எழுதிக்காட்டினர்

எனினும் குறும்பா வடிவம் பெரும்பாலான கவிஞர்களால் தொடர்ந்து கடைப்பிடிக்கப்படவில்லை. காரணம் ஆய்வுக்குரியது.

கவிஞர் தமிழன்பனைப் பொருத்தவரை ஹைகூவையும், லிமரிக்கையும் இணைத்து லிமரைக்கூ என்ற ஒரு புதிய வடிவத்தை இந்த நூலில் படைக்கிறார். ஹைகூவில் பயின்றுவரும் மூன்று அடிகளையும் லிமரிக்கில் பயின்று வரும் இயைபுத் தொடையையும் இணைத்து லிமரைக்கூவைப் படைக்கிறார். இப்படி ஏன் இவர் இணைக்க வேண்டும் என்ற கேள்வியைக் காட்டிலும் இத்தகைய இணைப்பு கவிதை நடையைச் சிறப்பிக்கிறதா என்று கேட்டுக் கொள்வது பொருந்தும். இந்த நூலில் 138 கவிதைகள் உள்ளன. பெரும்பாலான கவிதைகளில் வேடிக்கையும் விநோதங்களும் இடம் பெறுகின்றன. சில கவிதைகள் மெய்யியல் உணர்வோடும் இயங்குகின்றன. வழக்கமாகவே தமிழன்பன் கவிதைகளில் தவிர்க்க இயலாமல் இடம் பெறுகிற அரசியல் மற்றும் மதம் பற்றி விமர்சனங்கள் இங்கும் இடம்பெறுகின்றன. பறவைகள் மற்றும் குழந்தைகள் பற்றியும் கூர்மையான உணர்வோடு கவிதை தருகிறார். பெரும்பாலான கவிதைகளை நாம் சுவைத்துப் படிக்கமுடியும். கவிதைக்குக் குறுகிய வடிவம் சிறப்புடையது என்பதில் ஐயமில்லை. சொற்கள் குறையும் பொழுது சொற்களுக்கிடையில் மௌனங்கள் கூடுகின்றன. இந்த மௌனங்கள் நம்மைச் சிந்திக்க வைக்கின்றன. சிந்திக்கும்பொழுது நமக்குள் கூர்மைப்படுகிறோம். இந்தத் திசையில்தான் அந்தக் கவிதைகள் நம்மோடு ஒட்டுகின்றன; உறவாடுகின்றன. அவை நம்மோடும் உரையாடுகின்றன. குறுகிய வடிவம் என்பதன் காரணமாகப் படிமங்கள் முன்னுக்கு வருகின்றன. படிமம்தான் கவிதைக்கு உயிராய் அமைகிறது என்று சொல்வதில் தவறு இல்லை.

தமிழுக்கு இந்தக் கவிதை வடிவம் புதியது என்பது மட்டுமல்ல–தமிழை, தமிழ்க் கவிதையை மேலும் வளப்படுத்த முடியும் என்று தோன்றுகிறது. வெளியிலிருந்து நாம் எடுத்துக்கொள்கிற கவிதை வடிவத்தை, தமிழின் நீர்மைக்கு ஒத்த வடிவமாக மாற்றிக் கொள்வதும் தேவை. இவ்வகையிலும் தமிழன்பன் வெற்றிபெற்று இருக்கிறார் என்று சொல்ல முடியும்.

இந்தத் தொகுப்பில் உள்ள 138 கவிதைகளில் பெரும்பாலான கவிதைகள் நல்ல கவிதைகள், தரமான கவிதைகள். இவற்றிலிருந்து

5.23.

சுமார் 20 கவிதைகளை மட்டும் இந்தக் கட்டுரையில் நான் எடுத்துக் கொள்கிறேன். ஒவ்வொரு கவிதைக்கும் நய உரை கூறுவது என் நோக்கமில்லை; நய உரையோடு கவிதைக்குள்ளிருக்கிற தொனிப் பொருளை – உள்ளுரையைச் சுட்டுவது என் நோக்கம்.

## *சிறகுகள் தேவை இல்லை*

**பறவை யோடு சேர்ந்து பற**
**சிறகுகள் தேவை இல்லை மனிதன்**
**என்பதை மட்டும் நீமற.**

ஹைகூவில் இருக்கவேண்டியவை மூன்று அடிகள். முதல் அடியிலும் மூன்றாம் அடியிலும் ஐந்து சீர்கள். இரண்டாம் அடியில் ஏழு சீர்கள். இந்தக் கவிதையில் அடிவகையில் மூன்று உள்ளன. சீர்களை நாம் எண்ணவில்லை. எண்ண வேண்டியதும் இல்லை. இரண்டாம் அடியிலும் நாம் சீர்களை எண்ணவில்லை. மூன்று அடியின் உள்ளும் ஓர் குறிப் பிட்ட ஓசை ஒழுங்கை நாம் கவனிக்கிறோம். இந்த ஓசை ஒழுங்கு நமக்குப் போதும். இந்தக் கவிதையைப் பொருத்தவரை இரண்டாம் அடியில் மனிதன் என்ற சொல் ஒரு தனிச் சொல்போல் நம்மை இடறு கிறது. ‘என்பதை’ என்ற சொல் கவிதைக்குரிய சொல் அன்று உரை நடைக்குரிய சொல்.

இப்படி படிப்பதை – பார்ப்பதை ஒதுக்கிவிட்டுக் கவிஞரின் கவித் துவத்துக்குள் செல்லலாம். பறவையோடு நாம் சேர்ந்து பறக்க முடியும். பறக்கும்போது பறவையின் சுதந்தரம் நமக்குள் விரிவுபெறும். மனிதன் என்பதை மறந்துவிட்டுப் பறக்கிறோம். அது பறவை, நான் மனிதன் என்ற வேறுபாடு நமக்குள் எழும்போது நாம் மண்ணில்தான் கிடக்கிறோம். நாம் மனிதனாகக்கூட இல்லை. மனிதனுக்குள் இருக்கிற கவித்துவம் அவனையும் மீறிப் பறவையோடு அவனை இழுத்துக் கொண்டு செல்லும்.

**பொம்மை விற்றால் முடியுமா?**
**பொம்மைக் காரன் பிழைப்ப தற்குத்**
**தன்னை விற்றால் விடியுமா?**

பொம்மைக்காரன் பொம்மைகளை விற்கிறான். பொம்மைகளை விற்றுப் பெரும்பாலும் பிழைக்க முடியாது. காரணம், பொம்மைகள் இப்பொழுது அதிகமாய் விற்பதில்லை. இயந்திர விசையோடு இயங்குகிற பொம்மைகள் எத்தனையோ வடிவங்களில் வந்துவிட்டன. வணிக வளாகங்களில் அவற்றை மேட்டுக் குடியினர் மட்டும் அல்லாமல் நடுத் தரத்தினரும் தம் தகுதிக்குரியது என்று கருதி வாங்குகின்றனர். தெருவில் திரிந்து பொம்மைகளைக் கூவி விற்றுப் பிழைப்பது சாத்திய மில்லை. உண்மையில் பொம்மை விற்பவன், பொம்மைகளை அல்ல தன்னைத்தான் விலைகூறி விற்றுக் கொண்டு செல்லுகிறான். இவனுக்கு நேற்று இருந்த மரியாதை இன்று இல்லை. தன்னையே ஒருநாள் வயிற்றுப் பிழைப்பிற்காக விலை கூறி விற்றுக் கொள்வதன் மூலம் மனிதத் தகுதியிலிருந்து இவன் குறைந்து போகிறான். நகர மாந்தர் இவனை மனிதன் என்று கருதுவதில்லை. வயிற்றுப் பசிக்காக விற்கிறான் வாங்கிக்கொள்ளலாம் என்ற கருணை உள்ளம் அவர்களுக்கு இல்லை. இவனும் ஒரு பொம்மையாகிறான். பொம்மையை வடிவமைத்து வர்ணம் தீட்டிய இந்தக் கலைஞனுக்கு மரியாதை அற்ற நிலையில் தன்னைத்தானே இழந்து விடுகிற கொடுமை இவனுக்கு நேர்ந்து இருக்கிறது. இவன் இன்னும் எத்தனை காலத்திற்கு இந்தத் தொழிலில் தன்னை ஈடுபடுத்திக் கொள்வான்? விளிம்பில் நிற்கிறான். எந்த நேரமும் இவன் விழுந்து விடலாம்.

முடியுமா, விடியுமா என்பன இயைபுத் தொடைகள்.

> **முடிந்து போன கதைகள்**
> **ஒவ்வொன் றுள்ளும் முளைக்கத் துடிக்கும்**
> **முந்நூறு புதிய விதைகள்.**

நாம் பத்திரிகைகளில், கதைத்தொகுப்புகளில் கதைகள் வாசிக் கிறோம். ஒரு மனிதனை மையப்படுத்துகிற ஒரு கதையில் அவனோடு உறவு கொள்கிற பல மனிதர்களைப் பற்றிச் சொல்ல வேண்டியிருக்கும். அதைப்போலவே ஒரு நிகழ்ச்சியை மையப்படுத்தி எழுதப்படும் கதைகளில் வேறு எத்தனையோ நிகழ்ச்சிகள் சொல்லப்பட்டிருக்கும். ஒரு நிகழ்ச்சியை மையப்படுத்தி எழுதும்போது மற்ற மனிதர்களின் கதைகளை

அடக்கி அல்லது மறைத்து அல்லது குறைத்து அல்லது தெளித்துச் சொல்லவேண்டியிருக்கும். அதைப்போல ஒரு நிகழ்ச்சிக்கு முக்கியத்துவம் தரும்போது வேறு எத்தனையோ நிகழ்ச்சி அவற்றிற்கான முக்கியத் துவத்தை இழக்க நேரிடும். அவை மட்டுமே கருதி ஒரு கதையைப் படித்ததாக நினைத்து முடித்துவிட இயலாது. நல்ல வாசகன் கதைக் குள் பயணம் செய்வான்; தேடுவான். ஓரத்திற்கு ஒதுக்கப்பட்ட மனிதர்களை மையத்திற்குக் கொண்டுவந்து அவனுக்குள் இருக்கும் கதையைத் தனக்குள் விரித்துக்கொள்வான். கதைக்கு மட்டுமல்ல ஒவ்வொரு நாளும் எத்தனையோ மனிதர்களை, நிகழ்ச்சிகளை எதிர் கொள்கிறோம்; அவசரமாகக் கடந்து போகிறோம்; ஒதுக்கி விடுகிறோம். இவ்வகையில் நம்மை நாமே குறுக்கிக் கொள்கிறோம். வளர்ச்சிக்கான விதைகளை நாம் இழந்து விடுகிறோம். இந்த உண்மையை இந்தக் கவிதை, அற்புதமாக வெளிப்படுத்துகிறது.

**அத்தனை மீன்கள் வலைகளில்**
**அடுத்தநாள் கடலிலே**
**அத்தனை அழுகை அலைகளில்.**

கடலில் செம்படவர்கள் வலைகள் வீசி, வலை நிறைய மீன்கள் பிடித்துக் கொள்கின்றனர். மீன்களுக்கு என்ன நேரும் என்று நமக்குத் தெரியும். அந்த மீன்களுக்கு இனி உயிரில்லை, கடலில் வாழ்க்கை இல்லை. கடல் அவற்றை இழந்துவிட்டது. கடல் ஒரு தாய். எத்தனை மீன்கள் என்றாலும் அவற்றுக்கெல்லாம் இடந்தந்து அவற்றோடு உறவாடிக் காப்பவள் கடல் என்னும் தாய். இப்படி ஒவ்வொரு நாளும் தன் குழந்தைகளை இழப்பது கடலுக்குப் பெருத்த சோகம். கடல் தன் அலைகளில் இந்த சோகத்தைச் சொல்லும் முறையில் ஆர்ப்பரிக்கிறது, அலைகிறது, தேடுகிறது, கொந்தளிக்கிறது. கடலின் சோகம் நமக் குள்ளும் எழுகிறது. இப்படித்தான் பறவைகளும், விலங்குகளும் தன் இனத்தாரை இழந்துவிட்டுத் துடிக்கவே செய்யும். நாமும் நம் உறவுகளை யார் யார் இடத்திலும் இழக்கிறோம்? போரில் இழக்கிறோம், முதலாளி யிடம் இழக்கிறோம். கடல் வேறு என்ன செய்ய முடியும், கதறுவதைத் தவிர? நாமும் கதறுகிறோம். இது வாழ்க்கையின் நியதி என்று நம்மால் அமைதியடைய முடியுமா? ஒரு வகையில் இது இருத்தலியல் சோகம்.

இழக்காமலும் இருக்கமுடியாது, அப்புறம் நம்மையும் இழக்கவேண்டி வரும். உறவுகளை இழக்கும்பொழுது நாமும் நம்மை இழக்கிறோம்.

**குருக்களே தெய்வங்கள் ஆனார்கள்**
**கோயி லில்லா ஊர்களிலே தெய்வங்கள்**
**குடியி ருக்கப் போனார்கள்.**

மதம், கடவுள், புரோகிதர் குறித்த கூர்மையான விமர்சனங்களைத் தமிழன்பன் எப்போதும் முன்வைக்கிறார். கோவில்களில் அதிகாரம் செய்பவர் குருமார்கள்–புரோகிதர்கள். கடவுளிடம் மந்திரம் சொல்லி மக்களுக்கு வரம் வாங்கித் தருவதாக இவர்கள் சொல்லிக் கொள் கிறார்கள். உண்மையில் கடவுளை ஏவல் கொள்பவர்கள் இந்தக் குருமார் கள். கடவுளுக்கு அற்புத சக்திகள் இருப்பதாகக் கதை சொல்பவர்கள் இந்தக் குருமார்கள். இந்தக் குருமார்களின் ஆளுகையில் கடவுள் இருக்க முடியாது. கோவிலை விட்டு எங்காவது கடவுள் ஓட நேரிடும். தெய்வங்கள் குடியிருக்க இடம் தேடி அலைய வேண்டும். கோவில்கள் இல்லாத ஊர்களில் குடியிருக்கத்தான் தெய்வம் விரும்பும். கோவில் இல்லை என்றால் தெய்வம் எங்கு குடியிருக்கும்? மரத்தடியில் தங்கலாம். அங்கும் குருமார்கள் தேடிவந்து ஒரு கூரை போட்டு அப்புறம் மணி அடித்து மந்திரம் சொல்லத் தொடங்கிவிடுவார். தெய்வம் எப்பொழுதும் குருமார்க்குக் காணிக்கை சம்பாதித்துக் கொடுக்க வேண்டும். கல்லாக இருப்பதே தெய்வம் என்று ஆக்கியவர்கள் குருமார்கள். கிடைக்கிற பிச்சையைத் தெய்வம் வாங்கிக் கொண்டு தெய்வம் சும்மா கிடக்க வேண்டும்.

**பட்டங்களாய் வாங்கிக் குவித்தான்**
**எதையும் நன்றாய்ப் படிக்க நேரம்**
**இல்லையே என்று தவித்தான்.**

தொடர்ச்சியாகப் பட்டங்கள் ஒருவன் வாங்கிக் குவிக்கிறான். பட்டங்கள்தான் அவனுக்கு நோக்கம். பட்டங்களில் மட்டுமே மனம் வைத்து எந்தக் கேள்விக்கு என்ன விடை என்பதில் மட்டும் கவனம் வைத்துப் படித்தால் மட்டுமே நிறைய பட்டங்களைப் பெற முடியும்.

இவனுக்குப் பட்டங்கள் குவியுமேயன்றி கல்வி இவனுக்குள் செறிவுபெறாது. ஓயாமல் கேள்வி எழுப்பி உண்மைகளை ஆராயும் நோக்கத்தோடு படிப்பதன் மூலமே ஒருவன் சரியான கல்வியைப் பெற முடியும். தன்னைப் பற்றி, சமூகம் பற்றி, வரலாறு பற்றித் தேடித் தேடிக் கற்பதன் மூலமே தனக்குள் ஒருவன் நிறைவு பெற முடியும். இப்படிக் கற்பவனுக்குப் பட்டங்கள் தேவையில்லை. பாடநூல்களில் மட்டும் உண்மைகள் முடங்கிவிடுவதில்லை. வாழ்க்கையைப் பாடநூல்களில் வரையறுத்துவிட முடியாது. ஏசுவோ, புத்தரோ எந்தக் கல்விச் சாலையில் கற்றார்கள்? பட்டங்களில் கல்வியைச் சிறைப்படுத்த வேண்டியதில்லை.

**கம்பன் வீட்டுக் கட்டுத்தறி**
**கவிபாடிக் கவிபாடிக் காலப் போக்கில்**
**கம்பனுக்கே சவால்விடும் எதிரி.**

கம்பன் வீட்டுக் கட்டுத்தறியும் கவிபாடும் என்பது பழமொழி. கட்டுத் தறியாக இருந்தாலும் கம்பனோடு பழகிப் பழகிக் கம்பனோடு கவிபாடப் பழகிக் கொள்ளும். கம்பனுடைய ஆற்றல் இத்தகையது. கம்பனிடமிருந்து கவிதை கற்றுக்கொள்கிற இன்றைய கட்டுத் தறிகள் கம்பனைக் காட்டிலும் எங்களுக்குக் கவிதை தெரியும் என்று நினைத்துக் கொள்ளவே செய்யும். கம்பனிடமும் குறை உண்டு என்று சொல்லிக் கத்தவும் செய்யும். கம்பன் வந்து இப்பொழுது பதில் சொல்ல மாட்டான். இது கட்டுத்தறிகளுக்கு ஒரு வாய்ப்பு. இது கட்டுத்தறிகளின் காலம். மார்க்சைவிட இன்றைய கட்சிக்காரர்கள் அறிவாளிகள். பெரியாரைவிட இன்றைய கருப்புச் சட்டைவாதிகள் பகுத்தறிவுவாதிகள். வள்ளுவருக்கு மேடைகளில் எத்தனை விளக்கங்களை இன்றைய சொற்பொழிவாளர்கள் தருகிறார்கள். கட்டுத்தறிகள் பிழைக்கத் தெரிந்தவர்கள். வெட்டிப் பேச்சு வீராவேசம் ஆகியவற்றில் இவர்கள் வல்லவர்கள். பாரதி கூறியபடி கவி உள்ளம் இவர்களுக்கு இல்லை. கவிதைகளை மனப்பாடம் செய்து கொட்டித் தீர்ப்பவர்கள் இவர்கள்.

கடவுளை முதலில் மறுத்தான்
கடவுளாய்த் தானே மாறி நம்பாதார்
குடியை வேரோ டறுத்தான்.

கடவுளை நாத்திகன் ஒருவன் முதலில் மறுத்தான். நாத்திக வாதத்தை அலங்காரத்தோடு, ஆர்ப்பாட்டத்தோடு தன் அறிவுத்திறனோடு இவன் முன் வைக்கிறான். இப்பொழுது இவனுக்கு முன்னால் கடவுளுக்கு மரியாதை இல்லை. இவனுக்கே எல்லாவகையிலும் மரியாதைகள். இவனை எல்லோரும் வழிபடுகின்றனர். எல்லாப் பெருமைகளையும் இவனுக்குச் சாத்துகின்றனர். இவன்தான் இப்பொழுது கடவுள். இவனை எவனும் மறுக்கமுடியாது. மறுக்கக்கூடாது. இவனை முற்றாக நம்பவேண்டும். இவனை நம்ப மறுத்தால், இவனுக்கு வழிபாடு செய்ய மறுத்தால், இவன்மீது ஐயத்தைக் கிளப்பினால் இவன் குடியை அவன் கெடுக்கத் துணிவான். கவிஞர் எவரைத் தன் மனத்தில் வைத்து இப்படி ஒரு கவிதையை எழுதியிருக்கிறார் என்ற கேள்வி நமக்குள் எழுகிறது. ஒவ்வொரு கட்சியிலும், அமைப்பிலும் இத்தகையவர்தான் இப்பொழுது உச்சத்தில் இருக்கிறார்கள். பூசாரிகள் நாளடைவில் கடவுள் ஆகிவிடுகிறார்கள். எந்த ஒரு மதத்தையும் இத்தகையவர்கள்தான் நாசப்படுத்துகிறார்கள். உண்மையில் கடவுளை ஏற்றி வைத்துள்ள பீடத்தில் இவர்கள்தான் நிற்கிறார்கள். இவர்கள்தான் பூசைகள்– காணிக்கைகளைப் பெறுகிறார்கள்.

**கம்பர் அம்பொன்று மிச்சம்**
**யார்கை சிக்கும்? இராமன் இராவணன்**
**இருவ ருக்குமே அச்சம்.**

கம்பர் தன் காப்பியத்தை இன்னொரு வடிவில் கற்பனை செய்து பார்க்கலாம். இராமனும் இருக்கிறான், இராவணனும் இருக்கிறான்; இன்னும் இறுதி வெற்றி யாருக்கு என்று தீர்மானமாகவில்லை. கம்பன் கையில் மட்டும் ஒரு அம்பு இருக்கிறது. கம்பன் யாருக்கு இந்த அம்பைத் தருவான்? இருப்பது ஒரே ஒரு அம்பு. ஏற்கனவே அடிபட்டவன் இராவணன். கம்பன் மனமிரங்கி இராவணனிடம் கொடுத்தால் இராமன் கதி என்ன ஆகும்? இராமனோடு இப்பொழுதும் கட்சி சேர்ந்து கொள்வானா என்ன? இப்பொழுது இராமனும் அஞ்சுகிறான், இராவணனும் அஞ்சுகிறான். இப்பொழுது கம்பன் கையில்தான் இவர்களின் உயிர் இருக்கிறது. ஒருவேளை கம்பன் நினைத்திருந்தால் இராவணனுக்குப் பதிலாக இராமனைக் கொன்றிருக்கலாம்; அதற்குப் பதிலாகக் கம்பனே இராவண

காவியம் எழுதியிருக்கலாம். தமிழன்பனுடைய கவிதை இங்கு வினோதமாகத்தான் விளையாடுகிறது.

**உண்மை மடியைத் தேடி**
**ஓடியது கவிதை உதிர்த்து விட்ட**
**அலங்காரம் கிடந்தது வாடி**

கவிதைக்கு உண்மைதான் கருப்பொருள். உண்மை எது என்பதைத் தேடிச் செல்வதுதான் கவிதையின் இயக்கம். உண்மையின் மையம் எது? அதுதான் ஒரு தாயின் மடி மாதிரி. அதில்தான் கவிதை உறங்கும், ஓய்வு பெறும். இப்படி உண்மையைத் தேடிச் செல்லும் கவிதை வெற்று அலங்காரங்களை உதறிக்கொள்ளும். வெற்றுச் சொற்களை உதிர்த்து விடும். நெடுங்காலமாகக் கவிதை என்பதை எதுகை மோனைகளிலும், சிலேடை நயங்களிலும் உவமை முதலிய அலங்காரங்களிலும் சொல் நயங்களிலும் பலர் காணுகிறார்கள். இவை கவிதைக்கு வீண் சுமைகள், அரிதாரங்கள். கவிதையை இவை அழகுபடுத்துவதாக நம்பி மறைக் கின்றன. உண்மையைத் தேடிக் கவிதை ஆழ்மனத்தில் பயணம் செய்யும் போது தொன்மம் முதலியவற்றைக் கொத்துக் கொத்தாகக் கவிதை அள்ளிவரும். கதைகளைத் தன்னோடு இணைத்துக் கொள்ளும் கதை, நாடகம் தொன்மம் என்ற வடிவில் தன்னை வெளிப்படுத்திக் கொள்ளும் கவிதைக்குக் கலை அலங்காரம் இல்லை. ஆடைகளும்கூட இல்லை. அவையே கவிதைக்கு உயிர், கவிதைக்கு உடம்பு. இவ்வகைக் கவிதை தன்னுடன் அழகுடையதாக இருக்கும்.

**பயணம் முடிந்து போச்சு**
**இன்னும் என்ன படகி னோடு**
**கொஞ்சிக் குலாவிப் பேச்சு?**

பயணம் முடிந்து விட்டது. படகை உதறிவிடத்தான் வேண்டும். மனம் கேட்பதில்லை. எவ்வளவு தொலைவு, எத்தனை அமைதியாக இந்தப் படகு நம்மைக் கொண்டுவந்து சேர்த்தது என்று நினைத்துக் கொள்கிறோம். இந்தப் படகு இல்லையென்றால் நம் பயணம் இத்தனை எளிதாக நடந்திருக்க இயலாது. இந்தப் படகுதான் நம்மை இந்த

இடத்தில் கொண்டுவந்து சேர்த்தது. நன்றி உள்ளத்தை நாம் இழந்து விட முடியாது. அதை நம்மை நாமே இழப்பது மாதிரியாகும். பயணத்தை முடித்துவிட்டு எங்கே வெற்றிடத்திற்கா நாம் போகிறோம்? பயண அனுபவம் நமக்குள் உணர்வு அலைகளை எழுப்பாதா என்ன? ஆகவே தான் படகோடு கொஞ்சுகிறோம். பயண முடிவுகூட நமக்கு உடன் பாடில்லை. வாழ்க்கையும்கூட இப்படித்தான். பயணம்தான் வாழ்க்கை, கொஞ்சுவதுதான் வாழ்க்கை. பயணத்தை மறந்துவிட்டு முடிவைப் பற்றி நினைக்க முடியாது. உணர்ச்சியில்லாதவன், மலட்டுத்தனமானவன் எதையாவது சொல்லிக் கொண்டிருக்கட்டும், நமக்கு முடியாது. விளையாடி முடித்துவிட்டோம்; அப்புறம் மனத்திற்குள் நாம் விளையாடுகிறோம். கதையைப் படித்து முடித்து விட்டோம், கதை நமக்குள் வந்துவிட்டது. கதைக்குள் நாம் பயணம் செய்கிறோம். எந்த ஒன்றையும் முற்றுப்புள்ளி வைத்து முடித்துவிட முடியாது. முடிவு கட்டிவிட முடியாது. இராவணன் நமக்குள் சாவதில்லை. இராமனுக்கு வெற்றியை நாம் அனுமதிக்க வில்லை. நமக்கு ஒரு வாழ்வு கொடுத்த தாய் தந்தையை ஆசிரியரை நாம் உதறிக்கொள்ள முடியாது.

**வானம் கூட்டுள் வருமா?**
**பறக்க மறந்து ஒடுங்கி இருந்தால்**
**சிறகு பெருமை தருமா?**

**பறவை கூடு திரும்பியது**
**சிறகு முளைத்துப் பறந்து திரிய**
**வானின் இதயம் விரும்பியது.**

பறக்க மறந்து கூட்டினுள் அடைப்பட்டுக் கிடந்தால் வானம் கூட்டுக் குள் வரமுடியாது. வானில் பறந்த பறவை கூட்டுக்குள் வந்து முடங்கும் போது பறவையோடு இயங்கிய வானம் தனக்குள்ளும் சிறகு வளர்த்துக் கொண்டு பறக்கத் துடிக்கிறது. பறவைக்குப் பறக்க விருப்பம் இல்லாத போது சிறகு எப்படி வளரும்? சிறகை விரித்துக் கொள்ளவும், வலுப்படுத்திக் கொள்ளவும் பறவை பறக்க வேண்டும். அப்பொழுதுதான் வானம் தன்னோடு பயணம் செய்யும். வானமும் தன்னோடு பறக்கும். இதே போலத்தான் நாமும் வரலாற்றோடு இயங்குகிறோம், வள்ளுவரோடு

உரையாடுகிறோம். பிரபஞ்ச இயக்கத்தினுள் நாமும் இணைகிறோம். இயங்குகிறோம். முடங்கி இருப்பவனுக்கு வெறுமைதான் விதி. இயங்கு பவனுக்குதான் எல்லாமே உரிமைப்படும். இவனுக்குத்தான் அழகும் ஆற்றலும் விடுதலையும் இயல்பாக வந்துசேரும். வானம் நமக்குள் வந்து சேர நாமும் வானம் ஆகலாம். ஆறு நமக்குள்ளும் அலையடிக்கும், இயங்கும். மனிதனுக்கு இவையெல்லாம் சாத்தியம். இவனால்தான் பிரபஞ்சமும் அழகு பெற்றது.

**அலுத்துப் போனது காட்டில்**
**மானும் முயலும் வாழ்க்கை தேடி**
**வந்தன குழந்தை பாட்டில்.**

மானும் முயலும் காட்டில்தான் வாழ்கின்றன. நாட்டினுள், நகரத்தினுள் அவை வந்துவிட்டு அவை பத்திரமாகத் திரும்பிச் செல்ல முடியாது. ஆனால் எவ்வளவு காலத்திற்கு மட்டும்தான் அவை காட்டுக் குள்ளேயே வாழும்?

நாட்டுக்குள், நகரத்திற்குள் அவை விரும்பாமல் இருக்குமா? வரத் தான் செய்யும். பெரியவர்களை நம்பி வரமுடியாது. குழந்தைகளை நம்பி வரமுடியும். குழந்தைகளோடு அவை விளையாடலாம், கொஞ்சலாம், பேசலாம். அவை உடன்பிறப்புகள், கள்ளம் கபடம் இல்லாதவை. ஆகவேதான் இவை குழந்தைப் பாடலுக்குள் குழந்தைகளின் கற்பனைக் கதைக்குள் வருகின்றன. இப்படிச் செல்கிறது கவிஞரின் கற்பனை. காட்டில் வாழ்வதை அலுத்த நிலையில் குழந்தைகளின் பாடலுக்குள் அவை வந்திருக்கின்றன என்கிற கற்பனை நயமான கற்பனை. குழந்தை களுக்கும் பெரியவர்களுக்கும் உலகம் உவப்பாக இல்லை. எல்லாவற்றையும் இவர்கள் கூறுபோட்டு ஒருவரை ஒருவர் சாடி, ஒருவரை ஒருவர் கொன்று உலகத்தைக் கோரமாக மாற்றி இருக்கிறார்கள். இவர்கள் உலகத்தில் முயலுக்கும் மானுக்கும் மட்டுமல்ல, குழந்தைக்கும்கூட வாழப் பிடிப்பது இல்லை. ஆகவேதான் மானையும் முயலையும் குழந்தைகள் தம் பாடலுக்குள் அழைக்கின்றன.

கவிஞர் தமிழன்பனின் இந்தக் கவிதைத் தொகுப்பிற்குச் 'சென்னிமலைக் கிளியோப்பாத்ராக்கள்' தலைப்பு கவிதைத் தொகுப்பின் மையக்கருவாகச்

சென்னிமலைக் கிளியோப்பாத்ராக்கள் இருக்கக் கூடுமென நம்பி நாம் படிக்கிறோம். மூன்றே கவிதைகளில்தாம் சென்னிமலை இடம் பெறுகிறது. சென்னிமலையில் கிடைக்கும் வெங்கச் செங்கல் பற்றி ஒரு கவிதை. வெங்கச் செங்கல்லை நாம் பார்த்திருக்கலாம்; வெள்ளை வெளேரென இருக்கும் கல். சூரிய வெளிச்சத்தில் கண்களைக் கூசச் செய்யும் கல். உறங்கும்போதுகூடக் கனவில் அவை வந்து பளிச்சிடும் என்கிறார் ஒரு கவிதையில்.

இன்னொரு கவிதையில் சென்னிமலையில் உள்ள முருகன் கோவிலில் அரோகரா என்று பக்தர்கள் முழக்கம் இடுகிறார்கள். இக் குரலையும் மிஞ்சிக் கேட்பது வசீகரா பாடல். பக்தியைச் சினிமா முந்துகிறது.

அடுத்து இன்னொரு கவிதையில்தான்,

**சென்னிமலைச் சரிவில் பூக்கள்**
**எல்லாம் என்ன? எகிப்தில் இல்லாக்**
**கிளியோப் பாத்து ராக்கள்.**

மலைச் சரிவில் உள்ள மலர்கள், எகிப்தில் இல்லாத கிளியோப் பாத்ராக்கள். மலர்கள் அல்ல மங்கையர்கள் அத்தனை பேரும் பேரழகிகள். எகிப்தில்தான் கிளியோப்பாத்ராக்களைப் பார்க்க முடியும் என்பதில்லை, சென்னிமலையிலும் பார்க்கலாம் என்கிறார் கவிஞர்.

# 36

# தமிழோவியம்

## பூ! பூ! பூ!

தமிழன்பன் ஒரு கவிஞர் என்ற முறையில் அழகைத் தேடுகிறார். பூ எல்லோரையும் போல இவரைக் கவர்கிறது. கவிஞர் என்பதனால் மிகுதியாகவே கவர்கிறது. பூ இத்தனை அழகோடு இருப்பதற்கு என்ன காரணம் என்று பூவைப் பார்த்துக் கேட்கிறார்.

காதல் தொட்டதால், அன்றியும் காலம் தொட்டதால் நீ அழகாகப் பூத்திருக்க வேண்டும். ஆகவேதான் உனக்கு இந்த அழகு வாய்த்து இருக்கிறது.

ஒருவேளை மழையின் வயிற்றில் நீ பிறந்திருக்க வேண்டும். கள்ள வண்டு தொட்டதால் பூத்திருக்க வேண்டும். ஆகவேதான் உனக்கு இத்தனை அழகு.

திருமணத்திற்காகக் குமரிப் பெண் காத்திருக்கிறாள். மச்சான் மார்பைச் சேர்வதற்காக அவள் காத்திருக்கிறாள். இனி மேளம் கொட்டும். மண அறையில் நீ அவளைச் சேர்வாய். குமரிப் பெண்ணின் மலர்ச்சிதான் உனக்கு இத்தனை அழகைத் தந்திருக்கிறது.

நெருப்பைப் பிழிந்து உன்னைச் செய்திருக்கவேண்டும். தெற்குக் காற்றில் – தென்றலில் உனக்கு எத்தனை மகிழ்ச்சி! யாருடைய உயிரையோ பிழிந்து இத்தனை அழகாக நீ பூத்திருக்கிறாய்.

அற்புதமான கேள்வி – மலருக்கு அழகு சேர்க்க யார் யார், எவை எவை தம்மைத் தந்திருக்கின்றன. எல்லாவற்றிலிருந்தும் அழகை எடுத்துக்

கொண்டதால்தான் இந்தப் பூவிற்கு இத்தனை அழகு. திரும்பத் திரும்ப நம்மைப் படிக்க, பாடத் தூண்டுகிற கவிதை.

## அகலிடம் சூரியன் தோற்பான்

குழந்தைகளைப் பொறுமையோடு நாம் புரிந்து கொள்ளவேண்டும். சின்ன குழந்தைதானே என்று நாம் இகழ்ந்துவிடக் கூடாது. சின்ன குழந்தை நம்மைத் தொந்தரவு செய்யும்; ஓயாமல் கேள்விகள் கேட்கும்; நமக்கு வேலை அதிகம் என்பதனால் குழந்தைகளைப் பொருட்படுத்தத் தவறி விடுகிறோம். நாம் பெரிய மனிதராக இருக்கலாம். சின்ன குழந்தைகள் அகல் விளக்கு மாதிரி சிறியவைதான் எனினும் அவற்றின் பேரழகுக்கு முன் சூரியனும் தோற்றுவிடுவான் என்கிறார் கவிஞர்.

சின்ன அரும்புதான் எனினும் அது இப்பொழுது செய்வது தியானம். அதற்குள்ளிருந்து நிதானமாக ஒரு பூ வனம் எழும்.

சின்ன பனித்துளி பட்டு மணலும் பிரபஞ்சத்தைக் கருத்தரிக்கும். குழந்தையின் கை சிறியதுதான் எனினும் வானமும் அதற்குள் வந்து அடங்கும்.

குழந்தை தனக்குள் ஆயிரம் சாளரங்களைத் திறந்து வைத்துத் தன் அறிவை வளர்த்துக்கொள்ளும். குழந்தைக்குள் இவ்வளவு துடிப்பு அடங்கியிருக்கிறது. வாயிலில் நின்று குழந்தையின் வழியை நாம் மறைக்கக் கூடாது. அறிவு வெளிச்சம் குழந்தைக்குள் உள் புக நாம் அனுமதிக்க வேண்டும்.

புதிய திசைகள் குழந்தைக்குள் தானே பூக்கும்.

குழந்தைகள்தான் நிஜமானவை. நாமோ நிழல்கள். நிஜங்களுக்கு நிழல்கள் அறிவுறுத்த வேண்டாம். குழந்தைகள், தழல்களின் மூலத் தழல்; வத்திப்பெட்டிக்குள் அடைக்கும் முயற்சி வீண்.

குழந்தைதான் மனிதனுக்குத் தந்தை என்பது ஆங்கிலத்தில் ஒரு பழமொழி. குழந்தைகள் மூலம் இந்த வாழ்வை, உலகை, உலகின்

அழகை, வாழ்வின் புதிர்களை நாம் அறிந்து கொள்ள முடியும். ஒரு சிறிய உயிரை, ஒரு புள்ளியை, ஓர் ஒளிக் கதிரை, ஒரு மணல் துகளைப் புரிந்து கொள்ள நாம் எவ்வளவோ முயற்சி செய்தாக வேண்டும். இதே போலத்தான் ஒரு சின்ன குழந்தையையும் நாம் நெருங்கி இருந்து நம்மையும் நாம் புரிந்து கொள்ளவேண்டும்.

## *பூக்கள் மேலே தப்பா?*

எனக்கு வாய்ப்புகள் கிடைக்கவில்லை. வசதியான குடும்பத்தில் நான் பிறக்கவில்லை. வாழ்க்கையில் எப்படி நான் முன் செல்ல முடியும்? வாயில்களை மற்றவர் அடைத்துவிட்டனர். வழிகளை மறித்து நிற்கின்றனர். இப்படிப் பிறரை நொந்து கொள்கிறோம். நம்மிடம் என்ன குறை என்று நாம் பார்ப்பது இல்லை. நான் சரியாகத்தான் இருக்கிறேன்; உலகம் தான் சரியாக இல்லை. இப்படிப் பேசிக்கொண்டு சும்மா கிடப்பவர்களை நோக்கி ஒரு கவிதை. கவிதைகளில் வருபவை உவமைகள் என்று நாம் அழகை மட்டும் பார்த்துக் கொண்டிருக்க வேண்டாம். உவமைகளைக் கடந்து நமக்குள்ளே பார்க்க வேண்டும். கவிஞர் பார்த்திருக்கிறார்.

துணிவிருந்தால் கடலை நம்மால் கடக்க முடியும். துணிவில்லாத வனுக்குக் கப்பல் எதற்குப் பயன்படும்?

கூண்டில் அடைப்பட்டு அதுவே தனக்கு அகம் என்று நினைக்கிற கிளிக்குச் சிறகு இருந்து என்ன பயன்?

தன்னைத்தானே திறந்து கொள்ளத் தெரிந்தவனுக்குச் சாவி தேவை இல்லை. வாழ்வின் புதிர்கள் தானே விளங்கும்.

தனக்குள் மண்டியிருக்கிற இருளைக் கிழித்துக் கொள்ளத் தெரியாத வனுக்குக் கிழக்கு என்ன வெளிச்சம் தரமுடியும்?

நெஞ்சில் குப்பைகளைச் சுமந்து கொண்டிருப்பவனுக்குள் எந்த மலர் மணம் பரப்ப முடியும்?

நெஞ்சில் துணிவு தேவை. நெஞ்சைத் திறந்து வைத்திருக்க வேண்டும். நெஞ்சில் குப்பைகள் சேர இடம் தரக்கூடாது. இப்படி இருப்பவருக்குத்தான் திசைகள் திறக்கும்; ஒளி வசப்படும்; இவருக்கு ஊரும் உலகமும் உறவுகளாகும்.

## *இறக்கவில்லை பகத்சிங்*

இந்தத் தொகுப்பில் உள்ள அற்புதமான கவிதைகளில் ஒன்று நாட்டு விடுதலைக்காகத் தன் இன்னுயிரைத் தந்தவர்களில் முதல்வரென நாம் என்றும் கொண்டாடத்தக்க அற்புத மனிதர் பகத்சிங். இவரைப் பற்றி ஒரு நாடகப் பாணியுள்ள அழகிய கவிதை இது. பகத்சிங் இறந்துவிட்டாரா? என்று நாட்டு விடுதலையில் அக்கறை கொண்ட எவரைக் கேட்டாலும் உடனே அவர் பதில் சொல்வார், 'பகத்சிங் இறக்கவில்லை.' அவர் இன்றும் வாழ்கிறார். என்றும் வாழ்வார். இப்படித்தான் கவிஞரும் சொல்லுகிறார்.

வானத்தை மூடியிருக்கிற காரிருள் ஒரு நாள் அதிர்ந்தது. ஒரு காலடியோசை கேட்டது என்று தொடங்குகிறார் கவிஞர். யாரிவர்? எனக்கு நேரில், பார்வைத் தேரில் வந்த இவர் யார் என்று கேட்டுக் கொள்கிறேன். வந்தவர் பகத்சிங். கோடி எரிமலைகளும் ஆடும் அலை கடலும் கூடி உருவான எங்கள் பகத்சிங் இவர்தான் என்று இப்படி ஒரு காட்சியை நமக்குள் எழுப்புகிறார் கவிஞர்.

இப்படி நேரில் வந்தவர் எங்கள் பகத்சிங்; தேச விடுதலைக்காகத் தூக்கில் தொங்கிய மாவீரர் பகத்சிங்.

இவர்தான் இறந்துவிட்டாரே, எப்படி எங்களுக்கு நேர் முன் வருவார்? இப்படி நான் எண்ணினேன். ஆனால் நேரில் வந்த பகத்சிங் கூறுகிறார்: பாரத அன்னையின் பாதச் சிலம்பில் உள்ள ஆயிரம் பரல்களில் ஒரு பரலாக – அவள் கையிலுள்ள வீணையில் ஒரு நரம்பாக நான் இன்றும் இருக்கிறேன். தேசத்தின் நலத்திற்காகப் பாடுபடும் தோழர்களின் நெஞ்சில், தோளில் நான் இருக்கிறேன். தேச விடுதலையைக் காத்து நிற்கும் தோழர்களோடு நான் இன்னும் இருக்கிறேன். இந்தத் தேசத்தின்

சுதந்தரத்தை எந்த அந்நியரிடமும் என்றும் இழந்துவிடக் கூடாது என்பதற்காக உயிர் துறக்க விரும்பும் எவருடைய உள்ளத்திலும் நான் இருக்கிறேன். இப்படி உணர்ச்சிகரமாக, உயிர்த் துடிப்போடு, ஆவேச உணர்வோடு செல்லுகிறது இந்தக் கவிதை. மீண்டும் அந்நியர்களின் ஆளுகைக்கு நம் தேசத்தை நம்மவர்களே விட்டுக் கொடுக்கிற சூழலில் நாம் இன்று இருக்கிறோம். இன்றைக்கும் பகத்சிங்குகள்தான் தேசத்தைக் காப்பாற்றியாகவேண்டும். அகிம்சை மூலம் அல்ல. தேவைப் பட்டால் ஆயுதம் எடுத்தும் காக்க வேண்டும். பகத்சிங் மீட்டுக் கொடுத்தது இந்தத் தேசம். பகத்சிங்குக்கு நாம் சூது, துரோகம் செய்யக் கூடாது. அவர் தன் உயிரைக் கொடுத்துத் தேசத்தை மீட்டு நமக்குத் தந்தார். நம் உயிரைக் காப்பதற்காகத் தேசத்தை நாம் இழக்க முடியாது.

குழந்தைகளின் பாட நூலில் இடம்பெறத் தேவையான அற்புதமான பாடல் இது.

## *இழப்பின் தொடர்ச்சியில்*

கவிதைக்கு ஆழமும் அழகும் தருவது மெய்யியல் பார்வை. வாழ்வுக்கும் இந்தப் பார்வையால்தான் வழி பிறக்கிறது. கவிஞர் தமிழன்பன் இத்தகைய பார்வையைத் தனக்குள் கொண்டவராய், ஒரு சித்தராய் இருக்கிறார். அடிக்கடி என்றில்லாவிட்டாலும் அரிதாகவேனும் இப்படிக் கவிதையில் அற்புதம் செய்கிறார். வெற்று வார்த்தைகள் கவிதை ஆவது இல்லை. பார்வையில்லாதபோது கண்களால் பயன் இல்லை. நான் என்பதை இழக்காதபோது ஞானத்தால் பயனில்லை. இலக்கு இல்லாதபோது பயணத்தால் பயன் இல்லை. இப்படி அழகிய முகங்களோடு இயங்குகிறது இந்தக் கவிதை. கவிதையில் எத்தனையோ அடுக்குகள்–ஒரு பதிகம் போல – ஆலாபனையாக.

வானம் கிடைத்து விட்டது; இனி எனக்குச் சிறகுகள் தேவையில்லை. வார்த்தைகள் கிடைத்து விட்டன; இனி கவிதை தேவையில்லை.

பாதை தெரிந்து விட்டது; இனி பயணம் தேவையில்லை. படிப்புக் கிடைத்துவிட்டது; இனி பாடம் எதற்குத் தேவை?

விதை கிடைத்து விட்டது; இனி நிலம் எதற்கு வேண்டும்? இசை கிடைத்து விட்டது; இனி வீணை தேவை இல்லை. ஒளி கிடைத்துவிட்டது; நிலவு தேவையில்லை.

அந்தி வந்து விட்டது; இரவு தேவையில்லை. ஆசை வந்து விட்டது; இதயம் இனித் தேவையில்லை.

ஞானம் கிடைத்து விட்டது; நான் இனித் தேவையில்லை.

இப்படியெல்லாம் சிந்திப்பவன் யாராக இருக்க முடியும்? இவன் ஒரு மூடன்; பூர்வீகச் சொத்து இருக்கிறது என்பதற்காக இனி தான் உழைக்க வேண்டியதில்லை என்பவன் இவன். என் மூதாதையர் எல்லா அறிவுச் செல்வத்தையும் இயக்கி எனக்குத் தந்து விட்டனர். நான் அறிவைத் தேடிச் செல்ல வேண்டியதில்லை. எனக்குள் எல்லாமே இருக்கிறது. இனி எனக்கு யாரும் தேவை இல்லை. இப்படி இவன் சிந்தித்து எனக்கு நானே எல்லாம் என்று இருப்பவன் பிறகு எல்லா வற்றையும் இழந்துவிடுவான். இவன் வறியவன்; மூடன். எனக்குக் கைகள் இருக்கின்றன உழைக்க என்னால் முடியும் என்று நினைப்பவன் உலகத்தைப் பெறுவான். இதுவே உண்மை ஞானம்.

## *நிலவோடும் மலரோடும்*

கவிதை உள்ளம் என்பது எது என்பது கேள்வி. கவிதை என்பது எங்கிருக்கிறது, எதிலிருக்கிறது, எங்கெல்லாம் இருக்கிறது என்பது தொடரும் கேள்விகள். இறுதியில் கவிதை என்பது நமக்குள்ளே இருக்கிறது. கவிதைக்குள் நாம் இருக்கிறோம், கவிதையாக நாம் இருக்கிறோம் என்பதைப் புரிந்து கொள்கிறோம். இத்தகைய கூறுகள் என்பன ஒரு தேடலாய்த் தொடங்கி ஞானமாய் விரிவு பெறுகின்றன. இவனுக்கு வானம் வெளியில் இல்லை, கடல்கள் வெளியில் இல்லை. இசை வெளியில் இல்லை. இவனே எல்லாமாகவும் இருக்கிறான். இந்த உண்மையை இந்தக் கவிதையில் வெளிப்படுத்துகிறார் தமிழன்பன். சரியாகச் சொல்வதென்றால் தமிழன்பனின் ஆயிரம் கவிதைகளுக்குள் உள்ளியக்கமாய் இருப்பது இதுதான். ஒரு பெருங்கவிஞர் எனத்

தனக்குள் இடையறாத தேடலில் இருப்பவர் தமிழன்பன். இவரது தமிழ் நமக்கு வேண்டும்; தமிழர்க்கு வேண்டும். கவிதைக்குள் இனி நுழையலாம்.

நிலவோடும் மலரோடும் நாம் உரையாடலாம், உறவாகலாம். தெளிந்த நீரோடையோடு நாம் நடைபோடலாம், அதன் கதையோடு நாமும் கலந்து ஆடலாம்.

முகிலோடு கலந்து நாமும் விரிவானம் ஆகலாம். திசைகள் நமக்கு அப்போது வசப்படலாம். இத்தகைய பயணத்தின்போது நமக்குள்ளே நாம் வியப்பாகலாம், புதிதாகலாம், பொலிவாகலாம்.

இதுபோல இன்னும் தனக்குள்ளும் வெளியிலும் பயணம் செய்கிறார், கலக்கிறார் கவிஞர். கவிதையில் தேர்ச்சிகொள் என்று பாரதியார் சொன்னதை இந்தக் கவிதையின் மூலம் நாம் பாடம் படிக்கலாம்.

## *மனுசி*

ஒரு கவிஞனாக இருப்பவர் பூவை, நிலவைப் புரிந்து கொள்வதைப் போல மண்ணையும் புரிந்து கொள்ள முடியும்; பெண்ணையும் புரிந்து கொள்ள முடியும். ஆண் தன்னை முழுமையானவன் என்றும் தன்னால் தான் ஒரு பெண் முழுமையடைய முடியும் என்றும் இது நாள்வரை கருதி வந்த மூடத்தனம் இனியாவது ஒழியட்டும். பெண்ணைத் தன் பாதி எனப் புரிந்து கொள்ளாதவன்தான் முழுமை அடைவதற்கில்லை. இத்தகைய புரிதலோடு கவிஞர் பேசுகிறார்.

பெண்ணை இதுவரை மான் என்றும், மயிலென்றும் இப்படிச் சொல்வதற்குத்தான் நம் கற்பனையைப் பயன்படுத்திக் கொண்டோம். இந்தக் கற்பனை பெண்ணை ஒரு மனுசி எனக் காணவில்லை. இந்தக் கற்பனையை முதலில் நாம் ஒதுக்கி வைக்கவேண்டும். அப்போதுதான் நமக்கு உண்மை புரியும்.

இதுவரை சாத்திரங்கள் சொன்ன பொய்யை நாம் நம்பி இருந்தோம். பாவத்தின் சின்னம் அல்ல பெண். இனியேனும் நீதி தெரிந்திடுவோம்.

இதுவரை பெண் தாயாக இருந்தாள், தாரமாக இருந்தாள், சேயாக இருந்தாள். இப்படிப் பெண்ணைப் பாத்திரங்களாகப் பார்த்தோமே அல்லாமல் ஒரு மனுசியை நாம் பார்க்கவில்லை. பொய்ம்மைச் சாத்திரங்கள் இனி நமக்கு வேண்டாம்.

பெண் யாருக்கும் பாரமாக இல்லை. யாரிடமும் பிச்சை கேட்டுத் தன் வாழ்வைப் பெறவேண்டியது இல்லை. தானும் வாழ்ந்து பிறரையும் வாழ்விக்க வந்தவள் பெண். பெண்ணைத் தேவதை ஆக்கவும் வேண்டாம். தீயினில் பொசுக்கவும் வேண்டாம். மனிதனைப் பூரணமாக்குபவள் பெண்.

இப்படி பெண்ணை, பெண்ணின் உண்மையை எடுத்துரைக்கிறார் கவிஞர். உலகத்திற்குப் புது நீதி தேவை, புதுச் சாத்திரம் தேவை. இந்தச் சாத்திரத்தைப் படைக்கக்கூடியவள் பெண். ஒரு கவிஞருக்குத்தான் பெண்ணையும் மண்ணையும் புரிந்து கொள்ள முடியும் என்பதை மீண்டும் சொல்லிக் கொள்ளலாம்.

## *பயணமும் பாதையும்*

பல சமயங்களில் ஒரு கவிதையைச் செய்யுள் எனக் கருதிப் பதவுரை, பொழிப்புரை, இலக்கணக் குறிப்புகள் என்று பாடம் படிக்கிறோம். கவிதை நமக்குள் பதியவில்லை. கவிதையோடு நாம் கலக்கவில்லை. இப்படித்தான் இலக்கணம் கற்கிறோம். இலக்கியம் கற்பதில்லை. வரலாறு என்றும், பொருளியல் என்றும் பாடம் படிக்கிறோம். வாழ்க்கை புரியவில்லை. பகுதிகளுக்குள் மூழ்கிவிடுகிறோம். முழுமை தெரிவதில்லை. எது சாரமோ சத்தோ அதைக் கற்காமல் சக்கையே போதுமென இருந்துவிடுகிறோம். கவிதை, கவித்துவம் எது என்று கற்கத் தொடங்கினால் பிறகு எல்லாமே புரியும். இந்த உண்மையை உள்ளடக்கி உள்ளது இந்தக் கவிதை.

சிற்பம் என்பது கல்லைக் கொண்டுதான் சமைக்கப்படுகிறது. ஆனால் கல் என்பதும் சிற்பம் என்பதும் ஒன்று அல்ல. வெறும் கல்லாகப் பார்ப் பவனுக்குச் சிற்பத்தின் அழகில் கலக்க முடியாது. அலைகளை மட்டும் கணக்கிட்டுக் கொண்டிருப்பவன் நதியாக முடியாது.

நாதத்தில் கலக்காமல் ஊதிக்கொண்டு இருந்ததனால் நாதமாய் நான் மாறவில்லை. வெறும் குழலாகவே எஞ்சி இருக்கிறேன். பதம் பிரித்துப் படித்தேன்; நான் கவிதையாகவில்லை. பாதையில் கவனம் வைத்திருந்தேன்; பயணம் முடிவு பெறவில்லை.

## *ஓர் எதிர்பார்ப்பில்*

உலகில் இருள் ஒழிய வேண்டும்; உண்மை வெல்ல வேண்டும்; அமைதி நிலைபெற வேண்டும் என்றெல்லாம் நாம் ஆசைப்படுகிறோம். நாம் மட்டுமில்லை; வரலாற்றுக்காலம் முழுவதும் அறிஞர்கள், சான்றோர்கள் ஆசைப்பட்டனர். இன்றுவரை இவை நடைபெறவில்லை. என்றைக்கு இவை நடைபெறும் என்பதும் உறுதிப்படவில்லை. இப்படித்தான் கவிஞர் தமிழன்பனும் கவலைப்படுகிறார். நம்மோடு சேர்ந்து இயற்கையும் கவலைப் படுவதாகக் கவிஞர் கற்பனை செய்கிறார்.

உண்மை எப்பொழுது வெல்லும் என்று எதிர்பார்த்து ஒவ்வொரு நாளும் கதிரவன் உதிக்கிறான். உதிக்கும் அவன் ஒவ்வொரு நாளும் இருளையே காண்கிறான்.

கலகமில்லாத உலகத்தைக் காண்பதற்காக நிலவு நினைக்கிறது. அதன் நினைப்பு நிறைவேறவில்லை. ஆகவே நெஞ்சில் சோகத்தோடு தான் நிலவு தோன்றுகிறது.

உலகத்தில் நீதி நிலைபெற வேண்டும் என்று ஓயாமல் உலகம் சுற்றுகிறது. நீதி இதுவரை நிலைபெறவில்லை. ஆகவே உலகம் கிழடு தட்டி உலவுகிறது. மனிதர்கள் மத்தியில் நல்லுறவுகள் நிலைபெற வேண்டுமென்று காற்று ஓயாமல் இயங்குகிறது. அமைதி நிலைபெறவில்லை. ஆகவே காயங்களோடு காற்று அலைகிறது.

கவிஞர்கள் எப்பொழுதும் இப்படித்தான் கவலைப்படுகிறார்கள்.

## *எது மிஞ்சும்?*

நம் காலத்திலும் நமக்கு எத்தனையோ அனுபவங்கள். இனிக்க இனிக்கத் தலைவர்கள் பேசினார்கள்; கடமை வீரர்கள்போல ஓயாது

உழைப்பவர் போலக் காட்டிக் கொண்டனர். இவர்களுக்காக நாம் எதுவும் செய்யலாம் என்று நம்பியிருந்தோம். இறுதியில் என்ன ஆயிற்று? தலைவர்கள் அதிகாரம் சேர்த்துக் கொண்டனர். செல்வம் சேர்த்துக் கொண்டனர். நம்மைக் கைவிட்டனர். இப்படி வழி தெரியாது நாம் நிற்கிறோம். இந்த உண்மையைக் கவிஞர் இந்தக் கவிதையில் உவமைகள் வழியே சந்த நயத்தோடு சொல்லுகிறார்.

இலைகள் அழகியவை; மலர்களும் அழகியவை; காயும் பழமாயிருக் கிறது; பழத்தை வாயில் வைக்க முடியவில்லை. இனிப்பு இல்லை. எட்டியாய்க் கசக்கிறது.

சிரித்துச் சிரித்துப் பேசுகிறான்; நெஞ்சில் அவனுக்கு இருட்டு நினைவுகள். விளைவுகள் எப்படி இருக்கும்?

சுயநலம் என்ற வீணையில் இசை இனிமையாகத்தான் இருக்கும்; ஆனால் விளைவோ முள்ளாய்க் குத்தும்.

எல்லாவற்றையும் திரைபோட்டு மறைத்துச் செயல்படுகிறான். இறுதியில் நமக்கு விழிப்புணர்ச்சி ஏற்படும்பொழுது என்ன எஞ்சி இருக்கும்?

## *நினைவிருக்கிறதா?*

ஒவ்வோர் ஆண்டும் ஆகஸ்டு 15 அன்று விடுதலை நாள் கொண்டாடுகிறோம். தலைவர்கள் கொண்டாடச் சொல்லுகிறார்கள். தலைவர்களை நம்பி நாமும் கொண்டாடுகிறோம். இன்றுள்ள தலைவர்கள் விடுதலைக்காகப் போராடியவர்கள் இல்லை. புண்பட்டவர்கள் இல்லை. எந்த உறவையும் இவர்கள் இழக்கவில்லை. ஆனால் இவர்கள் தலைவர் களாகி எல்லாவற்றையும் அனுபவிக்கிறார்கள். விடுதலைக்காகப் போராடிய வர்களின் பெயர் சொல்லி நாட்டுக்காக நம்மைத் தியாகம் செய்யச் சொல்லுகிறார்கள். இவர்கள் தலைவர்களாக இருக்க நாம் ஏமாளிகளாக வேண்டும். நாமும் ஏமாந்து விடுதலை நாள் கொண்டாடுகிறோம்.

விடுதலைக்காகப் போராடித் தம் நலம் துறந்து, தம் உறவுகள் இழந்து புண்பட்டு இறுதியில் தம் உயிரையும் இழந்தவர்கள் நம்மோடு பேசினால் என்ன பேசுவார்கள்? இப்படிக் கவிஞர் கற்பனை செய்கிறார். ‘எங்களை

நினைவிருக்கிறதா?' என்று இவர்கள் பேசத் தொடங்குகிறார்கள். சுருக்க மாகத் தங்களைப் பற்றிச் சொல்லுகிறார்கள். இங்கு நாம் பெற்றிருக்கும் வாழ்வு, சுகம் முதலியவை அவர்களால் வந்தவை. இப்படிப் பலவற்றைச் சொல்லுகிறார்கள். நமக்கு உண்மை தெரியவேண்டும். நாட்டுக்காக நாமும்தான் உழைக்கவேண்டும். எதற்காக உழைக்கிறோம் என்று தெரிந்து உழைக்கவேண்டும். நம்மை வைத்துச் சொத்து, சுகங்களையும் தேடிக்கொள்வோனுக்காக நாம் உழைக்கக் கூடாது. இந்த உணர்வை நமக்கு உணர்த்துகிறது இந்தக் கவிதை. விடுதலை நாள் விழா நாமும் கொண்டாடத்தான் வேண்டும். நமக்கான விடுதலை, நம் மக்களுக் கான விடுதலை நம் தலைவர்களிடமிருந்து பெறுவதற்காகக் கொண்டாட வேண்டும். நம் தேசத்தை நமக்கு உரிமைப்படுத்திக் கொள்வதற்காகக் கொண்டாடவேண்டும். இத்தகைய விடுதலை நாள் விழாதான் உண்மையான விழாவாக இருக்க முடியும்.

## *பூக்களோடு சிரிக்கலாம்*

தமிழோவியம் என்ற இந்தக் கவிதைத் தொகுப்பின் இறுதிக் கவிதை இது. தமிழோவியம் என்ற பெயருக்குத் தகுந்தவாறு தமிழ் நாட்டின் இயற்கை வளம், தமிழ்க் கவிதையின் வளம் பற்றியெல்லாம் இடையில் சில பாடல்கள் உள்ளன. இத்தொகுப்பிலுள்ள அனைத்துப் பாடல்களும் தமிழின் அசலான ஓவியம். கவிதை என்றால் என்ன? அழகு என்றால் என்ன? என்பதையெல்லாம் இளைஞர்கள், குழந்தைகள் கற்றுத் தெளிவதற்கேற்ற பாடல்கள். இசை நயத்தோடு ஆடியும் பாடியும் இந்தக் கவிதைகளைக் குழந்தைகள் கற்றுக்கொள்ள வேண்டும். குழந்தைப் பாடல்கள் என்றவுடன் கைதட்டிக் கொண்டு கும்மி அடித்துக் கொண்டு சைக்கிளைப் பற்றி, வாகனங்கள் பற்றி, அம்மா, அப்பா, பாட்டிகளைப் பற்றிப் பாடுகிற எளிய பாடல்கள்தான் குழந்தைப் பாடல்கள் என்று நாம் ஏமாற வேண்டியதில்லை. தமிழைப் பற்றிய பாடல் என்பதற்காகத் தமிழின் பெருமையைச் சொல்லித்தான் ஆகவேண்டும் என்ற கட்டாயமும் இல்லை. அழகிய தமிழில் இசையோடு அமைகிற எல்லாப் பாடல்களும் குழந்தைப் பாடல்கள்தான். இயற்கையின் இன்பங்களைக் குழந்தைகள் கற்றுக் கொள்ளவேண்டும். இயற்கையோடு குழந்தைகள் கலக்கவேண்டும்.

இப்படிக் கலக்கிறபோது குழந்தைகள் இயல்பாகவே நல்ல பண்புகளைக் கற்றுக் கொள்வார்கள். அடக்கம், ஒழுக்கம், தூய்மை, உண்மை என்பனவற்றை குழந்தைகள் கற்றுக் கொள்வது நம் காலத்திற்குப் போதாது; வீரம், துணிவு, அச்சமின்மை முதலியவற்றையும் கற்றுக் கொள்ளவேண்டும். இந்த நூலின் இறுதிப் பாடல் குழந்தைகளுக்கு அற்புதமான முறையில் இவற்றைக் கற்றுத் தருகிறது.

கவிஞர் பாடுகிறார்

**பூக்களோடு சிரிக்கலாம்**
**புல்லினோடும் பேசலாம்.**

இப்படித் தொடங்கிப் பலவற்றைச் சொல்லுகிறார்.

**சிட்டுக் குருவிக் கூட்டிலே**
**சேர்ந்து நாமும் வாழலாம்** என்கிறார்.

**தத்தும் முயலின் கண்களில்**
**தாவும் மானின் வேகத்தில் – கிளை**
**தொத்தும் குரங்குப் பாய்ச்சலில்**
**துள்ளும் வாழ்க்கைத் தத்துவம்** கற்கலாம் என்கிறார்.

தொடர்ந்து புலியிடமிருந்து வீரத்தைக் கற்றுக் கொள்ளலாம் என்கிறார். சிங்கத்திடமிருந்தும் அன்பைக் கற்கலாம் என்கிறார்.

கழுதையின் கண்களில் சோக உணர்வும், பசுவின் கண்களில் கருணையும் இருப்பதை நம்மால் உணர முடியுமானல் உயிர்கள் மீது நாம் அன்பு செய்ய முடியும் என்கிறார்.

நாயின் வாயிலிருந்தும், பூனையின் ஓசையிலிருந்தும் அவற்றின் ஒலியை நம்மால் கற்க முடியும். இப்படியும் நம்மால் தமிழ் கற்க முடியும் என்கிறார். தமிழ் என்பது மலர்களில் இருக்கிறது. முயலிடமும் குருங்குகளிடமும்கூட இருப்பது தமிழ். புலியும் சிங்கமும் கூட நமக்குத் தமிழ் கற்றுத் தரமுடியும். இப்படித்தான் தமிழ் நமக்குள் பதியவேண்டும். இப்படிக் கவிஞர் நமக்கும் தமிழ் கற்பிக்கிறார். கவிஞருக்கு இத்தகைய தமிழ் கைவந்திருக்கிறது.

## தமிழோவியம்

வானொலி, தொலைக்காட்சியில் மெல்லிசைப் பாடல்கள் என ஒரு வகையான இசைப்பாடல்கள் பாடப்படுகின்றன. இசை அரங்குகளில் ஆலாபனைகளோடு பாடப்படும் இராக வகைகளை அசலான இசைப் பாடல்கள் என்று நாம் குறிப்பிடுவதிலிருந்து மெல்லிசைப்பாடல்கள் வேறுபட்டவை என்று அறிகிறோம். அவை குறைந்த அளவுக்கே இசைநயம் உடையவை. சில இசைக் கருவிகள் இந்த இசைக்கு இசையோடு சேர்ந்து ஒலிப்பதன் மூலம் பாடலின் இசைத் தன்மைக் கூடுகிறது. வானொலி மற்றும் தொலைக்காட்சிகளில் விடுதலைத் திருநாள் பொங்கல் முதலிய விழாக்கள் போன்ற சந்தர்ப்பங்களில் புதிய மெல்லிசைப் பாடல்கள் பாடப்படுகின்றன. இவை பாடல்களைப் பொருத்தவரை கவிதைக்குரிய கவித்துவம் என்ற அழகு இணைவது இல்லை. இசை முதன்மை பெறக் கவித்துவம் குறைந்தோ அல்லது இல்லாமல் கூட இவ்வகைப் பாடல்கள் அமைந்துவிடுகின்றன.

கவிஞர் தமிழன்பனுக்கும் வானொலியிலும் தொலைக்காட்சியிலும் இவ்வகைப் பாடல்களுக்கான வாய்ப்புகள் வந்த சமயங்களில் பாடிய இசைப் பாடல்கள் இந்தத் தொகுப்பில் இடம் பெறுகின்றன. இசைப்பாடல்களில் கவித்துவம் எந்த அளவுக்கு இணைய முடியும் என்று நாம் ஐயப்படுவது போலவே தமிழன்பனும் தொடக்கத்தில் ஐயப்பட்டு இருக்கலாம். ஆனால் இந்தத் தொகுப்பில் உள்ள இசைப்பாடல் அனைத்திலும் அற்புதமாக இணைந்திருக்கிறது. இசைக்கு இவர் கவிதைகளை எழுதியதாகவே தோன்றவில்லை. இவர் எழுதிய கவிதைகளை இசையோடு பாடியதைப் போலவே தோன்றுமளவுக்கு இந்த இசைப்பாடல்கள் சிறந்தனவாக அமைகின்றன. இசைப்பாடல்களிலும் புதிய கவிதை வீச்சுகள் அற்புதமாய் இணைந்துவருகின்றன. இதன் காரணமாகவே இந்தத் தொகுதியையும் கவிஞர் தமிழன்பனின் கவிதைத் தொகுப்புகளில் பொருத்தமாகவே சேர்த்துக்கொள்ளலாம்.

நம் காலத்தில் தமிழிசையில் சேர்ந்திசை என்ற புதுவகையான ஓர் அற்புதமான இசையைச் சேர்த்தவர் என்று எம். பி. சீனிவாசன்

அவர்களை மிகுந்த மரியாதையோடு நாம் குறிப்பிட வேண்டும். கல்வி கற்கும் கல்லூரி மாணவர்களை ஓர் இசைக்குழுவாக அமைத்துக்கொண்டு அவர்கள் வழியே சேர்ந்திசை என்ற புதிய வகை இசைக் கோலத்தை ஒரு சோதனைபோலத் தொடங்கி இதில் வெற்றி பெற்றுத் தமிழ் இசைக்கு ஒரு புதிய வடிவத்தை ஒரு சாதனை என விட்டுச் சென்றவர் எம். பி. சீனிவாசன் அவர்கள். இதன் காரணமாகவே இசைமேதை என்று சொல்வதற்கான ஒரு தகுதியையும் அவர் பெற்றார். மாணவர்களைக் கொண்டு அமைத்த இசைக் குழுக்களில், மாணவர்களுக்கு எவை கற்பிக்கப்பட வேண்டுமோ அல்லது மாணவர்கள் நம் காலச் சூழலில் எவ்வகை உணர்வுகளைப் பெறவேண்டுமோ அவற்றைப் பெறுவதற்கான இசைப்பாடல்களை அவர்களுக்குப் பயிற்றுவித்தார். பாரதியார் பாடல்கள் இவ்வகையில் மாணவர்கள் தம் உணர்வுகளுக்கு உரிய பாடல்கள். மாணவர்களுக்குத் தேசத்தின்மீது பற்றுத் தேவை. தேச விடுதலைக்காகப் பாடுபட்ட தலைவர்களின் வீர வரலாறு பற்றி அவர்கள் அறிய வேண்டும். பல்வேறு கலாச்சார பின்னணி உடைய பல்வேறு தேசிய இனங்களைச் சார்ந்த மக்கள் நெஞ்சில் தேச ஒருமைப்பாட்டு உணர்வை ஊட்டும் முறையிலான பாடல் தேவை. சாதியாலும் மதங்களாலும் மக்கள் நெஞ்சில் பிரிவினை உணர்வு தலையெடுக்கக்கூடாது. இயற்கை அழியக்கூடாது. சூற்றுச் சூழல் பேணப்படவேண்டும். ஆண்களுக்கு நிகரான உரிமைகள் பெண்ணுக்கும் தேவை. சாதியில் எவரையும் தாழ்ந்தவர் என்ற எண்ணம் மாணவர் நெஞ்சில் இடம்பெறக் கூடாது. இவ்வகை உணர்வுகளை, மாணவர் பயிலும் முறையினை, இசைப் பாடல்களை மாணவர் சமூகத்தைப் பயிற்றுவிக்கவேண்டும். இந்த உணர்வுகளை மாணவர் நெஞ்சில் பதிய வைப்பதோடு இசை உணர்வுக்கு மாணவர்கள் வசப்பட வேண்டும். எம். பி. சீனிவாசன் இந்தியாவின் எல்லா மொழிகளில் இருந்தும் நல்ல பாடல்களைத் தெரிவு செய்து மாணவர்களுக்குப் பயிற்றுவித்தார். இன்னும் புதிய பாடல்கள் தேவை. இந்த நோக்கில் கவிஞர் தமிழன்பனிடமிருந்து பெற்றுக்கொண்டார். சென்னையில் மாணவர்களின் புத்தகக் கண்காட்சி யின்போது பல்லாயிர மாணவர்கள் கூடிச் சேர்ந்திசை என எம். பி. சீனிவாசன் அவர்கள் நெறிப்படுத்தலில் தமிழன்பன் அவர்களின் இசைப் பாடல்களைப் பாடினர். இந்தத் தொகுப்பில் இடம் பெற்றிருக்கின்றன இந்தப் பாடல்கள்.

இசைப் பாடல்களைப் பொருத்தவரை கேட்பவர் நெஞ்சில் நேரிடையாகச் சென்று அவர்கள் உணர்வுகளோடு பாடல்கள் கலக்கவேண்டும். இந்த உணர்வுக் கலப்புக்கு இசை இன்றியமையாதது. பாடல்களில் கவிதைச் சுவையும் கூடுமானால் உணர்வுக் கலப்பு உச்ச அளவில் நடைபெறும். பாடுபவர் மட்டுமல்லாமல் கேட்பவர்களும் இசையில் மனம் ஒன்றிவிடுவர். இவ்வகைக் கவிதைகளில் கற்பனை நயத்துக்கு அதிக அளவில் இடமுண்டு. கேட்பவர் நெஞ்சில் ஒருவகையான மயக்க உணர்வைப் பெறவேண்டும். இசை என்ற காற்றில் அவர்கள் மிதக்கவேண்டும். உணர்வுக் கலப்புக்கு ஏற்ற முறையில் சொற்கள் இயல்பாக ஓடி வரவேண்டும். அருஞ்சொற்கள் அறவே கூடாது. எளிய முறையில் இயல்பாக ஓடி வரும் சொற்களுக்கு இடையில் கற்பனை உச்ச அளவில் இருக்கலாம். மக்கள் இதற்கு நெஞ்சில் இடங்கொடுப்பவராகவே இருக்கிறார்கள். இசைக்கு வசப்படுத்துவதன் மூலம் உன்னதமான உயரிய உணர்வுகளை அவர்கள் நெஞ்சில் விதைத்துவிட முடியும். இவ்வளவையும் இந்த இசைப் பாடல் களில் தமிழன்பன் செய்திருக்கிறார். இசைப் பாடலில் மட்டுமல்லாமல் கவிதைக்கும்கூட இது ஒரு சாதனை. இன்னும் ஒன்றைச் சொல்லலாம். தமிழன்பனின் பிற தொகுப்புகளில் காணவே முடியாத சில அற்புதமான கவிதைகள் இந்த இசைப்பாடல் தொகுப்பில் இருக்கின்றன.

இந்தத் தொகுப்பில் இருந்து இசைநயம் பற்றி நான் எதுவும் இங்குச் சொல்வதற்கில்லை. வாசகர்கள் அவரவர்களே இந்தப் பாடல்களில் மெல்ல தன் மனத்திற்குள் அல்லது வாய்விட்டுப் பாடிப் பார்த்துக் கொள்ளலாம். ஓரளவுக்கேனும் இசைநயத்தை நுகரலாம். எம். பி. சீனிவாசன் அவர்களின் சேர்ந்திசையில் மனம் பறிகொடுத்ததோடு அந்த இசைப்பாடல்களை இன்னும் தம் நினைவில் வைத்திருப்பவர்களுக்கு நான் எதுவும் சொல்ல வேண்டியதில்லை. ஆகவே பாடலின் இசைத் தன்மைப் பற்றி நான் எதுவும் சொல்லாமல் இங்குள்ள கவிதைகள் சிலவற்றைப் பற்றி மட்டுமே சொல்லமுடியும். இசைப்பாடல் என்ற வடிவில் இடம்பெறும் கவிதைகள் எளிய சொற்களால் அமைந்தவை. இந்தக் கவிதைகளில் சிக்கல் எதுவும் இல்லை. ஆனால் கவித்துவச் செழுமையில் இவை குறைந்தவை அல்ல. என் கவனம் முழுதும் கவித்துவம் பற்றித்தான்.

# அழகு

தமிழன்பனின் கவிதைகள் குறித்து ஆழமாகவும் தொடர்ச்சியாகவும் பார்த்துவரும் நம்மைப் பொருத்தவரை கவிதை என்றால் என்ன? கவித்துவம் என்றால் என்ன என்பவற்றில் எல்லாம் நாம் கவனம் வைத்திருக்கிறோம். இதன் தொடர்பாகவே அழகு என்றால் என்ன? என்றும் நமக்குள் கேட்டுக் கொள்கிறோம். அழகு என்பது புறத்தில் மட்டுமல்லாமல் நம் அகத்திலும் இருக்கிறது. மனத்தில் அழகு இருந்தால் ஒழியப் புறத்தில் உள்ள அழகு நமக்குத் தட்டுப்படாது. அப்படியானால் அழகு என்பதை எப்படி நிர்ணயிப்பது? இதற்கு என்ன அளவுகோல் என்றெல்லாம் நம் சிந்தனைகள் விரிகின்றன. இந்தத் தொகுப்பில் அங்கங்கே நாம் காணும் சில கவிதைகள் இம்முறையில் நம்மைக் கவர்வனவாக இருக்கின்றன. அழகு என்றால் என்ன என்பதோடு அழகு இல்லாதது என்பதும் என்ன என்பது பற்றியும் நாம் கவனித்துக் கொள்ளவேண்டும்.

அழகு என்பதோடு பழகப் பழகத்தான் அழகுணர்வு நமக்குள் அதிகரிக்கும். ஒரு வகையில் அழகுக்கு வசப்படுவது என்பதுகூட ஒரு பயிற்சிதான். கிழக்கு வானில் அழகு; வானம் முழுவதும் பேரழகு; உண்மை ஓர் அழகு; உழைப்பு இன்னோர் அழகு; அன்பு ஓர் அழகு; காற்றில், காவில், நதியில் அழகு; கவிதையில் அழகு; குழந்தையின் நடை ஓர் அழகு; கிழவனின் ஞானமும் அழகு; சந்தைக் கூச்சல்கூட ஓர் அழகுதான். உலையில் ஏழை போடும் உப்புக் கல்லும் அழகு; சிற்பியின் கையில் உள்ள உளியும் ஓர் அழகு. நீதிக்காகப் போராடும் மக்களின் கோபம்கூட ஓர் அழகு; நோவும் ஓர் அழகு; நோவு தீர்ப்பதும் ஓர் அழகு; இறுதியாகச் சாவும் கூட அழகு.

அழகு பற்றி இப்படி ஒரு முதல் இசைப்பாடல். அழகு என்பதற்கு என்ன வரையறை? இந்த வரையறைக்குள்ளும் முரண்பாடுகள். எல்லாம் மனித வாழ்வோடு நெருக்கமான உறவு உடையவை. அழகு என்பதை உணரமுடிகிறது. சுகவாசிக்கு அழகின் முழுப்பரிமாணமும் அகப்படுவது இல்லை. உழைப்பவனுக்கு, துயரப்படுபவனுக்கு, போராடுபவனுக்கு இன்னும் கூடுதலான அழகு புலப்படும். துன்பமில்லாமல் இன்பம் இல்லை என்பது உண்மை என்றால் துன்பமும்கூட, சாவும்கூட அழகுதான்.

## பொலபொலன்னு விடியும்

பத்திரிகையில் தமிழன்பன் பார்த்த ஒரு படம் தனக்குள் விளைவித்த ஒரு கவிதையை இங்கு எழுதுகிறார். வயதான ஒரு பாட்டி கூடை ஒன்றைச் சுமந்து செல்வதாக ஒரு படம். இவ்வளவுதான் படம். இந்தப் படம் கவிஞருக்குள் என்னவெல்லாம் உணர்வைக் கிளறுகிறது? கூடையில் பாட்டி கொண்டு போவதென்ன? கலைந்துபோன கனவாக இருக்கமுடியுமா? அல்லது கந்தலான நனவுகளா? உடைந்துபோன பகலா? ஊர் மக்கள் தந்த பரிசா? அல்லது பிரம்புக் கூடைக்குள் நீ தூக்கிச் செல்வது உன் பிணமா?

இப்படிக் கவிஞருக்குள் பல உணர்வுகள். பாட்டியின் பகலை உடைத்தது யார்? உடைத்தவனைப் பாட்டி விட்டுவிடலாமா? அவனை நொறுக்க வேண்டாமா? இப்படிச் செய்யாமல் இன்னும் பசியோடு எத்தனை நாள் வாழமுடியும்? இருளைத் தின்றால் பசி அடங்குமா? கூடையை இன்னும் எத்தனை காலம் சுமப்பது? இருளை எப்படிச் சுமக்க முடியும்? கவிஞர் சினம் தெறிக்கச் சொல்லுகிறார். கூடையைத் தூக்கி எறி.. கோடரியைக் கையில் எடு. இருளை வெட்டிப்போடு. இமையைப் பந்தமாக்கு. கோபம் பற்றி எரியவேண்டும்.

இப்படிப் பாட்டி ஆத்திரத்தோடு எதிரிகளை இனம் கண்டு வெட்டி அழிக்க முடியுமானால் இருள் விழுந்து உன் பாதம் கெஞ்சும் என்று கவிதையை முடிக்கிறார். கவிஞரின் உள்ளம் நமக்கு வெட்டவெளிச்சமாகப் புரிகிறது. மனிதர்களை இருளில் ஆழ்த்துவது யார்? நடைப்பிணம் ஆக்கியது யார்? இவர்களெல்லாம் கொழுத்திருக்க ஏழை எளியவர்கள் இப்படிப் பசியால் வாடலாமா? இவர்கள் பழி தீர்க்க வேண்டாமா? கண்ணில் படும் எந்தக் காட்சியும் கவிஞனின் உள்ளத்தில் புகுந்து அவனை அதிரவைக்கிறது. அலைக்கழிக்கிறது. கொந்தளிக்கச் செய்கிறது. உலகின் கொடுமைகளை நாம் ஒப்புவதற்கு இல்லை.

37

# இரவுப் பாடகன்

கவிஞர் தமிழன்பனின் 'இரவுப் பாடகன்' கவிதைத் தொகுப்பு அவருடைய எல்லாப் படைப்புகளிலிருந்தும் பெரிதும் வேறுபடுகிற ஒரு தொகுப்பு. கற்பனை வளம் மிக்க கவிஞர், கவிதை இயக்கத்தின் பல்வேறு தளங்களிலிருந்து கவிதை படைக்கிறார். இருளின் பார்வையில் இருந்து ஒளி உலகைப் பார்ப்பதும், படைப்பதும் வழக்கமான நம் பார்வைக்கு ஒத்ததாக இருக்க முடியாது. பகலை நாம் இரசிக்கிறோம். பகல் ஒளியை வண்ணங்கள், வடிவங்கள் எனப் பலவற்றைப் பார்க்கிறோம். இவற்றோடு உறவு கொள்கிறோம். இருள், இரவு வாழ்வுக்கு இன்றியமை யாதது என்றபோதிலும், இருளை முதன்மைப்படுத்தி அதன் தளத்தி லிருந்து உலகை நாம் பார்த்ததில்லை. இருள் வெறுக்கத்தக்கதா? இரவு இல்லாமல் வாழ்க்கை நடைபெறுமா? இரவில்தானே நிலாவின் அழகையும், விண்மீன்களின் அழகையும் நாம் பார்த்து மகிழ்கிறோம்? இரவில் தானே நாம் கண் உறங்குகிறோம்? கனவுகள் காண்கிறோம்? கனவுகள் இல்லை என்றால் நம் மூளை ஆரோக்கியமாக இருக்க முடியுமா?

இந்த அளவுக்கு மட்டுமே நம் சிந்தனைகள் செல்கின்றன. கவிஞர் தமிழன்பன் இதற்கு மேலும் செல்லுகிறார். இருளை / இரவை ஒரு பாடகன் என உருவகம் செய்கிறார். இரவில் வரும் கோடாங்கி ஒரு வகையில் இரவுப் பாடகன். கவிஞர் அபியின் கவிதைகளிலும் ஒரு இரவுப் பாடகன் வருகிறான். அவன் காமத்தின் உருவகம். குஷ்டரோகியைப் போல வந்து நம்மை வதைக்கிறான். தமிழன்பனின் இரவுப் பாடகன் இப்படி இல்லை.

"இரவுப் பாடகன்" எதற்குப் பாடுகிறான் என்ற தலைப்பில் ஒரு கவிதை. இரவுப் பொழுதில் தெருக்களில் வருகிறான் இரவுப் பாடகன். யாருடைய நட்சத்திரங்களையும் அவன் கேட்கவில்லை. ஊருக்குப்

பொதுவான நிலாவை எனக்கு எடுத்துப் போடுங்கள் என்று அவன் பாடவில்லை. வானத்தில் ஒரு பங்கைக் கத்தரித்து எனக்குப் போடுங்கள் என்றும் அவன் பாடவில்லை. இரவில் நம் முத்தங்களை – பகலில் நம் புன்னகைகளை அவன் கேட்கவும் இல்லை.

இருளை வெறுக்கும் மக்களைக் கண்டு அவன் கண்ணீர் விடுகிறான். இரவின் அழகைப் பார்க்க நம்மை அழைக்கிறான். விளக்கை அணைத்து விடுங்கள் என்கிறான். விழி மூடாதீர்கள் என்கிறான். இருளைப் பாருங்கள். இருளும் உங்களுக்குள் வெளிச்சமாகும்! இருளின் அழகை இப்பொழுது உணர்வீர்கள். இப்படிப் பாடிக் கொண்டு "இரவுப் பாடகன்" வருகிறான் என்கிறார் இந்தக் கவிஞர்.

உண்மைதான். இரவும் அழகானதுதான். கறுப்பிலுள்ள உலகை நாம் இன்று உணரத் தொடங்கி உள்ளோம். இருள் நம்மிடம் என்ன எதிர்பார்க்கிறது? இரவை நாம் ஏன் வெறுக்க வேண்டும்? காகம் கறுப்பென்று நாம் வெறுக்கவா செய்கிறோம்? கண்ணன் கறுப்பு வண்ணன் / நீல வண்ணன். இவன் அழகு இன்றுவரை எத்தனை பேரை மயக்குகிறது? கறுப்பும் அழகியது; இனியது; ஐயமில்லை.

இருளின் மகா மண்டபத்தில் ஒளியைக் குற்றவாளியாக நிறுத்தி நடைபெறும் ஒரு விசாரணை பற்றி இன்னொரு கவிதை பேசுகிறது. இந்தக் கவிதையின் உள்இயங்கும் ஒரு கருத்தை முதலில் நம் நெஞ்சில் நிறுத்திக் கொள்வோம். உலகளவில் உலகை உள்ளடக்கிய பிரபஞ்ச அளவில் இருளுக்கு என்ன இடம் என்பது குறித்து வழக்க மாக நாம் சிந்திக்கவில்லை. தமிழன்பன் இக்கவிதையில் நம்மைச் சிந்திக்க வைக்கிறார். விண்ணில் இரவு நேரத்தில் விண்மீன்களைப் பார்க்கிறோம். இவை மிகமிக நெடுந்தொலைவில் இருப்பதன் காரணமாக இவை சிறு சிறு மின்மினிகளைப் போல நமக்குத் தெரிகின்றன. உண்மையில் பிரபஞ்சத்தை இருள்தான் நிறைத்துள்ளது. கோடி கோடிச் சூரியன்கள் விண்மீன்கள் இருந்தபோதிலும் இவற்றின் ஒளிக் கதிர்கள் எட்டாத் தொலைவில் இருளே நிறைந்திருக்கிறது. இந்த இருள் என்ற பின்புலத்தோடுதான் விண்மீன்கள் மட்டுமல்லாமல் கதிரவனும் நமக்கு அழகாக, ஒளி வெள்ளமாகத் தெரிகிறான். இருளின் முன்னிலையில்

ஒளியின் இடம் சிறுத்து விடுகிறது. இருளை ஒளி கொல்ல முடியாது. இருள் இல்லை என்றால் ஒளியும் இல்லை.

ஒளி தன் அழகைப் பகட்டிக் கொள்ள வேண்டியதில்லை. இருள் என்ற தாயின் குழந்தைதான் ஒளி. ஒளி தன்னை அழகன் எனத் தருக்கித் திரியும்போது இப்படி ஒரு விசாரணை தேவைப்படுகிறது.

வந்துபோகும் சூரியனில், நிலாவில் தன் இருப்பை நீங்கள் ஏற்க வேண்டும் என்று ஒளி மன்றாடியது. மண்டபம் ஏற்கவில்லை. நட்சத்திரங் களிடமிருந்து நான் நகர்ந்து விடுவதற்கு எனக்குச் சற்றுக் காலம் தரவேண்டும் என்று ஒளி கேட்டுக் கொண்டது. ஒளியின் வேண்டு கோளை மண்டபம் ஏற்கவில்லை. விளக்குகளிடம்கூட நான் விலகல் கடிதம் கொடுத்துவிட்டேன். விளக்குகள் அதை ஏற்கும் வரை என்னை நீங்கள் அனுமதிக்க வேண்டும். குழந்தைகளின் கண்களிலிருந்தும், மலர்களிலிருந்தும்கூட நான் விலகத்தான் வேண்டும் என்றால் நான் அதை மறுக்கப் போவதில்லை. ஒளி இவ்வாறு கெஞ்சியபோதும், இருள் மறுத்துவிட்டது. ஒளி மேலும் கேட்டுக் கொண்டது. இருளின் அதிகார விளிம்பிலிருந்து நான் விலகிக் கொள்ளவே விரும்புகிறேன்.

சிறுவர்களின் பாட நூல்களிலாவது இருந்துவிடலாமா? என்று கேட்டதையும் இருள் மறுத்துவிட்டது. இறுதியாக ஒளி இப்படிக் கெஞ்சியது; நியாயம், நேர்மை, நீதியின் நெஞ்சிலாவது இருந்துகொள்ள என்னை அனுமதிக்க முடியுமா? – இப்படிக் கெஞ்சிய ஒளியின் வேண்டு கோளை மகா மண்டபம் ஏற்றுக் கொண்டது. நீ சொல்லும் நீதி, நேர்மை நெடுநாட்களாகவே நாக்கு இழந்து நமக்கு அடிமையாகிவிட்டன. அவற்றில் நீ இருந்து கொள்ளலாம்; எங்களுக்கு மறுப்பில்லை.

அனுமதிக்கும் முன்பு உன் கண்களைக் கழற்றி என்னிடம் கொடுத்து விடு என்று இறுதியாகச் சொன்னது இருள்.

இந்தக் கவிதையில் நாம் காண்பது ஒரு நாடகம். ஒளிக்கு இப்படி ஒரு கதியா நேர வேண்டும் என்று நாம் எண்ணுகிறோம். இருளுக்கு இப்படி ஓர் அதிகாரம் தேவைதானா என்றும் நாம் எண்ணுகிறோம். இப்படி ஒரு நாடகம் எப்படி உருவாக முடியும் என்றும் நாம் சிந்திக்கிறோம்.

விண்ணில் ஒளியின் பரப்பு விரிவு அதிகம்தான் என்பதை நாம் மறுப்பதற்கில்லை என்றபோதிலும் இந்தக் கவிதையின் இயக்கத்தோடு ஒன்றிச் செல்லும்பொழுது நமக்குள் நம் சமூகம் பற்றி, தற்காலம் பற்றிச் சிந்திக்க வேண்டியவர்களாக இருக்கிறோம். இருள்தான் நம் சமூகத்தை ஆண்டு கொண்டிருக்கிறது. மதம் நமக்குள் கலகம் விளைவிக்கிறது. அரசியல்வாதிகள் நம் கண்களைக் குருடாக்குகிறார்கள். கவிதை என்ற பெயரிலும் அறியாமை என்ற இருளுக்குள்ளேயே நாம் ஆழ்த்தப்படுகிறோம். அறிவியல் நமக்குள் ஒளியை ஏற்படுத்த வில்லை. உலகளவிலான ஆதிக்கவாதிகளோடு கூட்டுச் சேர்ந்து கொள்ளுகிற அறிவியலும் தொழில்நுட்பமும் நமக்குள் இருளின் ஆதிக் கத்தையே விளைவிக்கின்றன. கண் திறந்து பார்த்துக்கொண்டே தொலைக்காட்சி முதலியவற்றின் வழியிலும் நாம் இருளில் வீழ்கிறோம். பாராளுமன்றங்களில் – நீதிமன்றங்களில் இருளே அதிகாரம் செய்கிறது. ஒளி இங்கெல்லாம் மறைந்தும் கெஞ்சியும்தான் வாழ வேண்டியுமிருக்கிறது. கவிஞர் சரியாகத்தான் சொல்லுகிறார்.

இரவில் குழந்தைகள் பாட நூல்களைப் படிக்கின்றனர். பத்தாவது முறையாக விளக்குகள் அணைந்தன. படித்தது போதும்; பாட நூல்களைப் பையில் போடுங்கள் என்றார் தந்தையார். இப்பொழுது எங்கும் இருள். பைக்குள்ளிருந்து நியூட்டன், கலீலியோ, ஐன்ஸ்டீன் ஆகியவர்கள் வெளியில் வந்து, வெளியில் போய் விளையாடலாம் என்று குழந்தைகளை அழைத்தார்கள். கொலம்பசும் வாஸ்கோடகாமாவும்; வெளியில் வாருங்கள் கண்டுபிடித்து விளையாடலாம் என்றார்கள். அலெக்சாண்டர், அக்பர், சீசர் ஆகியவர்கள் போர்ப் பாசறைகளுக்கு வெளியில் போய்க் கதைகள் பேசலாம் வாருங்கள் என்றனர். பித்தாகரசும், வேறு கணித மேதைகளும் வெளியில் வந்து எண்களை எடுத்து வாரி வாரி வீசி விளையாடலாம் என்றனர். கம்பர், இளங்கோ, பாரதி ஆகியவர் வெளியில் வந்து, புழுக்கமாக இல்லையா உங்களுக்கு? கவிதைகளுக்கு வெளியில் சென்று காலார நடந்து வரலாம் என்றனர்.

இப்பொழுது விளக்கு எரிந்தது. நியூட்டன் முதலியவர்கள் பைக்குள் போய்ப் பதுங்கினர். விளக்கை அணைத்துவிட்டுத் தூங்கலாம் என்றார் தந்தையார்.

இப்படிச் செல்கிறது இந்தக் கவிதை. பகலில், வெளிச்சத்தில் குழந்தைகள் என்ன படிக்கிறார்கள், எதைப் படிக்கிறார்கள்? எல்லா வற்றையும் மனப்பாடம் செய்கிறார்கள். அறிவியல், கணிதம், இலக்கியம் என்ற வெற்றியின் உ ள் ளு ம் குழந்தைகளின் மனம் செல்வதில்லை. நியூட்டனோடு, கலீலியோவோடு, கொலம்பசோடு, வாஸ்கோடகாமாவோடு இந்தக் குழந்தைகள் கைகோத்துக் கொண்டு உலகை வலம் வர வேண்டும்; விண்ணில் உலவ வேண்டும். இப்பயணங்கள் மூலம் தம்மை உயிர்ப்பித்துக் கொள்ளவேண்டும். கவிதைகளுக்குள்கூட இவர்கள் முடங்க வேண்டியதில்லை. வகுப்பறைகளுக்கு வெளியே, தோட்டத்தில், மண்ணில், மரங்களில், விண்ணில் கவிதைகள் கொட்டிக் கிடக்கின்றன. இவற்றோடு உறவாடிக் குழந்தைகள் தம்மை வளர்த்துக் கொள்ளக் கவிதை உதவவேண்டும். ஆசிரியரோடு பெற்றோரும் இ ப் ப டி உயிருள்ள கவிதையைக் குழந்தைகளுக்குத் தரவேண்டும்.

ஒரு வேளை குழந்தைகள் உறங்கிய பிறகு கம்பரும், இளங்கோவும், மற்றவர்களும் அவர்கள் க ன வி ல் வந்து அவர்களோடு கொஞ்ச லாம். அவர்களைக் குழந்தைகள் கண்டு மிரளலாம். ஒரு வேளை இருளில்தான் நியூட்டன் முதலியவர்கள் நடமாடலாமோ, என்னவோ?

நட்சத்திரங்களுக்கு ஒளி கொடுப்பது யார்? இரவுப் பாடகனை நோக்கி மக்கள் கேட்டனர். இருள்தான் இதிலென்ன சந்தேகம், என்றான் இரவுப் பாடகன். சூரிய ஏரியில் வெளிச்ச வெள்ளத்தை நிரப்பியவர் யார்? அடுத்த தெருவில் மக்கள் கேட்டனர். இருள் தன்னை வெளியேற்றிக் கொண்டு ஏரியில் வெளிச்சத்தை நிரப்பிவைக்கிறது என்றான் இரவுப் பாடகன். கவிதைகளில் வெளிச்சம் எப்படி வெளிப்படுகிறது என்று கேட்டனர், அடுத்ததெரு மக்கள். இ ர வி ன் கர்ப்பத்திலிருந்து வெளிச்சத்தை உற்பத்தி செய்கிறான் கவிஞன் என்றான் இரவுப் பாடகன். விண்மீன்களுக்கு ஒளி எங்கிருந்து வந்தது என்றனர், அடுத்ததெரு மக்கள். எனது பாடல்களை இரவில் நான் எழுதிச் செல்லும் கைவிரலின் மோதிரங்கள் அவை என்றான் இரவுப் பாடகன். இருள் அனுமதிக்கும் இடத்தில்தான் ஒளி வாழ்கிறது. இருள்தான் ஒளியை உற்பத்தி செய்கிறது. இருள் என்ற பின்புலம் இல்லை என்றால் ஒளி

5.25.

தோன்ற முடியாது. இரவில்தான் கவிஞர்களுக்குள் கவிதை பூக்கிறது. ஒளி தன்னைப் படைத்துக் கொள்வதைப்போல, இருளும் கொஞ்சம் விளையாட முடியும். நெடுங்காலம் மறுக்கப்பட்ட பெருமையைத் தமிழன்பன் இருளுக்குத் தருவதில் தவறில்லை.

## *கிழக்கில் கிடைக்குமா புதிய கவிதை?*

இரவு, கதை கேட்க விரும்பியது. பல பாத்திரங்களை எடுத்து வைத்தது. நட்சத்திரங்கள் சபையைக் கூட்டின. காடுகள் கற்பனைகளை நிரப்புவதற்கு வண்ணப் பூக்களை அனுப்பின. வானமும் கடலும் தம்மிட மிருந்த விசாலத்தைக் கொடுத்துத் தம்மை மேலும் விசாலப்படுத்திக் கொண்டன.

இவற்றால் பாத்திரங்கள் நிரம்பவில்லை. இப்பொழுது ஆயிரமாயிரம் கண்களிலிருந்து சேகரித்துக் கண்ணீரைப் பூமி கொண்டுவந்து பாத் திரங்களில் கொட்டியது. உட்கார இடம் கிடைக்காத உதட்டுப் புன்னகை களைச் சேகரித்துத் தந்தது. உதடுகளில் இருந்து சிந்திய உண்மைகளைப் பை பையாய் நிரப்பி வைத்தது. கலக உலகங்களின் இரத்தக் கறைகளை, வாழ்வில் தோற்றவர்களின் பெருமூச்சுகளை, வேர்வைத் துளிகளைப் பாத்திரங்களில் நிரப்பி இரவிடம் ஒப்படைத்தது.

இவற்றிலிருந்து விடுபட்டு இரவு கிழக்கு நோக்கி ஓடியது, வேறு கதைகளைத் தேடி. வானத்தில், காடுகளில், கடலில் கண்ணீர்த் துளிகள் இல்லை, இரத்தக் கறைகள் இல்லை, பொய்ம்மைகள் இல்லை, பெருமூச்சுக்கள் இல்லை; பூமியில்தான் இவை ஓயாமல் உற்பத்தியாகின்றன. இவை சோகக் கதைகள், பகல் நேரத்துக் கதைகள். இவை இரவுக்குத் தேவை இல்லை. இவற்றை இரவு விரும்பவும் இல்லை. இப்படிச் செல்கிறது கவிதை.

தீக்குளித்துப் பகல் செத்துக் கிடந்தது. ஏன் தீக்குளித்தது? பலருக்குப் பகல் வேலை தேடித் தரமுடியவில்லை. பொய் புரட்டுகளைப் எதிர்த்துப் போராட முடியவில்லை. இனம், சாதி, மதம், மொழி மோதல்களைத்

தடுக்க முடியவில்லை. கல்வி, ஆன்மிகம் முதலியவற்றின் நெஞ்சில் பாய்ந்த கட்டாரிகளில் தனது கைவிரல் ரேகைகள் தடயங்களாய்த் தட்டுப்படுகின்றன. அநியாயங்களில் ஆழ்ந்து கிடக்கின்ற அரசியல் வாதிகளோடு ஒத்துழைக்க நேர்ந்தது. இப்படிப் பல காரணங்களுக்காகத் தீக்குளித்துத் தற்கொலை செய்து கொண்டது பகல். பகலின் உடம்பி லிருந்து பரவியது ஊழல் நாற்றம். கண்களில் கவிந்திருந்த விலங்குகள் வெளியேறின. இனிதான் சவப்பரிசோதனை நடைபெறவேண்டும்.

பகலில் இப்படி எத்தனையோ அநியாயங்கள், மோசடிகள், ஊழல் கள், வேதனைகள். இவை காரணமாகப் பகல் நொந்து தம் குற்றங் களைத் தாங்க இயலாமல் தற்கொலை செய்து கொண்டு இரவாகிறது. பகல் இனி தற்கொலை செய்து கொள்ளாமலும் இருண்டு போகாமலும் இருக்க முடியாது. பகல் இங்குப் பகலாக இல்லை. பகலில் எங்கும் வெளிச்சங்கள் இல்லை. எங்கும் உற்பத்தியாவது இருள். பகலுக்கு வேறு வழியில்லாமல் இரவிடம் பதுங்குகிறது. யார் விசாரணை செய்து, என்ன கண்டுபிடித்து, எதைத் தீர்க்க முடியும்? பகலைக் காட்டிலும் இரவே பரவாயில்லை. இரவேனும் நிம்மதியாக இருக்க முடிந்தால் நல்லது. அல்லது பகலுக்குள் பதுங்கிக் கொண்டு இரவு இவ்வளவும் செய்கிறதா என்ன?

## *பகலும் இரவும்*

நான் இரவைப் பாடுகிறேன். நான் இரவின் மைந்தன். ஒளிந்து கொள்ள ஓடி வந்த கோடுகளை ஓவியம் மறுப்பதில்லை. அடைக்கலம் கேட்டு வரும் அலைகளை ஆறு புறக்கணிப்பதில்லை. அதைப்போல இரவை நாடி வந்தால் இரவு இருளை மறுக்க முடியாது. இரவின் அர்த்தம் விளக்குகளில் இல்லை. இரவைப் பற்றித் தெரிந்த நிலவு இரவுக்கு வெளியில் வந்து ஏதும் சொன்னதில்லை.

இப்படியே கவிதை நீண்டு செல்கிறது. இரவு தன்னையும், பகலை யும் வேறுபடுத்துகிறது. இரவு கவிதை; பகல் உரைநடை. இரவு கடல்; பகல் கரை. இரவு மழை; பகல் நதி. இரவு விருட்சம்; பகல் கிளை. இரவு உறவு; பகல் திரிபு. இரவு உயிர்; பகல் உடம்பு. இரவு பிறப்பு; பகல் இறப்பு.

பகலைப் பாடினால் பை நிரம்பலாம். இரவைப் பாடினால் இதயம் நிரம்புகிறது. ஆகவே நான் இரவைப் பாடுகிறேன். நான் இரவின் மைந்தன்.

ஏற்கெனவே நான் சொன்னதுபோல இரவின் மடியில்தான் பகல் உயிர் தரிக்கிறது. இரவு இல்லாமல் பகல் இல்லை. இரவின் ஓர் ஓரத்தில் இருப்பது பகல். இரவுக்கு மரணம் இல்லை; பகலுக்கு மரணம் உண்டு. ஆகவே இரவின் மைந்தனாய் இருப்பவன் இரவுப் பாடகன். நெஞ்சம் நிறைந்து வழிய இவன் இரவில் பாடுகிறான். இரவை எதுவும் மறுப்பதில்லை. எல்லாமே இரவுக்குள் உயிர் வாழ்கின்றன. ஆகவே இரவு முழுமையானது; பகல் அதன் பகுதி. இப்படிச் செல்லுகிறது இந்தக் கவிதை.

பாடிக் கொண்டே வந்த இரவுப் பாடகன் இப்படிக் கேட்டான்: மேற்கில் மறைந்து கொண்டிருக்கும் சூரியன் கடைசியாகச் சொன்ன வார்த்தைகள் என்ன? கவிஞன் சொன்னான்: எனது கவிதைகளைக் கைகளில் ஏந்திக் கொண்ட சூரியன் எனக்கென்று எதுவும் சொல்ல வில்லை. ஓவியன் சொன்னான்: சிந்திக் கிடந்த எனது வண்ணங்களைச் சூரியன் முத்தமிட்டதன்றி வேறு எதுவும் சொல்லவில்லை. நாட்டியக்காரி சொன்னாள்: அபிநயம் பற்றிய கற்பனையில் நான் ஆழ்ந்திருந்தேன். சூரியன் என்ன சொன்னான் என்று நான் கேட்கவில்லை. அரசியல் வாதி சொன்னான்: சூரியனுக்கு வாக்குரிமை இல்லை. அவன் என்ன சொன்னான் என்று யாரும் கேட்கவில்லை. புரோகிதன் சொன்னான்: உண்டியலில் விழும் காசுகளைத் தவிர வேறு எதிலும் நான் கவனம் செலுத்தவில்லை. சிலருக்கு இரவில்தான் வாழ்க்கை; இவர்களுக்குச் சூரியனோடு உறவில்லை.

இரவுப் பாடகனைப் பார்த்துச் சின்னச் சிம்னி கூறியது, சூரியன் சொன்ன வார்த்தை இருக்கிறது என் நாவில்; அகல் விளக்குச் சொன்னது என் ஆன்மாவில் இருக்கிறது; சூரியன் சொன்ன கடைசி வார்த்தை. தெருவிளக்கு சொன்னது; என் கம்பிகளில் இருக்கிறது சூரியனின் கடைசிச் சொல். உறங்கச் சென்ற குழந்தைகள் கூறின: காலையில் சொல்லுகிறோம்.

மிக நேர்த்தியான, அழகான கவிதை இது. மாலையில் சூரியன் பேரழகோடு, வண்ணங்களோடு மறைகிறான். இந்தப் பேரழகில் மயங்காதவர்

என்று எவரும் இருக்க முடியாது. எனினும் அவரவர் வேலைகளில், உலகியல் வாழ்வில் மூழ்கிவிட்ட மனிதர்கள் மாலைநேரத்துப் பேரழகைக் காண்பதில்லை. மறைவதற்கு முன்பு சூரியன் ஏதோ சிலவற்றை நமக்குச் சொல்ல விரும்புகிறான். நாம் காது கொடுக்கவில்லை. ஆனால் சூரியன் கடைசிச் சொல்லை சிம்னி விளக்குகள், அகல் விளக்குகள், தெருவிளக்குகள்தாம் ஏந்திக் கொள்கின்றன. சூரியனின் பேரழகோடு குழந்தைகள் உறங்கச் செல்லுகிறார்கள். "இரவுப் பாடகனை"க் குறித்துச் சூரியன் ஏதாவது சொல்லியிருக்க முடியுமா? இரவுப் பாடகனுக்குள் ஏன் இந்த அச்சம் / கேள்வி? இரவு அவனுக்குரியது. பகலுக்குரியவன் சூரியன். சூரியனுக்குத் தனக்கான வாழ்க்கை வேண்டாமா? இரவு வந்துவிட்டது. இனி இரவுப் பாடகன் தெருக்களில் பாடிச் செல்லட்டும்.

முகவரிகள் மாறி இரவில் முத்தங்கள் போகின்றன. கதவுகள் திருடர்களுக்காகக் காத்திருக்கின்றன. இந்த இரவில் இரவுப் பாடகன் பாடுவதில்லை. விசாரணைக்கு ஆள் தேடித் தண்டனைகள் திரிகின்றன. நியாயங்களுக்குத் தூக்குக் கயிறுகள் தயாரிக்கப்படுகின்றன. இந்த இரவில் அவன் பாடுவதில்லை. பொய்யின் வீடு தேடி உண்மைகள் பூச்செண்டு கொண்டு செல்லுகின்றன. பதில்களை மறுப்பதற்கென்றே வினாக்கள் தயாரிக்கப்படுகின்றன. திருத்தங்களை நிராகரிப்பதற் கென்றே பதில்கள் தயாரிக்கப்படுகின்றன. அலைகளும் நதிகளும் வாழ்க்கையும் பிழைப்பும் வேறுபடுத்தப்படுகின்றன.

இத்தகைய இரவுகளில் அந்த இரவுப் பாடகன் பாடுவதில்லை.

எல்லாமே எதிரும் புதிருமாய் மாறிவிட்டன. உண்மைகள் பொய்யா கின்றன. அநீதிகள் நியாயங்கள் ஆகின்றன. இத்தகைய செயல்கள் இரவு நேரங்களில் திட்டமிடப்படுகின்றன; செய்யப்படுகின்றன. இத்தகைய இரவுகள் கொடுமையானவை. இந்தக் கொடுமைகளை இரவுப் பாடகன் ஏற்பதில்லை. இவனுக்கும் இதயம் இருக்கிறது. ஒளியை இவனும் வாழ்விக்கிறான். இயற்கையை, உலகை, உயிர்களை இவனும் தாயாய் இருந்து தாங்குகிறான். இவன் குரல் இப்பொழுது ஒடுங்கி விட்டது. இவனால் பாட முடியாது.

## என்ன வேண்டும் என்று கேட்கப்போய்...

இரவுப் பாடகன் இன்று பாடலிசைக்கவில்லை. மாறாக வசனத்தில் பேசுகிறான். என்ன வேண்டும் உங்களுக்கு என்று கேட்கிறான்? நட்சத்திரங்கள் வாய் பேசவில்லை. பகலின் கேள்விகளுக்குப் பதிலாக எரிந்து கொண்டிருந்த விளக்குகளும் பேசவில்லை. சன்னல் திறந்த இளம் பெண்ணொருத்தி கருமை பூசியும் சிவப்பழகு வரவில்லை. நீ என்ன எனக்குத் தருவாய்? வயது முதிர்ந்த ஒருவர் வாசற்படிக்கு வந்து "வயாகரா" ஏதேனும் உன்னிடம் உண்டா என்று கேட்டார். பெண்ணியம் பேசும் அறிவாளி ஒருவர் என் மனைவியை எந்தக் குக்கரில் வேக வைக்கலாம் என்று கேட்டார். தொலைக்காட்சி மகாத் தொடர் களில் ஓயாமல் கண்ணீர் சிந்துகிற அழகி கேட்டாள்: வாழ்க்கையின் இடைவேளைகளிலேனும் கொரிக்கக் கொஞ்சம் நகைச்சுவை கிடைக்குமா? நடுத்தர வர்க்கத்தில் சிக்கி நலிந்துபோன ஒருவர் கோடீஸ்வரன் போட்டிக்குத் தேவையான வினா விடை எங்கே கிடைக்கும் என்றார். கொலை கொள்ளைகள் பற்றித் தொடர்ந்து செய்தி சேகரித்து வந்த நிருபர் கேட்டார்: "என் காயங்களிலிருந்து வடியும் இரத்தத்தை உன்னிடம் கொடுத்து வைக்க விரும்புகிறேன். உன் இரகசிய அறைகளில் சேமித்து வைப்பாயா? எல்லாக் கூட்டணிகளிலும் ஒரே நேரத்தில் இடம் பெற விரும்பும் கட்சித் தலைவர் அதற்கு வழியைக் கேட்டபடியே கால் தடுக்கி விழுந்தார். பல் ஒன்று சிதறியது. அது விஷப் பல்லாக இருந்தது. எச்சரிக்கையாய் இரவுப் பாடகன் விலகிச் சென்றான்.

கடற்கரையில் இருந்த ஔவை, காந்தியின் கைத்தடிகள் எப்படிக் காணாமல் போயின? கடலிலிருந்து மீட்ட பிறகும் அவை எப்படிக் கறை படிந்து கிடக்கின்றன? இப்படி அண்ணா கேட்டார். எதற்கு உங்களிடம் இந்தக் கேள்விகள். ஓய்வாய் இருங்கள் என்று "இரவுப் பாடகன்" பதில் கூறிவிட்டு, உங்களுக்கு என்னிடம் என்ன வேண்டும் என்று கேட்ட கேள்விகள் எவ்வளவு தவறாய் முடிந்திருக்கின்றன என்பதைப் புரிந்துகொண்ட இரவுப்பாடகன் இருளில் மறைந்தான்.

இளம் பெண்கள், இளைஞர்கள், வயது முதிர்ந்தவர் முதலியவர் களிடம் தன்னிடம் இருந்து என்ன வேண்டும் என்று இரவுப் பாடகன்

நல்லெண்ணத்தோடுதான் கேட்கிறான். அவர்களின் இரவுத் தேவைகள் மற்றும் வாழ்வுத் தேவைகள் அழகாக இல்லை. அசிங்கமாகவும் இருக் கின்றன. இவர்களுக்கு எப்பொழுதும் தம்மைப் பற்றியே கவலைகள். ஊர் உலகம் பற்றி, வானம் நிலா நட்சத்திரங்கள் பற்றி இவர்களுக்குக் கவலை இல்லை. அறிஞர் அண்ணாவுக்கு இன்னும் பழைய கவலைகள் தீரவில்லை. யாருக்கு, என்ன கொடுத்து அவர்களை நிறைவுபடுத்த முடியும்? தான் கேட்டதே தவறாகப் போயிற்று என்று இரவுப் பாடகன் தன்னைத் தானே நொந்து கொண்டு இருளில் மறைகிறான். அழகியல் உணர்வோ, அற உணர்வோ இல்லாத மனிதர்களிடம் பேசிப் பயன் என்னவாக இருக்க முடியும்?

## *கைத்தாங்கலாய் ஒரு கவிதை*

ஒரு கிண்ணத்தில் துக்கம் நிரம்புவது போல இருள் பூமிக்குள் வந்து நிறைகிறது. வனங்களும் மலைகளும் எங்கும் ஓடிவிட முடியாதவை போல, வற்புறுத்தப்பட்டதுபோல அங்கங்கே கிடந்தன. காற்று இயக்க மற்று அங்கங்கே நின்றுவிட்டது. ஊரைச் சுற்றி ஓடும் நதியின் மீது படிந்திருந்த ஓசை அடங்கிவிட்டது. இருளின் அதட்டலுக்கு அஞ்சியது போலக் காம்புகளில் மலர்களை அவிழ்த்துவிட்டுச் செடி கொடிகள் மூச்சற்றுக் கிடந்தன. இருளின் அழுத்தம் உணர்ந்த பறவைகள் கூடுகளில் அடங்கிக் கிடந்தன. இருளின் கனம் தாங்கமுடியாத இரவில் எனக்குள் விரிந்த கவிதை கைத்தாங்கலாய் என்னைக் காப்பாற்றியது.

எங்கும் அடர்த்தியான இருள். வானத்தில் நட்சத்திரங்கள்கூட இல்லை. காற்று இயங்கவில்லை. பறவைகள் பாடவில்லை. நதிகளில் சலசலப்பில்லை. இப்படி இந்த இரவுக்கு அல்லது இருளுக்கு இன்று என்ன நேர்ந்தது? யார் இறந்த துக்கம் இந்த இரவுக்கு? இந்த இரவுக்கு நேர்ந்த விபத்து என்னவாக இருக்க முடியும்? ஆனால் இப்படியும் சில இரவுகள் நேர்ந்துவிடுகின்றன. நமக்குள் கனத்துப் போகிறோம். நமக்குள்ளிருந்து கவிதைகள்கூட எப்படிப் பூக்கும்? பூத்ததுவரை ஒரு ஆறுதல். இயக்கமற்ற இந்த இரவை கவிதை நேசிக்குமா? கவிதைக்குள்

வந்துவிட்ட இந்தக் கனத்த இரவுக்காகக் கவிதை மகிழ்ச்சியடைய முடியுமா? கவிஞரைத்தான் கேட்கவேண்டும்.

## இரவல் மூச்சும் இரவுப் பாடலும்

இரவுப் பாடகன் கவிதை கேட்டுத் தெருவில் வருகிறான். என்னிடம் இரவல் பாடல் இல்லை. அசலான பாடலுக்காய் அலைகிறேன். உங்களிடம் என்ன இருக்குமோ? அதைக் கொடுங்கள்; ஓர் அசலான கவிதை உங்களுக்குத் தருகிறேன். இதுவரை பயன்படுத்தப்படாத முத்தங்கள் உங்களிடமிருந்து கிடைக்குமா? உங்களுக்குப் பயன்படுத்திப் பயன்படுத்திப் பழசாகிவிட்டதென்று நீங்கள் கருதும் புன்னகை உங்களிடம் கிடைக்குமா? கனவுகளைத் தொடர்ந்து கண்டு கண்டு வண்ண மற்றுப் போனதாய் நீங்கள் வெறுத்தொதுக்கும் கனவுகள் இருந்தால் கொடுங்கள்; உங்களால் பயன்படுத்தப்படாத பகல்களையும், தூங்க முடியாத இரவுகளையும் இயலுமானால் கொடுங்கள்; உங்களால் கைவிடப் பட்ட வைராக்கியங்களை, விரதங்களை என்னிடம் அள்ளிப் போடுங் கள்; உங்களிடமிருந்து அந்நியப்பட்ட முகங்கள், அடிக்கடி மாறுகின்ற மனங்கள் ஆகியவற்றைக் கொடுங்கள்; இவற்றை உங்களால் தர முடியு மானால் எல்லாவற்றையும் புதுமைப்படுத்தி உங்கள் கவிதைகளை உங்களுக்கே என்னால் தரமுடியும். நீங்கள் எனக்குத் தரக்கூடியவை இழப்புகள், கசப்புகள், ஏக்கங்கள், வேதனை. இவற்றால் உங்களுக்குள் இருக்கிற கவிதையை நீங்கள் இழந்து விட்டீர்கள். எனக்கும் ஒரு கவிதை வேண்டும். உங்களுக்குள் எனக்குத் தரக்கூடிய கவிதை என்று எதுவும் இல்லை. இருந்தால் ஒரு கவிதையை எனக்குக் கொடுங்கள். என்னை நானே உங்களுக்குத் தருவேன்.

## என்ன கிடைக்கும் இவ்விரவில்?

திரும்பத் திரும்பத் தனக்கு ஏதாவது கேட்டு இரவுப் பாடகன் தெருவில் வருகிறான். பாட்டி ஐந்து கண்ணன் கதை சொல்லிக் குழந்தைக்கு ஊட்டும் சோற்றில் ஒரு பருக்கையாவது தனக்குக் கிடைக்குமா? கச்சேரி இல்லை என்றாலும் மிருதங்கத்தில் தவறாமல் சாதகம் செய்யும் மீனாட்சிசுந்தரத்திடம் தனக்கு என்று ஒரு

ம் தரிகிட கிடைக்குமா? திலகாவைச் சந்திக்க வந்து ஏமாந்து திரும்பும் தேவராசனிடம் இருந்து அவன் பயன்படுத்தாத சில முத்தங்கள் தனக்குக் கிடைக்குமா? கேள்வித்தாள் திருத்தும் நடராச வாத்தியாரிட மிருந்து அவர் வழக்கமாகப் போடுகிற பூஜ்ஜியங்களில் ஒன்றிரண்டு தனக்குக் கிடைக்குமா? முத்துவின் முடியலங்காரக் கடையில் அவன் மாட்டியிருக்கும் சினிமா நடிகையின் பார்வையிலிருந்து இரண்டொரு துளிகள் கடைச்சந்தின் வழியே தனக்குக் கிடைக்குமா?

இப்படி இரவு முழுவதும் ஏதாவது கிடைக்கும் என்ற நம்பிக்கையில் இரவுப் பாடகன் தெருத் தெருவாய் அலைகிறான். ஒரு சோற்றுப் பருக்கை, இரண்டொரு முத்தங்கள், சில பார்வைகள் இவை அவரவர்க்குப் பயன்படவில்லை என்றாலும் இரவுப் பாடகனுக்கு எவரும் தருவதாக இல்லை. இந்தத் தெருவுக்கு இரவுப் பாடகன் மறுநாளும் எப்படி வருவான்? இந்தத் தெருவுக்குப் பாடல்கள் தேவையில்லை. ஒரு வகையில் செத்துக் கொண்டிருக்கிறது இந்தத் தெரு. எவரிடத்தும் கவிதைகள் இல்லை; பாடல்கள் இல்லை. தன்னிடமிருந்து, தனக்குத் தேவைப் படாததைக்கூட, அது தேவைப்படுகிற இன்னொருவருக்குக் கொடுத்து விடும் குணம் இவர்களுக்கு இல்லை.

## *நல்ல இரவு எங்கே கிடைக்கும்?*

வெயிலின் வடுக்கள் படாத நல்ல இரவு எங்கே கிடைக்கும்? தாய் பசித்திருக்க, சாராயக் கடையில் ஊறுகாய்க்குத் தன்னைத் தந்தை விற்றுவிடாத இரவு எங்கே கிடைக்கும்? மற்றவர்களை எப்படி எல்லாம் கவிழ்க்கலாம் என்று நரித்தனவாதிகள் திட்டம் தீட்டாத இரவு எங்கே கிடைக்கும்? மரணத்தை நோக்கிப் பாதி தூரம் சென்று விட்டவர்கள் இன்னும் பாதி தூரத்தைக் கடக்க வேண்டியதற்காய் வருந்தாத குடும் பங்கள் உள்ள இரவு எங்கே கிடைக்கும்? தேர்வு வினாக்களால் தொடர்ந்து மாணவர்கள் தீய்க்கப்படாத இரவு எங்கே கிடைக்கும்? வரும் இரவுகளிலும் கவலைகளால் கருக்கப்படாத இரவு எங்கிருந்து கிடைக்கும்?

இப்படிக் கேட்பவர் கவிஞரா? அந்த இரவுப் பாடகனா? இரவுப் பாடகன்தான் ஒரு நல்ல இரவு தேடி இன்னும் அலைந்து கொண்டிருக் கிறான். இரவு நேரத்தில் தாய்மார்கள் நிம்மதியாக இல்லை. நரித்தனம் செய்கிறவர்களின் சதிகளால் மனிதர் வேதனைப்படுவது குறைய வில்லை. மாணவர்களுக்குப் பாடங்களின் தொல்லைகளிலிருந்து விடுதலை இல்லை. இவை எல்லாம் பகல் நேரத்தின் வடுக்களாக மட்டும் இல்லாமல் இரவிலும் தொடர்கின்றன. இரவு நேரத்தையும் இவர்கள் காயப்படுத்துகிறார்கள். நிம்மதியாக உறங்கக்கூடிய நல்ல இரவு இனி எப்படிக் கிடைக்கும்? அப்படி ஒரு நல்ல இரவுக்காக ஏங்கும் மக்களுக்கு நிம்மதி எங்கிருந்து கிடைக்கும்?

## *சாமக்கோடாங்கி*

இரவில் ஊரின் ஒரு கோடியிலிருந்து குடுகுடுப்பை ஒலியோடு சாமக் கோடாங்கி வருகிறான். இரவில் வெப்பம் அதிகரிக்கிறது. இன்னும் உதிர்ந்துவிடாத, வயது மூத்த முதியவர்கள் அஞ்சுகிறார்கள். கருத்தரித்த இளம் பெண்கள் குறைப்பிரசவம் நேர்ந்துவிடுமோ என்று கவலைப்படுகிறார்கள். பறவைகளும் உறக்கம் கலைந்து பரபரப்போடு பார்க்கின்றன. நல்ல காலம் வருகுதென்று ஒவ்வொரு வீட்டு வாசலிலும் உச்சாடனம் செய்தவண்ணம் கோடாங்கி நகர்கிறான். கோடாங்கி பற்றிய நினைப்பில் வீடுகளுக்குள் இருக்கும் மக்கள் மயானம், மண்டையோடு, மாந்திரீகம் என்றெண்ணிக் கலங்குகின்றனர். மலையாள பகவதியின் பெயர் சொல்லிக் கொண்டே கோடாங்கி நகருகிறான். ஜக்கம்மாவின் கண்கள் இமை பிளந்து மக்களின் நெஞ்சுக்குள் விறைத்துப் பார்க்கின்றன. மக்கள் நெஞ்சில் அச்சம் அதிர்கிறது. நாய்களும் குரைப்பு அடங்கி வாய் கட்டப்பட்டுக் கிடக்கின்றன. காற்றும் ஊளை இடுகிறது. ஊருக்குள் அச்சம் பரவுகிறது. நல்ல காலம் வருகுதென்று கோடாங்கி சொல்வதில் உண்மையில்லை. மலையாள பகவதிக்குக் கோடாங்கி மீது ஆத்திரம். ஒட்டுப் போட்ட இவன் சட்டையை மலையாள பகவதி பிய்த் தெறிகிறாள். கோடாங்கியின் முண்டாசைப் பிடுங்கி சாட்டையாய்த் திரித்து அவனைச் சாடுகிறாள். கோடாங்கியின் கையில் இருந்த குடுகுடுப்பையை வெடுக்கென்று பற்றி விசியெறிகிறாள். ஜக்கம்மாவின்

கையில் கோடாங்கியும் ஒரு குடுகுடுப்பை ஆகிறான். குடுகுடு ஓசை மறைகிறது. ஆனால் ஊரோ சாமக் கோடாங்கியை ஒவ்வொரு நாள் இரவிலும் தேடுகிறது.

நல்ல காலம் இனி வருமோ இல்லையோ? வரும் என்ற சொல்ல ஊர் மக்களுக்குச் சாமக் கோடாங்கி தேவை. தெருவில் வரும் சாமக் கோடாங்கியின் வார்த்தைகளில் சில சமயம் யாருக்கு என்ன நேர்ந்து விடுமோ என்ற அச்சம் ஏற்படுகிறது. அச்ச உணர்வையும் மக்கள் விரும்பத் தொடங்கிவிட்டனர். இதற்காகவும் கோடாங்கி தேவைப்படு கிறான். இரவுப் பொழுதிலிருந்து கோடாங்கியைப் பிரித்துப் பார்க்க இயலாது. ஜக்கம்மாவுக்கு இவன்மேல் என்ன கோபம்? நல்ல காலம் வரும் என்று இவன் சொல்வது உண்மையில்லையா? நல்ல காலம் ஊருக்கு வரவேண்டாம் என்று மலையாள பகவதி கருதுகிறாளா? மலையாள பகவதிக்கும் வாழ்வு கொடுப்பவன்தானே இந்தக் கோடாங்கி? கோடாங்கியை இவள் ஏன் பிய்த்தெறிய வேண்டும்? எனினும் ஊர் மக்களுக்குக் கோடாங்கி இல்லாமல் முடியாது. இந்த அளவுக்குக் கோடாங்கி மக்களோடு ஒன்றிப் போய்விட்டான்.

## *இரவுப்பாடகனும் இறந்து திரும்பியவனும்*

ஒரு வாரத்திற்கு முன்பு இறந்தவன் இப்பொழுது வீட்டிற்கு வந்திருக்கிறான். அழுகையை நிறுத்திவிட்ட நிலையிலும், மனைவி புயலால் சூறையாடப்பட்ட தோப்புப்போல இருந்தாள். அம்மியில் துவையலோடு சேர்த்துத் தன் எதிர்காலத்தையும் அவள் அரைத்துக் கொண்டிருந்தாள். மொட்டை போட்டிருந்த எட்டு வயது மகன் பம்பரம் விளையாடிக் கொண்டிருந்தான். உறவுக்காரர்களின் ஒப்பனை அழுகைகள் முடிந்த நிலையில் வீட்டின் முன்புறம் சாணத்தால் மெழுகப்பட்டிருந்தது. சாமியாகி விட்ட இவனது படத்தின் முன் ஊதிபத்தி எரிந்துகொண்டிருக்க, நாத்திகனாகிய இவன் நெற்றியில் திருநீறு பூசப்பட்டிருந்தது. இவன் வங்கிப் புத்தகத்தையும் ஒருவேளை கடன் பத்திரங்கள் இருக்குமானால்– அவற்றையும் சகோதரர்கள் தேடிக் கொண்டிருந்தார்கள். எழுதி வைக்கப்படாத உயிலை மைத்துனர்கள் தேடிக் கொண்டிருந்தனர்.

வேப்பமரத்தில் பிண்டச் சோறு கொத்திய காக்கைகள் காத்திருந்தன. தன் வீட்டிற்கு எதிரில் வந்த இரவுப் பாடகனிடம், தன் இறந்த காலம் பற்றிய சொற்கள், அவனுக்குத் தேவை என்றால் எடுத்துக்கொள் என்றான். உயிரிழந்த சொற்களை மரணம்கூட விரும்புவதில்லை, தெரியாதா உனக்கு என்று இரவுப் பாடகன் கடந்து போனான்.

எட்டு நாட்களுக்குமுன் இறந்து போனவன் ஒருவேளை திரும்பி வந்தால் அவனை யார் எதிர் கொள்வார்கள்? தேடுவார்கள்? மனைவிக்கு அவன் இன்னுமா தேவைப்படுகிறான்? குழந்தைக்கு அவனுக்கான விளையாட்டிற்குமேல் வேறு எதுவும் தேவையில்லை. இவன் நாத்திகன் என்றாலும், இவனுக்கும் ஒரு படம் மாட்டி ஊதுபத்தி ஏற்றி இவனையும் சாமியாக்கிவிடத்தான் செய்கிறார்கள். இவன் ஏதாவது பணமோ, சொத்தோ விட்டு வைத்திருப்பான் என்று அவற்றை அபகரிப்பதற்காக உறவினர் தேடுகின்றனர். அவன் மனைவி பற்றியும், குழந்தை பற்றியும் இவர்களுக்கு என்ன கவலை? இறந்தபின் திரும்பியவன் ஏமாற்றத்தோடு புறப்படுகிறான். இரவுப் பாடகனுக்குங்கூட அவனால் என்ன தரமுடியும்? அவன் திரும்பி வந்திருக்க வேண்டாம்.

ஒருவர் இறந்துவிட்டார் என்பதற்காக அவரைப் பற்றியே நினைத்து யாரும் இருந்துவிடுவது இல்லை. அவரவர்க்கான வாழ்க்கையைத் தொடர வேண்டியிருக்கிறது. மனைவி இன்னும் கொஞ்சநாள் வருந்திக் கொண்டிருக்கலாம். நல்லவேளை, இவன் சொத்து எதுவும் சேர்த்து வைக்கவில்லை. வைத்திருந்தால் மனைவியின் பாடு பெரும் திண்டாட்ட மாக மாறி இருக்கும். உறவுக்காரரோடு வழக்காடி ஓய்ந்து போக வேண்டியிருக்கும்.

## *பகல் தாகம் இல்லாத பாடல்*

நேற்று இரவு இரவுப் பாடகன் வந்தான். அவன் பாடலில் இருள் இல்லை. நட்சத்திரங்கள் இல்லை. பகலும் இல்லை. இசை வேர்கள் இல்லாத, உலர்ந்த கிளைகளில் அமர்ந்த அவன் பாடல்களில் காற்று தன்னைச் சுட்டுக் கொண்டது. சொந்தத்தில் வீடு கட்டிக் கொள்ள முடியாதவர்கள், கல்லாய், மண்ணாய் அவன் பாடலில் கிடந்தார்கள். படித்து வேலை தேடி அலைந்த இளைஞன் தன் பட்டங்களையும்

அவன் பாடலில் போட்டுக் கொளுத்தினான். ஊர்ப் பெரிய மனிதர்கள் புதிய காம உறுப்புகள் தேடி அவன் பாடலுக்குள் அலைந்தார்கள். படத்திற்குப் பாட்டெழுதப் பட்டணத்திற்குச் சென்ற இளைஞன் திரும்பி வந்து கட்டையாய் அவன் பாடலில் கிடந்தான். குடிநீர் இல்லாத குளங்கள் கரைகளை உடைத்துக்கொண்டு அவன் பாடலில் கிடந்தன. கரும் பலகையும், கழிப்பறையும் இல்லாத பள்ளிச் சிறுவர்கள் அவன் பாடலில் சிறுநீர் கழித்தனர். இப்படியாக நேற்று இரவு வந்த இரவுப் பாடகனிடத்தில் இசை இல்லை; இருள் இல்லை; பாடல்களில்லை; கவிதைகள் இல்லை.

இரவுப் பாடகனும் தனக்குள் நொந்துபோனான். எல்லாருடைய வேதனைகளையும் கண்ணீரையும், கவலைகளையும், தனக்குள் ஏற்றுக் கொண்டவன் இனி எதைப் பற்றிப் பாடுவான்? இவன் பாடல்கள் இனி யாருக்குப் பயன்படும்? இவன் இளைஞர்களுக்கு வேலை தேடித் தருவானா? பெரிய மனிதர்களுக்குக் காம உறுப்புகளைத் தயாரித்துக் கொடுப்பானா? இவன் எதைச் செய்வான்? காலங்களை இழந்துவிட்ட பிறகு இவன் என்ன ஆவான்?

## *முதல் பாடல்*

மூத்த மரங்களின் இலைகளிலிருந்து அவன் சொற்கள் திரும்பி வரவில்லை. காற்றுக்குள் சென்று அவன் சந்தங்கள் பதுங்கிக்கொண்டன. மரித்துப் போன எலும்புக் கூடுபோல் பாடல் இல்லாமல் வந்து கொண்டிருந்தான் இரவுப் பாடகன். இரவு அவனைப் பார்த்துக் கொண்டிருந்ததே தவிர அவன் பாடல்களில் ஒன்றையும் திருப்பித் தர வில்லை. இரவு தன் அடுக்குகளைச் சரிபார்த்துக் கொண்டிருந்ததே தவிர அந்த அடுக்குகளுக்கு அடியில் இருந்த அவன் பாடல்களை இவனுக்கு மீட்டுத் தரவில்லை. அவனுக்குள், கிணற்றின் ஆழத்திற்குள் இருப்பதைப் போல எத்தனையோ நிழல்கள், பிம்பங்கள். இவையும் இப்பொழுது உடைந்து நொறுங்கிக்கொண்டிருந்தன. அவன் மரணித்துக் கொண்டிருந்தான். மரணம் அடைந்த பிறகு பழைய நினைவுகளோடு ஒரு பாடல் பாடியிருந்தான். அந்தப் பாடலில் சூடு இருந்தது; சுவை இருந் தது; வானம் இருந்தது; காற்று இருந்தது; நீர் இருந்தது; நிலம் இருந்தது;

இப்பொழுது, இனி இவன் இல்லை; இவன் பாடல்களும் இல்லை; இனி இருப்பது இரவு மட்டுமே.

இது நாள் வரை இரவைப் பாடினான்; காற்றைப் பாடினான்; வானத்தைப் பாடினான். இப்பொழுது இவனிடத்தில் அவை இல்லை. எல்லாவற்றையும் பிறருக்குத் தந்துவிட்டு இவன் ஏதுமற்றவனாய், வறியவனாய், இசை உணர்வோ, சந்த உணர்வோ அற்றவனாய் இறந்து கொண்டிருக்கிறான். இவன் இல்லை என்றால் நமக்கு எங்கிருந்து கவிதைகள் கிடைக்கும்? இவற்றை மீண்டும் நம்மிடம் எப்படி உயிர்ப்பிக்கப் போகிறோம்? உயிரியக்கம் இல்லாத உலகில் எது வாழமுடியும்?

இதுவரை பார்த்ததிலிருந்து "இரவுப் பாடகன்" கவிஞர் தமிழன் பனின் வித்தியாசமான தொகுப்பு என்பது மட்டுமல்ல, ஒரு முக்கியமான தொகுப்பாகவும் அமைகிறது.

"இரவுப் பாடகன்" என்ற ஒரு அற்புதமான படிமத்தைத் தமிழ்க் கவிதை உலகிற்குத் தமிழன்பன் படைத்துத் தந்திருக்கிறார். இனி இந்த "இரவுப் பாடகன்" என்ற படிமத்தை வேறு கவிஞர்களும், அவரவர் உணர்வு நிலைக்கேற்பக் கையாள முடியும். தமிழ்க் கவிதையை இப்படித் தமிழன்பன் முன்நகர்த்தி உள்ளார் / விரிவுபடுத்தி உள்ளார்.

இரவுப் பாடகன் தெருக்கள் வழியாக அடிக்கடி வந்து நம்மைப் பார்த்துக் கேட்கிறான். உங்களுக்குள் கவிதை இல்லையா? நீங்கள் எவ்வாறு கவிதையற்றுப் போனீர்கள்? வாழ்க்கை இப்படிச் செய்திருப் பதை நீங்கள் உணரவில்லையா? இப்படி ஒரு இழப்பை எப்படி ஏற்றுக் கொண்டீர்கள்? இப்படி ஏற்றதன் மூலம் நீங்கள் உயிரியக்கம் அற்றுப் போனீர்கள். உயிரற்ற சவமாக நீங்கள் மாறிக் கொண்டிருக்கிறீர்கள். உங்களிடம் உயிர்ப்பு இல்லாத நிலையில் எனக்குள் மட்டும் எங்கிருந்து கவிதைகள் எழும்? எனக்கு இனி நேர்வது மரணம் அன்றி வேறு இல்லை. இப்படிப் புலம்பிக் கொண்டே இரவுப் பாடகன் நம்மிடமிருந்து, நமக்குள்ளிருந்து மறைகிறான்.

இப்படி இந்தத் தொகுப்பை நம்மால் புரிந்துகொள்ள இயலுமானால், இதன் தொடர்ச்சியாக இன்னொரு கேள்வி எழுகிறது. கவிதை

என்பது மனித வாழ்வின் தர மதிப்பீடாக அமைய முடியுமா? உண்மை தான்; அமைய முடியும். வானமும் நிலவும் விண்மீன்களும் காலை / மாலை நேரத்துச் சூரியனும் நம்மோடு கலந்து, நமக்குள் கவிதையாகி நம்மை உயிர்ப்பிக்கின்றன. மனத்தை நம்மால் திறந்து வைத்திருக்க முடியுமானால் இவை நமக்குள் வந்து/நம்மோடு வந்து கரைந்து நம்மின் கவிதையாகிவிடும்.

நம் ஆளுமைக்குள்ளிருந்து நம்மை வளர்க்கும். இங்கிருந்தே நாம் இயற்கை என்றும், உயிர்கள் என்றும், அன்பு என்றும், கருணை என்றும், அழகியல் என்றும், அறிவியல் என்றும் நாம் பேசுகிறோம். நமக்குள் வளர்கிறோம். வளர்ச்சியின் தொடர்ச்சியில் நம் நேயம் உலகளவில், பிரபஞ்சளவில் பெருகுகிறது. வானத்தையும், கடலின் ஆழத்தையும் நாம் கை நீட்டித் தொடுகிறோம். நாமும் நமக்குள் விரிவடைகிறோம்; ஆழப்படுகிறோம். நமக்குள் இசை பொங்குகிறது. வண்ணங்கள் நிறைகின்றன. நாமே இசையாகிறோம்; ஓவியமாகிறோம். உண்மையில் மனிதன் என்ற முறையில் இத்தகைய ஆளுமை நமக்கு உரிமையானது.

இத்தகைய மனிதன்தான் கடவுளைக் கூடப் படைக்கிறான்; கடவுளாகிறான். தமிழன்பன் தன் கவிதைகளில் திரும்பத் திரும்பச் சொல்லுகிற ஓர் உண்மை பற்றி இங்குக் குறிப்பிடவேண்டும். தனக்குள் இசை இல்லாதவன் வீணையின் நரம்பில் இசை எழுப்ப முடியாது. தனக்குள் வண்ணங்கள் இல்லாதவன் ஓவியம் வரையமுடியாது. மனிதனின் அகத்தினுள் அழகு இருந்தாலொழியப் புறத்தில் அழகைக் காண முடியாது. இதைப் போலத்தான் அற உணர்வு முதலியனவும்.

வரலாற்றின் நீரோட்டத்தில் காலம் காலமாய் மனிதனுக்குள் இத்தகைய கரு வளர்ந்து வந்திருக்கிறது. இந்தக் கருவை இவன் சரியாக அர்த்தப்படுத்த இயலுமானால் மனிதர்கள் மத்தியில் சமத்துவம் என்றும், சமதர்மம் என்றும் இவனால் பேச முடியும். இதே உணர்வோடு, உயிர்களோடு, இயற்கையோடு இவன் உறவுகொள்ள முடியும்.

கவிதையைக் கொண்டு மனிதனை அளப்பதென்பதை இப்படிச் செய்ய முடியும். தமிழன்பனும் இதைத்தான் செய்கிறார். இப்படி கவிதையாக

இருக்க வேண்டிய மனிதன் தனக்குள் எப்படிச் செத்துப்போகிறான். அனேகமாக எல்லாக் கவிதைகளிலும் இதைப்பற்றிக் கவிஞர் பேசுகிறார்.

இரவு நேரத்து நட்சத்திரங்களை இவன் கவனிப்பதில்லை. மாலை நேரத்துச் சூரியன் சொல்லுகிற வார்த்தைகள் இவன் செவிக்குள் நுழைவதில்லை. இவன் அரசியல்வாதி; மதவாதி; புரோகிதன்; இவன் லேவாதேவிக்காரன்; இவன் வணிகன்; இவன் காமுகன்; இவன் வேலையற்றவன்; இவன் குருடன்; இவன் முடவன்; இவன் நோயாளி; இவன் வேட்டைக்காரன்; இவன் வஞ்சகன். இவனுக்குக் கவிதை தேவையில்லை. இவனுக்கு அழகுணர்வு தேவையில்லை. வெளிச்சங்கள் இவனுக்குத் தேவையில்லை. அசலான கல்வி என்னவென்று இவனுக்குத் தெரியாது. பாடப் புத்தகங்களில் குழந்தைகளை அடைத்து, குழந்தை களின் உணர்வை மழுங்கடிப்பவன். மனைவியை அடுப்பில் வைத்து வறுப்பவன்; இன்னும் சில காம உறுப்புகளுக்காக அலைபவன். இப்படி அலைந்து அலைந்து தனக்குள் இருக்கும் கவிதைகளைக் கொன்றவன் இவன். இப்படித்தான் இவன் கவிதைகளை இழந்தான். ஆகவே இவன் மனிதனாகவும் இல்லை. ''இரவுப் பாடகன்'' இவனிடம் எவ்வளவோ மன்றாடினான். இரவுப் பாடகனுக்குத் தர இவனிடம் கவிதை இல்லை. இந்த உண்மையைத்தான் இந்தத் தொகுப்பில் கவிஞர் தமிழன்பன் பதிவு செய்திருக்கிறார். தமிழ்க் கவிதை தனக்குள் கனத்து வருவதை இந்தத் தொகுப்பு மெய்ப்பிக்கிறது.

38

# கனாக்காணும் வினாக்கள்

## அலை அலையாய்
## அழகியலும் மெய்யியலும்
## வாழ்வியலும்

உலகப் பெருங் கவிஞர்களில் ஒருவரென மதிக்கப்படுகின்ற பாப்லோ நெருடாவைப் பற்றிப் பெரும் துயரத்தோடுதான் நம்மால் சிந்திக்க முடியும். அவர் பெருங்கவிஞர் என்பதில் நம்மில் எவருக்கும் ஐயம் இருக்க முடியாது. அமெரிக்காவின் ஆதிக்க எல்லைக்குள் அகப்பட்ட எந்த ஒரு நாடும் தனக்கான விடுதலையை எந்த நெறியிலும் தீர்மானித்துக் கொள்வது கடினம் என்பதற்குச் சிலி நாட்டு மக்கள் தலைவர் அல்லன்டேவும் மக்கள் கவிஞர் பாப்லோ நெருடாவும் சான்றுகள் ஆயினர். தம் மக்களுக்காக இவர்கள் தம் வாழ்வையும் உயிரையும் ஈந்தார்கள். இவர்களின் வாழ்க்கையும்கூடப் பெருங் காவியம் / கவிதை.

பாப்லோ நெருடாவின் அற்புதமான கவிதைகளோடு தன்னைத் தொடக்கத்திலிருந்தே இணைத்துக் கொண்டவர் தமிழன்பன். நெருடாவைத் தனக்குள்ளும் தன் கவிதைகளிலும் பயிரிட்டுக்கொண்டவர் தமிழன்பன். நெருடாவின் நூற்றாண்டு விழா நடைபெறும் இந்த ஆண்டில் நெருடாவின் கேள்விகள் வடிவிலான இறுதிக் கவிதை நூலின் வகைமையில் கவிஞர் தமிழன்பன் அவர்களும் 'கனக்காணும் வினாக்கள்' என்ற இந்தக் கவிதை நூலைப் படைத்துள்ளார். கேள்விகள் வடிவில் கவிதைகளா? என்று நாம் வியப்படைய வேண்டியது இல்லை. கேள்விகள் பல்வகைப் பொருளில் பலவகைத் தேவைகளை நிறைவேற்றுவதை நம்மால் புரிந்துகொள்ள முடியும்.

5.26.

**பண்என்னாம் பாடற்கு இயைபுஇன்றேல் கண்என்னாம்**
**கண்ணோட்டம் இல்லாத கண்.**

இப்படி வள்ளுவரும் தன் சிந்தனையில் நிறையக் கேள்விகளை எழுப்புகிறார். இந்தக் கேள்விகள் கவித்துவம் நிறைந்த கேள்விகள். நாமும் ஒவ்வொரு நாளும் எத்தனையோ கேள்விகள் கேட்கிறோம். இந்தப் பொருள் என்ன விலை? மதுரைக்கு எவ்வளவு தொலைவு? பூமியின் சுற்றளவு என்ன? இவை ஒரு வகையான கேள்விகள். திட்டவட்டமான விடைகளைக் கொண்ட கேள்விகள். இவற்றில் தர்க்கத்திற்கு இடமுண்டு. இவை கவித்துவத்தோடு / கவிதையோடு உறவு உடையவை அல்ல. இந்தக் கவிதைக்கு என்ன பொருள்? கடல் ஏன் ஆர்ப்பரிக்கிறது? இயற்கையோடு நமக்கு என்ன உறவு? வானம்தான் எவ்வளவு பெரியது? குழந்தைக்காகத் தாய் எவ்வளவு துயரப்படுகிறாள்? மேகம் என்ன எதிர்பார்த்து மழை பொழிகிறது? ஏசு தன் கருணையை எங்கிருந்து பெற்றார்? இவ்வகைக் கேள்விகளுக்குத் திட்டவட்டமான விடை என்று எதை நாம் கூறமுடியும்? இக்கேள்விகள் நம் தர்க்க அறிவோடு உறவுடையவை அல்ல; இவை நம் உணர்வோடு, உள்ளுணர்வோடு, ஆழ்மனத்தோடு உறவுடையவை.

நாம் ஆழ்ந்து சிந்தித்தால் ஓர் உண்மையைப் புரிந்துகொள்ள முடியும். நம் வாழ்வின் பெரும்பகுதி அறிவோடு, பகுத்தறிவோடு, தர்க்க அறிவோடு நடைபெறுவதாக இல்லை. வரவு செலவு பார்த்து வாழ்க்கை நடத்தும் அதே சமயம், வரவு செலவைப் பொருட்படுத்தாமல் உறவுகளோடு, நண்பர்களோடு குழந்தைகளோடு, இயற்கையோடு உறவு கொள்வதில் தான் நாம் மனநிறைவு கொள்கிறோம். வானமும் பூமியும், கடலும் காற்றும், மலர்களும் பறவைகளும் நம் இளமைக்குள் எப்படி எங்கே தங்கி இருக்கின்றன? எப்படி இவை நமக்குள் சென்றன? இவற்றிலிருந்து நம்மை – நம் மனத்தை – நம் ஆளுமையை – வாழ்வைப் பிரித்துப் பார்க்க முடியுமா? இப்படித்தான் தாயின் அன்பு – ஆசிரியரின் கருணை – இப்படி எவ்வளவோ நமக்குள் பதிந்திருக்கின்றன. இவையோடும், கலை, கவிதை களோடும் வாழ்கிறோம். இவற்றுக்கெல்லாம் விடையில்லை. இவையில்லாமல் நமக்கு வாழ்வு இல்லை. வாழ்வின் நிறைவு இல்லை.

கவிஞர் தமிழன்பனின் கவிதைகளோடு – கேள்விகளோடு கூடிய இந்தக் கவிதைகளோடு நாம் உறவு கொள்ளும்போதும் இப்படிச் சில

கேள்விகள் நமக்குள் எழுகின்றன. இந்தக் கேள்விகள் வழியே நமக்குள் தேடுகிறோம். நம் ஆளுமையின் உருவாக்கத்திற்குள் கவிதைக்கு என்ன இடம் எனச் சிந்திக்கிறோம். இயற்கைக்கு என்ன இடம்? வரலாற்றுக்கு என்ன இடம்? மரபுக்கு என்ன இடம்? வள்ளுவரும் புத்தரும் நமக்குள் இன்னும் வாழ்வது எப்படி? இளங்கோவும் ஏசுவும் நமக்குள் இன்னும் என்ன ஏக்கங்களோடு வாழ்கிறார்கள்? இப்படியும் நமக்குள், தமிழன்பன் கவிதைகளினூடே கேட்டுக் கொள்கிறோம்.

மீண்டும் ஒரு கேள்வி! ஒவ்வொரு நாளும் இந்தக் கேள்விகள் வழியே என்ன செய்கிறோம்? நம்மை நாமே புரட்டிப் பார்த்துக்கொள் கிறோம். நம்மைப் புதுமை செய்துகொள்கிறோம். ஒவ்வொரு நாளும் உலகம் நம்மை என்ன செய்கிறது? எத்தனையோ நெருக்கடிகளைத் தருகிறது. நமக்குள் நாம் தடுமாறுகிறோம். நமக்குள் நாம் எந்தத் தளத்தில் நிற்கிறோம், நிற்கமுடியும் என்றெல்லாம் சிந்திக்கிறோம். நம் வாழ்வுக்கு என்ன அர்த்தம் என்றும் கேட்டுக் கொள்கிறோம். எங்கோ ஒரு தளத்தில் நம்மைக் கண்டடைகிறோம். நிறுத்திப் பார்க்கிறோம். இது நமக்கான தளம், உறுதியான தளம்.

வள்ளுவருக்குள்ளும் இப்படி ஒரு அனுபவம்.

**ஊழி பெயரினும் தாம்பெயரார் சான்றாண்மைக்கு**
**ஆழி எனப்படு வார்.**

வள்ளுவரும் ஒரு சான்றோர் – தமிழ்ச் சான்றோர். சான்றாண்மை என்னும் தளத்தில் தன்னை நிறுத்திக்கொள்கிறார். நெருக்கடி மிக்க எந்தச் சூழலிலும் அதிலிருந்து அவரால் விலக முடியாது. நமக்கு எந்தத் தளம்? ஒருவகையில் கவிதைத் தளம் என்று சொல்லலாமா? தமிழியம் என்றும் சொல்லலாம்; தமிழ் மரபு என்று இதைக் குறிப்பிடலாம். தமிழன்பனும் இப்படித்தான் கவிதைத் தளத்தில் – தமிழ் என்னும் தளத்தில் – தமிழியம் என்னும் தளத்தில் தன்னை எப்பொழுதும் நிறுத்திக் கொள்கிறார்.

கவிஞர் தமிழன்பன் தன் கவிதைகள் வழியே அழகியலின் உச்சங்களை அடிக்கடி தொடுகிறார். இத்தொகுப்பிலிருந்து சில கவிதைகளை இங்கே பார்த்துக் கொள்ளலாம். இப்பொழுது காண்பதற்கு

அரிதாகி வரும் பருத்தியின் அற்புதமான வெண்மை நிறத்திற்கு எந்த உவமையைச் சொல்ல முடியும்? தமிழன்பன் கேட்கிறார்.

**பருத்தி,**
**பூப்பதற்கு முன்**
**சூரியனின்**
**ஒரு யோசனையாக**
**இருந்திருக்குமோ?** (ப. 73)

சூரியனின் யோசனைக்கு எது நிறமாக இருக்க முடியும்? முற்றிலும் தூய்மையான வெண்மை நிறமாக இருக்க முடியும் என்று கவிஞர் கருதி அந்த வெண்மை நிறம்தான் பருத்திக் காய்க்குள் வந்து இருக்கிறது என்று கவிதை சொல்கிறார். தூய்மையான வெண்மை எவ்வளவு பேரழகு!

மயிலின் வாழ்க்கை குறித்து நாம் எப்பொழுதாவது சிந்தித்திருக்கிறோமா? இப்பொழுது சிந்திப்போம். கவிஞர் மயிலின் சுயசரிதை பற்றிச் சிந்திக்கிறார். மனிதர்களாகிய நம்மைப் பொருத்தவரை சுயசரிதை எழுதுகிறோம். கவிதையிலும் எழுதலாம். கவித்துவச் செறிவுடைய பாரதி போன்றவர்கள் கவிதையில் தம் சுயசரிதையை எழுதுவது சரியாக இருக்கும். நீங்களும் நானும் எழுதினால் சரிப்படாது. மயிலைப் பற்றிச் சொல்லுகிறார். மயில் தன் சுயசரிதையை எழுதுவது என்றால் உரை நடையில் எழுதுமா? அல்லது கவிதையிலா? அல்லது இசையில் எழுதுமா? கொள்ளை அழகு மிக்கது மயில். அதன் தோகையில் எத்தனை வண்ணங்கள்! மயில் தோகை விரித்து அசைந்தாடுவது ஒரு தனியழகு. அப்படியானால் அசைந்தாடும் இந்தப் பேரழகை இசை வடிவில்தான் எழுத முடியும். மயில் ஒருவேளை இப்படி எழுதலாம் என்று கவிஞர் கற்பனை செய்கிறார்.

காலம் முழுவதும் ஒழிச்சல் இல்லாமல் கடல் ஆர்ப்பரித்துக் கொண்டிருக்கிறது. இதற்கு ஏதாவது காரணம் இருக்கமுடியுமா? கவிஞர் இப்படிக் கற்பனை செய்கிறார். கடலில் மரக்கலங்களில் செல்லும் பரதவர் வலைகள் வீசி மீன்களைப் பிடித்துக்கொண்டு சென்று விற்கின்றனர். நாள்தோறும் இலட்சக்கணக்கில் – கோடிக் கணக்கில் மீன்கள் சாகின்றன.

மீன்களைப் பெற்று வளர்த்தது கடல்; கடல் கருணை மிக்க தாய். கோடிக்கணக்கான தன் குழந்தைகள் ஒவ்வொரு நாளும் இப்படிக் கொள்ளை போவதை எப்படிச் சகித்துக் கொள்ள முடியும்? கவிஞர் தனக்குத்தானே கேட்டுக் கொள்கிறார். கவிஞரிடம் ஊறி வரும் கருணையின் வடிவில் இப்படி ஒரு கேள்வி.

**மீன்களை விட்டுவிட்டு**
**வலையில்**
**என்னைப் பிடித்துக்கொள்**
**என்று**
**சத்தம் போடுகிறதோ**
**கடல்?** (ப. 83)

மழைக்கு என்ன நிறம்? ஏது நிறம்? மழைக்கு நிறம் உண்டு என்று நாம் கருதவில்லை. ஆனால் மழைக்கு நிறம் உண்டு என்று கவிஞர் சொல்கிறார். அதுவும் ஒரு நிறமில்லை. ஆயிரம் நிறங்கள் என்கிறார். நமக்குத் தெரிந்தது ஏழு நிறங்கள்; கவிஞர் சொல்வது ஆயிரம் நிறங்கள். மழைத்துளிகள் விழுந்துதான் செடிகள், கொடிகள் பூக்கின்றன. பூக்களுக் குத்தான் எத்தனை நிறங்கள்! ஆயிரக்கணக்கில் நிறங்கள். மழை தந்த நிறங்கள்; மழை உற்பத்தி செய்த நிறங்கள்; ஆகவே மழைக்கு ஆயிரம் நிறங்கள்; கற்பனையின் இயக்கமிது. கவிஞரோடு நாமும் சேர்ந்து இரசிக்கலாம். நமக்கும் ஆயிரம் நிறங்கள் வேண்டும் (ப. 106).

**'ரோஜாப்பூ எதனுடைய ஒப்பனைக்கூடம்'** என்று கவிஞர் வினாத் தொடுக்கிறார். நாம் திகைத்துப் போகிறோம். ரோஜா எப்படி ஒப்பனைக் கூடமாயிற்று? ரோஜா யார் யாருக்கு ஒப்பனை செய்கிறது? எப்பொழு தெல்லாம் ஒப்பனை செய்கிறது? இந்த ஒப்பனைக்கூடம் திறந்துகிடக் கிறது. நமக்கெல்லாம் ஒப்பனை செய்கிறது. மணமகளை அழகு செய் கிறது. குழந்தைகளை, பெண்களை அழகுபடுத்துகிறது. இயற்கையின் ஒப்பனைக்கூடமா இந்த ரோஜா? இயற்கையின் ஒப்பனைக்கூடமென்று ரோஜாவைத்தான் சொல்ல முடியும். மலர்களுக்கு மணி மகுடம் / ராணி இந்த ரோஜா. ரோஜாவின் கொள்ளை அழகில் மயங்காதவர் யார்? கவிஞர் சரியாகத்தான் சொல்கிறார். கவிஞரின் கற்பனையை நம்மால் தொட இயலவில்லை. நாம் அயர்ந்து போகிறோம் (ப. 115).

ஒரு மழைத்துளி, எத்தனை சிறியது! அதே சமயம் எத்தனை அழகானது! எத்தனை உயரத்திலிருந்து, கருணையோடு – யாருடைய நன்மைக்காக, எதனுடைய நன்மைக்காக இங்கு இறங்கி வந்தது? மேகத்தின் கருணை / வானத்தின் கருணை இந்த மழைத்துளி. இந்த மழைத்துளிக்குள் எத்தனையோ இருக்கின்றன. வானம் இப்படிச் சுருங்கி வண்ணமற்று மழைத்துளியாய் வந்திருக்கிறது. இந்த மழைத்துளிக்குள் வானம் இருக்கிறது. கடல் இருக்கிறது. விழுந்த அதே நொடியில் தெறித்து உடைந்து ஓடுகிறது. நம்மைச் சிலிர்க்கவைக்கிறது. ஒரு குழந்தையின் புன்னகைபோல – ஒரு மலரின் சிரிப்புப்போல மழைத்துளி நமக்குள் நம்மைக் குளிர்விக்கிறது. கவிஞர் கேட்கிறார்:

**பத்துக் கவிதைகள்**
**படுத்து உறங்க**
**ஒரு**
**மழைத்துளிக்குள்**
**இடம் இருக்குமா?** (ப. 121)

உண்மைதான். ஒரு மழைத்துளிக்குள் ஒரு கவிதை என்ன, பத்துக் கவிதைகள் படுத்துறங்கலாம்.

சிட்டுக்குருவி, நேரம் பார்த்து ஒவ்வொரு நாளும் என் சாளரத் திற்கு வருகிறது. ஜன்னல் கம்பியில் உட்கார்ந்து கேட்கிறது இன்று என்ன தேதி? எனக்குச் சொல்லத் தெரியவில்லை. சிட்டுக்குருவியைப் பார்க்கும்போதே அதன் அழகில் மயங்கி, அதன் குரல் இனிமையில் மயங்கி என்னை நானே மறந்து விடுகிறேன். ஒவ்வொரு நாளும் சரியான நேரத்திற்கு இந்தக் குருவி என்னைப் பார்க்க வருகிறது. நான் கவிஞன் என்பது இந்தச் சிட்டுக்குருவிக்குத் தெரியும். இன்று என்ன தேதி என்று சிட்டுக்குருவி ஏன் அறியவேண்டும்? எனக்கு இப்படிக் கேட்பதன் மூலம் இன்று என்ன தேதி என்று எனக்கு நினைவுபடுத்துகிறதா? கால உணர்வற்று நான் வாழ்ந்துகொண்டிருக்கிறேன். கால உணர்வு தேவை என்று எனக்கு இது சொல்லுகிறதா?

**இன்று**
**என்ன தேதி என்று**
**கேட்கவா**

**சிட்டுக்குருவி**
**என் சாளரத்திற்குத் தினமும்**
**வருகிறது?** (ப. 60)

இப்படி இந்தத் தொகுப்பிலிருந்து கவிஞரின் அழகியல் உணர்வின் உச்சத்திற்கு இன்னும் இருபது கவிதைகளையேனும் எடுத்துச் சொல்லலாம். அழகியல் என்பது கற்பனை உணர்விலிருந்து விரிகிறது என்பது உண்மைதான். மனிதனுக்குத்தான் இந்த அழகியல் உணர்வு உண்டு என்று நாம் நம்புகிறோம். ஒருவகையில் நம்மை மனிதராக வைத்திருக்கும் எத்தனையோ கூறுகளில், அழகியல் உணர்வு தானே தனித்துத் தோன்றுவ தாகவும் இல்லை; வெறும் தர்க்க அறிவிலிருந்து அழகியல் உணர்வு தோன்றுவதாகவும் இல்லை. மனத்தின் ஆழத்திலிருந்து – ஆழ்மனத்தில் ஊறும் கருணையிலிருந்து – அற உணர்விலிருந்து உடன் பிறப்பாக வெடிக்கிறது இந்த அழகியல் உணர்வு. இயற்கையின் அழகை நமக்குள் செறிவுபடுத்தி நம் ஆளுமையைப் படைக்கிறது. சிட்டுக்குருவியோடு நாம் உரையாடுகிறோம். மலர்களோடு நாம் உறவாடுகிறோம். பறவை களோடு நாம் பறக்கிறோம். கடலாக விரிகிறோம். வலையில் அகப்பட்ட மீன்களோடு தவிக்கிறோம். மயிலோடு நாமும் ஆடுகிறோம். ரோஜாவின் வண்ணங்களை நமக்குள் பூசிக்கொள்கிறோம். பருத்திச் செடியோடு வெயிலில் காய்ந்து வெண்மை – தூய்மையில் பூக்கிறோம். நமக்குள்ளும் கவிஞராகிறோம்.

கவிஞருக்குள் இயங்குவது ‘ஜென்’ மெய்யியல் என்பதை மேலும் சில கவிதைகளைக் கொண்டு புரிந்து கொள்ளலாம். எண்ணங்களோடு நாம் வாழ்கிறோம்; எண்ணங்களுக்குள் கட்டுப்பட்டும் வாழ்கிறோம். கொள்கைகள், கோட்பாடுகள், தத்துவங்கள் என்று தொடங்கி அப்புறம் அரசியல், பொருளியல் இவற்றுக்கான நிறுவனங்கள், அதிகாரம், ஆயுதங்கள், குடி, படைகள் என்று படைத்துக்கொள்கிறோம். நமக்குள் நாமே சிறைப்படுகிறோம். இப்பொழுது நமக்குள் விடுதலை இல்லை. இந்நிலை எப்படி நேர்ந்தது என்பதை மீண்டும் சிந்திக்கிறோம். எண்ணங்களுக்கு மூலம் மனம் என்று அறிகிறோம். எண்ணங்கள் இல்லையென்றால் மனமும் இல்லை. மனம் இருக்கிறவரை எண்ணங்கள் என்று தொடங்கி எல்லாம் வந்து சேர்ந்துவிடும். இப்பொழுது மனத்தையும் விட்டுவிட வேண்டும் (ப. 44).

இப்படித் தன்னைத்தானே தேடி, தான் என்பது அற்று, தனக்குள் இல்லை என்ற நிலை வந்தபிறகு இவனைத் தெருவிலும் காணமுடியாது (ப. 45). வேறு எங்கும் காணமுடியாது. அதாவது தான் என்பது அற்று இருக்கவேண்டும். தன்னை நிறுவிக்கொள்ளக்கூடாது. தன்னை இருப் பிடத்தில் ஏற்றுக்கொள்ளக்கூடாது. அதிகாரம் செய்யக் கூடாது. தான் காற்றைப்போல, மலரைப்போல இயல்பாக இருக்கவேண்டும்.

தான் குருவாக இருந்து இன்னொருவனைத் தனக்குக் கீழ், தன் சொல் கேட்கும் ஒரு மாணவனாக மாற்றக் கூடாது. தான் எப்பொழு துமே ஒரு மாணவன்தான். தன்னைத் திறந்து வைத்து, எல்லாவற்றையும் உள்ளே வர இடங்கொடுத்து, தான் அற்று இருக்கவேண்டும். இப்படித் தான் ஒரு குரு தன் பீடத்தை இழந்து மாணவனாக இருக்கவேண்டும். மாணவனாக இருப்பவனுக்குத்தான் தெளிவு கிட்டும். குரு எனப் பீடம் போட்டவனுக்குத் தெளிவு ஏற்படாது (ப. 48).

நூறுநூறு கொள்கைகள், தத்துவங்கள், அறங்கள், சடங்குகள், கடவுள்கள், கட்சிகள் என இந்த உலகில் இருக்கின்றன. இத்தனை வழிகள், நெறிகள் என உருவாக்கி வைப்பதன்மூலம் அங்கங்கே தலை வர்கள், குருமார்கள், அதிகாரிகள் தமக்கான வாழ்க்கையைப் பற்றிக் கொள்கின்றனர். அவர்களுக்காக மற்றவர்கள் வாழவேண்டும், உழைக்க வேண்டும், சாகவேண்டும் – இப்படி அமைந்துவிட்டால் மனிதன் தனக்கென ஒரு சரியான வழியில் செல்ல முடியாது. வழி தவறித்தான் போவான். அவனுக்குச் சென்று சேருமிடம் என்பது இல்லை. இவனுக்கு விடுதலை இல்லை (ப. 53). எல்லாம் தெரிந்தவனை ஞானி என்று சொல்கிறோம். மதிக்கிறோம், பாராட்டுகிறோம்; பல்லக்குத் தூக்குகிறோம்; சிலை அமைக்கிறோம் – இப்படி எல்லாம் தெரிந்தவனாக ஒருவன் இருக்க முடியாது.

எல்லாம் தெரிந்து ஆக வேண்டுமென்ற கட்டாயம் எதுவும் இல்லை. தெரிய வேண்டியதைத் தெரிந்துகொள்ள வேண்டும். அதை நான் மட்டுமே தெரிந்திருக்கிறேன் என்று முடிச்சிட்டு வைக்கவும் வேண்டாம். தன்னை ஒ ரு வ ன் ஞானி என நம்பவும் வேண்டாம். தான் ஞானி இல்லை என்பதை ஒருவன் தெரிந்து வைத்திருக்கவேண்டும். யாருக்கும்

தான் பாடம் சொல்ல வேண்டியதில்லை. காற்றைப் போலத் தன்னைத் திறந்துவைத்திருக்க வேண்டும். ஒருவேளை இவன் ஞானியாக இருக்கலாம் (ப. 64); இல்லாமையிலிருந்து மனிதன் தோன்றினான். இவன் இல்லா மையில் கரைந்துவிட வேண்டும். (ப. 80).

இந்த உலகச் சூழலில் மனிதர்கள் எப்படியோ தனியுடைமை, அதிகாரம், மதம் முதலியவற்றிற்கு ஆட்பட்டு இவற்றின் ஆதிக்கம் வளர் வதற்குத் தம்மை, தம் உழைப்பை, தம் ஆன்மாவை விற்றுக்கொண்டு இருக்கிறார்கள். தன்னைத்தானே விலை கூறி, விலை பேசிக் குறைந்த விலைக்குத் தன் உடம்போடு சேர்த்து ஆன்மாவையும் மனிதன் விற்றுக் கொண்டு இருக்கிறான். இவன் எத்தனையோ வகை வகையான நுகர்வுப் பொருளை அடுக்கி வைத்திருக்கும் இந்தக் கடைத் தெருவில் எதை வாங்க வந்திருக்கிறான்? எதை வாங்க முடியும்?

தன்னை விற்றுக் கொண்டவன் எதை வாங்க முடியும்? தன்னை – தன் உழைப்பினால் உருவான பொருளைத் தன்னை இழந்தவன் தானே அதிக விலைக்கு வாங்கியதன் மூலம் மீண்டும் தன்னை இழக்கிறான். தான் சிறைப்பட்டு இருப்பதை இவன் அறியவில்லை (ப. 81).

இந்தப் பூமி இயற்கை நலம் கெட்டுப் பல வகைகளிலும் மாசுபட்டு அழிந்து கொண்டிருக்கிறது. அதாவது மனிதனைச் சுவாசிப்பதன் மூலம் மனிதனின் சுவாசத்தால் அழிந்துகொண்டிருக்கிறது. மனிதன் இந்த உலகத்தை அழித்துக் கொண்டிருக்கிறான். தன்னைத் தானே அழித்துக் கொண்டிருக்கிறோம் என்பது தெரியாமல் இயற்கையை, வாழ்க்கையை அழித்துக் கொண்டிருக்கிறான். அதிகார வெறியால் தொழில் நுட்பங்களின் பெருக்கத்தால் தன்னைத்தானே அழித்துக் கொண்டிருக்கிறான். இவனுக்கு அறிவு ஞானம் இல்லை. இவன் ஒரு மூடன். இவனது குருமார்களும் மூடர்கள்.

இவன் தன் கண்ணைத் தானே தோண்டிக் கொண்டிருக்கிறவன். குரு எனத் தன்னைத்தானே நினைத்து மூடனாக்கிக் கொண்டிருக் கிறான் (ப. 99).

இந்த மனிதனுக்குள் ஆயிரம் எண்ணங்கள். நூற்றுக்கணக்கான தத்துவங்கள். இவன் தனக்குள் ஒருவனாக இல்லை. இவனுக்குள் பல

நான்கள் இருக்கின்றன. இவன் மனத்திற்குள் பல அறைகள். ஒரு அறைக்கும் இன்னொரு அறைக்கும் இடையே கதவு இல்லை. ஜன்னல் இல்லை. ஒரு அறைக்குள் இருக்கும்போது இவன் தன்னை அறிய மாட்டான். இப்படித் தன்னைத்தானே பின்னங்கள் ஆக்கி வைத்திருக் கிறான். இதன் காரணமாகவே தன்னைப் பற்றியும் வாழ்க்கைபற்றியும் வரலாறுபற்றியும் அறிய மாட்டான். இப்படி இவன் காலம் முழுதும் தன்னைத் தானே ஏமாற்றிக் கொண்டிருக்கிறான். முகமூடிகளில், போலித் தனங்களில் இவன் வாழ்ந்துகொண்டிருக்கிறான். இவன் நாயாக இருக் கிறானே ஒழிய மனிதனாக இல்லை (ப. 100).

மனிதன் தனக்குத்தானே பிளவுபட்டு இருக்கிறான். இவனுக்குத் தானே சொந்தம் இல்லை. இவன் எப்படி உலகத்தைச் சொந்தம் கொண்டாட முடியும்? உலகம் இவனுக்காகத் தன்னைத் திறந்து வைத்திருக்கிறது. திசைகள் பூமியைத் திறந்து வைத்திருக்கின்றன.

இந்தப் பூமிக்கு எல்லா மனிதர்களும் சொந்தம். எல்லோரையும் அரவணைத்துக் கொள்வதையே இந்தப் பூமி விரும்புகிறது. மனிதர் களுக்குள் பேதங்கள் இருப்பதைப் பூமி விரும்பவில்லை. மனிதர்களுக்குள் பகை தேவையில்லை. எல்லோரும் உடன் பிறப்புகள். இப்படி இருப்பதையே பூமி விரும்புகிறது (ப. 103).

சூரியன் பூமியை நாள்தோறும் சுற்றி வருகிறது. எதற்கு இப்படிச் சுற்றுகிறான்? அவனுக்குப் பூமியில் ஒரு பிடி புழுதி வேண்டுமாம். பூமியின் புழுதி அத்துணைப் புனிதமானது. மனிதர்களின் கால் பட்டுப் புனிதமானவை இந்தப் பூமியும் அதன் புழுதியும். சூரியன் எவ்வளவு ஆற்றல் மிகுந்தவன்? ஒளி தருபவன்; உயிர் தருபவன், அவனுக்குள் புழுதி இல்லை. அவனுக்குள் மனிதர்கள் இல்லை. ஆகவேதான் சூரியன் தன்னைப் புனிதப்படுத்திக் கொள்ள இந்தப் பூமியின் ஒரு பிடி புழுதி கேட்டு அலைகிறான் (ப. 61).

இங்கு இடம்பெற்ற இறுதிக் கவிதைகளில் சமதர்மம் என்ற கருத் தியலுக்கு அனுசரணையான ஆன்மிக மெய்யியல் சிந்தனைகளைக் காண் கிறோம். ஜென் மெய்யியலும் சமதர்மம் என்ற கருத்தியலும் ஒன்றுக்கொன்று அனுசரணையானவை. இவற்றுக்கிடையில் முரண்பாடுகள் இல்லை.

# அறிவியல் – ஆன்மிகம்

பெரியாரின் கடவுள் மறுப்புக் கொள்கை கவிஞர் தமிழன்பனுக்கு உடன்பாடு எனினும், கவிஞர் என்ற முறையில் கடவுள் மறுப்பு என்பதை விடாப்பிடியாகக் கடைப்பிடிப்பது சாத்தியமில்லை. கடவுள் என்பது ஒரு கருத்தாக்கம். ஆகவே கடவுள் என்ற கருத்தாக்கத்தின் உட்பொருள் என்ன என்ற சிந்தனையிலிருந்து விலகியிருக்கவும் முடியாது. இத்தகைய சிந்தனையின் இயக்கம் ஒருவரை அற இயலுக்கும் அதன் பிறகு ஆன்மிகத்திற்கும் அழைத்துச் செல்லும். நெருக்கடிகள் மிகுந்த நம் காலச்சூழலில் ஆன்மிகத்தின் ஒரு ஆற்றல் மிகுந்த இயக்கமென 'ஜென்' மெய்யியல் மேலுக்கு வந்திருக்கிறது. தமிழன்பன் கவிதைகளில் 'ஜென்' மெய்யியல் கிளை பரப்பி விரிந்து செல்வதைக் காண முடியும். சமதர்மம் என்பதும் இந்த மெய்யியலின் ஒரு கூறு என இனம் காணவும் முடியும். இத்தொகுப்பில் உள்ள பெரும்பகுதியான கவிதைகள் இத்தகைய உள்ளடக்கத்தோடு இயங்குகின்றன.

முதலில் கடவுள்பற்றித் தமிழன்பனின் சில கவிதைகளைப் பார்க்கலாம். கடவுள் என்பது ஒரு புனைபெயர் என்கிறார் கவிஞர். இந்தப் புனைபெயரில் எத்தனையோ கவிதைகள், புராணங்கள் எழுதப்பட்டு இருக்கின்றன. இவ்வாறு எழுதப்பட்ட கவிதை / கதைகளுக்கெல்லாம் ஆசிரியர் யாராக இருக்கமுடியும்? சாத்தான் என்கிறார் கவிஞர் (ப. 47). கடவுளைப் படைத்தது சாத்தான், கடவுள் என்ற கற்பனை / கதை மனிதர்களை நாசப்படுத்தி இருக்கிறது. சாத்தான் என்பதுகூடக் கற்பனை தான். கடவுள் என்ற புனைவுக்கும் சாத்தானுக்கும் இப்படி ஓர் ஒட்டுறவு. ஆகவே இல்லாத கடவுளைப் படைத்தவர் நல்ல எண்ணத்தோடு படைக்கவில்லை என்று நாம் புரிந்துகொள்கிறோம்.

எல்லாம் வல்லவன் இறைவன். ஆனால் இவனால் எதுவும் செய்ய முடியாது. இப்படி இறைவனுக்கு ஒரு சரிவு. இப்படி இறைவனை யார் சபிக்கிறார்கள் என்று கவிஞர் கேட்கிறார் (ப. 52). இங்கு நாம் புரிந்து கொள்வது என்ன? கடவுள் இல்லை. இல்லாத ஒருவர் எதையும் செய்ய முடியாது இருக்கிறார் என்று வைத்துக் கொண்டாலும் ஏன் சபிக்கப் பட்டு இருக்கிறார்?

கடவுள் மனிதனைப் படைத்திருக்க வேண்டாம். கடவுளுக்கு இது தொடக்கத்திலும் தெரியவில்லை. முடிநரைத்த பிறகாவது தெரிந்திருக்க வேண்டும். அப்படியும் தெரியவில்லை (ப. 75). இப்படியும் ஒரு கவிதை. கடவுள் இப்பொழுது கிழவர். முடி நரைத்தவர். வயதானவருக்கு அனுபவம் வாய்த்திருக்க வேண்டும். கடவுளால் படைக்கப்பட்ட மனிதன் இங்கு எவ்வளவோ கொடுமைகளை, தீமைகளைச் செய்கிறான். இப்படி ஒருவனைப் படைத்திருக்க வேண்டாம். இப்படிச் செல்கிறது கவிதை. கடவுள், மனிதன் பற்றிக் கவிஞர் சொல்வது ஒரு கற்பனைக் கவிதை. மனிதன் செய்யும் கொடுமைகள் காரணமாக இல்லாத கடவுளைக் காய்கிறார். அல்லது கடவுள் இல்லையென்று சொல்வதற்கு இப்படி ஒரு கற்பனைக் கதையை ஆசிரியர் காட்டுகிறார். கடவுள் என்பது ஒரு கருத்தாக்கம். இதை வைத்துச் சிலவற்றைப் பேச முடியும். கடவுள் என்பது மனிதனின் சிந்தனையில் உருவான ஒரு கருத்து.

கடவுளை இருப்பதாக வைத்துக்கொண்டு ஒரு கேள்வி கேட்கிறார். 'நீ இருப்பதால் என்ன பயன்?' இந்தக் கவிதையில் கவிஞர் தன் கருத்தை உறுதிப்படுத்துகிறார். கடவுள் இல்லை; இருந்தாலும் பயன் இல்லை. கடவுள் என்ற கதை தேவை இல்லை. கடவுளால் எதுவும் செய்யமுடியாது. இப்படிக் கடவுளுக்கும் ஒரு சாபம் இருந்திருக்க வேண்டும்.

கவிஞர் தமிழன்பன் கடவுள் என்ற கருத்தாக்கத்தைக் குறைந்த அளவுக்கே பயன்படுத்திக் கொள்கிறார்.

இனி புத்தரைப் பற்றி. புத்தர் தவத்தில் இருக்கிறார். மவுனத்தில் இருக்கிறார். மவுனம் என்பதை ஒரு நெறியாகப் புத்தர் போதித்தார். ஆசைகள் அற்று மவுனத்தில் இருக்க வேண்டும். இந்த நெறியைப் போதித்த புத்தருக்கு நிறையச் சீடர்கள் சேர்ந்தனர். சீடர்களில் பலர் வணிகர்கள். அவர்கள் கொடுத்த காசில் மடாலயம் எழுந்தது. புத்தரின் போதனைகள் ஒரு மதமாயின. மதத்திற்கு உருவம் மந்திரங்கள், சடங்குகள், கட்டுப்பாடுகள் சேர்ந்தன. புத்தரின் நெறி இறுதியில் மதமாயிற்று. புத்த தத்துவத்தைக் கைவிட்டவர்களால் – புத்தர் பெயரில் ஒரு மதம், மடாலயம் உண்டாயின. புத்தரை விற்ற காசில் ஒரு மடாலயம். இப்படி புத்தரே விற்பனைப் பொருளானார். மவுனம் இப்போது ஒரு விற்பனைப் பொருள்.

கவிஞர் கேட்கிறார்:

**மவுனத்தை**
**விற்ற பணத்திலா**
**புத்தர்**
**மடாலயம் நிறுவுகிறார்?** (ப. 56)

புத்தர் இப்படிச் செய்யவில்லை. புத்தரை அவரது சீடர்கள் விற்பனைப் பொருளாக்கினர். இப்படிக் குருவுக்குத் துரோகம் செய்யாத சீடர்கள் எங்கும் இல்லை என்பது கவிஞர் கருத்து. கடவுள் உண்டோ, இல்லையோ. அவரும் இப்படி ஒரு விற்பனைப் பொருள்.

புத்தர் தனக்குச் சிலை வைக்க வேண்டும் என்று விரும்பவில்லை. சிலை வைப்பது என்பதே ஒருவரது போதனையைக் குறுக்குவது – கட்டுப் படுத்துவது – வளரவிடாமல் செய்வது – இயக்கம் இல்லாமல் செய்வது. அப்படியானால் கடுமையான குளிர் என்பதற்காக ஒருவர் அவருடைய சிலையை எரித்துக் குளிர்காய்வதைப் புத்தர் வெறுக்கமாட்டார் என்பது மட்டுமல்ல; புத்தரே விரும்புவார். சிலை இதற்காவது பயன்பட்டதே என்று புத்தர் மகிழ்ச்சியடைந்திருப்பார். அன்றியும் தன்னை முடக்குவதற்காக நிறுவப்பட்ட சிலை இல்லாமல் போனது அவருக்கு நிம்மதி தந்திருக்கும் (ப. 56).

புத்தரது மனத்தைச் சீடர்கள் கொள்கையாக்கினர். புத்தருக்குச் சிலை எழுப்பினர். பௌத்த மதம் உருவாயிற்று. மதம் இப்பொழுது உரத்துப் பேசுகிறது. ஆரவாரம் செய்கிறது. நான் சொல்வதற்குமேல் உண்மை இல்லையென்று தர்க்கம் செய்கிறது. இந்தச் சத்தங்கள் புத்தரின் தியானத்தைக் கலைக்கின்றன. பௌத்தம் என்ற மதம் புத்தரையே குழி தோண்டிப் புதைக்கிறது. இந்தப் பௌத்தம் புத்தருக்குச் சம்மதமாக இருக்கமுடியாது. பௌத்தம் போட்ட சத்தத்தில் புத்தரின் தியானம் கலைந்தது என்கிறார் கவிஞர் (ப. 84). புத்தர் தனது சிலையை – தனக் கெனச் செய்து வைக்கப்பட்ட சிலையை விட்டு வெளியே வந்தார். அந்தச் சிலையைத் தானே உடைக்க வேண்டுமென்று விரும்பினார். அவரால் உடைக்க முடியவில்லை (ப. 89). இப்படிக் கவிஞர் சொல்கிறார். புத்தராலும்கூட உடைக்க முடியாத அளவுக்கு அவரது சிலையைச் செய்த சீடர்கள் அவ்வளவு உறுதியாகக் கல்லால், செம்பால், தங்கத்தால்

உருவாக்கி இருக்கின்றனர். சீடர்களுக்கு இப்பொழுது புத்தர் வேண்டாம். அவரது சிலைதான் வேண்டும். பௌத்த மதம் வேண்டும். மதத்தை வைத்துத் தர்க்கம் செய்யலாம்; மடம் கட்டலாம்; அதிகாரம் செய்யலாம்; அரசு நடத்தலாம்; கொலை செய்யலாம்; மக்களைக் குருடர் ஆக்கலாம்; புத்தரால் இதைத் தட்டிக் கேட்க முடியாது. வரலாற்றில் புத்த நெறி என்பது இப்படித்தான் சீர்குலைந்தது. புத்த நெறியை அவரது தொடக்க நிலைக்குக் கொண்டு செல்கிறது ஜென் மெய்யியல்; கோவில் வேண்டாம்; சிலைகள் வேண்டாம். சடங்குகள் வேண்டாம்; புராணங்கள் வேண்டாம்; தர்க்கம் வேண்டாம்; எல்லாவற்றையும் திறந்துவிடு; உனக்கு நீயே குரு. சீடனென்று எவனும் இல்லை. ஆரவாரம், வழிபாடு தேவை இல்லை. காற்றைப்போல் இரு. உனக்கு நீயே வெளிச்சம். இப்படி ஒரு மெய்யியல் தமிழன்பன் கவிதையில் இயங்குகிறது. இதனை ஆன்மிகம் என்று சொல்லலாம். ஆன்மா என்பதற்கும் இதற்கும் தொடர்பு இல்லை. இத்தகைய ஆன்மிகம் என்ற தொகுப்பை இத்தொகுப்பில் உள்ள கவிதைகள் விரிவாக வெளிப்படுத்துகின்றன. ஒரு கவிஞனுக்குள் ஆன்மிக உணர்வுகள் இருப்பதில் வியப்பில்லை.

## *இன்னும் சில கவிதைகள்:*

கம்பரைப் பற்றிய ஒரு கவிதை

**கம்பன்**
**ஒரு பூனையானபோது**
**பாற்கடல்**
**அவனுக்காக**
**ஒரு கிண்ணத்திற்குள்**
**எப்படி வந்தது?** (ப. 111)

கம்பர் தன் காப்பியத்தில் பாயிரத்தில் ஆசை காரணமாக இராமனின் கதையை எழுதலானேன் என்று கூறிப் பாற்கடலை அதன் கரையில் இருந்துகொண்டு ஒரு பூனை உண்டதைப்போல என்று தன் 'சிறுமை' பற்றிக் கூறுகிறார். கம்பனுக்குள் இருந்த கவிஞன் / படைப்பாளி இங்கு ஒரு பூனை; இராமனைப் பற்றிய காப்பியமென்பது ஒரு கடல்; கடலை ஒரு பூனை உண்ண முடியாது என்பது உண்மைதான். ஆனால் கம்பன்

ஒரு பெருங்கவிஞன். அவன் தன்னைப் பாடவேண்டுமென்று இராமகாதை என்ற அந்தப் பெருங்காப்பியம் கவிஞன் என்ற பூனையின் முன்னர், தன்னைச் சுருக்கிக் கொண்டு ஒரு கிண்ணத்திற்கு வந்தது. இது ஒரு கற்பனை. இதன் உண்மை என்ன? மாபெரும் கவிஞராகிய கம்பனுக்கு அந்தக் கடலும் ஒரு கிண்ணத்தின் அளவுக்கே வந்தது. கடல் சிறியது. படைப்பாளிக்குள்ளும் எல்லையற்ற ஒரு பிரபஞ்சம் / வானம் / கடல் இருக்கிறது. கம்பனுக்கு இது சாத்தியம்தான். பாயிரத்தில் கம்பன் கூறியதற்கு எதிரான கருத்தைத் தமிழன்பன் இங்குச் சொல்லவில்லை.

பாயிரத்தில் கம்பன் அடக்கத்தோடு கூறுகிறான். தமிழன்பன் கம்பனின் வீரியத்தைப் புரிந்துகொண்டு பேசுகிறார். கம்பனை இவ்வாறு புரிந்து கொண்டு கம்பர் விழாவில் இப்படி ஒருவர் பேசியதாகத் தெரியவில்லை. ஒரு பெருங்கவிஞனை இன்னொரு கவிஞனே புரிந்துகொள்ள முடியும்.

தமிழன்பனுக்குள் இப்படி ஒரு கவித்துவ வீரியம் செயல்படுகிறது. இத்தொகுப்பில் இப்படிக் கவிதைகள் பலவற்றை நாம் இனம் காண முடியும்.

## *வள்ளுவர், இளங்கோ, வள்ளலார் பற்றி*

வள்ளுவர், இளங்கோ முதலிய கவிஞர்களோடு நாம் ஆழ்ந்த உறவு கொண்டிருக்கிறோம். இவர்களின் மூலம் தமிழ் மரபோடு நாம் உறவு கொண்டிருக்கிறோம். தம்காலச் சமூகச் சூழலில் அவர்களுக்குள் எரிந்த நெருப்பை நாம் உணர்கிறோம். அந்த நெருப்பு இன்னும் அவியவில்லை. அந்த நெருப்பு இன்னும் பல மடங்கு பற்றி எரிந்து கொண்டிருக்கிறது.

தற்காலச் சூழலில் அறம் பற்றி வள்ளுவர் மிகுந்த அக்கறையோடு பேசினார். சங்ககாலத்தை அடுத்துவந்த காலம் முன்னைவிடக் கூடுதலான நெருக்கடிகள் நிலவிய காலம். நெருக்கடிகளுக்கு இடையில் சிக்சித் தவித்த அறத்தை வள்ளுவர் தேடுகிறார். அறத்தை நிலைநிறுத்த வள்ளுவரும் போராடுகிறார். வள்ளுவருக்கு வெற்றி வாய்க்கவில்லை. நிலைமை நம் காலத்தில் மேலும் மோசமாகிறது. நம் காலத்தில் வள்ளுவர்

என்ன செய்யமுடியும்? அநாதை விடுதி தேடி அங்கேதான் அறத்தை வள்ளுவர் குடி வைக்க முடியும். அந்த அநாதை விடுதிதான் வள்ளு வருக்கும் இன்று வாழக் கிடைத்த இடம். வள்ளுவரை – ஓர் அநாதை வள்ளுவரை இப்படித்தான் நாம் அலைய விட்டிருக்கிறோம் (ப. 111).

இளங்கோவின் கண்ணகி நீதியை நிலைநாட்டப் பாண்டியனின் அவையில் சிலம்பை உடைத்தாள். அந்தக் கண்ணகிக்கு என்ன நீதி கிடைத்தது? கணவன் கிடைக்கவில்லை. கணவனோடு வாழக்கை கிடைக்கவில்லை. கணவனை இழந்த நிலையில் அநாதையாய் மேற்கு நோக்கி நடந்தாள். இன்றைய நிலையிலும் கண்ணகிக்கு வாழ்வு கிடைத் திருக்கிறதா? கண்ணகி இன்னும் சிலம்பை உடைக்கிறாள். அன்று கண்ணகிக்குக் கிடைத்த நியாயம் இன்று கிடைக்காது. நம்காலச் சூழலில் அவள் எல்லாவற்றையும் இழந்து ஏதிலியாய் – யார் துணையும் இன்றி அலைய வேண்டி இருக்கிறது.

வள்ளுவரையும் இளங்கோவையும் நம் காலத்திற்குக் கொண்டு வருகிறார் தமிழன்பன். சமூக நெருக்கடிகள் மாறிவிடவில்லை. ஏற்றத் தாழ்வுகள், அநீதிகள், அரசு அதிகாரக் கொடுமைகள் இன்றும் தொடர் கின்றன. வர்க்க முரண்பாடுகள் நிலவும் காலம் முழுவதும் நீதியை நிலைநாட்டப் போராடுபவர்கள் அநீதிகளுக்கு இரையாக வேண்டிய அவலம் தொடரத்தான் செய்யும். வேறுவழி நமக்கு இல்லை. பேரிலக் கியம் என்பவை இத்தகைய பெருங்கதைகளைத்தான் சொல்கின்றன. இலக்கியங்கள் இவ்வாறு காலத்திற்கு ஏற்ற பொருளைத் தமக்குள் கொண்டுள்ளன. நவீன காலக் கோட்பாடுகள் இந்த உண்மையை நமக்கு உணர்த்துகின்றன. இதன் காரணமாகவும் வள்ளுவருக்கும் இளங்கோவுக்கும் மரணமில்லை.

வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடினேன் என்று வள்ளலார் கவலைப்பட்டார். ஆனால் வள்ளலார் என்ன செய்தார்? அந்த வாடிய பயிரைத் தனக்குள் வைத்து நீரூற்றி உரம் வைத்து வளர்த்தார். பயிர் தழைத்ததா? வள்ளலார் தனக்குள் வளர்த்த அருள் என்னும் பயிர் அவருக்குள் தழைத்தது. நமக்குள் தழைக்கிறதா? பயிர்களின் வாட்டம் தீர்கிறதா? (ப. 61)

பாரதியாரையும் பாரதிதாசனையும் தனக்குள் தாங்கிய கவிதைகளும் இத்தொகுப்பில் உள்ளன. கவிஞர் தனக்குள் தாங்கிய கவிதைகளும் இத்தொகுப்பில் உள்ளன. தமிழோடு – தமிழ்க் கவிஞர்களோடு – தமிழியலோடு, த மி ழ் மெய்யியலோடு நாம் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். தமிழ் நமக்குள் தன் ஆற்றலை வழங்குகிறது. தமிழ் நம்மைப் படைக்கிறது. வாழவைக்கிறது. நெருக்கடிகள் மிக்க சூழலிலும் தமிழோடுதான் நமக்கு வாழ்வு. புறத்தில் இருள் சூழ்ந்தாலும் தமிழ் ஒளியில் நாம் வாழ்ந்து வருகிறோம். ஆயிரமாண்டுகளுக்கு மேற்பட்ட தமிழ்க் கவிதையின் வேர்கள் நமக்குள் இன்னும் முளைத்து, கிளைத்து மணம் பரப்புகின்றன. இந்தத் தமிழ் என்னும் ஊற்று நமக்குள் வற்றாதவரை தமிழ்க்கவிதை நமக்குள்ளிருந்து பொங்கிவரும். நெருக்கடிகள் தொடர்ந்து அதிகரிக்கும் சூழலிலும் அவற்றுக்கு எதிர்வினை தரும் முறையிலும் கவிதைகள் நமக்குள் பொங்குகின்றன. தமிழ் இவ்வகையில் நமக்கு உயிராக, உரமாக அமைகிறது. கவிஞர் தமிழன்பன் மூலமாகவும் இந்த உண்மையை நாம் அறிகிறோம்.

## *மேலும் சில கவிதைகள் பற்றி:*

**எல்லையின்மைகளால்**
**சிறைப்பட்டுக்**
**கிடக்கிறதோ**
**இந்தப் பிரபஞ்சம்? (ப. 74)**

பிரபஞ்சம் இன்னும் விரிவடைந்துகொண்டே இருக்கிறது. பிரபஞ்சத்திற்கு இந்தக் கணத்தில் இருக்கிற எல்லை அடுத்த கணத்தில் இல்லை. எந்த ஒரு கணத்திலும் எல்லைகள் விரிந்துகொண்டே இருக்கின்றன. கவிஞர் கேட்கிறார்: எல்லை இன்மைகளேகூடப் பிரபஞ்சத்தைச் சிறைப்படுத்துகிறதா? பிரபஞ்சத்திற்கு அமைதி இல்லை; நிலை இல்லை; தொடர்ந்து இயங்குகிறது; விரிகிறது. பிரபஞ்சத்திற்கு எல்லை என ஒன்றிருந்து அது தனக்குள் அடங்கி அப்புறம் இயக்கமற்று, நம்மைப் போல இருப்பது என்பது இயல்பு ஆக முடியாது. எப்படியோ கவிஞருக்குள் ஒரு கேள்வி எழுந்திருக்கிறது.

**எல்லை யற்ற**
**ஒன்றைத் தொட்டுவிட்ட**
**மகிழ்ச்சி**
**எல்லை யற்ற**
**பிரபஞ்சத்தின் இதயத்தில்**
**இருக்குமா?** (ப. 105)

பிரபஞ்சத்திற்கு எல்லைகளென இல்லை. தொடர்ந்து விரிவடைகிற பிரபஞ்சத்திற்கு எல்லைகள் எதுவும் இருப்பதற்கு இல்லை. இந்தக் கணத்தில் எது எல்லையோ அதைப் பிரபஞ்சம் இந்தக் கணத்தில் தொட்டுவிடுகிறது. அடுத்த கணம் மீண்டும் புதிய எல்லை – அப்படி யானால் எல்லை இன்மை என்பதை இந்தக் கணத்தில் அல்லது இந்தக் கணத்தின் கோடியின் ஒரு துகள் நேரத்தில் தொட்டதாக நினைத்துப் பிரபஞ்சம் தன் இதயத்தில் மகிழ்ச்சி அடையலாம். கணிதத்தில் எல்லை யின்மை என்று பேசுகிறோம். எல்லை இன்மையை எப்பொழுதும் யாராலும் எட்ட முடியாது. தொடத் தொட நம் கையை விட்டு நழுவிச் செல்கிறது எல்லை. இது ஒருவகையில் மனத்தின் விளையாட்டு; அல்லது மாயை என்றுகூடச் சொல்லலாம். எந்த ஒரு கவிஞருக்கும் அல்லது அறிவியலில் அக்கறை உடைய எவருக்கும் மனத்தில் இப்படி ஒரு விளையாட்டை ஆடிப் பார்த்துக் கொள்ளாமல் இருக்க முடியாது. இந்த விளையாட்டில் கிட்டுவது தோல்விதான் என்றாலும் மகிழ்ச்சியான விளையாட்டு.

**இன்மைக்கு**
**விரிவுரை சொல்லி**
**அதன் பொருளை**
**ஏன் சுருக்க வேண்டும்?** (ப. 96)

கணிதத்தின் இன்மை என்று (0) பேசுகிறோம். இன்மையை அளவிட இயலாது. என்னதான் முயன்றாலும் அது நம் கையை விட்டு விலகிச் செல்கிறது. இன்மைக்கும் எல்லை இல்லை எனினும் இன்மை என ஒன்று, ஏதோ ஒரு அலகில் இருப்பதுபோல நம்பித்தான் கணிதம் என்ற மாளிகையைக் கட்டி வைத்திருக்கிறோம்.

இல்லாத ஒன்றை இருப்பதாக வைத்து வாழ்கிறோம். இப்படி நம்மை நாமே ஏமாற்றிக் கொள்கிறோம். இது ஒருவகையில் மாயை. இந்த

மாயையைக் கைவிட்டோம் என்றால் நமக்கு வாழ்வு இல்லை. ஒரு வகையில் வாழ்க்கை என்பதேகூட இன்மைகளால் கட்டி எழுப்பப்படுகிற மாளிகைதான். இப்படிக் கட்டப்பட்டது அடிக்கடி சரிந்து விழுகிறது. கடவுளும்கூட ஒரு இன்மைதான். இப்படித்தான் நமக்குள் தர்க்கம் செய்கிறோம். இன்மை என்பது தர்க்கம் செய்யும் ஒரு விளையாட்டு. தர்க்கம் மாயை எனக் கண்டபிறகும் இதையே கெட்டியாகப் பிடித்துக் கொண்டு இருக்கிறோம். பிரம்மம் என்பது ஒரு இன்மை. அதை வைத்துச் சங்கரர் விளையாட்டுக் காட்டுகிறார்.

கவிஞர் கேட்கிறார்: இன்மைக்கு – இல்லாத ஒன்றுக்கு விரிவுரை செய்வதன் மூலம் இன்மையின் பொருளை நாம் ஏன் சுருக்கவேண்டும்? கடவுள் என்ற இன்மைக்கும் இப்படித்தான் விரிவுரை செய்கிறோம். விரிவுரை செய்கிற எதுவும் அதன் பொருளைச் சுருக்கிச் சொல்வதாகத்தான் அமைகிறது. எல்லையின்மையைப்போல இன்மைக்கும் எல்லை இல்லை. வாழ்வதற்காக நாம் என்னென்னவோ செய்கிறோம். திருமணம், குழந்தைகள், இருப்பிடம், நாடு இப்படி எவ்வளவோ செய்கிறோம்.

**தர்க்கங்களின்**
**தாழ்வாரத்தில்**
**ஒரு**
**புன்னகையின் புத்திக்கு**
**என்ன கிடைக்கும்?** (ப. 98)

நாம் புன்னகை செய்கிறோம். புன்னகைக்கு என்ன பொருள் என்று எதிரில் இருப்பவன் கேட்கிறான். அவன் தர்க்கத்தில் நம்பிக்கை உடையவன். தர்க்கம் செய்வதன் மூலம் உண்மையைக் கண்டறியமுடியும் என்று நம்புகிறவன் அவன். இடைவிடாமல் அவன் தர்க்கம் செய்கிறான். எந்த ஒன்றையும் கேள்விக்கு உட்படுத்துகிறான். கேள்விகள் அவனுக்குள் இருக்கின்றன. விடைகள் என எதுவும் இல்லை. எந்த விடையையும் மீண்டும் மீண்டும் கேள்விக்கு உட்படுத்தித் தகர்க்கிறான். இன்மையும் கூட அவனுக்குள் ஒரு கேள்வியாகிறது. அவனுக்குள் எதுவும் இல்லை. இவன் புன்னகை செய்யமாட்டான். குழந்தைகளை இவன் கொஞ்சமாட்டான். மலர்கள் இவனுக்கு அழகாக இல்லை. இவனுக்குள் கதைகள் இல்லை.

கற்பனை என்றால் என்னவென்றே தெரியாது. இவனை நாம் என்ன செய்ய முடியும்? ஒருவகையில் இவன் அரக்கன். இவனுக்குக் கவிதைகள் இல்லை. இவன் தங்குவதற்கு, நிற்பதற்கு இடம் இல்லை.

நம்மைப் பொருத்தவரை தர்க்கம் தேவைதான் என்றாலும் அதற்கு எல்லைகள் உண்டு. தர்க்கத்தோடு வாழ்கிறோம். தர்க்கம் கடந்தும் வாழ்கிறோம். தர்க்கம் கடந்த நிலையில்தான் நமக்குக் கவிதை, வாழ்க்கை, இயற்கை, வானம், பூமி, மகிழ்ச்சி, புன்னகை எல்லாமே. இவற்றின் உள்ளும் தர்க்கத்திற்கு இடமுண்டு. இங்கெல்லாம் தர்க்கம் அதன் எல்லையோடு செயல்படுகிறது. இதமாகச் செயல்படுகிறது. நம்மை அது தோண்டிக் குதறுவது இல்லை.

**காற்றுக்குச்**
**சந்தேகம் வந்தால்**
**மரத்தை**
**ஏன் இப்படிப்**
**பிடித்து ஆட்ட வேண்டும்?** (ப. 47)

காற்றுக்கு என்ன சந்தேகம் வந்திருக்க முடியும்? குறிப்பாக மரத்தை அது உலுக்குகிறது என்றால் மரத்தின்மேல் அதற்கு என்ன கோபம் அல்லது என்ன சந்தேகம்? யார் மீதாவது நமக்குச் சந்தேகம் என்றால் அவர் தலை மயிரைப் பிடித்து நாம் உலுக்கத்தான் வேண்டுமா? காற்று என்ன ஒரு தாயா? மரமென்ற சிறுவன் என்ன தவறு செய்தான்? இப்படி நமக்குள் கேள்விகள் பல எழுகின்றன. விடை பிடிபடவில்லை என்றாலும் கவிதையில் தெரியும் காட்சி மிக அழகாக இருக்கிறது. இந்தக் காட்சி நமக்குள் எந்தக் கருத்தையும் ஏற்படுத்தவில்லை. ஆனால் நம் உணர்வுக்கு ஓர் அழகிய காட்சியாய்ப் படுகிறது. இதற்காகவும் கவிதை தேவை. ஒவ்வொரு நாளும் இப்படி நமக்கு இதமான எத்தனையோ உணர்வுகளுக்கு நாம் வசப்படத்தான் செய்கிறோம். மனத்தின் இயக்கத்திற்கு இது தேவை. குதிக்கிறபோது ஒரு இன்பம்; கண்ணாடி பார்ப்பதில் ஒரு இன்பம்; குழந்தைகளோடு கொஞ்சுவதில் ஒரு இன்பம்; செடிகள் அசைவதில் ஒரு இன்பம்; இவற்றோடு நாமும் இயங்குகிறோம்.

**பட்டாம் பூச்சிகள்**
**இல்லாத ஊரில்**

**வண்ணங்கள் யாரோடு**
**பேசும்?** (ப. 53)

பட்டாம் பூச்சிகளுக்கு ஆயிரம் ஆயிரம் வண்ணங்கள். அற்புத மான வண்ணங்கள். இவற்றின் வண்ணங்கள் கோடி என்று சொன்னாலும் அந்த அளவுக்கு இருக்கக்கூடும். ஒவ்வொரு நாளும் செடிகளிலும், கொடிகளிலும், வானத்திலும் எத்தனையோ வண்ணங்களை நாமும் பார்க்கிறோம். பட்டாம் பூச்சிகள் பறக்கும் வேகத்தில் அதுவும் சிறகடித்துப் பறக்கும்போது நம்மைப் பட்டாம்பூச்சிகள் ஈர்க்கின்றன. அசையும் வண்ணங்கள் நம்மைப் பெரிதும் ஈர்க்கின்றன. வண்ணங்களில் நாம் வசப்படுகிறோம். சிறைப்படுகிறோம். கவிஞர் கூறுவதை இப்படியும் மாற்றிச் சொல்லலாம். வண்ணங்கள் இல்லாத ஊரில் பட்டாம் பூச்சிகள் யாரோடு, எவற்றோடு பேசும்? பட்டாம்பூச்சிகளும் செடிகொடிகளும் கவிஞர் பார்வையில் ஓரினத்தவை. குழந்தைகளோடு கொஞ்சுவது போலப் பட்டாம்பூச்சிகளும், செடிகளும் தமக்குள் கொஞ்சுகின்றன. ஒத்த உணர்வினர் இல்லாத ஊரில் யாரோடு நமக்கு உறவு? உறவு இல்லாமல் நமக்கு முடியாது. உறவுக்கு இனம் தேவை. பட்டாம்பூச்சிகளும் வண்ணங்களும் இல்லாத உலகம் பற்றி நமக்குள் ஏற்படும் வறட்சியை எப்படிச் சகித்துக் கொள்ள முடியும்?

**பறவைகளின்**
**பாடத்திட்டத்தில்**
**உரைநடைக்கும் ஒரு வகுப்பு**
**ஒதுக்கப்படுமா?** (ப. 54)

பறவைகளின் பாடத்திட்டத்தில் உரைநடைக்கு என்ன வேலை? பறவைகள் பாடுகின்றன; ஆடுகின்றன; தமக்குள் கொஞ்சிக் கொள் கின்றன. இடையில் பாடத்திட்டமென்று சொல்லிக்கொண்டு உரைநடை யோடு யாரும் நுழைய வேண்டாம். மழலையர் பள்ளிகளில் குழந்தைகள் விளையாடிக் கொண்டு இருக்கட்டும். விளையாட்டின்போதே அவர்கள் கற்றுக் கொள்ளட்டும். மழலைக் குழந்தைகளுக்குக் கணிதமென்றும் ஆங்கிலம் என்றும் அவர்களை உட்காரவைத்து மண்டையில் அடித்துக் கற்பிக்கிற கொடுமையை மனித சமூகம் செய்து கொண்டு இருக்கட்டும். குழந்தைகளும் பறவைகளைப்போல. பறவைகளைப் பார்த்தாவது குழந்தை களுக்கு எது கல்வியாக இருக்க முடியுமென்று நம்மவர்கள் சிந்திக்கட்டும்.

குழந்தைகளுக்குக் கவிதை கற்றுத் தரலாம். உரைநடையில் எதற்கு, என்ன கற்றுத் தரவேண்டும்? வேண்டாம் உரைநடை.

**கடப்பதை**
**விரும்பாதவர்கள்**
**எதற்குப்**
**பாலம் போடுகிறார்கள்?** (ப. 57)

நம்மவர்கள் எதையும் க ட ந் து செல்வதில்லை. தமக்குள்ளேயே சுற்றிக்கொண்டு இருக்கிறார்கள். பணம், பதவி, நாற்காலி என்று இவற்றையே சுற்றிக்கொண்டு இருக்கிறார்கள். திருமணம், குழந்தைப்பேறு என்ற முறையிலும் சுற்றிக்கொண்டு இருக்கிறார்கள். கடவுள், மதம், சடங்கு, தலைவர் என்ற வடிவத்திலும் சுற்றி வருகிறார்கள். இவர்கள் எதையும் கடந்து செல்வதில்லை. பெரிய எல்லைகளை நோக்கி இயங்குவதில்லை. வரலாறு, வானம், பிரபஞ்சம் என்றெல்லாம் இவர்களுக்குப் பார்வை இல்லை. கவிஞர் கேட்கிறார்: எதற்காக இவர்கள் பாலம் போடுகிறார்கள்? இன்னொரு மனிதனோடு, இன்னொரு மொழியோடு, இன்னொரு கலாச்சாரத்தோடு சரியான உறவு கொள்ளத் தெரியாத இவர்கள் எதற்கு நாடு என்றும், மொழி என்றும், கலாச்சாரமென்றும் இவர்கள் பேசவேண்டும்? த மி ழ னே தலைசிறந்தவன்; இந்தியாவே புண்ணிய பூமி; எங்கள் மதமே உயர்ந்த மதம்; இப்படிப் பேசியவர்கள் குண்டுச்சட்டிக்குள் குதிரை ஓட்டுபவர்கள். இவர்களுக்குப் பாலங்கள் தேவை இல்லை. இவர்கள் தனித் தீவுகள். இவர்களுக்குக் கல்லறைகள் போதும். காற்றும் வானமும்கூட இவர்களுக்குத் தேவை இல்லை.

**பெயர்களை**
**மாற்றி வைத்தால்**
**பூக்கள்**
**வருத்தப்படுமா?** (ப. 65)

மலர்களுக்கு மனிதர்களாகிய நாம்தான் பெயர் வைத்தோம். மலர்களை நாம் கொஞ்சுகிறோம். பாராட்டுகிறோம். குழந்தைகளையும் நாம் பெயர் சொல்லிக் கொஞ்சுகிறோம். கண்ணின் மணியே என்று கொஞ்சுகிறோம். கழுதையே, நாயே என்றுகூட அன்பாகக் கொஞ்ச முடியும். குழந்தைகள் கோபிப்பதில்லை. இப்படி எல்லாம் கொஞ்சுவதன்

மூலமும் குழந்தைகளிடம் நம் நேசம் அதிகரிக்கிறது. குழந்தைகளும் நம்மை நெருங்கி வருகிறார்கள். இதயத்தில் இடம்பிடித்துக் கொள்கிறார் கள். மலர்கள் மட்டும், பெயர்கள் மாற்றிச் சொல்வதன் மூலம் நம்மைக் கோபித்துக் கொள்ளுமா, என்ன? இருக்கிற பெயர்களைவிட இன்னும் நல்ல பெயர் சொல்லி அல்லவா நாம் கொஞ்சுகிறோம். பெயர்களை மாற்றிச் சொல்வதாகவும் வைத்துக் கொள்வோம். பெயர்கள் மாறுமே ஒழிய மலர்கள் மாறுவதில்லை. நாம் என்ன பெயர் வைத்திருக்கிறோம் என்பது மலர்களுக்குத் தெரியாது. பெயரை மாற்றி வைத்தாலும் மலர்கள் மாறிவிடப் போவதில்லை. இப்படிச் சிந்திப்பது தர்க்கம். இந்தத் தர்க்கம் கவிதை இரசனைக்கு ஆகாது. மாற்றிச் சொல்லுபோது மனிதர் வருத்தப்படலாம். பறவைகளும் மலர்களும் வருந்தமாட்டா. காரணம் இவை மனிதர்கள் இல்லை.

**புல்,**
**தரமாட்டேன் என்று**
**சொல்லுமா**
**உன் மனத்திற்குப்**
**பசுமையை?** (ப. 66)

புல் கோடி கோடியாய் முளைக்கிறது. புல்லைக்கூடப் பசிய மலர்கள் என்றும் நாம் சொல்லமுடியும். இவற்றைப் பார்த்துக் கொண்டிருக்கும்போது நமக்குள்ளும் பசுமை நிறம் புகுகின்றது. நம் மனத்திற்குப் பசுமை என்பது அன்பு / அருள். புல்லை இரசிப்பதற்கு நிதானம் தேவை. நல்ல மனம் தேவை. அவசரப்படுகிறவன், ஆத்திரப்படுபவன் தரையில் தன் காலடியில் ஏகமாய் முளைத்திருக்கிற புல்லை எப்படி நேசிப்பான்? அட, சிறுபுல்லே என்று கோபிக்கிறவன் இவன்தான். இவன் ஒருவேளை யானையை, சிங்கத்தை இரசிப்பானோ என்னவோ? இவனுடைய குணம் ஒருவேளை யானையிடம் தென்பட்டால் இரசிக்கலாம்; புல் இவனது பெருமைக்கு முன் தேவையில்லை. ஆனால் புல்லை இரசிப்பவனுக்குள் நிச்சயம் அன்பு சுரக்கும்; பசுமை சுரக்கும்.

**நின்று விட்டவனே!**
**பக்கம், தூரம் என்பது பற்றி**
**நீ**
**ஏன் பேசுகிறாய்?** (ப. 69)

நீ நிலையாக, ஓரிடத்தில், ஒரு புள்ளியில், ஒரு கட்சிக்குள், ஒரு சிந்தனைக்குள் ஒரு கொள்கைக்குள் நின்றுவிட்டவன். உனக்கு நீ போதும். இன்னொருவர் உனக்குத் தேவையில்லை. இன்னொரு தத்துவம், இன்னொரு கலை, இன்னொரு மொழி உனக்குத் தேவை இல்லை. உனக்கு எல்லோரும் அயலவர். மாற்றுக் கருத்தினர். வேண்டாதவர். எதிரிகள் உன்னைவிடத் தாழ்ந்தவர். உன் அளவுக்கு அறிவு இல்லாதவர். உனக்கு நீயே உலகம். உனக்கு வானம் வேண்டாம்; வரலாறு வேண்டாம்; நீ ஒரு குற்றுச் செடி; கிணற்றுத் தவளை; அக்கம் பக்கமென்று உனக்கு உறவு தேவையில்லை. இன்னொருவர் கவிதை உனக்கு வேண்டாம்; உனக்கு நீயே எல்லாமும்; உனக்கு நீயே கவிஞன்; உன்னை நீயே மாலை இட்டுப் பூஜை செய்து கொண்டிரு. நீ ஏன் இப்படிச் சுருங்கிப் போய்விட்டாய்? உன் கட்சிதான் பெரிதா? உலகம் உனக்குள் சுருங்கி விட்டதா? இன்னொருவருக்கு உன் உள்ளத்தில் இடமில்லையா?

**அகராதிக்குள்**
**சொற்கள் பேசிக் கொண்டன**
**நாம்**
**இங்கேயே இருப்பதில்**
**என்ன அர்த்தம்?** (ப. 79)

அகராதிக்குள் ஒரு இலட்சம் இரண்டு இலட்சம் சொற்கள் இருக்கின்றன. ஒவ்வொன்றும் தனித்தனியே; ஒரு சொல்லுக்கு இன்னொரு சொல் உறவு இல்லை. இப்படி இலட்சக்கணக்கில் இருந்தும் ஒன்றொடு ஒன்று உறவு இல்லாமல் இருப்பதில் அர்த்தமில்லை. ஒரு தொடருக்குள்– ஒரு கவிதைக்குள் – ஒரு காவியத்திற்குள் இணையும்பொழுதுதான் சொற்களுக்கு அர்த்தம் கிடைக்கிறது. உறவு கிட்டுகிறது. இப்படி அகராதியை விட்டு வெளியே வந்த சொற்கள் வானத்தை அளக்கின்றன. மனிதனின் சிந்தனைக்கு, கற்பனைக்குக் கைகொடுக்கின்றன. மனிதனுக்குள் அனுபவங்கள் இப்படி இணைகின்றன. மனிதன் தனக்குள் எல்லையற்றவனாகிறான். வரலாற்றைக் கடக்கிறான். இவன்தான் வள்ளுவன், ஐன்ஸ்டீன். இப்படித்தான் தனித்தீவுகளாக மனிதர்கள் இருக்கும்போது ஆற்றல் அழிந்து கிடக்கிறார்கள். முதலாளியம் மனிதனை இப்படித்தான் செய்கிறது. சமதர்மம்தான் மனிதனுக்குள் கோடி ஆற்றலைக்

கொண்டு வருகிறது. அகராதியிலிருந்து சொற்களுக்கு விடுதலை தேவை. அகராதிக்குள் சொற்கள் தனித்தனியே கூர்மை பெறுகின்றன. தம்மைத் தீட்டிக் கொள்கின்றன. தம்மைப் பதம் பார்த்துக் கொள்கின்றன. தமக்குள் இணையும்போது இவை படைக்கலன் ஆகின்றன. உலகை வெல்லுகின்றன.

**அர்த்தங்களின்**
**அளவுமீறிய ஆரவாரத்தாலா**
**கவிதையின்**
**அந்தரங்கத்தில்**
**அமைதி இல்லை?** (ப. 84)

ஒரு நல்ல கவிதை அல்லது சிறந்த கவிதை தனக்குள் ஒன்றுக்கும் மேற்பட்ட பொருளைக் கொண்டிருக்கும். அதாவது ஒரு கனமான செறிவான கவிதை தனக்குள்ளிருந்து ஒரு வாசகனுக்குள் பல அதிர்வு அலைகளைக் கிளப்பும். புத்தர் தவத்தில் இருக்கிறார். மௌனமாகத்தான் இருக்கிறார் என்று தோன்றுகிறது. உண்மையில் அவருக்குள் ஒரு கடல் கொந்தளிக்கிறது. கொந்தளிக்கிறது என்பதனால் அவ்வளவையும் தாங்கிக் கொண்டு / தாங்கிக் கொள்வதற்காக அமைதியாக இருக்கிறார். ஒருவன் அமைதியாக இருக்கிறான் என்பதனால் அவனுக்குள் சிந்தனை இல்லை என்பது அர்த்தமல்ல. முரண்பட்ட சிந்தனைக்கான மோதலோடு அவன் இருக்கிறான். தன் மனத்தை, தன் உணர்வுகளைத் தானே தொடர்ந்து கவனித்துக் கொண்டிருப்பதனால் அவனாக இருக்கின்றான். தொனிப் பொருளை உள்ளடக்கிய கவிதையும் அர்த்தங்களின் கனத்தால் அமைதியாக – செறிவாக – குறைந்த சொற்களோடு இருப்பதைப் போலத் தோன்றினாலும் அர்த்தங்கள் கவிதைக்குள் ஆரவாரித்துக் கொண்டுதான் இருக்கின்றன – அணுவுக்குள் ஒரு பிரபஞ்சம் இருப்பதைப்போல்.

**எந்தக்**
**கண்ணாடியில்**
**என் பிம்பத்திற்குப்**
**பதிலாக**
**நான் தெரிவேன்?** (ப. 88)

கண்ணாடியில் என் பிம்பத்தை நான் பார்க்கிறேன். எனது உடையை, அலங்காரத்தைப் பார்க்கிறேன். என் உடம்பை – என் அழகைத்தான் கண்ணாடி காட்டுகிறது. எனக்கு வேண்டியதும் அதுதான். வெளி உலகத்திற்கு என்னை நான் அழகாகக் காட்டிக் கொள்வதற்காகத்தான் கண்ணாடியில் என்னைப் பார்த்துக் கொள்கிறேன். கண்ணாடிக்கு என் உள்ளம் தெரியாது. நான் உள்ளே எப்படி இருக்கிறேன் என்பது கண்ணாடிக்குத் தெரியாது. உள்ளத்தை மறைப்பதற்காகத்தான் முகத்தை அழகுபடுத்திக்கொண்டு கண்ணாடி முன் நிற்கிறேன். என்னை நான் சரியாக மறைத்துக் கொண்டேனா என்பதைக் கண்ணாடி சரியாகக் காட்டுகிறது. எனக்கு இது போதும். என் உள்ளத்தை, உள்ளே இருக்கும் என்னைக் கண்ணாடி சரியாகக் காட்டுமானால் அப்பொழுது இந்தக் கண்ணாடி ஒருவேளை எனக்குத் தேவைப்படலாம் அல்லது தேவைப் படாமலும் போகலாம். கண்ணாடி என் மனம் ஆகாது / ஆகவேண்டும்.

**பூக்களைப் பார்த்துப்**
**பரவசம் அடையாதவனுக்குப்**
**பழம்**
**ஏன் இனிக்க வேண்டும்?** (ப. 91)

பழம்தான் இவனுக்கு வேண்டும். அது இனிக்க வேண்டும். சுவைக்க வேண்டும். பசி ஆறுவதற்காக இவன் பழம் தின்னவில்லை. சுவைக்காக அல்லது வயிறு நிறைய உண்டபின் செரிப்பதற்காக இவன் பழம் தின்னு கிறான். இவனுக்குப் பழத்தின் அழகுகூடத் தெரிவதில்லை. இவனுக்கு மலரின் அழகு தெரியாது. மலரைக் கண்டு இவன் பரவசப்படமாட்டான். பரவசப்படுவதற்கான மன நெகிழ்வு இவனுக்கு இல்லை. இவன் எப்படி இருந்தாலும் பழம் தன் சுவையை இவன் உணரத் தன்னைத் தராமல் இல்லை. மலரைக் கண்டு மனம் நெகிழ்ந்து இவன் பரவசப்படவில்லை என்றாலும் பழம் தன் கடமையைச் செய்கிறது. தன்னைத் தந்து தான் இன்புறுகிறது. இவனுக்கு மனிதத் தன்மை இல்லை. இவன் மனிதனாக வில்லை. மனிதனாக இருந்தால் இவன் மலரைப் பார்க்கும்போதும் பழத்தை உண்ணும்போதும் பரவசப்படுவான். பரவசம் மனிதனின் பண்பு. கவிஞனின் பண்பு. கவிஞனுக்கு மலரும் தெரியும்; அதன் மனமும் தெரியும். தன்னை விட்டுக் கொடுப்பவனுக்கு எல்லாமே பரவசமாகும்.

**விட்மனைத்**
**தெரிந்திருந்தால்**
**புல்லுக்குப்**
**புதுக்கவிதைகள் புரியுமோ?** (ப. 93)

விட்மனுக்குப் புல்லும் தெரியும்; புதுக்கவிதைகளும் தெரியும். புல்லே ட்ட விட்மனுக்கு ஒரு புதுக்கவிதை. ஒவ்வொரு நாளும் புதியதாய் லரும் புல் ஒவ்வொன்றும் புதுக்கவிதை. புல்லைத் தனக்குள் வாங்கிக் காண்டவன் தனக்குள்ளும் புதியதாய்க் கவிதை காண்பான். ஆனால் ப்லுக்குத் தானொரு கவிதை என்பது தெரியாது. புல்லுக்கு விட்மனையும் தரியாது. யாரையும் தெரிந்து கொள்ளாமல் புல் ஒவ்வொரு நாளும் க்கிறது. ஒருவேளை விட்மனைப் பெருங்கவிஞன் என்றோ அமெரிக்கன் ன்றோ தன்னை வைத்துக் கவிதை செய்தவன் என்றோ இப்படியெல்லாம் ரிதர்களைப் பற்றி, உலக விவகாரங்கள் பற்றிப் புல் தான் தெரிந்து வத்திருக்கும் என்றால், தான் கவிதையாய் மலர்ந்திருக்க முடியாது. ு தானே புல்லாய் மலர்ந்திருக்கிறது. யாருக்காகவும் இல்லாமல் ண்ணோடு உறவுகொண்டு காற்றோடும் வானத்தோடும் கதிரவனோடும் றவு கொண்டு தானும் தன்னைக் கொடுத்து வேறு எதையும் எதிர் ர்க்காமல் எல்லாவற்றோடும் கலந்து நிறைந்து அதன் நிறைவாய்ப் ு ஆகிறது. புல்லைக் கண்டு கொண்டதன் மூலம் விட்மன் தன்னைக் விஞராய்ப் புரிந்துகொண்டான்.

**மனப்பாட சக்தியுள்ள**
**வரலாற்றுக்கு**
**எதை**
**மனப்பாடம் செய்யவேண்டும்**
**என்பதை அறியும்**
**சக்தி ஏன் இல்லை?** (ப. 100)

வரலாறு என்ற பெயரில் நாம் எவரெவர் வரலாற்றையோ எழுதி வத்து அதைத்தான் வரலாறு என்று நம்பி மனப்பாடம் செய்து அரசியல் றும், சமூகம் என்றும் விளக்கம் சொல்லிக் கொண்டிருக்கிறோம். னர்களைப் பற்றி அவர்களின் படையெடுப்புகள் – வெற்றிகள் – ண்மனை வாழ்க்கை இவற்றையெல்லாம் வரலாறு என்று படிக்கிறோம்.

மன்னர்களும் தலைவர்களும் மக்களை ஒடுக்கித்தான் தம் வெற்றிகளை-பெருமைகளைச் செய்து கொள்வார்கள். பெரும் காடுகளை அழித்து வயல் நிலங்கள் ஆக்கிய மக்களைப் பற்றி வரலாற்றில் பதிவு இல்லை. இருளில் இருந்து வரலாற்றுக்கு வெளிச்சத்தைப் படைத்தனர் மக்கள். கரடு முரடான உலகத்தைக் கலைக்கூடமாகப் படைத்தவர்கள் மக்கள். இவற்றையெல்லாம் பதிவு செய்ததாக வ ர லா று எழுதப்படவில்லை. மக்களிடமிருந்து வாழ்க்கையை, அழகை, அறிவை, ஆற்றல்களைப் பறித்துக் கொண்டு தம்மைப் படைத்துக் கொண்டவர்கள் வரலாற்றையே நாம் வரலாறு எனக் கற்கிறோம். இந்த உண்மையைக் கவிஞர் அழகாகச் சொல்கிறார். எல்லாவற்றையும் மனப்பாடம் செய்துகொண்ட வரலாறு எதை மனப்பாடம் செய்யவில்லை என்பதைக் கவிஞர் கூறுகிறார். வரலாறு பற்றிய சரியான பார்வை.

**உலகு அளவு**
**கற்காமல்**
**கற்றது கைம்மண்ணளவு**
**என்று**
**சொல்ல முடியுமா?** (ப. 108)

உலகின் அறிவுத்துறைகள், கலைத்துறைகள் ஆயிரமாயிரமாய் இருக்கின்றன. கோடிக்கணக்கான மனிதர்கள் எத்தனையோ அனுபவங்களோடு வாழ்ந்திருக்கிறார்கள். உயிர்களின் எண்ணிக்கையைக் கோடிகளில் அடக்கமுடியாது. எல்லையற்று விரிவடைந்திருக்கும் பிரபஞ்சம் பற்றி முழுமையான அறிவை மனிதன் என்றைக்கும் பெறமுடியாது. அணுவுக்குள்ளும் அண்டங்கள் விரிவடைகின்றன. ஒரு செல்லுக்குள் 36 கோடி ஜீன்கள். இவ்வளவு பேரறிவையும் மாபெரும் கவிதைகளில் கூடச் சேகரித்து வைக்க முடியாது. சென்னையில் ஒரு சமயம் நான் சந்தித்த நாகராசன் என்னும் ஓர் அற்புதக் கலைஞன் கடற்கரையில் நாங்கள் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தபோது இதே பழமொழியைச் சொல்லிக் கையளவு மணலை எடுத்து இதை எண்ண முடியுமா என்றார். முடியவே முடியாது என்றால், கைமண்ணையே எண்ண முடியாதவன் தன் அறிவைப்பற்றி என்ன பெருமை சொல்லிக்கொள்ள முடியும்?

**ஓவியத்திலிருந்து**
**வெளியே வந்த பூவை**

காற்று
ஏன் அசைத்துப் பார்க்கிறது? (ப. 114)

இந்தப் பூ ஒரு செடியில் பூவாய் மலர்வதற்கு முன்பு எங்கு இருந்தது? யமாய் எங்கோ பத்திரமாய், பேரழகோடு தனக்கு யாரும் நிகர் இன்றி தப் பூ இருந்தது. ஓவியங்களின் கூடத்தில் தானும் ஒரு ஓவியமாய் கேயே இருந்திருக்க வேண்டிய இந்த மலர், அந்த ஓவியக் கூடத்தை டுத் தன்னை வெளிக்காட்டிக் கொள்வதற்காக இந்தச் செடியை பி இந்த உலகம் பற்றித் தெரிந்துகொள்ளாமல் இங்கு வந்து சேர்ந்தது. ற்றுக்கு இந்த ஓவியத்தின் அழகு தெரியாது. வரலாறு தெரியாது. ற்றுக்குக் கொஞ்சம் திமிர். எல்லாவற்றையும் அசைத்துப் பார்த்துத் னைத்தானே பெரியவன் என்று ஆர்ப்பாட்டம் செய்கிறது காற்று. தச் சின்னஞ்சிறு மலரை அது விட்டு வைக்குமா என்ன? ஆகவே சைத்துப் பார்க்கிறது. இப்படிக் கவிஞர் ஒரு பூவைப் பற்றி ஒரு புராணம் கிறார். அற்புதமான கவிதை.

திறப்புகளில்
சிறைப்பட்டுக் கிடப்பவனிடம்
சாவியோடு
போவதால்
என்ன பயன்? (ப. 120)

வானவெளி திறந்து கிடக்கிறது; வரலாறு திறந்து கிடக்கிறது; ற்கை திறந்து கிடக்கிறது; கலைகள் திறந்துகிடக்கின்றன. இந்த ட்டவெளிக்குமுன் தன்னைத் திறந்து கொள்ளாமல் இப்படித் திறந்து க்கிறதே என்று தன்னைத் திறந்து கொள்ளாமல் தனக்குள் சிறைப் டுத் தன்னைத்தானே பூட்டிக்கொண்டு தன் சிறைக்குள் தானே இருப்பது திரம் என்று கருதிக்கொண்டு இருப்பவனை எந்தச் சாவியைக் ாண்டு திறக்க முடியும்? இவனுக்குள் மண்டிக் கிடக்கும் இருளை த விளக்கைக் கொண்டு நீக்க முடியும்? இவனொரு குற்றுச்செடி. லமரமாய் இவனை வளர்க்க முடியாது. இவன் தனக்குள் முடங்கியவன். பன் ஒரு மதத்திற்குள், கட்சிக்குள், தனக்குள் முடங்கியவன். இவனுக்கு தலை இல்லை. இவனே கடவுள்; இவனே சாத்தான். இவனுக்குக் கால்கள் இல்லை. கண் மூக்கு இல்லை. இவனொரு பிண்டம்..

**'கனாக்காணும் வினாக்கள்'** தொகுப்பில் உள்ள இன்னும் சில கவிதைகள் எனக்குள் எழுப்பும் உணர்வு அலைகளை இங்குப் பதிவு செய்ய விரும்புகிறேன் என்றபோதிலும், எனக்குள் எழும் ஒரு கேள்விக்குப் பதில் சொல்வதோடு நிறுத்திக் கொள்கிறேன். 'தமிழன்பன் கவிதைகளுக்கு நான் உரை எழுதுகிறேனா?' என்று என்னை நானே கேட்டுக் கொள்கிறேன். தமிழ் மரபில் இடம்பெறும் உரையாசிரியர்களைப் போல நான் எழுதவில்லை. மூல ஆசிரியர்களின் உள்ளக் கிடக்கையை வெளிப்படுத்தும் முதன்மையான நோக்கில் அவர்கள் உரை எழுதினார்கள். அந்த அளவுக்கு அவர்கள் முன்னவர்களோடு ஒன்றி இருந்தார்கள். அல்லது ஒன்றி இருக்க விரும்பினார்கள். ஒரு வகையில் அவர்களின் நெறி சமய நெறி. இத்தகைய நெறியிலிருந்து நாம் இன்று விடுபட்டுள்ளோம். அப்படியானால் தமிழன்பன் கவிதைகளை நான் எப்படி அணுகுகிறேன்?

எனக்குள்ளும் ஒரு கவிஞன் இருக்கிறான். எனக்குள் மட்டுமல்ல எந்த ஒரு வாசகனுக்குள்ளும் ஒரு கவிஞன், படைப்பாளி, திறனாய்வாளன் இருக்கிறான். நிறுத்தி நிதானமாக ஒரு கவிதையை ஆழ்ந்து படிக்கும்பொழுது தனக்குள் இருக்கும் கவிஞனை உயிர்ப்பித்துக் கொள்கிறான். தன் அனுபவங்களோடு கவிதையை வாசிக்கிறவன் பொருள் படுத்துகிறான்; ஒரு வகையில் இவன் தன்னைத்தானே வாசிக்கிறான்; தன்னைத்தானே பொருள்படுத்துகிறான்.

இயற்கையோடு இவனும் வாழ்கிறான். இயற்கையிலிருந்து மனித உறவுகளிலிருந்து இவன் தன்னைத்தானே, தன் ஆளுமையைப் பெற்றிருக்கிறான். உலகம் இவனுக்குள் வந்துள்ளது. கடலும், வானமும், பறவைகளும், மலர்களும் இவனுக்குள் வாழ்கின்றன. இவனுக்குள் இவன் வரலாற்றோடு வாழ்கிறான். பிரபஞ்சம் இவனுக்குள்ளும் வந்துள்ளது. இவனுக்குள் எல்லைகள் இல்லை. என்னைப்போலவே இந்த வாசகனும் தமிழ் மரபோடு வாழ்கிறான். இவனுக்குள் வள்ளுவர், இளங்கோ மட்டுமல்லாமல் சித்தர்களும் வாழ்கின்றனர். இவனுக்குக் கவிதை தேவை; வானம் தேவை; மலர்கள் தேவை; மனித உறவுகள் தேவை; இவன் காலத்திற்குள் கட்டுப்பட்டவன் அல்லன். **தமிழன்பனின் கவிதைகளுக்குள் நம்மை வைத்து வாசிக்கும்போது இத்தகைய பேருணர்வை நாம் பெறுகிறோம். கடந்த 50 ஆண்டுகளாகத் தமிழன்பன் கவிதை எழுதிவருகிறார்.**

தொடர்ந்து தன் எல்லைகளை விரித்துக் கொண்டு இருக்கிறார். த மி ழ் க் கவிதையின் எல்லைகள் இவரோடு சேர்ந்து விரிந்து வருகின்றன. இவரது எல்லையின் விரிவுக்கு இந்தக் கவிதைத் தொகுப்பு நல்ல சான்று.

வாழ்க்கையைப் பற்றிய திறனாய்வு என்று கவிதைக்குப் பொருள் சொன்னார் மேத்யூ ஆர்னால்டு. அவரே கவிதை குறித்து இன்னொரு உண்மையையும் கண்டுணர்ந்து சொன்னார். எதிர்காலத்தில் சமயத்தின் இடத்தைக் கவிதை பெறும் என்றார். அதாவது நவீனகால உலகின் தேவைகளைச் சமயத்தால் நிறைவு செய்ய இயலாது. மனிதனுக்குக் கடவுளோ, கோவில்களோ, சடங்குகளோ தேவைப்படாது என்பது உண்மைதான். ஆனால் ம னி த ன் தன் அகத்தில் இயற்கையோடு, பிரபஞ்சத்தோடு இணைந்தபின் இவனுக்குள் பிளவுகள் இல்லை. ஏற்றத் தாழ்வுக்கு இடமில்லை. இவனுக்குள் சமதர்ம உணர்வு இயல்பாய் விரிவுபெறும். இவனுக்குள் அதிகாரமில்லை. ஆணவமில்லை. இவன் இயல்பாகவே சித்தனாக – ஜென்னாக இருப்பான். கவிதை இவனை இந்த அளவுக்கு விரிவு செய்யும். ஜே. கே. சொல்வது போல இவனுக்குள் சமயம் இல்லை; தெய்வம் இல்லை; இவனுக்குள் இருப்பது சமயத்தன்மை; தெய்வத்தன்மை. இவனுக்குள் கவிதை இயல்பாய்ப் பொங்கிவழியும். தமிழன்பனின் கவிதைகளை வாசிக்கும்பொழுதும் இத்தகையதொரு நிறைவு நமக்குள் ஏற்படுகிறது. நமக்குள்ளிருந்து த மி ழ ன் ப ன் கவிதைகள் வழியாக நம்மைக் கண்டுகொண்ட நிறைவு இது. அதற்காகத் தமிழன்பனுக்கு நாம் நன்றி சொல்வோம். அப்புறம் வானத்திற்கும், பறவைகளுக்கும், மரங்களுக்கும் நம் நன்றிகள் உரியவை.

39

# மின்னல் உறங்கும்போது

2004 – அக்டோபர் 25, தனது 32ஆம் திருமண நாளன்று தன் துணைவியாரை மதித்துப் போற்றும் முறையில் இந்தக் கவிதைத் தொகுப்பைக் கவிஞர் தமிழன்பன் மிகுந்த மகிழ்ச்சியோடு வெளியிட்டு இருக்கிறார். எந்த ஒரு தொகுப்பிலும் முன்னைய தடத்திலிருந்து தொடர்ந்து விலகி மேற்செல்லும் முறையில் அற்புதமான கவிதைகளை எழுதுகிறார் என்பதை இந்தத் தொகுப்பும் மெய்ப்பிக்கிறது. ஈராக் மீது அமெரிக்காவும் பிரிட்டனும் தொடுத்திருக்கும் அநாகரிகமான போர் குறித்து ஒரு கவிதையில் ஆவேசமாக எழுதுகிறார். கிரோஷிமா, நாகசாகி மீது விழுந்த அணு குண்டுகளையும் குறிப்பிடுவதோடு உலகினில் எங்கும் போர் வேண்டாம் என்கிறார் கவிஞர். சிங்கப்பூருக்கு அவர் சென்றபொழுது தமிழகத்திலிருந்து சென்ற கட்டடத் தொழிலாளிகளின் சீரழிவுகளைக் கண்டு நொந்த அவர் நெஞ்சில் மின்னலும் இடியும் வெடித்து முழங்கியதைப் போன்ற வேதனையை வெளிப்படுத்தும் முறையில் ஒரு கவிதை எழுதி இருக்கிறார். இப்படித் தன் காலத்து வரலாற்றைப் பதிவு செய்யும் முறையிலும் இந்தத் தொகுப்பில் சில கவிதைகள் உள்ளன. எந்த ஒரு கவிதையிலும் தன்கால வரலாற்றுப் பதிவு இல்லாமலும் இல்லை. அரசியல் வாதிகளைக் குறித்து அறுவருப்போடுதான் நாம் பேசவேண்டி இருக்கும். இந்தத் தொகுப்பில் நம் நெஞ்சில் இத்தகைய அறுவருப்பு ஏற்படாத முறையில் அரசியல்வாதிகள் பற்றி இவர் நேரடியாக எழுதும் கவிதை இல்லை என்பது நமக்கு ஒரு வகையில் ஆறுதல். கடவுளைப் பற்றிக் கேலி செய்யும் கவிதையும் இந்தத் தொகுப்பில் இல்லை இவை பற்றி எல்லாம் ஏற்கனவே நிறைய எழுதியதன் காரணமாகவும் இந்தச் சிக்கலில் இருந்து கவிஞர் தன்னை விடுவித்துக் கொள்வதாகவும் இருக்கலாம். இந்தத் தொகுப்பில் உள்ள சில முக்கியமான கவிதைகள் குறித்து இனிப் பேசலாம். தமிழன்பன் கவிதை எழுதத் தொடங்கிய காலத்திலிருந்து அனேகமாக

இன்றுவரை தொடர்ந்து தன்னைப் புதுப்பித்துக் கொள்ளும் முறையில் தனக்குள் ஆழமாகத் தோண்டிக்கொண்டே செல்கிறார். மெய்யியல் தேடல் என்று சொல்லும் வகையில் இவருக்குள் கவித்துவம், நுட்பமும் ஆழமும் கூடியதாய் விரிந்து செல்கிறது. இந்தத் தொகுப்பில் உள்ள சில கவிதைகள் பலமுறை படித்த பிறகும் நம் அறிவுக்கும் உணர்வுக்கும் பிடிபடுவதாய் இல்லை. எனினும் ஒரு வாசகன் என்ற முறையில் கவிஞரோடு தொடர்ந்து நாம் பயணம் செய்கிறோம். எந்த ஓர் இடத்திலாவது அவரை நமக்குள் முழுமையாகப் பற்றிக் கொள்ள இயலுமென்ற நம்பிக்கையோடு பயணம் செய்கிறோம். முதலில் சில எளிய கவிதைகளைப் பார்த்துக் கொள்ளலாம். அப்புறம் சிக்கலான கவிதைகளுக்குள் செல்ல முயற்சி செய்யலாம்.

**'காக்கை'** பற்றிய ஒரு கவிதை. கவிஞர் இப்படிச் சொல்கிறார்: நான் துவைத்துக் காயப்போட்ட துணியின்மேல் எச்சமிட்டது காக்கை. காக்கை வேண்டுமென்றே என் துணியைப் பார்த்து எச்சமிட்டு இருக்க முடியாது. மீண்டும் துணியை நனைத்து எச்சத்தை நீக்கிக் காயப் போட்டேன். மீண்டும் காக்கை எச்சமிட்டது. எனக்குள் கோபம். வேண்டு மென்றே இந்தக் காக்கை என் துணி பார்த்து எச்சமிடுகிறதா? காக்கையை விரட்ட ஒரு கல்லை எடுத்தேன். காக்கையை நோக்கி வீசுவதற்கு முன்பு எனக்குள் ஒரு கேள்வி. கல் என்னைக் கேட்கிறது. உன்னால் நான் காயப்படவேண்டுமா? எனக்குள் ஒரு புரிதல். எச்சமிடுவது காக்கையின் இயல்பு; சுத்தம் செய்வது எனக்கு இயல்பு. காக்கையை ஏன் நான் நோகவேண்டும்? இப்படிக் கவிதை முடிவடைகிறது.

பேருந்துக்காகக் காத்து நிற்கிறோம். அன்று பேருந்து நெடுநேரம் வரவில்லை. நான் என்ன தப்பு செய்தேன்? இன்று பார்த்துப் பேருந்து ஏன் வரவில்லை? நான் நிற்கிறேன் என்பதற்காக வரவில்லையா? வழியில் ஒரு கல் கிடக்கிறது. கவனிக்காமல் செல்கிறேன்; கால் இடறு கிறது. நான் இடற வேண்டும் என்பதற்காக எவனோ இந்தக் கல்லைப் போட்டு வைத்திருக்கிறான். யார் போட்டு வைத்தது? இயல்பாக எவ்வளவோ நிகழ்கின்றன. எனக்குள் ஏதோ கவலை. என்னை இகழ் வதற்காகத்தான் அல்லது துன்புறுத்துவதற்காகத்தான் இவ்வளவும் நேரு கின்றன. யாரோ எனக்கு எதிராகச் சதி செய்கிறார்கள். என் தலைவிதி

5.28

இப்படியா? நான் ஏன் இங்கு வாழவேண்டும்? இப்படியெல்லாம் நொந்து கொள்கிறோம். இயற்கையை, இயல்பான உலகை, மனிதர்களைப் புரிந்து கொள்ளமுடியாமல் நமக்குள் ஏதோ தடை இருக்கிறது. பிரச்சனை வெளியில் இல்லை. நமக்குள் எங்கோ மாட்டிக்கொண்டு இருக்கிறோம். நம்மை நாமே வதைத்துக் கொண்டு இருக்கிறோம். நமக்குள் நிதானம் தேவை. காக்கையும் கல்லும் நமக்கு இதைக் கற்பிக்கின்றன.

தமிழன்பனின் ஓர் அற்புதமான கவிதையை இப்பொழுது பார்க்கலாம். பெரிய பாடகர்களை–நடன சிகாமணிகளை–ஓவியர்களை மரணம் தாக்கும் பொழுது பாடகர் உலகம், நடனக்காரர் உலகம் துக்கம் கொண்டாடுகிறது. இயலுமானால் தம் கொடிகளை அரைக் கம்பத்தில் பறக்கவிடுகிறார்கள். இவர்களுக்கு எல்லாம் உண்மையோ பொய்யோ மரியாதை இருக்கிறது. சாதனையால் வந்த மரியாதையாகவும் இருக்கலாம். விளம்பரத்தால் வந்த மரியாதையாகவும் இருக்கலாம். இத்தனை பெரியவர்களை அவர்களுக்கே தெரியாமல் திடீரென ஒரு நாள் மரணத்தால் தாக்க முடியுமானால் மரணமேகூடத் தன் உரிமை கருதிப் பெருமைப்பட்டுக் கொள்ளலாம். ஆனால் ஒரு வீட்டின் இரவாணத்தில் யாரும் கவனிக் காத முறையில் அல்லது பொருட்படுத்தாத முறையில் கூடு கட்டி வாழ்ந்து வருகிற ஒரு சிட்டுக்குருவியை அதை ஓட ஓடத் துரத்திக் கொன்றதற்காக மரணம் பெருமைப்பட்டுக்கொள்ள முடியுமா? இந்த எளிய உயிரை, பாவம் விரட்டி விரட்டிக் கொன்றதற்காக இப்பொழுது மரணம் தன் சிறுமையை நினைத்துக் கவலைப்படுவதான ஓர் உணர்வைக் கவிஞர் இந்தக் கவிதையில் வெளிப்படுத்தி இருக்கிறார். ஒரு புலியைத் தாக்கிக் கொல்வதில் சிங்கம் பெருமைப்பட்டுக் கொள்ளலாம். ஒரு எலியைத் துரத்தி அடித்துக் கொல்வதில் சிங்கத்திற்கு என்ன பெருமை இருக்கிறது? இப்படி அடித்துக் கொன்ற பிறகு சிங்கத்தின் செயலுக்கு வருந்துவது போன்ற உணர்வைக் கவிஞர் வெளிப்படுத்தி இருக்கிறார்.

கவிதையை வாசகர் ஒரேதடவையில் படித்துவிடவேண்டாம். இறந்தது மயில் அல்ல, அன்னமல்ல – நாட்டிய உலகம் துக்கம் அனுசரிக்க; இறந்தது குயில் அல்ல, கிளி அல்ல – பாட்டு உலகம் துக்கம் கொண்டாட; இறந்தது பட்டாம் பூச்சி அல்ல, பொன்வண்டு அல்ல – வண்ணங்களின் உலகம்

துக்கம் கொண்டாட. இப்படிக் கவிஞரின் கவிதை வார்ப்பு அமைகிறது. நாம் புரிந்து கொள்கிறோம். நடிகரோ, நடனக்காரியோ, ஓவியரோ இறந்திருந்தால் நாடே துக்கம் கொண்டாடும். சாதாரண மனிதனின் சாவை யார் நினைத்துப் பார்ப்பார்கள்?

முடிவு என்ற தலைப்பில் ஒரு கவிதை. நதிகளோடு பயணம் செய்தால் கடல் என்ற பேரெல்லைக்குள் நாம் போய்ச் சேர்கிறோம். கடலுக் குள்ளும் அங்கங்கே சில தீவுகள் இருக்கின்றன (கடல் இவற்றைக் கரைக்க / கலக்க முடியாது. தனக்கு என்னதான் பெருமை சொல்லிக் கொண்டாலும் கடல் இந்தச் சிறுமையைத் தாங்கிக் கொள்ளத்தான் வேண்டும்). அரும்புகள் எனக்குள் முகிழ்க்கின்றன. முகிழ்க்கும் அரும்பு களுக்குள் நான் ஒரு பூங்காவனம் ஆகிறேன். பூங்காவனம் ஆனபோதிலும் உள்ளிருக்கும் முட்கள் என்னைக் குத்திக் கிழிக்காமல் இல்லை (பூங்காவனம் ஆக வேண்டுமென்றால் முட்களின் குத்தலையும் நான் மறுக்கமுடியாது). நட்சத்திரங்களின் வழியே நான் எத்தனையோ சூரியன் களை எனக்குள் பிறப்பித்துக் கொள்கிறேன். சூரியன்களோடு எனக்கு வாழ்வு என்றால் காந்தப் புயல்களை நான் சந்திக்கத்தான் வேண்டும். மறுக்கமுடியாது. வைகறைக்குள் பிறந்து பகலாய் எனக்குள் விரிவு பெறு கிறேன். அதன்பிறகு அந்தி ஆவதை நான் மறுக்கமுடியாது. எழுத்துக் களில் இருந்து கவிதையாய் எனக்குள் மலர்கிறேன். கவிதையாய் நான் மலர்வது என்றால் மயக்கங்களையும் நான் மறுக்கமுடியாது. கவிஞர் இப்படி எல்லாம் எந்த உண்மையைத் தனக்குள் கண்டு சொல்ல வருகிறார் என்று நம்மை நாமே கேட்டுக் கொள்கிறோம். கவிஞர் தனக்குள் கண்டு நமக்குச் சொல்லுகிற உண்மை இதுதான். வாழ்க்கையை எனக்குள் விரித்துக்கொள்வது என்றால் இதற்குள் பசியோடு வரும் மரணத்தையும் நான் ஏற்கத்தான் வேண்டும். இடையிடையே தீவுகள் இல்லாமல் கடல் இல்லை. தீவுகள் என்ன குறைகளா? குற்றங்களா? முட்கள் இல்லாமல் மலர்கள் எப்படி உற்பத்தி ஆகும்? காந்தப் புயல் இல்லாமல் நட்சத்திரங்களின் இயக்கம் எப்படி நடைபெறும்? மரணம் இல்லாத வாழ்க்கை என ஒன்று இருக்கமுடியாது. அரும்புகள் மலரத்தான் வேண்டும். அப்புறம் கூம்பி உலர்ந்து சருகு ஆகிவிடத்தான் வேண்டும். ஒன்று இல்லாமல் மற்றது இல்லை. அழிவு இல்லாமல் ஆக்கம் இல்லை. அழிவும் ஒரு வகையில் ஆக்கத்திற்காகத்தான்.

**'ஏன் என்றால்?'** என்ற தலைப்பில் ஒரு கவிதை. ஏன்? ஏன்? என்று பலமுறை, பற்பல முறை கேள்விகளைக் கவிஞர் அழகாக அடுக்குகிறார். ஏன் இரவில் மனிதர் காமுகராகின்றனர்? ஏன் திருடுகின்றனர்? ஏன் கடத்தலில் ஈடுபடுகின்றனர்? ஏன் கணவன் மனைவிக்கும் மனைவி கணவனுக்கும் துரோகம் செய்கின்றனர்? ஏன் சதி செய்கின்றனர்? ஏன் வரப்புகளை மாற்றிப் போடுகின்றனர்?

இவை எல்லாமே இரவில் நடைபெறுகின்றன. ஏன் இவை பகலில் நடப்பது இல்லை? ஏன் இவை இரவில் நடக்கவேண்டும்? இக்கேள்வி களுக்கு இறுதியில் கவிஞர் ஒரு விடையைக் கண்டுபிடித்துச் சொல் கிறார். பகல் இப்படி இவர்களை மாற்றி வைத்திருக்கிறது என்கிறார்.

நாம் சிந்திக்கிறோம். உண்மைதான். பகலில் எவ்வளவோ பார்க் கிறோம். பலரைப் பார்க்கிறோம். கடைவீதிகளில் எத்தனையோ அற்புத மான பொருள்கள். இவை நம்மிடம் இல்லை. அழகிய பெண்களைப் பார்க்கிறோம். இவர்கள் மாதிரி மனைவி இல்லை. நம் ஆசைகளைப் பகல் நேரத்தில் வெளிப்படுத்த இயலாது. பிறர் பொருளைக் கைப்பற்ற முடியாது. பகலில் ஆசைகளை நமக்குள் அடக்கி வைத்துக் கொள்கிறோம். இரவில் இவை நமக்குள் இருந்து வெளிவருகின்றன. இவற்றின் தூண்டலை நம்மால் கட்டுப்படுத்த இயலவில்லை. மனம் தூண்டுகிறபடி செயல்படு கிறோம். இப்படித்தான் பகலில் செய்யமுடியாததை, யாரும் நம்மைப் பார்க்காத இரவில் செய்ய முற்படுகிறோம். பகலில் நமக்குள் நாம் அடக்கி வைத்த ஆசைகள் இரவில் வெளிப்படுகின்றன. இப்படிக் கவிஞர் கவிதை செய்கிறார். இப்படித்தானா? இவ்வளவுதானா? என்றெல்லாம் கேட்டுக் கொள்ளலாம். கவிஞர் இங்குச் செய்வது ஒரு வகையான ஆய்வு. கேள்விகளின் அடுக்கம் ஒரு வகையான அழகு. இரவு தன்னளவில் குற்றவாளியா? இரவு சில வாய்ப்புகளை நமக்குத் திறந்துவிடுகிறது. பகலில் செய்ய முடியாத சிலவற்றை இரவில் செய்து பார்க்கலாம். அவ்வளவுதான்.

இடமில்லை என்ற தலைப்பில் ஒரு கவிதை. ஒரு பட்டாம் பூச்சி வந்து உட்கார ஒரு பூவில்லை. ஒரு சிட்டுக்குருவி வந்து உட்காரக் கிளை இல்லை. ஒரு மழை மேகம் மடி சுரக்க இடமில்லை. வானவில்

ஓடி விளையாட இடமில்லை. ஓர் ஓடை சலசலத்து ஓட இடமில்லை. காலைப் பொழுதை வானம் திறந்துவைக்க இடமில்லை. இயற்கை ஓவியம் தீட்டிவைக்க ஒரு மலைச் சரிவு இல்லை. காலத்தைத் தனக்குள் தாலாட்டி வைக்கும் கற்கள் இல்லை.

இப்படிக் கவிஞர் அடுக்குகிறார். இவை என்ன ஆயின? எங்கே போயின? இவற்றை மனிதர் கவனிக்கவில்லையா? இவை எல்லாம் மனிதர்களுக்கு வேண்டாதவைகளா? இவை எல்லாம் அழிந்துவிட்டனவா என்ன?

இவை எல்லாம் சிறிய அளவிலேனும் இங்கே இருக்கத்தான் செய்கின்றன. ஆனால் மனிதர்களின் மனத்தை எவை எவையோ இப்பொழுது அடைத்துக் கொண்டு இருக்கின்றன. கடைத்தெருக்கள், கணினிகள், தொலைபேசிகள், தொலைக்காட்சிகள், சலவைப் பெட்டிகள், பணம், பதவிகள், வங்கிக்கணக்குகள், புறநகர் வீடுகள், கட்சிகள், சட்டங்கள், சம்பிரதாயங்கள், கூச்சங்கள் இப்படி எத்தனையோ. இவற்றுக்கு இடம் கொடுத்து மனிதர்கள் தமக்குள் சுருங்கிப் போய்விட்டார்கள். அழுகிப்போய்விட்டார்கள். இந்த மனிதர்கள் இயல்பாய் இல்லை. மனத்தில் மயக்கங்கள், அடைசல்கள் இப்படி ஆகிவிட்டது நம் கால உலகம். ஆகவே சிட்டுக்குருவிகள், வண்ணப்பறவைகள், காலை வானம் எவற்றுக்கும் மனிதர் இப்பொழுது இடங்கொடுப்பதில்லை. மனித அவலம் இத்தகையது. மனிதர் சரியாகத்தான் சொல்லுகிறார். இதுதான் நவீன உலகம். நம் காலத்து உலகம்.

**‘எங்கே நான் போக!’** என்ற தலைப்பில் ஒரு கவிதை. நான் ஒரு மனிதன், நான் ஒரு கவிஞன். மனிதர்கள் மத்தியில் நான் வாழுகிறேன். எல்லோரும் என்னை அளவெடுத்துக் கொண்டு இருக்கிறார்கள். ஒவ்வொருவர் கையிலும் ஒரு அளவுகோல். தம்முடைய அளவுகோலில் என்னைக் கணக்கெடுக்கிறார்கள். என்னை நானாக இவர்கள் இருக்க விடுவது இல்லை. சில சமயம் நானே என்னை ஒரு வட்டத்தில் அடைத்துவிடுகிறேன். என் மையம் எதுவென நானே தடுமாறும்போது, என் மையம் இதுதான் என்று என்னை அவர்கள் அளவிடத் துடிக்கிறார்கள். எனது நீள அகலம் எதுவென நானே அறிந்துகொள்ள முடியாதபோது

என்னை ஒரு சதுரத்தில் அடைக்க இவர்கள் துடிக்கிறார்கள். தங்களது கோணத்தை வைத்து என்னை ஒரு முக்கோணத்தில் அடைக்க இவர்கள் துடிக்கிறார்கள். என் மையம் இதுவெனத் தீர்மானித்து அதை நோக்கித் தங்கள் துப்பாக்கியில் குறி வைக்கிறார்கள். எனக்கென ஒரு நேர்கோடு நானே வரைந்துகொண்டு அதில் நடக்க விரையும்போது இவர்கள் என்னை, என் பயணத்தை, எனது இலக்கைத் தீர்மானித்துவிட்டதுபோல எனக்கு அடியில் குழிதோண்டுகிறார்கள். வெற்றிச் செங்குத்துக் கோட்டில் ஏறுவதை இவர்கள் ஒப்புவது இல்லை. எனது மையம் எது? என் நீள அகலங்கள் எவை? என் இலக்கு எது? என் பயணம் எது? எது என் வெற்றி? என்றெல்லாம் என்னால் தீர்மானித்துக்கொள்ள இயலாமல் நான் தடுமாறுகிறேன். ஆனால் எல்லாம் தங்களுக்குத் தெரியுமென்று தம்மைத்தாமே முடிவு செய்துகொள்கிற இவர்கள், எனக்குள் நுழைந்து என் சுயத்தை – என் இயக்கத்தை இவர்கள் சிதைக்கிறார்கள். இயல்பான ஒரு மனிதனாக, ஒரு கவிஞனாக என்னை இவர்கள் இருக்கவிடுவது இல்லை. எனக்குள் இருக்கும் ஒளிச் சிறகுகளைச் சிதறடிப்பதே இவர்கள் நோக்கம். அருமையான கவிதை. இலக்கு எனத் தீர்மானித்துக்கொண்ட பிறகு இயக்கம் தடுமாறுகிறது. இயல்பு கெடுகிறது. காலம் முழுதும் இத்தகைய அளவுகோல்களில் நாம் எல்லோரும் சிறைப்பட்டு முடமாகிக் கிடக்கிறோம். ஜெ. கே. அல்லது ஜென்னை நெருங்குகிற கவிதை என்று சொல்லலாம். ஒரு வகையில் சுயதரிசனத்திற்கான தேடல் சார்ந்த கவிதை.

**'இலையுதிர்காலம்'** – இக்கவிதையின் இறுதிப்பகுதி நமக்குள் ஒரு புதிர்போல இறங்குகிறது. அதை நெருங்குவதற்கு முன்னர் முதல் பகுதியைப் பார்த்துக் கொள்ளவேண்டும்.

இலையுதிர் காலத்தில் என்னவெல்லாம் நேர்கின்றன. கவிஞர் ஒவ்வொன்றாய்க் காட்சிப்படுத்துகிறார். பச்சை இலைகள் இப்பொழுது இல்லை. காற்று இலைகளோடு உரசி எழுந்த இசை இப்பொழுது இல்லை. கதிரவன் ஒளியோடு கலந்து ஏற்பட்ட நிறம் இப்பொழுது இல்லை. கிளைகள் வெறுமையோடு இருக்கின்றன. வானம் நிர்வாணமாய்த் தெரிகிறது. கிளைகளில் கூடுகட்டி இருந்த பறவைகள் வேறு இடம் தேடிச் சென்றுவிட்டன. பறவைகளின் சிறகுகளில் இனி இரத்தச் சிவப்பைக் காணமுடியாது. பழுத்த இலைகள் தரையில் சிதறிக்கிடந்தன.

இப்படித் தொடர்கின்றன. இலையுதிர் காலம் பற்றிய முற்றான வறட்சி நிலை. மழை பெய்வதற்கான தடயம் எதுவும் தோன்றவில்லை. இந்த மரத்தில் இனி புதிய தளிர்கள் துளிர்க்கும் என்ற நம்பிக்கை தளிர்களுக்கும் இல்லை. இதுவரை கவிஞரோடு நாமும் பயணம் செய்தோம். இப்பொழுது கவிஞர் நமக்குள் ஓர் அதிர்ச்சி ஏற்படுத்துகிறார். கவிதை தொடர்கிறது. மழை இனி வரப்போவது இல்லை. நிலத்தில் சிறிதளவும் ஈரமில்லை. நிலத்தின் அடியில் வேர்கள் இருந்தும் பயனில்லை. ஆகவே ஒரு தீர்மானத்தோடு வேர்களும் வெளியே வந்து விட்டன. இனி இலையுதிர்காலம் மட்டுமல்ல இனி எந்தக்காலமும் இல்லை. எல்லாமே ஒரு முடிவுக்கு வந்துவிட்டன. இப்படிக் கவிதை முடிவு பெறுகிறது.

சென்ற சில ஆண்டுகளில் மழை பெருமளவு குறைந்துவிட்டது. காரணம் நமக்குத் தெரியும். இந்தியாவில் இராஜஸ்தானத்துக்கு அடுத்த படியாகத் தமிழ்நாடு பாலைவனமாக மாறிக்கொண்டிருக்கிறது. நம்மவர் திட்டமிட்டுச் செய்த அழிவின் விளைவு இது. இனி மழை பெய்யும் என்ற நம்பிக்கை அன்று இருக்கவில்லை. இந்நிலையில் நம் மனம் பட்டபாட்டைக் கவிஞர் இந்தக் கவிதையில் நெறிப்படுத்துகிறார் என்று கருதலாம். மரத்தின் இலைகளும் கிளைகளும் இறுதியாக வேர்களும் அற்றுப் போன நிலை. இந்த நிலை தமிழகத்துக்கு அண்மைக் காலத்தில் நிரந்தர மாகிவிடலாம்; கவிஞரின் எச்சரிக்கைக் கவிதை இது.

**'அது'** என்ற தலைப்பில் ஒரு கவிதை. எது என்பதற்கான தடயம் கவிதையில் இல்லை. வாசகன் இந்தக் கவிதையின் மூலம் தனக்குள் பயணம் செல்கிறபோது அவனுக்கு ஏதாவது ஒன்றோ சிலவோ தட்டுப் படலாம். இதற்காக வாசகன் தன்னை – தன் அனுபவங்களைத் தோண்டிப் பார்த்துக்கொள்ள வேண்டும். கூடியவரை கவிஞரின் கவிதையோடு பொருந்தி வருவது நல்லது.

அது; எதுவாக இருக்கமுடியும்? இளம் வயதிலிருந்து இன்றும் நமக்குள் தொடர்கிற காமமாக இருக்கலாம்; அல்லது இளம் வயதில் காதலித்து நாம் கைவிட்ட காதலியின் நினைவாக இருக்கலாம்; காதல் கைகூடாததால் அவள் செத்துப்போய் இருக்கலாம்; இளம் வயதில் ஏதாவது தகாத ஒரு குற்றத்தில் ஈடுபட்டு அதனால் நமக்குக் கிடைத்த

தண்டனையாக அல்லது அவமானமாக இருக்கலாம்; அல்லது முன்னோர் தேடிவைத்த இன்னும் தீராத கடனாக இருக்கலாம்; மனத்தைக் கடுமையாகப் பாதிக்கிற ஓர் அனுபவம்.

இனி, கவிஞரின் கவிதைக்குள் செல்லலாம். நினைவில் எப்போதும் இருந்தும் அதை / அந்தக் கசப்பை எனக்குள்ளிருந்து நான் வெளியேற்ற வேண்டும். அந்தச் சொல்லை எழுத்து எழுத்தாக, அணு அணுவாக உடைத்து வெளியேற்றுகிறேன். என் நினைவுக்குள் அது மீண்டும் வரக்கூடாது. யாராவது கேட்டாலும் என் நினைவில் அது இல்லை என்கிறேன். என்னை அது விடுவதாக இல்லை. அது நேர்ந்த சூழலை— அப்போது பெய்த மழையை – அப்போது அடித்த வெயிலை நினைத்துக் கொள்கிறேன். என்னதான் உதறிக்கொண்டாலும் மீண்டும் மீண்டும் அது என் நினைவுக்குள் விழுந்து என்னைத் தண்டிக்கிறது. கேவலப் படுத்துகிறது. ஒரு சமயம் நான் சாகும்போதும்கூட என்னை அது விடாது தொடரும்போலத் தோன்றுகிறது. மனம் இருக்கிறவரை நினைவு தொடரும். சமயவாதிக்கு இது வினை என்ற பெயரில் ஏற்கப்படலாம். வேறுவழியில்லை. அனுபவித்து ஆகவேண்டும். இயலுமானால் புரிந்து கொள்ளவேண்டும். புரிந்துகொண்டால் ஒருவேளை தப்பலாம்.

**'அசைவு + அசைவின்மை'** என்ற தலைப்பில் ஓர் அற்புதமான கவிதை. கற்பனையின் பயணம் எத்தனை வீச்சுக் கொண்டது, எங்கெல்லாம் அது பயணம் செய்யும் என்பதைத் தெரிந்து கொள்வதற்கு இந்தக் கவிதை நமக்கு உதவலாம். வாழ்வின் அனுபவத்திலிருந்துதான் கவிதை தன் ஆற்றல் மிக்க சிறகுகளை விரித்துப் பயணம் செய்கிறது என்பது உண்மைதான். நம் வாழ்வியல் அனுபவம் நமக்கும் அப்பால் இருக்கிற பறவைகள் மரங்கள் பற்றியெல்லாம் காலம் காலமாய் உணர்வதற்குத் தேவைப்படுகின்றன. இயற்கைக்குள் நாம் இயல்பாய்ப் பயணம் செல்வது மட்டுமல்ல கலந்தும், கரைந்தும் போகிறோம். ஆற்றல் மிக்க கவிஞன் வாசகர்களையும் சிறகு விரித்துப் பயணம் செய்ய வைக்கிறான். தமிழ்க் கவிதையின் உச்சங்களை அடிக்கடி தொடுகிற தமிழன்பனின் ஓர் அற்புதமான கவிதை. வாசகன் தன்னை வளர்த்துக் கொள்ளத் தூண்டுகிற கவிதை. இந்தக் கவிதையில் இடம்பெறுகிற சில அடுக்குகளை ஒவ்வொன்றாய்ப் பார்க்கலாம்.

மனிதர்களைத் தொட்டு வருகிற காற்று அந்த மரத்தை, அதன் ணத்தை அனுபவிக்கிறது. அது இன்ன மரம் என்று காற்றுக்குத் தரியவில்லை. இது முதல் அடுக்கு; அடுத்த அடுக்கு – மரத்தில் வ்வளவோ புதிய தளிர்கள் தோன்றி மரத்தை அழகுபடுத்தி இலைகள் பூயின. பின்னர் இலைகள் காய்ந்து சருகாகித் தரையில் விழுந்தன. த்தனை தளிர்கள் எத்தனை இலைகள் என்று மரம் எண்ணுவது இல்லை. ணக்குப் பார்க்காமல் சலிப்பு இல்லாமல் புதிய தளிர்களை மரம் உற்பத்தி செய்து கொண்டே இருக்கிறது (கொஞ்சம் புரிந்துகொள்கிறோம். இயற்கை ஓயாமல் இயங்குகிறது. வரவு செலவு என்றெல்லாம் அது நினைப்பது இல்லை. புதியதை உற்பத்தி செய்வதிலேயே இயற்கை கவனமாக இருக் கிறது. நாம் எ ப் ப டி இருக்கிறோம் என்று கொஞ்சம் நினைத்துக் கொள்ளவேண்டும்). இன்னும் ஓர் அடுக்கு; மரத்தில் உள்ள கூடுகளில் வாழ்கிற பறவை முட்டையிட்டுக் குஞ்சு பொறிக்கிறது. பறக்க அந்தக் குஞ்சுகளுக்குக் கற்றுக்கொடுக்கிறது. வானத்தை அறிமுகம் செய்து வைக்கிறது. இவ்வளவுதான் அந்தக் காக்கைக்குத் தெரியும். குஞ்சுகளைக் காக்க இரை தேடிக் கொண்டுவர எவ்வளவு தூரம், எவ்வளவு காலம் தான் பறந்தோம் என்பது காக்கைக்குத் தெரியாது.

இப்பொழுது இன்னும் ஓர் அடுக்கு – ஓர் அற்புதமான அடுக்கு. மரத்தின் வேர்களைப் பற்றிக் கவிஞர் சிந்திக்கிறார். வேர்கள் ஓயாமல் மண்ணைக் கிளறிக்கொண்டு தரைக்குள் செல்கின்றன. செடிக்கு / மரத் திற்குத் தேவையான நீரை, உணவைத் தனக்குள் இழுத்து மேலே அனுப்புகின்றன. கிளைகள் எவ்வளவு உ ய ர த் தி ல் இருக்கின்றன, எவ்வளவு ஆழத்திற்குத் தான் குடைந்து செல்லவேண்டும் என்றெல்லாம் வேர்கள் சிந்திப்பது இல்லை. மரத்தைத் தாங்குவதே தனது வாழ்க்கை (கவிதையைப் படித்து வரும்போது காக்கை நமக்குள் வருகிறதா? நமக்குள் வேர்கள் கிளைக்கின்றனவா? நமக்குள் யாரைத் தாங்குகிறோம்? தாயாக நாம் மாறுகிறோமா இல்லையா? சிந்திக்கிறோம்). கடிவாளத்திலிருந்து கொஞ்சநேரம் விடுதலைபெற்று மரத்தினடியில் குதிரை படுத்திருக் கிறது. இதுவரை எத்தனை பேரைச் சுமந்தோம்? எவ்வளவு தூரம் ஓடி வந்தோம்? என்றெல்லாம் குதிரைக்குத் தெரியாது. எத்தனை இலாடங்கள் காலடியில் அடிக்கப்பட்டன? எ வ் வ ள வு கழன்றன? என்றெல்லாம் குதிரை எண்ணுவது இல்லை. (எண்ணிப் பார்க்கத்

தொடங்கினால் குதிரை என்னவாகும்? வேர்களுக்கு என்ன நேரும்? காக்கை பறக்குமா? குஞ்சுபொறிக்குமா?) கடிவாளத்தைக் கையில் பிடித்துக் கொண்டு குதிரையைச் செலுத்துகிறான் வண்டிக்காரன். இந்த வண்டி யோட்டி தன் தொழிலிலேயே கவனம் வைத்து இருக்கிறான். இவன் தன்னைப் பற்றி, வாழ்க்கைபற்றி, தன் வாழ்க்கையின் அவலம் பற்றிச் சிந்திப்பது இல்லை. (சிந்திக்கத் தொடங்கினால் அவன் என்ன ஆவான்?)

கவிதையில் இதுதான் முத்தாய்ப்புப் பகுதி. வண்டியோட்டி மட்டு மல்லாமல் தொழிலாளிகள், கூலிகள் தம்மைப் பற்றிச் சிந்திப்பது இல்லை. இவர்கள்தான் நம்மை, உலகத்தைத் தாங்குகிறவர்கள்; படைக்கிறவர்கள். இவர்கள் வேர்களைப் போன்றவர்கள். யாருடைய வாழ்வுக்கு எல்லாம் தாம் ஆதாரமாக இருக்கிறோம் என்று இவர்கள் சிந்தனையின்றி உழைப்பே வாழ்க்கை என்று வாழ்ந்துகொண்டிருக்கிறார்கள். இவர்களைப் பற்றிய உணர்வுதான் கவிஞரின் காற்று, காக்கை, வேர்களைப் பற்றிய உணர் வுக்குக் காரணம். ஓர் உணர்வு இப்படிப் பல திசைகளில் விரிகிறது.

**'படிகள்'** என்ற தலைப்பில் ஒரு கவிதை. ஒரு மலையில் ஏறிச் செல்கிறோம். ஏராளமான படிகள். கால்கள் வலிக்கின்றன. இத்தனை தொலைவு ஏறி வந்திருக்கிறோம்? இன்னும் எத்தனை படிகள் ஏறினால் உச்சிக்குச் செல்வோம்? இப்படி நினைத்தோமானால் நம்மால் ஏறமுடியாது. கால் வலி அதிகரிக்கும். மனம் நோகும். எதற்கு ஏறினோம்? எதற்கு இத்தனை தொல்லை என்றும் நினைக்கத் தொடங்குகிறோம். நம்மால் ஏற முடியாது இறங்கிச் செல்வதுகூடக் கடுமையாகிவிடும். கால்கள் சோர்ந்துவிடும். வழுக்கவும் தொடங்கும்.

படிகள் பற்றி இந்தக் கவிதை ஒரு குறியீடுபோல அமைந்து தம் வாழ்க்கை பற்றிச் சிந்திக்கத் தூண்டுகிறது. எவ்வளவு காலம் வாழ்ந்தோம்? என்னவெல்லாம் செய்தோம்? என்ன சேகரித்தோம்? என்ன மரியாதை கிடைத்தது? இன்னும் எத்தனை காலத்திற்கு இந்த அலைச்சல்? நம்மைப் போல ஆயிரமாயிரம் ஆண்டுகளாக மனிதர்கள் வாழ்ந்து என்ன சாதித் தார்கள்? எதற்கு இந்த வாழ்க்கை? திருமணம், குழந்தைப் பேறு, படிப்பு, பதவி இவற்றால் என்ன பயன்? வரலாறு எதற்கு இயங்குகிறது? பூமி ஏன் இப்படிச் சூரியனை ஓயாமல் சுற்றி வரவேண்டும்? பருவங்கள் மாறி

ன்ன பயன்? இத்தகைய மன நிலையை இந்தக் கவிதையின் மூலம் விஞர் சொல்கிறார். யாருக்கும் இப்படி ஒரு சலிப்பு ஏற்படலாம். அதுவும் ம் காலத்தில் எல்லாமே அழிவுக்கு இலக்காகி வரும் சூழலில் இத்தகைய ந்தனை நமக்குள் எழலாம். அரசியல் ஆர்ப்பாட்டங்கள், போர்வெறி, வறுமைக் காடுமை, இயற்கை நாசம் இத்தகைய சூழலில் நமக்குள் இப்படி, ற்காலிகமாகவேனும் சிந்தனை எழலாம். வரலாற்றிலும் வாழ்க்கையிலும் டிகள் இல்லாமல் இல்லை. பரிணாமம் என்பது படிகளின் தொகுதி. கொஞ்ச நரம் கால் வலிக்கும். அப்புறம் ஓய்வு எடுத்துக்கொண்டு பயணத்தைத் தொடர்கிறோம். இப்படித்தான் நாம் பயணம் செல்கிறோம். தொடர்ந்து செல்கிறோம்.

**‘வேர்களற்ற வேளை’** என்ற தலைப்பில் ஒரு கவிதை. இந்தக் கவிதையில் எத்தனை முறை எனக்குள் ஓடவிட்டாலும் சரிவரப் பிடிபட பில்லை. என்றாலும் கவிஞர் எதிர்பார்த்துக் காத்திருக்கும் அவனை நமக்குள் எங்காவது ஒரு புள்ளியில் இப்படி இனங்கான முயற்சி செய்யலாம். ஒரு வகையில் நமக்குள்ளும் ஒரு கவிதையை எழுப்பிக் கொள்வதாக வும் இந்த முயற்சி இருக்கலாம். தவறில்லை. நவீன காலக் கவிதைகளை இப்படித்தான் எட்டித் தொடவேண்டியிருக்கிறது. முயற்சிக்குப் பலனில்லா மலும் இல்லை. ஒன்றைத் தேடிச் செல்லும்போது வழியில் இன்னொன்று நமக்கு வாய்க்கிறது. இந்தக் கவிதை முழுவதையும் நண்பர்கள் ஒரு முறை முதலில் வாசித்துக் கொள்ளட்டும். இப்பொழுது என் வாசிப்பை முன்வைக்கிறேன். நண்பர்களுக்கு ஏதாவது கிடைக்கலாம் அல்லது என்னைப்போல அவர்களும் எட்டித் தொட முயற்சி செய்யலாம்!

கவிஞர் என்ன சொல்லுகிறார் என்பதை முதலில் பார்த்துக் கொள்ளலாம். அவன் வருவதாகச் செய்தி கிடைக்கிறது. அவனுக்கு எவை எல்லாம் பிடிக்கும் என்று பலவற்றைத் தேடி வைத்துக் கொள்கிறோம். ஆதிமூலம், மருது ஓவியங்கள் அவனுக்குப் பிடிக்கலாம். ஏசுதாஸ், லால்குடி இசைத் தட்டுகள் பிடிக்கலாம். புதுமைப்பித்தன், செயகாந்தன் கதைகள் அவனுக்குப் பிடிக்கலாம். அப்துல்ரகுமான், இன்குலாப், கனிமொழி கவிதைகள் அவனுக்குப் பிடிக்கலாம். இவர்களின் இசைக்குள், ஓவியங் களுக்குள், கவிதைகளுக்குள், கதைகளுக்குள் அவன் இருக்கிறான் என்று நினைத்துத்தான் இவற்றை நாம் சேகரித்து வைத்துக் காத்திருக்கிறோம். இவற்றுக்குள் அவன் இருக்கிறானா? இவை அவன் உணர்வுகளைத்

தொடுமா? இவற்றின் மூலம் அவனைக் கண்டுகொள்ள முடியுமா? இப்படி எல்லாம் நினைத்துக் காத்திருக்கிறோம். இறுதிவரை அவன் வரவில்லை. இனி வருவானா – எப்பொழுது வருவான் என்பதும் தெரியவில்லை. இரவுவரை காத்திருந்தேன். பிறகு விளக்கை அணைத்துவிட்டேன். இருளுக்குள் நான் இருக்கிறேன். இப்படியாக இந்தக் கவிதையை எனக்குள் வாசிக்கிறேன். எனக்குள்ளும் ஒருவன் வரலாம். யார் அவன்? நாமும்தான் காலமெல்லாம் காத்திருக்கிறோம். வரலாற்றுக் காலம்தோறும் கனவுகளில் அவனை நாம் கண்டிருக்கிறோம். காவியங்களில் கற்பனை செய்து இருக்கிறோம். உயர் வகையான இவைகளில் அவனைத் தேடி இருக் கிறோம். ஓவியங்களில் அவன் கொஞ்சம் தட்டுப்பட்டு இருக்கிறான். இன்றைக்கு இல்லாவிட்டாலும் என்றைக்காவது அவன் வருவான். முழுமையாக அவனைப் பார்க்கமுடியும். ஏற்றத்தாழ்வுகளுக்கு இடையில் அவன் நொறுங்கிவிடவில்லை. வரலாற்றுச் சேறுகளில் அவன் புதைந்து விடவில்லை. போர்கள் அவனை நொறுக்கிவிடவில்லை. சமயங்கள் அவனைச் சாகடிக்கவில்லை. வயல்வெளிகளில் அவன் பாடல்கள் ஒலித்து இருக்கின்றன. வானக் காட்சிகள் அவனை வரைந்து இருக்கின்றன. இவன்தான் அசலான மானுடன். மார்க்சியர் நெடுங்காலமாக எதிர்பார்த் திருக்கிற மனிதன் இவன்தான். காவியங்களில் கொஞ்சம் இவனைக் கொண்டிருக்கிறோம். கடவுள் என்ற பிம்பத்துக்குள் கொஞ்சம் காட்சி கொடுத்தவனும் இவன்தான். இவனைத்தான் நமக்குள்ளும் வெளியிலும் தேடிக்கொண்டிருக்கிறோம். ஆதிமூலம், புதுமைப்பித்தன், லால்குடி, யேசுதாஸ் முதலியவர்களுக்குள்ளும் இவனைத்தான் எதிர்பார்க்கிறோம். எத்தருக்குள்ளும் இவன்தான் தட்டுப்பட்டான். இவன் இல்லை என்று ஆகிவிட்டால் வாழ்க்கை நமக்கு எப்பொழுதும் இரவுதான்.

ஒருவேளை கவிஞர் தமிழன்பன் தனக்குள் இப்படி ஒரு அசலான தமிழனைத் தேடியும் கவிதை எழுதி இருக்கலாம். இந்தத் தமிழனும் மார்க்சியனும் வேறுவேறானவர்களாகவும் இல்லை. ஒருவருக்குள் இன்னொருவர்.

இந்தத் தொகுப்பில் உள்ள மிகமிக அழகான கவிதைகளில் ஒன்று இந்தக் கவிதை. இநதக் கவிதையின் உள்ளும் நம் புரிதலுக்கு அகப் படாத வரிகள் – எத்தனையோ உணர்வுகள். பலமுறை படித்த பிறகும்

விதை நமக்குச் சிறிதும் வசப்படுவது இல்லை. எனினும் ஒரு முயற்சி சய்யலாம். கவிதைக்குத் தேவை தர்க்கம் இல்லை; தர்க்கத்திற்கு ப்பாற்பட்ட உணர்வுகள். தர்க்கத்தை வைத்துக் கொண்டு நாம் விதைக்குள் இறங்குகிறோம். எப்பொழுதாவது ஒரு கணத்தில் தர்க்கத்தி ருந்து விடுபட்டுக் கவிதைக்குள் நாம் கரைந்துவிடவேண்டும். அந்தக் ணம்தான் கவிதையோடு நாம் ஒன்றிணையு்் காலம்.

இந்தக் கவிதையிலும் ஒரு பெண் காத்திருக்கிறாள், தன் ாதலனுக்காக. அவன் தனக்கு உரியவனாகலாம். கணவனும் ஆகலாம். ன் மனத்தினுள் முதலில் அவனைத் தேடுகிறாள். அவன் தன் எதிரே ரும்போது அவனைக் கண்டுகொள்ள வேண்டும். பற்றிக்கொள்ள வண்டும். ஆதிமூலத்தின் ஓவியம் அவன் பிரியத்திற்கு உகந்ததாக ருக்கக்கூடும். ஆதிமூலத்தின் தரத்தில் இன்னும் சில ஓவியங்கள். ந்த ஓவியங்கள் அவனுக்கு உகந்ததாக இருக்கக்கூடும். லால்குடியின் சை அவனுக்கு உகந்ததாக இருக்கலாம். இதே தரத்தில் இன்னும் ல இசைக் கலைஞர்கள். புதுமைப்பித்தனும், ஜெயாகாந்தனும் அவனுக்குப் டித்த படைப்பாளிகளாக இருக்கலாம். இப்படி எல்லாவற்றையும் தேடி வள் வைத்துக்கொள்கிறாள். அவன் இந்த நேரம் வந்திருக்கவேண்டும். வன் இன்றும் வரவில்லை. ஏன் வரவில்லை? தன் இதயத்திற்குள் ருந்து அல்லவா இவனைத் தேடுகிறாள். ஆதிமூலத்தின் ஓவியங்களில், யேசுதாசின் பாடல்களில், ஜெயகாந்தனின் படைப்புகளில், இன்குலாப்பின் கவிதைகளில் இவனைத் தேடுகிறாள். இவன் ஏன் வரவில்லை?

இவள் தேடுகிற தரத்தில் அப்படி ஒருவன் இருக்கிறானா? இவள் கனவுகளில், கற்பனைகளில் இருக்கிற அவன் எங்கிருந்து வருவான்? எப்படி வருவான்? இவளுக்குள் இருக்கிற வேர்களிலிருந்து அவன் எப்படி வெடித்துக் கிளம்புவான்? தனக்குள் இவள் வரைந்து வைத்திருக்கிற ஓவியம் எப்படி எதிரில் மனித உருக் கொள்ளமுடியும்? தனக்குள் இருக்கிற பிம்பம் தானே கற்பித்துக்கொள்கிற பிம்பம். அந்தப் பிம்பத்திற்கு எல்லைகள் இல்லை. வரையறைகள் இல்லை. குறைகள் இல்லை. அழிவு இல்லை. அதற்கு ஓர் உருவம் இருக்க முடியுமா? உருவத்திற்கு எல்லை உண்டு. எல்லை உடையது எப்படிக் குறைகள் அற்றதாக இருக்கமுடியும்?

இரவெல்லாம் காத்திருக்கிறாள். அவன் வரமாட்டான். மீரா காத்திருக் கலாம்; ஆண்டாளும் காத்திருக்கலாம். அவன் வரமாட்டான். அப்படி ஒருவன் இல்லை. கற்பனைகளில் மட்டும் அவன் கிடைக்கலாம். எதார்த் தத்தில் அவன் கிடைக்கமாட்டான். கற்பனை உலகில் அவன் புத்தன், ஏசு. அவன் இந்த எதார்த்த உலகில் இப்பொழுது இல்லை. இனியும் இல்லை. விளக்கை அணைத்துவிட்டு அவள் இனிப் படுத்துறங்கலாம். வெளிச்சம் அவளுக்கு இப்பொழுது வேண்டாம். நாளை அவள் எதார்த்த உலகை வெளித்தள்ளட்டும். கற்பனையோடு அவள் வாழ்ந்தது போதும். தனக்குள் அவனைச் சாகடித்து, கொள்ளிபோட்டு, குடம் உடைத்து அப்புறம் பால் தெளித்துக் கொள்ளட்டும்.

## *பிம்பத்தின் பிம்பமாய்*

இந்தத் தொகுப்பில் உள்ள பற்பல கவிதைகளில் விடாப்பிடியாக ஒன்று தொடர்கிறது. எது அந்த ஒன்று? இந்தக் கவிதையில் இது வெளிப்படையாய் நம் முன் வந்து நிற்கிறது. இதைக் கைப்பற்றி நம் கைக்குள் அடக்கமுடியுமா? கைப்பற்றும்போது அது அங்கு இல்லை. எங்கே போயிற்று அது? மீண்டும் அது நமக்குத் தென்படுமா?

நாம் எதைத் தேடுகிறோம்? நம் பிம்பத்தைத் தேடுகிறோம். நாம் யாராய் இருக்கிறோமோ அதைத் தேடுகிறோம். அந்தப் பிம்பத்தைத் தேடுகிறோம். நாம் யார்? நமக்குள் இருப்பது ஒருவரா? இல்லை; ‘எத்தனையோ ஒருவர்கள்.’ என்னைப்பற்றி என் மனைவியைக் கேட்டால் அவள் என்னைப் பற்றி ஒரு சித்திரம் வரைவாள். அவள் தருவது ஒரு பிம்பம். என் மகனைக் கேட்டால் இன்னொரு பிம்பம். என் நண்பர் ஒவ்வொருவராகக் கேட்டால் அவரவர்க்கு ஒரு பிம்பம். என்னைப் பற்றி யாரேனும் கேட்டால் அவ்வப்பொழுது நான் தருவது வெவ்வேறு பிம்பங்கள். இவற்றில் எது உண்மை? உண்மையான ஒரு பிம்பத்தைப் பற்றி நானோ இன்னொருவரை அல்லது யார் ஒருவரைப் பற்றியாவது ஓர் உண்மையான பிம்பத்தைத் தரமுடியுமா? உண்மை என ஒன்று உண்டா? உண்மைக்கு எத்தனை முகங்கள்? எல்லா முகங்களிலிருந்தும் ஒரு முகத்தைப் பிடிக்க முடியுமா? கடவுளுக்கு எத்தனை பிம்பங்கள்? இல்லாத கடவுளுக்கேகூட எத்தனையோ பிம்பங்கள். பிம்பம் என்பதேகூட ஒன்றின் இன்னொரு வடிவம்/

ரதிபலிப்பு / வரைபடம் / ஓவியம். இதற்கு எது மூலம்? மூலத்தை எங்கே தடுவது? எப்படித் தேடுவது? தேடினால் கிடைக்குமா? தேடாமல் இருக்க டியுமா? என்னைப் பற்றி நானே அறியாமல் எப்படி இருக்கமுடியும்? ன்னைப் பற்றி அறிந்து கொள்ளத்தான் முடியுமா? எல்லாமே சிதறிக் டக்கிற புள்ளிகள்; திரட்டி ஒன்று சேர்க்க முடியாது. மேகங்களைப் ார்த்துக்கொண்டு இருக்கிறபோதே கலைகின்றன. மேலும் கலைகின்றன. ஒரு வடிவமா? ஒன்றைக் காண்பதற்குள் இன்னொரு வடிவம். இப்படித் ான் கணங்களில் எல்லாமே மாறுகின்றன. மாறாமல் எதுவும் இல்லை.

இந்தக் கவிதையைப் படிக்கிறபோதுதான் இப்படி எல்லாம் ிந்தனைகள். கண்ணாடிமுன் நிற்கிறோம். அதற்குள் என் பிம்பம். இது ண்ணாடியின் பிம்பமா? கண்ணாடியும் என்னைப் பார்க்கிறதா? ண்ணாடிக்கு நான் பிம்பம் ஆகிவிட்டேனா? யார், எதனுடைய ிம்பம்? குளத்தில் கல்லைவிட்டு எறிகிறோம்; எத்தனை அலைகள்? ாத்தனை வடிவங்கள்? குளத்தில் நிலவின் வடிவம். கல்லைவிட்டு ாறியும்போது எத்தனை உடைந்த நிலைகள்? இப்படித்தான் எல்லாமே. சேர்த்துத் தொகுத்து ஒன்றாகப் பார்க்கவா முடியும்? இப்படிப் போகிறது ஒரு கவிதை. கவிதையோடு நாமும் போகிறோம்.

பொய்ம்மையும் வாய்மை ஆகலாம் என்றார் வள்ளுவர். வாய்மை ான ஒன்றில்லாதபோது எல்லாப் பொய்களும் வாய்மைகள்தான். எல்லாமே கட்டமைப்புகள் என்கிறார்கள் இன்றைய தத்துவவாதிகள். மூலம் என ஒன்றில்லை. அடி முடி தேடிக் காண முடியாது. எல்லாமே நாம் படைத்துக் கொண்டவை; புனைந்துகொண்டவை. இளங்கோவின் சிலப்பதிகாரம் அவருடைய பிரதி. அடியார்க்கு நல்லார்க்கு அவருடைய பிரதி. எனக்கு, ான் பிரதி. சிலப்பதிகாரம் என்று ஒன்று தனியாக இல்லை. வாழ்க்கை ான்பதும் இப்படித்தான் அவரவர்க்கு ஒன்று. பிம்பம் உண்மை அல்ல ான்றாலும் அதை விடமுடியாது. அதை வைத்துத்தான் நாம் காதலிக் கிறோம். பக்தி செய்கிறோம். சண்டை போட்டுக் கொள்கிறோம். எதற்கு இந்தப் பிம்பம்? எனக்கும் தெரியவில்லை. உங்களுக்கும் தெரியாது.

## பொருள்பட்டும் பொருள்படாத ஒரு காலைப்பொழுது !

அற்புதமாய் நம்மைக் கவரும் இந்தக் கவிதையில் இருவகை முரண் பட்ட காட்சிகள். இப்பொழுது முதல் காட்சியை நமக்குள் வரைந்து கொள்வோம். மழை தூறிக்கொண்டே விடிந்த இரவு. மிதமான வெயில். வாதநாராயண மரக் கிளைகள் வழியே தரையில் விழும் வெயில். வெண்சாம்பல் ரேகைகள் வெயிலின் விழுதுகள். இலைகளைத் தடவிவிடும் காற்று; இலைகளின் நரம்புகளில் கூச்சமும் கொண்டாட்டமும்; தரையில் புள்ளி புள்ளியாய்ப் பனித்துளிகள். சரியாக மழிக்கப்படாத முகம் போன்று தரையில் புல். ஈர மண்ணில் இரண்டொரு பட்டாம்பூச்சிகள். கம்பி வேலிகள் மீது காக்கைகள். காக்கைகளின் கழுத்தில் விழும் சூரியன். கம்பி வேலியில் விரைந்து செல்லும் இரண்டொரு ஓணான்கள். வாசலில் சிட்டுக் குருவிகளின் கச்சேரி.

இப்படிக் காலை நேரத்தில் அழகிய காட்சியை அழகாய்த் துல்லிய மாய் உவமை நயத்தோடு கவிஞர் வர்ணிக்கிறார். வண்ணங்களும் வடிவங்களும் ஓசைநயங்களும் அசைவுகளும் நமக்குள் வந்து விழுகின்றன. எங்கும் அசைவுகள், இசை நயங்கள், நடனங்கள், இயக்கங்கள், உயிர்களின் இயக்கம்.

இவற்றில் எதனையுமே கண் வைத்துக் காணாமல், காதுகொடுத்துக் கேட்காமல், நின்று பார்க்க நேரமில்லாமல், அவசர அவசரமாய் ஆத்திரத் தோடு, இரவின் மயக்கத்திலிருந்து இன்னும் விடுபடாமல், பள்ளிக்குச் செல்லும் குழந்தைகள். அலுவலகங்களுக்கு ஆட்டோ பிடித்துச் செல்லும் மனிதர்கள். இவர்களுக்குள் காலைநேரமில்லை. மழைத்துளி இல்லை. காற்றின் அசைவுகள் இல்லை. சிறகு விரிக்கும் சிட்டுக்குருவிகள் இல்லை. பட்டாம்பூச்சிகள் இல்லை. கழுத்தை வளைத்துக் கரையும் காகங்கள் இல்லை. ஓணான்கள் இல்லை. இப்படி இந்தக் குழந்தைகள், மனிதர்கள்.

முதல் காட்சிக்கு முற்றிலும் முரணாய் இப்பொழுது இரண்டாம் காட்சி. பள்ளிக்கூடப் பிள்ளைகளும் புத்தகங்களும் பைகளுக்குள் அவசர அவசரமாய்த் திணிக்கப்படுகின்றன (குழந்தைகள் சட்டைகளுக்குள், புத்தகங்கள் பைகளுக்குள்). அவசர அவசரமாய் மூடப்படுகிற பாத்திரங்கள்

தெறித் தரையில் விழும் தயிர்ச் சோற்றுப் பருக்கைகள். தரையில் யாரும் காலமிடவில்லை என்றாலும் தாறுமாறாய்ச் சோற்றுப் பருக்கைகள் காலங்கள்; கனக்கும் தோள் பையோடு அவசர அவசரமாய் அலுவலகத் திற்குச் செல்ல வீட்டை விட்டு வெளியில் வரும் அப்பாக்கள். முன் இரவு முகங்களில் வழிய ஆட்டோவில் அமர்ந்து இருக்கும் பிற மனிதர் களோடு இவரும். எட்டரை மணி காலைச் சூரியன் வெளியில் – இவர்கள் எதைப் பார்த்தார்கள்?

இப்பொழுது தலைப்பை மீண்டும் ஒரு முறை பார்த்துக் கொள்ளலாம். பொருள்பட்டும் பொருள்படாத ஒரு காலைப்பொழுது. காலைப்பொழுது யார் யாருக்குப் பொருள்படுகிறது? யாருக்குப் பொருள் படவில்லை? சிற்றுயிர்களுக்கு, இயற்கைக்குக் காலைப் பொழுதில் அவை உயிர் பெறுகின்றன. வாழ்கின்றன, ஆடுகின்றன, பாடுகின்றன. மனிதர்களுக்குக் காலைப்பொழுது இல்லை. இயற்கை இல்லை. அழகு இல்லை. ஆடல் பாடல் இல்லை. இவர்கள் இன்னும் இருளில் வாழ்கிறார்கள். பைகளில், ஆட்டோக்களில், அலுவலகங்களில் தம்மைத் திணித்துக் கொள்கிறார்கள். இவர்களுக்கு உள்ளும் வெளியிலும் அவசரங்கள். இவர்கள் எதற்கு மனிதர்களாய் இருக்கிறார்கள்? இவர்கள் தம் குழந்தைகளுக்குக்கூட வாழ்வைத் தரவில்லை. குழந்தைகளாய் அவர்களை வாழவிடவில்லை.

## கடத்தல்

தமிழன்பனின் பயணம் எதை நோக்கி எங்குச் செல்கிறது என்பதைச் சுட்டுகிற ஒரு சிறு கவிதை. எந்தப் பிம்பத்தில், எந்த வட்டத்தில், எந்தச் சதுரத்தில், எந்தப் புள்ளியில், எந்தக் காலத்தில், எந்தப் பருவத்தில் தான் இருக்கிறோம் என்பதைப் புரிந்து கொள்ளாமல், புரிந்து கொள்ள முடியாமல், புரிந்து கொள்வதற்கான ஆதாரம் இல்லாமல், அளவுகோல் இல்லாமல் அவசரத்தில் அலங்கோலத்தில் இருக்கிற மனிதன் என்ன செய்கிறான், எதை நோக்கிச் செல்கிறான் என்பதைப் பற்றிய ஒரு சிறு கவிதை. தமிழன்பன் மட்டுமல்லாமல் நாமும் நமக்குள் இந்தக் கேள்வியை எழுப்பிக் கொள்ளத்தான் வேண்டும். நமக்குள்ளும் / மனிதன்தானா என்று உணர்கிற எவருக்குள்ளும் இப்படி அதிர்வுகளை எழுப்புகிற கவிதை.

5. 29.

கடந்து, கடந்து செல்லவேண்டுமென்று ஆசைப்படுகிறோம். ஆசையை எப்போது கடக்கப்போகிறோம்? பிறப்பைக் கடந்து செல்லவேண்டும் என்கிற சமயவாதி இப்படிக் கடந்து செல்வதற்காக இன்னும் ஒரு பிறப்பை வேண்டுகிறான். பிறப்பை இவனால் கடக்க முடியுமா? வண்டியைக் கடக்கப் பயணம் செய்கிறோம். இறுதியிலும் ஒரு வண்டி. வண்டியைக் கடக்கவா முடியும்? கடப்பதற்குத்தான் வாழ்க்கை என்றால் – இதற்குத்தான் வாழ்க்கை என்று சமயம் கூறுமானால் அப்புறம் வாழ்க்கை என்பது எதற்காக? எதைக் கடந்து இங்கு வந்தோம் என்பது சமயவாதிக்குத் தெரியுமா? இது தெரியாதவனுக்கு இங்கிருந்து எங்குச் செல்கிறோம் என்பதாவது தெரியுமா? இப்படி எதைக் கடக்க வேண்டும், எவற்றையெல்லாம் கடக்க வேண்டும் என்பது சமயவாதிக்குத் தெரிவதில்லை. அப்படியானால் கடப்பது என்பதைக் கைவிட்டுச் சும்மா கிடக்க முடியாதா? சமயவாதிக்கு முடியாது. சமயவாதிபற்றிய விமர்சனம்தானா இந்தக் கவிதை? ஜென்னும் இப்படிப் பேசலாமே?

த மி ழ ன் ப ன் கவிதைகளின் உள்ளடக்கத்தைப் பொருத்தவரை மேலும் அவர் செய்துள்ள புதுமைகள் சில குறித்து இங்குக் குறிப்பிடலாம். இவற்றை அவர் மேலும் தொடர்ந்து செய்ய வேண்டுவதன் தேவை குறித்தும் சில கூறவேண்டி உள்ளது.

**“வணக்கம், வள்ளுவ!”** என்ற அவரது படைப்பு வள்ளுவத்தின் ஆற்றல் மிக்க கூறுகளை அடுக்கிச் சொல்வதோடு முடிந்துவிடவில்லை. அதைப் போலவே வள்ளுவத்தில் உள்ள சில கூறுகள் பற்றிச் சில திறனாய்வுகளைக் க வி ஞ ர் முன்வைப்பதோடு முடிந்துவிடவில்லை. வள்ளுவத்தின் நம் காலத் தேவைகள் காரணமாக வள்ளுவரின் அறம் இன்றைக்கும் த மி ழ் மக்களின் மேன்மைக்குத் தேவையானதாகவும் இருக்கிறது. தமிழன்பனின் உணர்வுகள் தற்காலத் தேவைகளோடு உறவுடையவை. இம்முறையில் வள்ளுவத்தை ஒரு மறு படைப்பெனத் தமிழன்பன் செய்திருக்கிறார். வள்ளுவரின் கவிதைகளுக்குள் காவியப் பரிமாணம் இருப்பது குறித்து நமக்கு ஆய்வு தேவை. ‘ஊழி பெயரினும்’ முதலிய குறள்களில் இத்தகைய காவியப் பரிமாணம் வள்ளுவருக்குள் இடம் பெறுகிறது. ‘குன்றின் அனையாரும் குன்றுவர்’ என்பதும் இத்தகைய காவியப் பரிமாணம். ‘பண்புடையார் பட்டுண்டு உலகம்’ என்பதனுள்ளும்

காவியப் பரிமாணத்தை நாம் காணமுடியும். இப்படித் தேடிச் செல்லும் பொழுது ஒரு 100 குறட்பாக்களேனும் நமக்குக் கிட்டும் என்பதில் ஐயமில்லை. 'உறுதோறும் உயிர் தளிர்ப்ப' என்ற குறளினுள்ளும் இத்தகைய கூறுகளைக் காணமுடியும். இவற்றையெல்லாம் உள்ளடக்கிப் பார்க்கும்பொழுது வள்ளுவரின் விசுவரூபத்தை நம்மால் ஒரு தரிசனம் போலக் காணமுடியும். கவிஞர் தமிழன்பன் நமக்குள் ஏற்படுத்தும் தூண்டல் நம்மை இவ்வாறெல்லாம் சிந்திக்கத் தூண்டுகிறது. இத்தகைய காவியப் பரிமாணம் நம் கால உலகின் புரிதலுக்குப் பெரிதும் தேவைப்படுகிறது. இன்றைய உலகின் அரசியல், பொருளியல் சிக்கல்களை மட்டுமல்லாமல் கல்வி, மருத்துவம், தொழில், வேளாண்மை, பண்பாடு முதலிய அனைத்துச் சிக்கல்களையும் தனித்தனியே வைத்துப் பார்ப்பது என்பது நமக்குச் சாத்தியமில்லை. அறிவியல், கலையியல், வாழ்வியல் சார்ந்த எவ்வகைச் சிக்கலையும் தனித்தனியே காண்பதில் பொருளில்லை. அனைத்துச் சிக்கல்களையும் உள்ளடக்கி, ஒன்றோடொன்று இன்றியமையாத உறவுடையதாகப் பார்ப்பதன் மூலமே தேவையான தெளிவை நாம் பெறமுடியும்.

தமிழ் மக்களின் எவ்வகைச் சிக்கலும் இன்றைய நிலையில் உலக அளவிலான பல்வேறு சிக்கல்களோடு நெருக்கமான உறவுடையது. மனித விடுதலையில் ஆழ்ந்த அக்கறையுடைய எவருக்கும் இத்தகைய பார்வை இல்லாமல் முடியாது. நம் காலத்திலும் இத்தகைய வீறுமிக்க அகண்ட பார்வை இல்லாமல் முடியாது. அப்படியானால் தமிழ் மக்களுடைய சிக்கல்கள் அனைத்தையும் நெடுங்கால வரலாற்றினுள் வைத்துக் காண்பது தேவையாகிறது. வள்ளுவர் மூலமாக மட்டுமல்லாமல் இளங்கோ, கம்பர், சேக்கிழார், அருணகிரிநாதர், வள்ளலார், பெரியார், குன்றக்குடி அடிகளார் என்ற அனைவர் மூலமும் தமிழ் மக்களின் வாழ்வியல் வரலாற்றை ஒரு காவியமாகச் செய்வது இன்று நமக்குத் தேவை. இந்தியாவின் விடுதலைப் போராட்ட வரலாற்றைக் கவியோகி சுத்தானந்த பாரதியார் ஒரு நெடுங்காலப் பார்வையில் வைத்துப் "பாரத சக்தி மகா காவியம்" எழுதினார். ஒரு காவியம் என்பதனுள் பல காலகட்டங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு காலகட்டத்தையும் ஒன்று அல்லது இரண்டு சான்றோர் வழியே சொல்லமுடியும். வரலாற்றின் தொடர்ச்சி அறாமல் அதே சமயம் வரலாற்றின் புவி ஆக்கங்களை முன் நிறுத்தும் முறையிலும் இப்படி எழுத முடியும். தமிழன்பன் இத்தகையதொரு

பெரு முயற்சியில் ஈடுபட முடியுமென்று நான் நம்புகிறேன். வள்ளுவத்தை மறுபடைப்பாக்கம் செய்ததைப்போலச் சிலப்பதிகாரம், மணிமேகலை என்று தொடங்கி இன்றுவரையிலான பெரும் படைப்புகளை முதன்மைப்படுத்தி மறுபடைப்பாக்கம் செய்வது என இந்த முயற்சியைத் தொடங்கலாம். வரலாறு குறித்த ஆழமான பார்வையைப் பெறுவதன் மூலம் இந்த முயற்சி வலுப்பெற முடியும். இப்படியொரு பெருங்காட்சி எனக்குள் தட்டுப் படுகிறது. ஒரு பேராசை போல இதை இங்குச் சொல்லி வைக்கிறேன். இந்த அகண்ட பார்வைக்குள் ஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர், நம்மாழ்வார், ஆண்டாள், குமரகுருபரர், அருணகிரி நாதர், திருமூலர், சிவவாக்கியர், தாயுமானவர், வள்ளலார் என்று எத்தகைய பெருங்கவிஞர்களையும் உள்ளடக்க முடியும். எல்லோருக்குள்ளும் தமிழின் ஆற்றல் மிக்க கூறுகள் வெளிப்படுகின்றன. இவை அனைத்தையும் ஒரு தொடர்ச்சியில் காண முடியும். என் பார்வையை இத்தோடு நிறுத்திக் கொள்கிறேன். இது குறித்துத் தமிழன்பன் மேலும் சிந்திக்க வேண்டும் எனக் கேட்டுக் கொள்கிறேன்.

இதன் தொடர்பாக மேலும் ஒன்றை இங்குக் கூற விரும்புகிறேன். 'நாளைய மனிதர்கள்' என்ற திருமதி இராஜேஸ்வரி அவர்களின் நாவல் வெளிவந்தபோது, இந்த நாவல் குறித்து நீங்கள் ஏதாவது எழுத முடியுமா? என்று தமிழன்பன் அவர்களைக் கேட்டிருந்தேன். எதைப்பற்றி எழுதுவ தென்றாலும் கவிதையாகவே எழுதும் ஆற்றல் உடையவராகத் தமிழன்பன் இயங்குகிறார். ஆற்றல்மிக்க எந்த ஒரு மனிதனுக்குள்ளும் அல்லது ஆற்றல் மிக்க இயக்கம் உடைய எந்த ஒரு சமூகக் களத்தினுள்ளும் கவித்துவத்தை நம்மால் காணமுடியும். 'நாளைய மனிதர்கள்' நாவலின் உள்ளும் கவித்துவப் பார்வையோடு தமிழன்பன் அந்த நாவலில் இடம் பெறும் மனிதர்களைக் காண்கிறார். நாவலில் இலண்டனில் வாழ்கின்ற சில தமிழ் மக்களை மட்டுமல்லாமல் சில அயர்லாந்துக்காரர், சில ஆங்கிலேயர், சில அமெரிக்கர் முதலியவர்களையும் அவர் இப்படிக் காணுகிறார். தமிழனின் சில அற்புதமான பண்புகளுக்காக நாம் நேசிக்கிறோம். இத்தகைய நற்பண்புகள் வாய்ந்த மக்கள் எந்த நாட்டிலும் எந்தச் சமூகத்தினுள்ளும் வாழ்கின்றனர். ஆதிக்கங்களுக்கு எதிராக இவர்கள் தம்மைத் திரட்டிக் கொண்டு போராடுகின்றனர். இந்தப் போராட்டம் என்பது அவர்களை ஆற்றல் மிக்க மனிதர்களாக மாற்றுகிறது. தணலில்

வெந்து தங்கம் ஒளி பெறுவதைப்போல இந்த மனிதர்களும் தமக்குள் ஒளி மிக்கவராய், கனல் மிக்கவராய் மேம்படுகின்றனர். இவர்களுக்குள் வானம் வந்து விடுகிறது. இவர்களுக்குள் கதிரவனையும் விண்மீன் களையும் நாம் காணமுடியும். இவர்களுக்குள் கடல் பொங்குகிறது. இத்தகைய மனிதர்கள் எங்கிருந்தாலும் இவர்களும் நம்மைப் பொருத்த வரை தமிழர்தான். தமிழன் என்று சொல்வதற்கான வரையறைகள் இப்படித் தமிழன்பனுக்குள் விரிகிறது.

வள்ளுவத்தை ஒரு மறுபடைப்பெனச் செய்ததைப்போலவே தமிழ் நாவல்களின் உச்சங்கள் என நம்மால் மதிப்பீடு செய்யத்தக்க ஒரு 10 நாவல்களையாவது இப்படித் தமிழன்பன் மறுபடைப்பாக்கிப் பார்க்க முடியும். இவ்வகை நாவல்கள், நாம் ஆழ்ந்து பார்க்கும்பொழுது சிலப்பதி காரம், மணிமேகலை போன்ற தமிழின் எந்த ஒரு காவியத்திற்கும் குறைந்த படைப்புகள் இல்லை. ஜெயகாந்தன் என்று தொடங்கி அற்புதமான நாவலாசிரியர் சிலருக்கும் இத்தகைய காவியப் பரிமாணங் களை நம்மால் காணமுடியும். ஏற்கெனவே நான் குறிப்பிட்ட தமிழர் வரலாற்றின் தொடர்ச்சியில்தான் இவர்களும் நம்மோடு, நம் வரலாற்றோடு வாழ்கின்றனர். இவர்களையெல்லாம் இன்றைய தமிழ் மக்களுக்கு இம் முறையில் அறிமுகப்படுத்துவது தேவையாகிறது. இன்றும் நமக்குள் வள்ளுவர் வாழ்கிறார், இளங்கோ வாழ்கிறார், கபிலரும் வாழ்கிறார், சித்தர்களும் வாழ்கின்றனர். ஆண்டாளையும் இன்று நாம் பெண் கவிஞர் களுக்குள் காணமுடிகிறது. காலந்தோறும் மரபின் ஆற்றல்கள் இப்படிப் புதிய வீறுகளோடு வெளிப்படுகின்றன. தமிழன் தனக்குள் சுருங்கி, இறுகிப் போவதிலிருந்து தமிழனுக்குள் முடங்கி இருக்கும் வீரியத்தை வெளிப்படுத்த, வெளிக்கொண்டுவர இத்தகைய படைப்புகள் உதவக் கூடும். தமிழனுக்குள்ளிருக்கும் பிளவுகளை இப்படித்தான் தகர்க்கவும் முடியும்.

OO

# தமிழன்பன் கவிதைகள் - நிறைவுரை

தமிழில் புதுக்கவிதை முறையைத் தோற்றுவித்து வளர்த்தவர்கள் என்று நா. பிச்சமூர்த்தி, கு. ப. இராஜகோபாலன், க. நா. சுப்பிரமணியன், சி. சு. செல்லப்பா, நகுலன், பிரமிள், பசுவைய்யா முதலியவர்களைக் குறிப்பிடு கிறோம். இவர்களின் புதுக்கவிதை முறையை அதிக அளவில் சமூக உணர்வோடும் தமிழுணர்வோடும் வளர்த்தவர்கள் என வானம்பாடிக் கவிஞர்களைக் குறிப்பிடலாம். இவர்களில் சிற்பி, புவியரசு, கனல்மைந்தன், மேத்தா முதலியவர்கள் குறிப்பிடத்தக்கவர்கள். வானம்பாடி இயக்கத்தின் வளர்ச்சிக் கட்டத்தில் இந்த இயக்கத்திற்குள் தம்மையும் இனம் கண்டு இயல்பாகவே இணைந்தவர்கள் என்று கவிஞர் மீரா, தமிழ்நாடன், கவிஞர் தமிழன்பன் ஆகியவர்களைக் குறிப்பிடவேண்டும். சரியாகச் சொல்வதென்றால் வானம்பாடிகள் தம்மை ஓர் இயக்கம் என அறிவித்துக் கொள்வதற்குமுன்பே, வானம்பாடிகளின் தோற்றத்திற்கும்கூட ஒரு வகையில் காரணமாக இருந்தவர்கள் என்று கவிஞர் தமிழன்பன், கவிஞர் அப்துல்ரகுமான், கவிஞர் இன்குலாப், கவிஞர் இளவேனில் ஆகியவர் களைக் குறிப்பிடுவது பொருந்தும். இவர்கள் அனைவரும் தமிழின் நெடுங்கால மரபை விடாததோடு தமிழகத்தின் சமகாலச் சூழலைத் தம் கருத்தில் வைத்து முன்னைய யாப்பு மரபின் இறுக்கங்களில் இருந்து விடுபட்டுத் தமிழ்க் கவிதையில் புதிய ஆற்றல்களை வெளிப்படுத்தியவர்கள். இவர்கள் பெரியாரியத்தோடும் மார்க்சியத்தோடும் உறவுடையவர்கள். பாரதியையும் பாரதிதாசனையும் தமக்குள் செறித்துக் கொண்டவர்கள். இவர்களால் தமிழ்க் கவிதை புதிய வளம் பெற்றது என்பதில் ஐயம் இல்லை.

வானம்பாடி இயக்கத்தோடு நானும் தொடர்பு கொண்டிருந்தேன். நா. பிச்சமூர்த்தி, பிரமிள், பசுவைய்யா முதலியவர்களின் கவிதை நுட்பங் களை ஆழமாகப் புரிந்துகொள்வதில் நான் அக்கறை கொண்டிருந்தேன். மேற்கிலிருந்து வந்த புதுக்கவிதை முறையின் தனித்தன்மைகள் குறித்தும் தொடர்ந்து கற்றுக்கொண்டிருந்தேன். வானம்பாடி இயக்கத்தில் பிற நண்பர்களோடு சேர்ந்து சமூக உணர்வோடு, குறிப்பாக மார்க்சிய உணர்வோடு கவிதைகள் படைப்பது குறித்தும் இலக்கியத் திறனாய்வை வளர்ப்பது குறித்தும் செயல்பட்டதுடன் புதுக்கவிதையின் படிமம் முதலியவை

றித்த பார்வைகள் எங்களுக்குள் தீவிரப்பட்டன. வானம்பாடி இயக்கத்தைத் தமிழ்க் கவிதையின் நெடுங்கால வரலாற்றில் ஒரு கட்டமாக உருவாக்குவதில் நாங்கள் வெற்றிபெற்றோம். வானம்பாடி இயக்கம் ளிவுபட்டது என்பது உண்மை என்றபோதிலும் வானம்பாடி இயக்கத்தின்போது தமக்கெனத் தனித் திறன்களை இனம் கண்டு வளர்த்துக் கொண்ட எவரும் இன்றளவுக்கும் தமிழின் ஆக்கம் கருதிப பல துறைகளில் உழைத்து வருகின்றனர். சிற்பி என்று தொடங்கிப் பலரை நான் இங்குக் குறிப்பிடுவது தகும் என்ற போதிலும் கவிஞர் தமிழன்பன் குறித்துச் சிறப்பாகக் குறிப்பிடவேண்டும். தமிழுக்கு வளம் சேர்ப்பதில் இவர்கள் அனைவருமே சாதனையாளர்களாக விளங்குகிறார்கள். இந்த நிறை வுரையை நான் எழுதுகிற இந்தத் தருணத்தில் கவிஞர் தமிழன்பனுக்குச் சாகித்ய அகாதமியின் விருது அறிவிக்கப்பட்டுள்ளது என்பது எனக்கு மட்டுமல்லாமல் வானம்பாடி இயக்கத்தினர் அனைவருக்கும் மிகுந்த மனநிறைவைத் தரும் என்பதில் ஐயமில்லை.

தமிழுக்கு வந்து சேர்ந்த புதுக்கவிதையின் நுட்பங்கள் குறித்து முதலில் எனக்கே நானே புரிந்துகொள்ளும் முறையிலும் அதன் பிறகு தமிழ் மரபில் வைத்து இவற்றை வளர்ப்பது குறித்தும் எனக்கிருந்த அக்கறையின் ஒரு பகுதியாகத் தொடக்கத்தில் நிறைய சிக்கல்களோடு தோன்றிய தமிழன்பன் கவிதைகள் குறித்து எழுதத் தொடங்கினேன். பிரமிள் முதலியவர்களின் கவிதைகள் குறித்து நான் ஏற்கனவே எழுதியிருந்தேன். இதன் தொடர்ச்சியாகவே சிற்பி முதலியவர்கள் பற்றியும் எழுத விரும்பினேன். தமிழன்பன் கவிதைகள் எனத் தொடங்கி இன்னும் சிலருடைய கவிதைகள் குறித்து எழுதுவது என் திட்டம். இந்தத் திட்டத்தில் தமிழன்பன் கவிதைகள் குறித்து ஓரளவுக்கேனும் முழுமையாக இதுவரை எழுதியுள்ளேன். வாய்ப்பு நேருமானால் இன்னும் சிலர் பற்றி எழுதுவேன்.

புதுக்கவிதை என்ற கவிதை முறையில் கவித்துவத்தின் வீச்சு அதிகமாகவே இருக்கிறது. செய்யுள் மரபில் எதுகை, மோனை, தளை, தொடை, ஒத்திசை முதலியவற்றில் கவனம் குவிக்கும்போது பல சமயங் களில் கவித்துவம் தன் முழு வீச்சோடு வெளிப்படுவது இல்லை. நமக்குச் செய்யுள் என்பதைக் காட்டிலும் கவிதை தேவை. கவிதை என்பது மனித

வாழ்வின் ஒரு முக்கியக் கூறாக இருக்கிறது, இயங்குகிறது. எந்த ஒரு மனிதனுக்குள்ளும் ஒரு கவிஞன் இருக்கிறான். தனக்குள் வரும் எதனையும் அவன் ஒழுங்குபடுத்திப் பார்ப்பதோடு அதன் உள்ளியக்கத்தில் நுழைந்து அதன் ஆழத்தையும் அர்த்தங்களையும் காண்கிறான். இவ்வகையில் கவிதை என்பது அதன் உள்ளியக்கத்தில் மனிதனைப் பற்றி, அவன் வாழ்வியல் அர்த்தங்கள் பற்றி ஆய்வாக வளர்கிறது. இந்த ஆய்வு இறுதியில் வரலாற்று இயக்கத்தோடு, மெய்யியல் தளம் வரை செல்லுகிறது. இவ்வகையில் கவிதையின் உள்ளியக்கம் என்பதைக் கவித்துவம் என்ற சொல்லால் குறிப்பிடுவது பொருத்தமாகும்.

இவ்வாறெல்லாம் கவிதை பற்றிய ஆய்வைத் தொடர்வதில் என் விருப்பம் காரணமாகவே தமிழன்பனின் கவிதைகளில் என் கவனத்தைக் குவித்தேன். அவரும் என் விருப்பத்திற்கு உடன்பட்டார். தமிழன்பனைப் பொருத்தவரை ஒன்றையடுத்து இன்னொன்று தொடர்ச்சி அறாமல் கடந்த ஐம்பது ஆண்டுகளாகக் கவிதைத் தொகுப்புகளைப் படைத்து வருகிறார். கவிதை என்பது தமிழன்பனைப் பொருத்தவரை வாழ்வதற்கான ஓர் இயக்கம். அவரால் கவிதை எழுதாமல் இருக்கமுடியாது. அந்த அளவில் கவிதை என்ற இயக்கம் அவரை முழுமையாகப் பற்றிக் கொண்டுள்ளது. கவிதை இயக்கத்திற்கு அவர் வசப்பட்டவர். பல திசைகளிலிருந்து வரும் அனுபவங்களைத் தன் கவிதை இயக்கத்திற்கான தூண்டுதலாக, கருவாக அவர் மாற்றிக் கொண்டிருக்கிறார். பத்திரிகைகள், கவிஅரங்குகள் அவரிடம் ஓயாமல் கவிதை கேட்கின்றன. இவற்றின் தேவைக்காக அவர் கவிதை செய்ய நேருகிறது. இவ்வகைக் கவிதைகளில் இயல்பான கவித்துவம் தனக்குரிய வீச்சோடு வெளிப்படுவது கடினம்தான். மேடையில், ஒரு பெருங்கூட்டத்தின் உணர்வைத் தட்டி எழுப்பும் முறையில் கவிதை பாடும்போது கவிதையின் அசலான பண்புகள் வெளிப்படுவதற்கு வாய்ப்பு இல்லை எனினும், தமிழ்க் கவிஞர்களுக்கு இப்படியும் ஒரு சமூகக் கடமையை நிறைவேற்றுவது தேவையாகிறது. இவ்வாறான கவிதையினுள்ளும் கவித்துவத்தை முற்றாக இழந்துவிட்டுக் கவிதை செய்வதும் முடியாது. கவனத்தோடு, அக்கறையோடு பார்க்கும்போது தமிழன்பன் இவ்வகைக் கவிதைகளின் உள்ளும் புதிய பார்வைகளைக் கவித்துவத்தின் சில அற்புதமான கூறுகளை வெளிப்படுத்துவதை நாம் காண முடிகிறது. மேடைக் கவிதைகள் எழுதியதற்காகத் தமிழன்பனை நாம்

நோந்துகொள்ள முடியாது. இவ்வகைக் கவிதைகளை முதன்மைப்படுத்தி அவருடைய கவிதைச் சாதனைகளை நம்மால் மறுக்கவும் முடியாது. தொடக்கத்தில் எனக்கு இத்தகைய தயக்கம் இருந்தபோதிலும் இந்தத் தயக்கத்திலிருந்து என்னை நானே விடுவித்துக் கொண்டேன். மேடைக் கவிதைகளை விடவும் அவருடைய அ ச ல ா ன கவிதையில் என் கவனத்தைக் குவித்தேன்.

தமிழன்பன் கவிதைகளை அவற்றின் உள்ளடக்கம் என்ற முறையில் பல்வேறு வகைகளாகப் பகுத்துப் பார்க்கலாம். இவற்றில் கவியரங்கக் கவிதைகள் என்பவை ஒரு வகை அல்லது ஒரு கூறு. பெரியார், பாரதியார், பாரதிதாசன் என்று எத்தனையோ பெரியவர்கள், கவிஞர்கள், சிந்தனை யாளர்கள் பற்றி இவர் எழுதியுள்ளார். அறிஞர் அண்ணா, அம்பேத்கர் என்று அரசியல் அறிஞர்கள் பற்றி எழுதுகிறார். இவ்வகைப் பெரியவர் களை நிதானமாக நாம் பட்டியலிட்டுக் கொள்ளலாம். ஆய்வாளர்கள் இப்படிப் பட்டியல் தயாரிக்கலாம். அரசியல் முதலிய களங்களில் செயல்பட்ட இவ்வகைப் பெரியவர்கள், சான்றோர்கள் பற்றி இவர் எழுதியதோடு நேரிடையாக நம் கால அரசியல் குறித்து நிறைய எழுதியுள்ளார்கள். தமிழக அரசியல் தொடங்கி இந்திய அரசியல் குறித்தும் உலக அரசியல் குறித்தும் கூர்மையான விமர்சனங்களை முன்வைத்து எழுதுகிறார்கள். அமெரிக்காவுக்குப் பயணம் செய்து திரும்பியவர்கள் அமெரிக்காவைப் பா ர ா ட் டி எழுதுகின்றனர். ஆனால் தமிழன்பனைப் பொருத்தவரை உலக அளவில் அமெரிக்கா செய்யும் ஆதிக்கத்தை மிக மிகக் கூர்மையாக விமர்சனம் செய்து எழுதுகிறார். இந்திய அரசியல் அரங்கில் கடந்த ஐம்பது ஆண்டுகளாக எத்தனையோ வெறித்தனமான போக்குகள் நடைபெற்றுள்ளன. தமிழக அரசியல் அரங்கிலும் இதே வகையான போக்குகள். இதைப் பற்றி எத்தகைய சமரசமும் இல்லாமல் தமிழன்பன் எழுதுகிறார். திராவிட இயக்கச் சார்புடையவர் என்று தமிழன்பன் கூறப்பட்டாலும் அந்த இயக்கத்தின் எதிர்மறையான அரசியல் போக்கை மறைமுகமாக விமர்சனம் செய்வதில் அவர் குறை வைத்துக் கொள்வது இல்லை.

தமிழன்பன் தன் கவிதைகளில் கடவுள், மதம், சாதி முதலியவற்றை வகைவகையாக ஓயாமல் சாடுகிறார். கடவுளைப் பற்றிய தமிழன்பன்

5.30.

கவிதைகளைத் தனியே பிரித்து எடுத்து ஒரு தொகுப்பாக வைத்தால் அந்தத் தொகுப்பு தமிழன்பனின் பகுத்தறிவுப் பார்வையை மட்டுமல்லாமல் ஓரளவுக்கு அவருடைய மெய்யியல் பார்வையையும் சிறப்பாக வெளிப் படுத்தும். இதுபோலவே குழந்தைகளைப் பற்றி அவருடைய கவிதை களையும் ஒரு தனித் தொகுப்பாக வகைப்படுத்திப் பார்க்க முடியும். இவற்றோடு இயற்கையின் பல நூறு அழகுகள் பற்றிய அவருடைய கவிதைகள் அற்புதமானவை. மனித வாழ்வின் அர்த்தங்கள் அழகுகள் பற்றி அவர் நிறைய எழுதியுள்ளார். தன் சொந்த ஊர் சென்னிமலை பற்றி நிறைய எழுதுகிறார். சுற்றுச்சூழல் சீர்கேடு பற்றிய அவரது கவிதைகளும் சிறப்பானவை. இப்படி எத்தனையோ வகைகளில் அவருடைய கவிதைகளை வகைபிரித்து, இயலுமானால் தொகுப்பாக வகுத்துப் பார்க்க முடியும். தமிழைப் பற்றிய அவரது கவிதைகள் குறிப்பிடத்தக்கவை. உள்ளடக்கம் என்ற முறையில் அவருடைய கவிதைகளை வகைப் படுத்தும்போது, ஜென் கவிதைகள் என இனம் காணத்தக்க ஏராளமான கவிதைகளை அவர் எழுதுகிறார். பகுத்தறிவு வாதம் மார்க்சியம் என்ற எல்லைகளுக்குள் இவரது மெய்யியல் கவிதைகளை வைத்து ஆராய்வது ஒரு சுவையான ஆய்வாக இருக்கமுடியும். இந்த முறையில் தமிழன்பன் கவிதைகளின் உள்ளடக்கம் குறித்துப் பட்டியலிட்டு ஒவ்வொரு வகைக் கவிதையையும் தனியே வைத்து ஆராய்வதன் மூலம் தமிழன்பன் குறித்து மேலும் சில உண்மைகள் வெளிப்படலாம். தமிழில் புதுக்கவிதை எழுதும் பலரிடமிருந்தும் இவர் எந்த வகையில் வேறுபட்டுத் தனித்தன்மைகளோடு விளங்குகிறார் என்பதும் தெரிகிறது.

புதுக்கவிதை வடிவத்திலும் இவரது தனித்தன்மைகளைச் சிறப்பாக ஆராயமுடியும். புதுக்கவிதை வடிவத்திற்கு வளம் சேர்க்கும் முறையில் ஹைகூ என்ற வடிவத்தில் மட்டுமல்லாமல் சென்ரியு மற்றும் வேறு சில வடிவங்களையும் தமிழுக்கு இவர் தந்துள்ளார். இத்தகைய வடிவங்கள் மூலம் கவிதைக்கும் கவித்துவத்திற்கும் புதிய ஆக்கம் கிடைத்துள்ளதை நாம் பார்க்கவேண்டும்.

ஐம்பது ஆண்டுக்கு மேற்பட்ட தன் கவிதை வாழ்வில் தமிழ்க் கவிதையில் அடிக்கடி உச்சங்களைத் தொடும் முறையில் புதிய புதிய ஆக்கங்களைத் தமிழன்பன் தொடர்ந்து தருகிறார். கவிதையைத் தனக்கு

வாழ்வாக மாற்றிக்கொண்ட ஒருவர் திரும்பத் திரும்பச் சிலவற்றை ஒரே மாதிரியாக எழுதுவதைத் தவிர்க்க இயலாது. இப்படி இவர்கள் எழுதுவது குறித்து இவரை நாம் குறை சொல்வதற்கில்லை. ஒரு கீர்த்தனையைத் தொடர்ந்து திரும்பத் திரும்பப் பாடிப் பயிற்சி பெறுவது ஓர் இசைக் கலைஞனுக்குக் கடமை. எழுதாமல் இருக்க முடியாது என்ற நிலையில் ஒரே மாதிரிக் கவிதைகளைக்கூட ஒரு கவிஞர் எழுதுவதிலிருந்து தப்ப முடியாது. கவிதை தரும் தூண்டலை ஒதுக்க முடியாது. இதற்கப்பால் தமிழன்பனைப் பார்க்கும்பொழுது நாம் வியந்துபோகும் அளவுக்கு எத்தனையோ வகைவகையான உச்சங்களைத் தொடும் முறையில் தன்னை யும் தமிழ்க் கவிதையையும் தமிழன்பன் தொடர்ந்து புதுப்பிக்கிறார். அவர் தொடும் சில உச்சங்கள் நமக்கு எட்டுவதில்லை. அவரோடு சேர்ந்து பறக்கும் திறன் நமக்கில்லை. தொடர்ந்து இக்கவிதைகளைப் படிக்கப் படிக்க நமக்குள்ளும் புதிய சிறகுகள் முளைக்கின்றன. இவ்வகையில் தமிழ்க்கவிதை இவரால் மேம்பட்டிருக்கின்றது.

தமிழன்பனின் கவியரங்கக் கவிதைகள் பற்றி இங்கு மேலும் ஒன்றைக் குறிப்பிடவேண்டும். பாரதி, பாரதிதாசன் போன்ற கவிஞர்களுக்கு மட்டு மல்லாமல் பெரியார், அம்பேத்கர் முதலிய பெரும் சிந்தனையாளருக்குள்ளும் மாபெரும் கவித்துவம் இயங்கத்தான் செய்கிறது. தம் காலச் சமூக, வரலாற்று இயக்கத்தோடு அவர்கள் முரண்பட்டு, அந்த இயக்கத்தின் உள் நுழைந்து அவற்றுக்குள்ளிருந்து புதிய ஆற்றல்களை, புதிய பார்வை களை, புதிய வீச்சுகளை அவர்கள் வெளிக்கொண்டு வருவதோடு அவற்றின் நிறைவாய் அவர்கள் விளங்குகிறார்கள். இவ்வகையில் இந்த மாமனிதர்களுக்குள் இயங்குகிற கவித்துவ வீச்சைக் கண்டறிவதன் மூலம் அத்தகைய வீச்சுகளைத் தமிழன்பன் தனக்குள்ளும் பெறுகிறார். இத்தகைய கணங்கள், தரிசனங்கள் அற்புத அழகோடு திகழ்பவை. இத்தகைய தரிசனங்களை எந்த ஒரு மொழியும் தனக்கு ஒரு புதிய வளமாகச் சேர்த்துக்கொள்ள முடியும்.

தமிழன்பனின் ஒவ்வொரு கவிதைத் தொகுப்பிலிருந்தும் சிறந்தவை என எனக்குத் தோன்றுகிற கவிதைகளைத் தெரிவு செய்து என் பார்வையை வெளிப்படுத்தும்படி இந்தக் கட்டுரைகளை எழுதினேன். எந்த ஒரு கவிதைக்கும் பொருள் சொல்லக் கூடாது என்பது சிலருடைய

கருத்து. அப்படிப் பொருள் சொல்வது கவிதையின் பொருளைக் குறுக்கி விடும் என்று இவர்கள் கருதுகிறார்கள். கவிதை எப்பொழுதுமே வாசகனின் பார்வைக்கு ஏற்ற முறையில் பொருள் தருகிறது. எழுதியதோடு கவிஞனின் பொறுப்பு முடிவடைந்து விடுகிறது. கவிஞன் தன் கவிதையை எப்பொழுதும் சுமந்து கொண்டு திரியக்கூடாது. வாசகனின் சுதந்தர மான வாசிப்பிற்கு அதை விட்டுவிடவேண்டும். வாசகனுக்குள்ளும் ஒரு கவிஞன் இருக்கிறான். வாசிக்கும்பொழுது அவன் தனக்குரிய கவிதையாக வாசித்துக்கொள்ள வேண்டும். வாசகனின் பார்வையை யாரும் மறக்கக்கூடாது. கவிதையும் தனக்கேயான உயிர் கொண்டது. அதற்கான சுதந்தரத்தை யாரும் தடுக்கக் கூடாது.

இப்படி நண்பர்கள் கூறுகிறார்கள். இந்தக் கருத்தில் எனக்கும் உடன்பாடு இருக்கிறது. அப்படியானால் தமிழன்பன் கவிதைகள் குறித்து நான் ஏன் எழுதவேண்டும்? பதவுரை, பொழிப்புரை என்று எழுதுவது புலவர்களின் முறை. மரபு முறையில் ஆசிரியர்கள் நமக்கு இப்படித்தான் கவிதைகளைக் கற்பித்தார்கள். கவிஞரின் கருத்து என்ன? நோக்கம் என்ன? அதை மாணவர்கள் புரிந்துகொள்ள வேண்டும். படைத்தவன் அறிவு மிக்கவன். மாணவன் அறிவில் குறைந்தவன். இடையிலிருந்து ஆசிரியர் கவிதைக்குப் பொருள் சொல்லுகிறார். இந்தப் பாணியில்தான் நான் எழுதுகிறேனா? இப்படி எழுதுவது என் நோக்கம் இல்லை. நானும் ஒரு வாசகனாக இருந்துதான் தமிழன்பன் கவிதையை எனக்குள் வைத்து வாசிக்கிறேன். என் பார்வையை வெளிப்படுத்துகிறேன். சிக்கலான கவிதை என்று சில கவிதைகளை வாசகர்கள் ஒதுக்கிவிடக்கூடும். கூடியவரை இவ்வகைக் கவிதைகளைத்தான் நான் தெரிவு செய்து கொள்கிறேன்.

மேலும் ஒன்று; வாசகனின் சுதந்தரத்திற்குக் கவிதையை விட்டு விடவேண்டும் என்று சொல்வதில் ஓர் ஆபத்தும் இருக்கிறது. தன் புரிதலுக்கு உட்படாத கவிதையை அவன் ஒதுக்கிவிடக்கூடும். இந்த வாசகனுக்கு என் வாசிப்பு உதவக்கூடும். அன்றியும் நான் ஒரு வாசகனாக மட்டும் இல்லை. எனக்குள் ஒரு திறனாய்வாளன் இருக்கிறான். கொஞ்சம் வரலாறு, தத்துவம் என நானும் படித்திருக்கிறேன்.

மார்க்சியத்தை நான் ஆழமாகக் கற்றிருக்கிறேன். கவிதை என்பது சொற்களைக் கடந்து இயங்கக்கூடியது. கவிஞனுக்குள்ளும் வாசகனுக்

குள்ளும் கவிதையின் இயக்கம் என்பது ஆழமானது – ஆழ்ந்த பொருள் உடையது. கவிதை என்பதன் உள்ளியக்கத்திற்குள் செல்லும்பொழுது நான் தனிமனிதனாக இருப்பதில்லை. நான் ஒரு சமூக மனிதன் ஆகிறேன். வரலாற்று இயக்கத்தைத் தொட்டுக் கொள்கிறேன். வரலாறு எனக்குள்ளும் இயங்குவதை உணருகிறேன். எனக்குள் இப்பொழுது காலம் அறுபடுகிறது. எனக்குள் வள்ளுவரையும் இளங்கோவையும் சந்திக்கிறேன். ஏசுவையும் புத்தரையும் சந்திக்கிறேன். வரலாற்றின் முரண்களுக்குள் நானும் இருக்கிறேன். பொருளும் பணமும் எனக்கு நிம்மதி தருவதில்லை. நான் மனிதனாக வேண்டும். எல்லா உயிர்களோடும் நான் கலந்து நிற்கிறேன். வரலாற்று இயக்கத்தினுள் என்று மட்டுமல்லாமல் பிரபஞ்ச இயக்கத்தோடும் நான் இருக்கிறேன். சமத்துவமும் சமதர்மமும் என் வாழ்வுக்கான அர்த்தங்கள்.

இப்படித்தான் கவிதைக்குள் என் பயணம் நிகழ்கிறது. நான் இப்பொழுது நானாக இல்லை. நீங்களும் என்னோடு இருக்கிறீர்கள். நமக்குள் வேறுபாடு இல்லை. ஏற்றத்தாழ்வு இல்லை. இந்த உணர்வைப் பெறுவதற்குத்தான் நான் கவிதைக்குள் செல்கிறேன். இத்தகைய உணர்வு மெய்யியல் உணர்வு. கவிதை என்பது இறுதியில் மெய்யியல் உணர்வில் கரைகிறது. கவிதைப் பயணம் இதுவரை இயங்கவேண்டும். வெறும் சுவை உணர்வு தேடிக் கவிதைக்குள் செல்பவன் இந்த உணர்வைப் பெறமுடியாது. சுவைஞனாக இருப்பவன் நுகர்வை மட்டும் விரும்புபவன். இவன் எடுப்பார் கைப்பிள்ளை. இவனுக்குக் கவிதை என்பது ஒரு தீனி. இவனை வைத்துக் கொண்டு யாரும் வணிகம் செய்யலாம். இவன் தன்னை விற்றுக் கொள்பவன். இவனுக்கு விடுதலை இல்லை. கவிதை இரசிகர்கள் என்பவர்கள் இப்படித்தான் இருக்கிறார்கள். இதனால்தான் கவிதை நூல்கள் ஏராளமாய் விற்பனை ஆகின்றன.

கவிதை என்பது ஓர் ஆற்றல். கவிதையின் உள் இயக்கம் கவித்துவம். இந்தக் கவித்துவத்தைக் தனக்குள் கண்டவன் ஓய்ந்திருக்க மாட்டான். இவனுக்கு நல்ல உறவுகள் வேண்டும். உலகமே இவனுக்கு வேண்டும். சமத்துவமும் சமதர்மமும் இல்லாமல் இவனுக்கு முடியாது. இப்பொழுதுதான் என்னைப் பற்றிச் சொல்லிக்கொள்ளலாம். மார்க்சியனாக இருப்பதனால்தான் எனக்குள் கவிதைப் பயணம் இவ்வளவு விரிவாகிறது.

என்னோடு தமிழ் வாசகனை, கவிதை வாசிப்பவனை இணைத்துக் கொள்ள விரும்புகிறேன். அந்த வாசகனுக்கு வாழ்க்கை, வரலாறு, தத்துவம் முதலியவற்றைக் கற்றுக்கொள்ள உதவிசெய்ய விரும்புகிறேன்.

ஒருமுறை நண்பர் பழமலை என்னைப் பற்றி இப்படிக் கூறினார். "ஒரு சின்ன செடி கிடைத்தாலும் அதன் நிழலில் நீ உன் துண்டை விரித்துப் படுத்துக்கொள்கிறாய்"– உண்மைதான். என்னைச் சரியாகப் புரிந்துகொண்டுதான் நண்பர் கூறியிருக்கிறார். தமிழன்பன் கவிதை களையும் நான் இப்படித்தான் எடுத்துக் கூறுகிறேன். என் பார்வையும் தமிழன்பனின் பார்வையும் ஒத்தும் வரலாம்; வேறுபடவும் செய்யலாம். அல்லது முரண்படவும் கூடும். இதுபற்றி நண்பர்கள்தான் முடிவு செய்ய வேண்டும். தமிழன்பன் கவிதைகள் எனக்கு இதமாக இருக்கின்றன. அவர் கவிதைகளின் வழியே கவித்துவத்தின் உச்சங்களை நானும் தொடுகிறேன். சில சமயம் அவர் கவிதைகளுக்குள் பயணம் செய்யும் பொழுது எனக்குள் புள்ளியாய் இருக்கிற கவிதையை விரிவுபடுத்திக் கொள்கிறேன். எனக்குள் நானும் கவிஞனாகிறேன். தமிழ்க் கவிதையின் உள் ஆழங்களைக் கண்டறிகிறேன். ஒரு வகையில் தற்காலத் தமிழ் மாணவர்களுக்கு, குறிப்பாக தமிழ் இலக்கிய மாணவர்களுக்கு, கவிதை எப்படி வாசிப்பது என்பதைக் கற்றுக்கொள்ள என் கட்டுரைகள் பயன் படலாம். ஆங்கில இலக்கியத் திறனாய்வாளர் மாத்யூ ஆர்னால்டு இப்படிக் கூறினார்:

"எதிர்காலத்தில் சமயத்தின் இடத்தைக் கவிதை கைப்பற்றிக் கொள்ளும்." உண்மைதான். சமயம் நமக்கினி பயன்படுமா என்பது குறித்து இப்பொழுது ஐயப்பாடுகள் பெரிதாக எழுந்துள்ளன. இந்த நிலையில் கவிதை நமக்குப் பெரிதாகப் பயன்படும். கவிதை இல்லாமல் நாம் வாழ முடியாது. அதே நேரம் அறிவியலும் தொழில் நுட்பமும் வாழ்வின் அடித்தளத்தை அதிர வைத்துக் கொண்டிருக்கும் இன்றைய நிலை:பில் நாம் இயற்கையை, மனித உறவுகளை, மனித வாழ்வின் அர்த்தங்களை, அழகைக் காத்து வைக்க வேண்டும். மனிதன் தனக்குள் பிளவுபட்டு நொறுங்கிவிடக் கூடாது. இவற்றுக்கெல்லாம் கவிதை பயன்படும். தாகூர் ஒருமுறை கூறினார், "எனது சமயம் கவிஞனின் சமயம்" என்று. கவிஞன் தனக்கான உலகைப் படைத்துக் கொள்கிறான். இந்த உலகில்

ஏற்றத் தாழ்வுகள் இல்லை, போர்கள் இல்லை, ஆதிக்கங்கள் இல்லை, அன்புக்கு மட்டுமே இடமுண்டு. இது நாம் காண விரும்புகிற உலகம். தமிழன்பன் கவிதை வழியே தமிழைக் கற்றுக்கொள்கிறோம். வாழ்வைக் கற்றுக்கொள்கிறோம். இதற்கு என் கட்டுரைகள் பயன்படலாம்.

பாரதியை ஒரு மகாகவி என்பதை இன்று எல்லோரும் ஒப்புக் கொள்கிறோம். பாரதி ஓயாமல் சுட்டிக்காட்டிய வள்ளுவரையும் இளங்கோவையும், கம்பரையும் தமிழின் மகாகவிகளெனத் தடையில்லாமல் நாம் ஒப்புக் கொள்கிறோம். ஔவையாரைப் பாரதி பெரிதும் உவந்து பாராட்டியிருக்கிறார். இதன் காரணமாக ஔவையும் ஒரு பெருங் கவிஞர். மகாகவி என ஒருவரை ஆய்வாளர்கள் ஏற்பதற்கு அவரது கவித்துவ வீச்சு மட்டும் போதுமென்று தோன்றவில்லை. ஒரு மொழியின் வரலாற்றில் அவர் பெற்றுள்ள இடம் கவிதையில் மட்டுமல்லாமல் அவர் தோன்றியுள்ள சமூகத்தின் வாழ்வியலுக்கு அவர் தந்த திருப்பம் முதலியவற்றையும் வைத்தே ஒருவரை மகாகவி என மதிப்பிடுவது பொருந்தும். இத்தகைய பார்வையை முன்நிறுத்தி ஆராய்கிறபோது பாரதி சுட்டிக்காட்டியபடியே வள்ளுவர், இளங்கோ முதலியவர்களும் தமிழ் வாழ்வின் முக்கியமான திருப்பங்களில் தோன்றியவர்கள்; தமிழ் வாழ்வுக்குத் தேவையான திருப்பங்களைச் சுட்டியவர்கள் என்பதை உறுதியாகச் சொல்ல முடியும். இத்தகைய அடிப்படையை வைத்துத் தமிழின் நெடுங்கால வரலாற்றில் வேறு எவரையெல்லாம் மகாகவிகளென நாம் தெரிவு செய்ய முடியுமா? என்பது ஆழமான ஆய்வுக்குரியது. பாரதியை மையத்தில் நிறுத்திய மகாகவி என்பதை நிர்ணயிப்பதற்கான இத்தகைய தரத்தை நாம் உருவாக்குகிறோம்.

வேறு வகைத் தரங்களை உருவாக்குவது தேவை என்று சிலர் கருதக்கூடும். சேக்கிழாரை சிலர் மகாகவி எனக் குறிப்பிடுகின்றனர். இதற்கான தரத்தை நாம் வகுத்தாக வேண்டும். சேக்கிழார் மட்டு மல்லாமல் திருத்தக்கதேவர், குமரகுருபரர், கொங்குவேளிர் முதலிய வர்களையும் தமிழின் பெருங்கவிஞர்கள் என்று ஐயத்திற்கிடமில்லாமல் கூறலாம். இருபதாம் நூற்றாண்டுச் சூழலில் சமூகம், வரலாறு, விடுதலை முதலிய பார்வைகள் முன் வந்த நிலையில் பாரதியின் மூலம் நமக்குக் கிடைக்கிற அளவுகோல்களை முன் வைத்திருக்கிறோம். மகாகவி

என்பதற்கு வேறு தரவுகளை உருவாக்குவதன் தேவை குறித்து நாம் ஆராயத்தான் வேண்டும்.

இந்தச் சிக்கலை இங்கு நாம் எழுப்பவேண்டியதன் தேவை என்ன என்ற கேள்விக்கு நாம் பதில் காண வேண்டும். தமிழில் நம் காலத்தில் மகாகவி எனக் கூறுவதற்கான தகுதி யாருக்கு உண்டு என்று சிலர் கேள்வி எழுப்புகிறார்கள். சில ஆண்டுகளுக்கு முன்பு கவிஞர் அப்துல்ரகுமான் அவர்களை நோக்கி ஒரு கேள்வியை நண்பர் கேட்டார். 'இப்பொழுது பாரதி, பாரதிதாசனைப் போலப் பெருங்கவிஞர்கள் யாருமில்லையே; அதற்கென்ன காரணம்' என்று கேட்ட நண்பருக்குக் கவிஞர் அப்துல்ரகுமான் இவ்வாறு பதில் கூறினார்: "தேசவிடுதலை என்ற பேரியக்கம் பாரதிக்குப் பின்புலமாக அமைந்தது; திராவிட இயக்கம் என்ற பேரியக்கம் பாரதிதாசனுக்குப் பின்புலமாக அமைந்தது. இவை விடுதலை இயக்கங்கள். இத்தகைய பேரியக்கங்கள் ஒரு பெருங் கவிஞனைத் தோற்றுவிக்கின்றன." இப்படிக் கூறிய அப்துல்ரகுமான் மேலும் கூறினார்: "தற்காலத்தில் நமக்கிடையில் பேரியக்கங்கள் இல்லை. ஆகவே பெருங்கவிஞர்கள் நம்மிடையில் தோன்றவில்லை."

கவிஞர் அப்துல்ரகுமான் கூறுவது எந்த அளவுக்குச் சரியென்பது ஆய்வுக்குரியது. அப்துல்ரகுமான் அவர்களின் பார்வை ஒரு முக்கியமான உண்மையைப் புலப்படுத்துகிறது. ஒரு தேசம் தன் விடுதலைக்காகப் போராடுகிறது என்றால் இதற்கு என்ன பொருள்? ஏற்றத் தாழ்வுகளும் சமூக முரண்பாடுகளும் பண்பாட்டு நெருக்கடிகளும் உச்ச அளவில் இருக்கிற ஒரு சூழலில் பல்வேறு சிக்கல்களும் ஒரு குவிமையத்திற்கு வந்து கொதிக்கத் தொடங்குகின்றன. அரசியல், பொருளியல், பண்பாடு முதலிய அனைத்துக் களங்களிலும் முரண்பாடுகள் கூர்மைப்பட்டிருக் கின்றன. இந்தச் சிக்கல்கள் அனைத்தையும் தனக்குள் உணர்ந்து முரண்பாடுகளில் தானும் அகப்பட்டு, கொதித்துக் குமுறித் தனக்குள் தானே வெடித்துச் சிதறுகிற ஒரு கொதி நிலையைத் தனக்குள் உணர்ந்து, இந்தச் சூழலுக்கு எதிரான எதிர் வினையில், போராட்டங்களில் தன்னை இணைத்துக் கொள்கிற ஒருவர், அவர் கவிஞர் என்றால் அவர் பெருங் கவிஞராக முடியும். இத்தகையவர்தான் பாரதி. இதில் ஐயமில்லை.

அனைத்து முரண்களும் ஒருமுகப்பட்டு அந்த ஒருமையிலிருந்து விளைந்தவர் பாரதி. ஆகவே அவர் பெருங்கவிஞர்.

பாரதிதாசனும் இப்படிப் பலவகை முரண்களோடு உருவானவர். இவை பாரதிதாசனுக்குள் வெடித்தன. ஆகவே அவர் மிகச் சிறந்த கவிஞர். இந்த முரண்கள் அனைத்தும் அவருக்குள் ஒருமுகப்பட்டன என்று உறுதியாகச் சொல்வதிற்கில்லை. பாரதிக்குள்ளிருந்து வெளிப்பட்ட வீச்சுகளைப்போலப் பாரதிதாசனுக்குள் புதிய பல வீச்சுக்கள் வெளிப்பட்டன. பாரதி பாடாத சில பொருள்கள் பாரதிதாசனால் பாடப்பட்டன. தன்காலத் தேவையை அதிக அளவில் உணர்ந்ததோடு வெளிப்படுத்தியவர் பாரதிதாசன்.

இனி நம் காலத்திற்கு வருவோம். தமிழில் தோன்றிய புதுக்கவிஞர்கள் எனப்படுபவர்களில் யார் பெருங்கவிஞர்? யார் மகாகவி? தமிழகச் சூழலில் சிலரைக் கவியரசு என்றும், கவிப்பேரரசு என்றும், கவிக்கோ என்றும் குறிப்பிடுகிறோம். பெருங்கவிக்கோ என்றும் குறிப்பிடுகிறோம். இத்தகைய அடைமொழிகள் இவருக்கான சிறப்புப் பெயரா? பட்டமா? யார் தந்தார்கள்? இவற்றிற்கு என்ன பொருள்? என்றெல்லாம் ஆராய்வது நமக்குத் தேவையில்லை. இந்தச் சொற்கள் வழியே சிலரது தற்பெருமை, சாகசம் முதலியவை வெளிப்படுகின்றன. இவற்றை ஆராய்வதைவிட இவர்களை ஒதுக்கிவிட்டுக் கவிஞன் என்ற அடைமொழியோடு சொல்வது போதும் என்பது என் கருத்து.

மகாகவி என்ற வடமொழித் தொடரைத் தமிழில் பெருங்கவிஞர் என்று சொல்வது சரி என்று வைத்துக்கொண்டாலும் இரு தொடர்களும் ஒரு பொருளைச் சுட்டுவதாகவும் சொல்வதற்கில்லை. ஷேக்ஸ்பியர், காளிதாசர், வியாசர் என்ற தரப்பிலிருப்பவர்களை மகாகவிஞர்கள் எனக் குறிப்பிடலாம். ஷெல்லி போன்றவர்களின் தரத்திலுள்ளவர்கள் பெருங்கவிஞர்கள். இப்போதைக்கு இப்படி ஒரு வேறுபாட்டை வைத்துக் கொண்டு மேலே சிலவற்றை நாம் சொல்லலாம். தமிழில் புதுக்கவிஞர்கள் எனச் சொல்லப்படுபவர்களில் நா. பிச்சமூர்த்தி உள்பட பலரைப் பெருங் கவிஞர்கள் எனக் குறிப்பிடலாம். ஐயத்திற்கிடமில்லாமல் தமிழன்பனும் பெருங்கவிஞர். அப்துல்ரகுமான், சிற்பி ஆகியோரும் இவ்வகையில் அடங்குவர்.

தேசவிடுதலை என்பது ஒரு கட்டம்; திராவிட இயக்கம் இன்னொரு கட்டம். இவற்றின் மூலம் நம் மக்களுக்கு என்ன விடுதலை கிடைத்தது? எத்தகைய விடுதலை கிடைத்தது? என்றெல்லாம் இப்போது கூர்மை யாகவே நாம் கேள்வி எழுப்புகிறோம். கடந்த சில பத்தாண்டுகளில் உலக அளவில் முரண்பாடுகள் முற்றி வருகின்றன. சோவியத் ஒன்றியத்தின் தகர்வு என்பது மார்க்சியத்திற்கான தகர்வு என்று கூறுவதற்கில்லை. சந்தைப் பொருளாதாரம் என்ற முறையில் நெருக்கடிகள் முற்றி வருகின்றன. இந்திய அளவில் ஏற்கனவே இருந்து வருகிற பலவகை முரண்பாடுகள் சந்தைப் பொருளாதாரம் என்ற சூழலில் உச்ச நிலைக்கு வந்துள்ளன. இந்தியாவின் அரசியல் சட்டம் கேள்விக்குரியதாக, கேலிக் குரியதாகவும் மாறியிருக்கிறது. சாதி, மத மோதல்கள் உச்ச அளவுக்கு வந்துள்ளன. அடித்தள மக்கள் அனைவரும் நம் சமூகத்தின் விளிம்பு நிலைக்குத் தள்ளப்படுகின்றனர். வாழ்வுக்கான அனைத்து ஆதாரங்களும் இவர்களுக்கு மறுக்கப்படுகின்றன. அரசு அதிகாரத்தின் பயங்கரம் உச்ச அளவில் இருக்கிறது. இந்துத்துவம் வெறிபிடித்து அலைகிறது. எல்லாக் கட்சிகளும் முதலாளியத்தின் பிடிப்புக்குள் இருக்கின்றன. தமிழ் நாகரிகம் கேள்விக்குரியதாக மாறி வருகிறது.

இந்த நெருக்கடிகள் குறித்து மேலும் விவரிக்க வேண்டியதில்லை. இத்தகைய சூழல்தான் பெருங்கவிஞர்களைத் தோற்றுவிக்கக்கூடிய சூழல்கள். நம் கவிஞர்கள் இந்தச் சூழலுக்கு எதிர் வினைகளைத் தரும் முறையில் செயல்படுகின்றனர். எனினும் இது போதாது என்பது வெளிப்படை. அனைத்து முரண்பாடுகளையும் தனக்குள் உள்வாங்கி ஒருமுகப்பட்டு, தனக்குள் வெடித்துக் கவித்துவ வீரியத்தோடு வெளிப்படும் மகாகவி இன்று நமக்குத் தேவை. எத்தனையோ தமிழ்க் கவிஞர்களைக் காட்டிலும் கூடுதலான அளவில் பன்முகப் பார்வையோடு செயல்படும் முறையில் தமிழன்பனிடம் கவித்துவ வீரியம் உச்ச அளவில் வெளிப் படுகிறது. இதன் காரணமாகப் பெருங்கவிஞர் என ஐயத்திற்கிடமில்லாமல் இவரைக் குறிப்பிடுவதோடு நிறுத்திக் கொள்வோம். கூடவே ஒன்றைக் குறிப்பிடவேண்டும். தமிழில் இன்று எழுதுகிற மூத்த கவிஞர்களையும் இளைய கவிஞர்களையும் ஒருசேரப் பார்க்கும்பொழுது தமிழின் கவிதை வளம் பற்றி நாம் மிகுந்த மகிழ்ச்சி அடையமுடியும்.

மகாகவிக்குரிய பல்வேறு கூறுகள் இவர்களுக்குள் சிதறிக் ..க்கின்றன. இவை ஒருமுகப்படுவதற்கான சூழல் இருந்தபோதிலும் ..வற்றை ஒருமுகப்படுத்துவதற்குத் தேவையான மெய்யியல் தெளிவும் ..லாற்று அறிவும் இவர்களுக்குள் திரளவில்லை. கவிஞர் என்ற ..ருமையோடு இவர்கள் நிறுத்திக் கொள்கிறார்கள். சமூகத்தில் எழுந்து ..ரும் கொதிப்பில் இவர்கள் தங்களை எரித்துக் கொள்ளவில்லை. ..நவேளை இதற்கான விடுதலை இயக்கம் உருவாகவில்லை அல்லது ..த்தகைய விடுதலை இயக்கத்தை இவர்களால் புரிந்துகொள்ள ..யலவில்லை என்றும் எண்ணத் தோன்றுகிறது. பெரும்பாலான கவிஞர்கள் ..த்தர மக்களிலிருந்து வந்தவர்கள். இதுவும் ஒரு காரணமாக ..ருக்கக்கூடும். திராவிட இயக்கமும் சரி, மார்க்சிய இயக்கமும் சரி ..னக்குள் பதிந்திருக்கிற முதலாளியக் கூறுகளைத் தேவையான ..றிகளோடு களைந்து கொள்ளவில்லை. பெரியாரிய இயக்கமும், ..ர்க்சிய இயக்கமும் ஒரு தளத்தில் இன்னும் இணையவில்லை. இப்படி ..ணையும்போது தலித்தியம் என்றோ பெண்ணியம் என்றோ தனித்துப் ..சவேண்டியதும் இல்லை. பின்நவீனத்துவம் என்று சொல்லக்கூடிய ..றுகள் நமக்கு எதிரானவை அல்ல. ஆக்க முறையில் இவற்றை அணுக ..டியுமானால் மார்க்சியத்திற்கு இவை வளம் சேர்க்க முடியும். **..மிழன்பன் கவிதைகளுக்குள் உச்ச அளவில் பெரியாரியத்தையும் ..தே அளவில் மார்க்சியத்தையும் காண்கிறோம். இவை ஒரு ..ளத்தில் இணையவில்லை. தலித்தியம் என்றும், பெண்ணியம் ..ன்றும் தமிழன்பன் பேசுவதில்லை என்றபோதிலும் தமிழன்பன் ..விதைகளுக்குள் இவை நிறைவாகவே உள்ளன. இந்நிலையில் ..ரு மகாகவி என்று மதிப்பதற்கான தகுதியைத் தமிழன்பன் ..நருங்கமுடிகிறது என்று சொல்லலாம்.**

ஆங்கிலப் பெருங்கவிஞராகிய டி. எஸ். எலியட் ஒரு கவிஞராக ..ருந்த அதே சமயத்தில் ஆற்றல் மிக்க திறனாய்வாளராகவும் இருந்தார். ..ந்த ஒரு கவிஞரும் தான் ஒரு கவிதையைப் படைக்கும்பொழுதே ..ந்தக் கவிதை தனக்குள்ளிருந்து எப்படித் தோன்றியது என்பது ..றித்தும் எந்த உணர்விலிருந்து தனக்குள்ளிருந்து வெளிப்படும் ..விதையை எத்தகைய வடிவத்தில் தான் எழுதினேன் என்பது பற்றியும் ..ரிந்துகொள்ள முடியும்; எழுதிப் பார்க்கவும் முடியும். கவிதையின் உள்

இயக்கம் என்பது தனக்குள் எந்தத் தளத்தில், எத்தகைய வாழ்வியல் அனுபவத்திலிருந்து தோன்றியது என்பது பற்றியும் கவிஞர் அறிந்து கொள்ளவேண்டும். தனக்கான வாழ்வியல் அனுபவம் என்பது தனக்கே உரிய அனுபவமாகவும் இருக்க முடியாது. அதற்கான வேர்கள்தான் வாழும் சமூகத்தினுள் இருக்கின்றன. சமூகச் சூழல் என்பது வரலாற்று இயக்கத்தின் ஒரு பகுதி. தமிழ்நாட்டின் வரலாற்றுச் சூழலை வைத்துப் புரிந்துகொள்ள வேண்டும். இந்திய வரலாறு என்பது உலக வரலாற்றின் ஒரு கூறு. வரலாறு என்பதும்கூட ஒரு வகையில் கட்டமைப்பு. மனித வரலாறு என்பது, உயிரினங்களின் பரிணாமத்தோடு உறவுடையது. ஆகவே ஒரு கவிஞன் தனக்குள் ஒரு சந்தர்ப்பத்தில் தோன்றிய உணர்வைக் கவிதையாக வெளிப்படுத்திவிட்டேன் என்று இருந்துவிட முடியாது. கவிதைக்கான உள்ளியக்கம் எனத் தொடங்கி இறுதியில் தன்னைப் புரிதல்வரை அவனது சிந்தனை விரிவு பெறவேண்டும். எந்த ஓர் அனுபவத்தையும் புரிந்துகொள்வதற்கான பார்வை என ஒன்று இருக்கிறது. இந்தப் பார்வை பற்றிய ஆய்வு அவனைத் தத்துவம் என்ற தளத்திற்குள் செலுத்தவேண்டும். ஆய்வு என்பது இந்த அளவில் நிறைவு பெறுவதுமில்லை. ஆய்வு பல திசைகளில் வாழ்நாள் முழுவதும் தொடர வேண்டும். இடையில் புதியவகை ஆய்வு முறைகளும் வந்து சேருகின்றன. அப்பொழுது எல்லாவற்றையும் மறு ஆய்விற்கு உட்படுத்த வேண்டும். இத்தகைய மறு ஆய்வுகள் சில சமயம் நம் உயிரைக் கலங்கடிக்கும் ஆய்வுகளாகவும் இருக்கக்கூடும். துணிவில்லாமல் இவ்வகை ஆய்வைத் தொடரவும் முடியாது.

டி. எஸ். எலியட் என்ன கூறினார் என்பது பற்றி இப்பொழுது பார்க்கலாம். ஒரு மொழியில் ஒரு பெருங்கவிஞன் தோன்றிய பிறகு அந்த மொழி இலக்கியத்தின் வரலாறு முழு அளவில் வேறுபடுகிறது. அதாவது பாரதி என்ற பெருங்கவிஞன் தோன்றிய பிறகு அவனது ஆற்றல் மிகுந்த பார்வைக்கு நாம் வசப்படுகிறோம். அப்படி வசப்பட்ட நிலையில் பாரதிக்கு முற்பட்ட தமிழிலக்கியம் முழுவதையும் பாரதி வழியே –நமக்குள் பதிந்த பார்வையின் வழியே பார்க்கிறோம். இப்பொழுது தமிழிலக்கியம் நமக்குள் ஒரு புதிய வரலாறாகிறது. இடைக்காலத்தில் புறக்கணிப்புக்குள்ளான சில இலக்கியங்கள் மேலுக்கு வருகின்றன. சங்க இலக்கியம் முன்னிலைக்கு வருகிறது. சமய இலக்கியங்கள்

ன்னிலைக்குச் செல்கின்றன. இப்படித்தான் பாரதி என்ற பெருங்கவிஞன் தோன்றிய பிறகு தமிழிலக்கியம் மாறுதல் அடைகிறது.

இந்தப் பார்வையைத் தமிழிலக்கிய வரலாற்றின் வேறு சில கட்டங் களுக்கும் பயன்படுத்திப் பார்க்கலாம். வள்ளுவரின் தோற்றத்திற்குப் பிறகு ங்க இலக்கியம் புதுப் பார்வை பெற்றிருக்கக்கூடும். சேக்கிழாரின் தாற்றத்திற்குப் பிறகு சங்க இலக்கியம் மட்டுமல்லாமல் சமண, பௌத்த லக்கியங்களும் பின்னிலைக்குச் சென்றிருக்கக்கூடும். இப்பொழுது ம் காலத்தில் நாம் என்ன செய்கிறோம்? பின் நவீனத்துவம் கூறுகிறபடி றுவாசிப்பு என்ற அணுகுமுறை மூலம் இலக்கியங்கள் மட்டுமல்லாமல் ரலாறு, தத்துவம், பண்பாடு முதலிய எல்லாவற்றையும் மறுவாசிப்புக்கு ட்படுத்துகிறோம். டி. எஸ். எலியட்டின் கருத்துரையை இப்படி நாம் மிழ்ச் சூழலில் வைத்துப் புரிந்து கொள்ளமுடியும்.

தமிழன்பன் ஒரு பெருங்கவிஞர். கவிதை பற்றியும் இலக்கியம் ற்றியும் தனக்கான பார்வையைக் கொண்டிருக்கிறார். பெரியார் ியத்திலும், மார்க்சியத்திலும் இவர் ஈடுபாடு கொண்டிருக்கிறார். இவற்றின் வழியே வாழ்வியல், சமூகம், வரலாறு என்றெல்லாம் னக்கே உரிய பார்வையை இவர் கொண்டிருக்க முடியும். டி. எஸ். எலியட் னக்குள் செறித்துக்கொண்ட கவிதை மற்றும் இலக்கியப் பார்வையின் வழியே ஆங்கில இலக்கியம் என்ற முழுமையின்மீது தன் பார்வையைச் செலுத்தி முழுமையான ஆங்கில இலக்கியத்திலிருந்து தனது வரையறைகளின் வழியே கவிதைத் தொகுப்பொன்றை உருவாக்க முனைந்தார். ஆங்கில இலக்கியத்தில் சாதனை புரிந்த பல கவிஞர்கள் பற்றித் தன் பார்வையை உருவாக்கினார். ஆங்கில இலக்கிய வரலாற்றைத் தன் பார்வையில் புதியதாகப் பார்த்தார்.

தமிழன்பனும் இப்படித் தமிழ் இலக்கியத்தின் மீது பார்வை செலுத்தித் தன் பார்வையின் ஆதாரத்தில் ஒரு தமிழிலக்கியத் தொகுப்பை, தமிழிலக்கிய வரலாற்றைப் படைக்க முடியும். தமிழில் தனிப்பாடல்கள் குறித்து இவர் செய்த ஆய்வு குறிப்பிடத்தக்கது. இத்தகைய ஆய்வுத் திறம் மிக்க இவர் தமிழின் கவிதை வரலாற்றைத் தன் பார்வையில் படைக்கும் திறம் உடையவர் என்பதை மெய்ப்பிக்கிறது. தமிழன்பன்

மட்டுமல்ல, தற்காலத்தில் தமிழ்ப் படைப்பியக்கத்தோடு ஆழமான உறவுடைய எவரும் இத்தகைய ஆய்வின் மூலம் தமிழ் இலக்கியத்திலிருந்து புதிய ஆற்றல்களைப் புதிய வெளிச்சங்களைத் தரமுடியும்.

ஆற்றல் மிகுந்த எந்த ஒரு கவிஞரும் தனக்கே உரிய திறனாய்வுப் பார்வை இல்லாமல் புதியது புதியதாகக் கவிதை செய்யமுடியாது. தன் ஐம்பது ஆண்டுக் கவிதை வரலாற்றில் தொடர்ந்து தமிழ்க் கவிதையைப் புதுப்பித்துக் கொண்டு வருபவர் தமிழன்பன். புதிய கருப்பொருள்கள், புதிய வடிவங்களென எவ்வளவோ படைத்து வருகிறார். கவிதை எழுது வதில் இவர் வெளிப்படுத்தும் ஆற்றலைத் தன் கவிதை இயக்கம் குறித்த பார்வையைப் பற்றிய ஆய்வாகச் செய்யவில்லை. கவிதையோடு தனக்குள்ள உறவு குறித்துக் கொஞ்சம் கவிதைகளில் எழுதியிருக்கிறார். இது போதாது. உரைநடையில் விரிவாக எழுதுவேண்டும். உலக அளவிலான எத்தனையோ பெருங்கவிஞர்கள் பற்றி இவர் படித்திருக்கிறார். ஆய்வு செய்திருக்கிறார். ஆங்கில இலக்கியத் திறனாய்வோடும் பயிற்சி உடையவர். ஆகவே முதலில் தன் கவிதை இயக்கம் குறித்து இவர் விரிவாக எழுதவேண்டும். அதைத் தொடர்ந்து தமிழின் கவிதை இலக்கிய வரலாறு குறித்தும் எழுதவேண்டும். எதிர்காலத்திற்குத் தமிழை, தமிழ் இலக்கியத்தைக் காப்பாற்றி வைக்கிற கடமை நமக்கு உண்டு. தமிழன்பன் முதலியவர்களும் இத்தகைய படைப்பு களின் மூலம் தமிழிலக்கியத்தை நம் காலத்திற்குரியதாக மாற்றித் தர முடியும்.

தமிழன்பன் அவர்களோடு எனக்கான அனுபவம் ஒன்றை இங்குக் குறிப்பிடவேண்டும். தமிழன்பனின் அனைத்துக் கவிதை நூல்கள் பற்றியும் நான் எழுதி வருகிறேன். சிறந்த கவிதைகளென எனக்குத் தோன்றும் கவிதைகள் பற்றி என் பார்வையை வெளிப்படுத்தி எழுதுகிறேன். இவற்றிற்கான எதிர்வினை என்னவாக இருக்கமுடியும் என்று தமிழன்பன் அவர்களிடம் நான் ஒவ்வொரு முறையும் எதிர்பார்க்கிறேன். என்னைப் பாராட்டிச் சொல்வதில் அவர் குறை வைத்துக்கொள்வதில்லை. ஆனால் எனக்கு இது போதாது. எவர் ஒருவருடைய படைப்பைக் குறித்தும் நான் எழுதுவது என்பதன் மூலம் என் பார்வையை விரிவு செய்து கொள்கிறேன். புதிய பார்வைகளைக் கற்றுக் கொள்கிறேன். எந்தச் சமயத்திலும் நான் ஒரு மாணவன் என்பதற்குமேல் எந்த ஒரு பாராட்டையும் நான் ஏற்பதில்லை.

ழன்பன் அவர்களிடமிருந்தும் நான் கற்றுக் கொள்கிறேன். இரண்டொரு தர்ப்பங்களில் மட்டும் எனக்குப் புரியாத அவரது சில கவிதைகள் றிக் கேட்டபோது அற்புதமாய் எனக்குச் சில விளக்கங்கள் தந்தார். தன் மூலம் நான் ஓர் உண்மையைப் புரிந்து கொள்கிறேன். தமிழன்பன் ன் கட்டுரைகள் பற்றித் தன் விரிவான கருத்தை எழுத்தில் டக்கவேண்டும். இப்படிச் செய்வதன் மூலமும் என் அறிவை மட்டுமல்ல, மிழிலக்கிய மாணவர்களின் அறிவை விரிவு செய்ய முடியும். இதற்கான தகுதி தமிழன்பன் அவர்களுக்கு உண்டு.

இப்படியெல்லாம் தமிழன்பனைப் பற்றி நான் எழுதுவது இன்றைய மிழிலக்கியத்தில் தீவிரமாகச் செயல்பட்டுவரும் எந்த ஒரு படைப்பாளி ல்லது திறனாய்வாளருக்கும் பொருந்தும். இவர்களின் பெயர்களை ான் இங்குச் சொல்லவேண்டியதில்லை. தமிழோடுதான் நமக்கு வாழ்வு ன்று நாம் நம்புகிறோம். தமிழின் ஆக்கத் திறன்களை வளர்ப்பதன் லம் நம் வாழ்வை அர்த்தப்படுத்திக் கொள்கிறோம். இப்படி அர்த்தமுள்ள, சலான வாழ்வின் மூலமே இன்று மனிதன் என்ற பெருமையை நாம் க்க வைத்துக்கொள்ள முடியும்.



## தமிழன்பன் கவிதைப் படைப்புகள்

1. தமிழன்பன் கவிதைகள் (1970)
(தமிழக அரசு பரிசுபெற்றது)
2. தோணி வருகிறது (1973)
3. விடியல் விழுதுகள் (1977)
4. தீவுகள் கரையேறுகின்றன (1978)
5. காலத்துக்கு ஒரு நாள் முந்தி (1982)
6. அந்த நந்தனை எரிச்ச நெருப்பின் மிச்சம் (1982)
7. ஊமை வெயில் (1984)
8. நிலா வரும் நேரம் (1984)
9. சூரியப் பிறைகள் (1985)
10. திரும்பி வந்த தேர்வலம் (1986)
11. கருவறையிலிருந்து ஒரு குரல் (1987)
12. நாம் இருக்கும் நாடு (1989)
13. ஊர் சுற்றி வந்த ஓசை (1989)
14. கிழக்குச் சாளரம் (1991)
15. என் வீட்டு எதிரே ஓர் எருக்கஞ்செடி (1995)
16. உன் வீட்டிற்கு நான் வந்திருந்தேன்...வால்ட் விட்மன்! (1996)
17. நடை மறந்த நதியும் திசை மாறிய ஓடையும் (1998)
18. பனி பெய்யும் பகல் (1998)
(தமிழக அரசு பரிசு பெற்றது)
19. மின்மினிக்காடு (1999)
20. வணக்கம் வள்ளுவ! (2000)
21. ஒரு வண்டி சென்ரியு (2001)
(திருப்பூர்த் தமிழ்ச் சங்கப் பரிசுபெற்றது)
22. தமிழோவியம் (இசைப்பாடல் தொகுதி - 2002)
23. வார்த்தைகள் கேட்ட வரம் (2002)
24. சென்னிமலைக் கிளியோபாத்ராக்கள் (2002)
25. இரவுப் பாடகன் (2003)
26. இவர்களோடும் இவற்றோடும் (2003)
27. கனாக்காணும் வினாக்கள் (2004)
28. மின்னல் உறங்கும்போது (2004)
29. கவின் குறு நூறு (2005)




இடையறாமல் இயங்கி வரும் ஆய்வு அறிஞர் ஞானிக்குள் தமிழ் இயங்குகிறது, மார்க்சியமும் பெரியாரியமும் இயங்குகின்றன.

எந்த இலக்கியம்பற்றியும் அக்கறையான பார்வை, வரலாற்றின் ஒளியில் கண்டு சொல்லும் உண்மைகள் என்று இவருக்கான தனித்துவ வெளிப்பாடுகள் உண்டு.



தமிழ்க்கவிதை உலகில் சாதனையாளர் பெருங்கவிஞர் என்று ஞானி அவர்களால் விவாதித்து நிறுவப்படும் ஈரோடு தமிழன்பன் கவிதைகள் முழுமையாக இந்நூலில் ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டுள்ளன.

சென்னைப் பல்கலைக்கழகம் இரண்டு நாள் தேசியக் கருத்தரங்கத்தை, வாழும் படைப்பாளிகள் வரிசையில் முதன் முதலாகத் தமிழன்பனை ஆய்வுக்கு எடுத்துக் கொண்டு 2003இல் நடத்தியது. ஆய்வு அறிஞர் ஞானி அவர்களும் இன்றைய கவிதைப் படைப்பாளிகளில் தமிழன்பனுக்கு முதலிடம் கொடுத்து மிகப்பெரிய அளவிலும் சிறந்த முறையிலும் இந்த நூலில் அவர் கவிதைகளை ஆராய்ந்து மதிப்பீடு செய்துள்ளார்.